# எதிர்ப்பிலேயே வாழுங்கள்

ஓஷோ

தமிழில்

சுவாமி ஆனந்த் பரமேஷ்

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
போன் : 24332682
E-mail : kannadhasan@vsnl.com

முதற்பதிப்பு : நவம்பர், 2000
பத்தாம் பதிப்பு : மே, 2013
பதினொன்றாம் பதிப்பு : அக்டோபர், 2014

E-mail: sales@kannadasan.co.in
Our Web Site: www.kannadasan.co.in

பதிப்பாசிரியர்: காந்தி கண்ணதாசன்

**'ETHIRPPILEYE VAAZHUNGAL'**-Tamil

**Price Rs: 160/-**

- Written By : **OSHO**
- Translated by : **Sw. Anand Paramesh**
- Eleventh Edition : October, 2014
- Publishing Editor : **Gandhi Kannadhasan**
- Published By : **Kannadhasan Pathippagam**
  23, Kannadhasan Salai,
  Thiyagaraya Nagar, Chennai - 600 017.
  Ph: 044-24332682 / 24338712

**ISBN: 978-81-8402-099-1**

- Our Branches :
  - No: 1212, Range Gowder Street, **Coimbatore** - 641001 ☎: 0422 - 2479774
  - 1, Annai Complex, III Street, Vasantha Nagar, **Madurai**-625 003. ☎: 0452 - 2373793, 2373180.
  - 37, Bharathy Street. **Puducherry** - 605 001. ☎: 0413 - 2221241
  - No: 26, Old Bus Stand, New Shopping Complex, **Vellore** - 632004. ☎: 0416 - 2223312
- Our Bankers : State Bank of India, T.Nagar, Chennai-17.

Printed at : Ganapathi Process, Chennai-5.



# ஓஷோ

பகவான் ஸ்ரீ ரஜ்னீஷ், தற்போது
'ஓஷோ' என்ற பெயரால் மட்டுமே
குறிப்பிடப்படுகிறார்.

வில்லியம் ஜேம்ஸ் குறிப்பிட்ட
'ஓஷியானிக்' என்ற சொல்லிலிருந்து
தம்முடைய பெயர் உருவானதாக
ஓஷோ குறிப்பிட்டுள்ளார்.

'ஓஷியானிக்' என்றால்
கடலில் கரைந்து போவது
என்று பொருள்.
'ஓஷியானிக்' என்ற சொல்
அனுபவத்தை மட்டுமே குறிக்கின்றது.
ஆனால், அனுபவிப்பவரைக்
குறிப்பிடவில்லை. அதனால்,
'ஓஷோ' என்ற சொல்லை
உருவாக்கினேன் என்கிறார், ஓஷோ.

ஆனால், இந்தச் சொல்
கிழை நாடுகளில், நீண்ட காலமாக,
வேறு ஒரு பொருளிலும்
பயன்படுத்தப்பட்டு வருவதை
ஓஷோ பின்னால் கண்டு கொண்டார்.

இதன் பொருள் :
"வானம் பூச்சொரிந்து
ஆசிர்வதிக்கப்பட்ட மனிதன்."



# வழிகள்

1. ஒருவனாக ஒருமைக்கு செல்லும் பயணம்

2. டைனமிக் தியானம்

3. யோகா: தானே நிகழுதல்...

4. 'எல்.எஸ்.டி': பொய்யான சமாதி நிலைக்கு ஒரு குறுக்கு வழி...

5. முக்கிய சமச்சீர்நிலை...

6. மதம்: கடைசி ஆடம்பரம்...

7. சீடத்தன்மையின் ரகசியங்கள்...

8. கடவுள் என்பது உயிரியக்கம் தான்

9. தெரியாத ஜீசஸின் வாழ்க்கை...

10. சூனியத்திலிருந்து...

11. கீழான நிலைகளுக்கு ஒரு மூடிக் கொள்ளுதல், மாற்றத்திற்கான ஒரு முறை

12. ஒரு சொந்தமான தேடல், ஒரு தனிமனித தாகம்

13. பிறப்பு, இறப்புக்கிடையில்...

# அறிமுகம்

ஓஷோவின் மிகப்பெரிய சவால் வெறும் சவால் மட்டுமல்ல; அது ஒரு அமைப்பும் கூட.

தொடரும் பக்கங்களில் நீங்கள் ஞானமடைந்த ஒருவரின், இருபதாம் நூற்றாண்டு புத்தரின் அனுபவத்தைக் காண்பீர்கள். அவர் என்னையும் உங்களையும் போன்றவர்களின் கேள்விகளுக்கு தன் பதிலைச் சொல்கிறார். வாழ்வில் கண்களால் பார்ப்பதை விடவும் அதிகம் இருக்கிறது என்று உணர்ந்த– ஆம் நீங்கள் அப்படியில்லா விட்டால் இந்தப் புத்தகத்தை படிக்க மாட்டீர்கள்– நமக்கு பதில் கூறியுள்ளார்.

ஓஷோ எல்லாவற்றைப் பற்றியும் பேசுகிறார். கடவுள். இயற்கையின் மேல் நம்பிக்கை, உடைந்து போதல், துன்பம் முதல் அன்பு, கருணை வரை, பிறப்பிற்கு முன் முதல் இறப்பிற்கு பின்வரை. போதை மருந்து, வசியம் முதல் யோக, தியானம் வரை, இயேசுவின் அற்புதங்களிலிருந்து சக்திசாய்பாபாவின் வித்தை ர வரை. அறிவு, புத்தி முதல் குரு சிஷ்ய உறவு வரை எல்லாம் இதில் உள்ளது. எல்லாம் புதிதாயும், நேரடியாகவும் உள்ளது. இதோடு அவரது புரட்சிகரமான தியான முறை, அவரது ஜெட் முறை– டைனமிக் தியானம் பற்றியும் விரிவாகப் பேசியுள்ளார்.

'என்னுடைய நூல்களை குறைந்தது மூன்று தடவையாவது படிக்க வேண்டும், அப்பொழுதுதான் அந்த வார்த்தைகள் உங்களுடைய தலையில் ஏறும்' என்று ஜியார்ஜ் குருட்ஜிவ் (George Gurdjieff), தன் சீடர்களுக்கு அடிக்கடி சொல்லுவது வழக்கம். ஆனால், ஓஷோவின் பிரசங்கத்திற்குள், ஒருவன் அடுத்தடுத்து

மேலும் மேலும் ஆழமாகச் சென்றால், வாசிப்பவன் ஓஷோவின் வார்த்தைகளில் புதிய அர்த்தங்களையும், புதிய முக்கியத்துவங் களையும் கண்டுபிடிப்பான்.

அற்புதங்களில் நாட்டம் உள்ளவர்களுக்கு, ஓஷோ, தன் பிரசங்கத்தில், ''நான் அற்புதங்களை ஒதுக்குகிறேன்; ஏனெனில், அவை எல்லாம் முட்டாள்தனங்கள் தான். நாம் வாழும் இந்த முழு வாழ்வே அர்த்தமற்று இருக்கிறது; ஆகவே, நீங்கள் இதில் ஏதும் உரு வாக்குவதெல்லாம் அர்த்தமற்றதுதான். உங்களை, 'அப்பாலுக்கு' (Beyond)த் தள்ளுவது ஒன்றுதான், நான் ஆர்வமாக இருக்கும் ஓரே அற்புதம். அந்த அப்பாலின் ஒரு சிறு ஒளிக்கீற்று கூட, ஒரு அற்புதம் தான்'' என்று குறிப்பிடுகிறார்.

நீங்கள், ஓஷோவின் வார்த்தைகளைப் படிப்பதின் மூலம், அந்த 'அப்பாலை' கண்டு பிடிப்பதற்காக, உங்களுடைய உள் உலகத்திற் குள் செல்ல, ஆன்மிகத்தாகம் ஏற்படுவதை உணர்ந்து கொண்டால், அவருடைய அழைப்பை, மற்றும் ஓஷோவின் மாபெரும் சவாலை, நீங்கள் ஏற்றுக் கொண்டீர்கள் என்று அர்த்தம்.

சுவாமி கிருஷ்ணா பிரமம்



# 1 ஒருவனாக ஒருமைக்குச் செல்லும் பயணம்



"யோகா, யோகி மற்றும் தியானம் என்றால் என்னவென்று தயவு செய்து விளக்கவும்."

தியானத்தைப் பற்றி, முதலில் நீங்கள் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டியது என்னவென்றால், நீங்கள் அது குறித்து எதுவும் செய்ய வேண்டியதில்லை என்பதுதான். இந்த உலகத்தில் உள்ள மக்கள் அனைவரும், தியானம் என்றால் அதுகுறித்து ஏதாவது செய்தல் என்றே தவறாகக் கருதிக் கொண்டு இருக்கிறார்கள். அது ஒரு செயல் அல்ல; அது, ஏதோ உங்களிடம் நிகழுவது. நீங்கள் சென்று அடையக்கூடிய, ஏதோ ஒன்று அல்ல அது. மாறாக, அது உங்களிடம் தானே வந்து, உங்களுக்குள்ளே மிக ஆழமாகச் செல்லுவது. அது ஒரு வழியில், உங்களை அழிக்கிறது. மறுவழியில் அது உங்களை மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறது. அது உங்களுடைய செயல்களில் புது பாகமாக அங்கம் வகிக்காமல், அது ஏதோ முக்கியமான ஒன்றாகவும், எல்லையற்றும் மிகப் பரந்து இருக்கிறது.

பிறகு, அதற்காக நாம் என்னதான் செய்வது? நீங்கள் அது நிகழுவதற்கு ஏற்ற ஒரு சூழ்நிலையை மட்டும்தான் ஏற்படுத்த முடியும். நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம், வரும் அபாயத்தைத் தைரியமாக எதிர் நோக்கிக் கொண்டு, அந்த பேரியக்கப் பிரபஞ்ச உயிர்த்தன்மைக்கு எல்லா கதவுகளையும் திறந்தே வைத்திருத்தல் தான்.

சாதாரணமாக, நாம் ஒரு சிறையைப் போல இருக்கிறோம். எந்தவித திறப்புமின்றி, நமக்குள்ளேயே மூடிக் கொண்டு இருக்கிறோம். அது ஒரு வகையில், நாம் இறந்ததற்குச் சமம்தான். வாழ்க்கை நம்மிடம் நெருங்காத வகையில், நாம் அதற்கு ஒரு

மறுப்பாகவே இருக்கிறோம் என்று கூறிக் கொள்ளலாம். நாம் வாழ்க்கைக்கு பல தடங்கல்களையும், தடுப்புகளையும் ஏற்படுத்தி வைத்திருக்கிறோம். அது நம்முடைய ஆளுகைக்கு உட்படாமல், அபாயகரமாகவும் மற்றும் ஒழுங்குபடுத்த முடியாத தன்மையிலும் இருக்கிறது. நாம் நிச்சயமாகவும், பாதுகாப்பாகவும் மற்றும் செளகரியத் தோடும் இருப்பதற்காக, நாமே நம்மிடம் ஒரு மூடப்பட்ட உயிர்த்தன்மையை ஏற்படுத்திக் கொண்டுள்ளோம். இந்த மூடிய உயிர்த்தன்மை மிகவும் வசதியானது; ஆனால், அதே சமயம், அது இறப்பிற்கு சமம்தான். நாம் எவ்வளவுக் கெவ்வளவு மூடப்பட்டு இருக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு வாழ்வில் மந்தத் தன்மையுடையவர்களாக இருக்கிறோம்.

தியானம் என்பது, எல்லா பரிமாணங்களின் திறப்பாகவும் மற்றும் எல்லாவற்றிற்கும் திறந்த வாயிலாகவே இருக்கிறது. ஆனால், இப்படி எல்லாவற்றிலேயும் எந்தவித நிபந்தனையும் இல்லாமல் இருப்பது, பாதுகாப்பில்லாத, அபாயத்தையே தோற்றுவிக்கும். அப்பொழுது, எது வேண்டுமானாலும் நேர சந்தர்ப்பம் இருப்பதால், அது ஒருக்காலும் உங்களுக்கு பாதுகாப்பாக இருக்க முடியாது. ஆனால், பாதுகாப்பையும், செளகரியத்தையும், நிச்சயத் தன்மையையும் எதிர்பார்க்கும் மனம், தியானமாக மாற முடியாது. வாழ்க்கை அளிக்கும் எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ளும் மற்றும் இயல்பாக நிகழும் ஒவ்வொன்றையும் பார்த்து ஆச்சரியப்படக் கூடியதுமான- ஏன் இறப்பில் கூட- அந்த மனம்தான், தியானம் நிகழக்கூடிய தகுந்த சூழ்நிலையை ஏற்படுத்த முடியும்.

ஆகவே, ஏதாவது குறிப்பிட்டதில் மாத்திரம் ஈடுபடாமல், வருவது அனைத்தையும் இயல்பாக ஏற்றுக் கொள்ளும் மனம்தான், தியானத்தையும் இயல்பாக ஏற்றுக்கொள்ளும். இதற்கு ஏற்றாற்போல, உங்கள் மனத்தை எதையும் ஏற்கும் தன்மையில் நீங்கள் பக்குவப்படுத்த வேண்டும். இது ஒன்றுதான், நீங்கள் செய்யக்கூடியவை.

தியானம் ஒரு குறிப்பிட்ட பரிமாணம் கொண்டது அல்ல. அது எவ்வித பரிமாணமும் இல்லாத, ஒரு எல்லையற்ற, பரந்த உயிர்த்தன்மை. அது, எதையும் எதிர்பார்க்காது, எதற்கும் ஆசைப்படாது, எந்தவித நிபந்தனையும் இல்லாது, ஒவ்வொன்றின் பரிமாணமும், தன் இயல்பாக செயல்பட, அது, வாசலற்ற திறப்பாக இருக்கிறது. அதில் எதிர்பார்ப்பு என்று ஏதும் இருந்தால், அந்தத் திறப்பு (Opening) முழுமையானதாக இருக்க முடியாது. அதில் நிபந்தனையோ, விருப்பமோ அல்லது வேறு ஏதாவது 'இருந்தால்' (IFs) அந்தத் திறப்பு முழுமையில் இல்லை. அடுத்து உங்களுடைய எந்தப் பகுதியும், மூடிய நிலையில் இல்லை. நீங்கள் முழுமையாக திறந்த தன்மையில் இல்லாவிட்டால், எந்த ஜீவத்தன்மையையும், தீவிரத்தன்மையும் மற்றும் எல்லையில்லாத நிகழ்வுகளையும் உங்களால் ஏற்றுக் கொள்ள முடியாது. அது உங்களுடைய விருந்தாளி யாகவோ, நீங்கள் அதனுடைய உபசரிப்பாளனாகவோ இருக்க முடியாது.

ஒரு வரவேற்கும் சூழ்நிலையை ஏற்படுத்தி, அதில் ஏதோ புதுமையானது நிகழ வாய்ப்பை ஏற்படுத்துவதுதான் தியானம் என்பது. ஆகவே, நீங்கள் இப்பொழுது செய்ய வேண்டுவது எல்லாம், அதற்காக மிக ஓய்வாக இருத்தல் தான்.

அப்படி ஓய்வாக இருக்கும் மனம், அந்த அறியாததற்காகத் தான் ஓய்வாக இருக்கிறது. ஏனென்றால், அந்தப் புதுமையான நிகழ்வைப் பற்றி, அதற்கு முன்பு அது அறிந்திருக்க வாய்ப்பில்லை. ஏன், நீங்கள் அதைப் பற்றி நினைத்துக் கூட பார்க்க இயலாது. நீங்கள் அதைப் பற்றி ஏதோ கேட்டிருக்கலாம். ஆனால், அது உங்களுடைய அனுபவ அறிதல் கிடையாது. அது உங்களைப் பொறுத்தவரையில் அறியாததுதான். எந்த மனம், அதற்காகக் காத்துக்கொண்டு இருக்கிறதோ, அதுவே 'தியான மனம்.'

அந்த அறியாததற்காக, நீங்கள் காத்துக் கொண்டு இருக்கும்பொழுது உங்களுடைய விஷய ஞானமே, அதை அடைவதற்குப் பெரும் தடங்கலாக இருக்கிறது. நீங்கள் எந்த

அளவுக்கு உங்களுடைய விஷய ஞானத்தில் பிரக்ஞையற்று இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள், உங்களையே உறுதியாக சிறைப்படுத்திக் கொள்ளுகிறீர்கள். அப்பொழுது, நீங்கள் 'அறிதல்' மனநிலையில் இல்லை. நீங்கள் சுத்தமான முழுமையான அறியாத தன்மையில் இருந்தாலொழிய, அந்த அறியாதது உங்களை நோக்கி வராது. எப்பொழுது, உங்களுடைய அறியாமை, தன்னையே முழுமையாக உணர்ந்து கொள்ளுகிறதோ, எப்பொழுது நீங்கள், உங்களுக்கு ஒன்றும் தெரியாது என்று பிரக்ஞையாக தெரிந்து கொள்ளுகிறீர்களோ, அப்பொழுது தான், நீங்கள் 'அதற்காக' காத்திருக்க ஆரம்பிக்கிறீர்கள்.

அறியாமை இரண்டு வகைப்படும். முதல் வகையில், மக்கள், தங்களுடைய அறியாமையைப் பற்றி, எதுவும் அறியாதவர்களாக இருப்பார்கள். ஆனால், இவர்கள் இயல்பாகவே தனக்கு எல்லாம் தெரியும் என்று நினைப்பவர்கள். இவர்கள் உண்மையிலே தெரியாதவர்கள் மற்றும் அறியாதவர்கள். அடுத்த வகையில், மக்கள், தனக்குத் தெரியாது என்பதைத் தெரிந்து வைத்திருப்பவர்கள். இது அறிந்த தெரியாதது. நீங்கள் எப்பொழுது, உங்களுக்குத் தெரியாது என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுகிறீர்களோ, அப்பொழுது தெரிந்து கொள்ளுதல் ஆரம்பமாகி விடுகிறது.

தனக்கு எல்லாம் தெரியும் என்று நினைக்கும் ஒரு பண்டிதன், ஒருக்காலும் மதத் தன்மையுடையவனாக மாட்டான். அவன், மதத் தன்மையற்றே இருப்பான். ஏனெனில், விஷய ஞானத்தால் ஏற்படும் அகங்காரம், மிகவும் ஆழமானது. நீங்கள் எப்பொழுது உங்களுடைய அறியாமையை அறிந்து கொள்ளுகிறீர்களோ, அங்கே அகங்காரம் இருக்காது; அங்கு அகங்காரத்துக்கு எந்த இடமும் கிடையாது. உங்களுடைய அகங்காரத்தைப் புரிந்து கொள்ளுதல் தான் உங்களுடைய அகங்காரத்தை ஒழிக்கக் கூடிய மிகப் பெரிய அடி. மாறாக அந்த அகங்காரத்தை மேலும் மேலும் வலுவடையச் செய்வது, உங்களுடைய விஷய ஞான சுமைகள் தான்.

தியானத்தைப் பற்றி. இரண்டாவதாக நான் சொல்ல விரும்புவது மனம் தன் அறியாமைப் பற்றி முழுமையாக அறிந்திருக்க வேண்டும். உலக விஷய ஞான சுமைகள் அனைத்தும் உண்மையான ஞானம் இல்லை என்று எப்பொழுது அறியப்படுகிறதோ, அப்பொழுதுதான், நீங்கள் உங்களுடைய அறியாமையைப் பற்றி பிரக்ஞையாக அறிந்தவராகிறீர்கள். அந்த விஷய ஞானம் என்பது அறிதல் கிடையாது. அது வெறும் தகவல் தான். அது, அறிதல் போல ஒரு வகையில் தோன்றினாலும், அது உண்மையில் அறிதல் இல்லை.

தன்னுடைய அறிதலைப்பற்றி உண்மையிலேயே அறிந்தவன், தன்னுடைய அறிதலில் உறுதியாக இருக்க மாட்டான்; அவன் தயங்குவான். ஆனால், தனக்குத் தெரியும் என்று நம்பிக் கொண்டு இருப்பவன், எப்பொழுதும் உறுதியாகவும், நிச்சயமாகவும் இருப்பான். இந்த வித்தியாசத்தை ஆழ்ந்து புரிந்து கொள்ளுங்கள்.

நீங்கள் அறிந்து கொள்ளாதது, உண்மையான ஞானமாகாது என்ற உண்மையை, நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். அந்த ஞானத்தை, நீங்கள் பிறரிடமிருந்து கடன் வாங்க முடியாது. மத சாத்திரத்தோடு கூடிய மனத்திற்கும், மதத்தன்மை வாய்ந்த மனதுக்கும் இதுதான் வித்தியாசம். இந்த உலகத்தில், மிகவும் மதத் தன்மையற்றது எதுவென்றால், மத ஏடுகள்தான், மதத் தத்துவங்கள்தான், மத சாத்திர விற்பன்னர்கள்தான், மிகவும் மதத் தன்மையற்றவர்கள் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளுங்கள். ஏனென்றால், அவர்கள் கூறும் மத சம்பந்தமான விஷயஞானங்கள் அனைத்தும், கடன் வாங்கப்பட்டவையே!

அனுபவப்பூர்வமான ஆத்மிக ஞானம், தன்னை ஒருக்காலும் வெளிக்காட்டிக்கொள்ளாது. ஏனென்றால், அதனுடைய இயற்கையான அமைப்பு என்னவென்றால், ஒருவன் எப்பொழுது அதை உண்மையாக அறிந்து கொள்ளுகிறானோ, அப்பொழுதே அவனுடைய 'நான்' மறைந்து விடுகிறது. அதை அறிந்து கொள்ளும் கணத்திலேயே, அந்த 'நான்' என்ற அகங்காரம்

மறைந்துவிடுகிறது. அகங்காரமற்றத் தன்மையில் தான் அந்த அறிதல் நிகழ்கிறது. ஆகவே, அகங்காரம், 'நான் அதை அடைந்தேன்' என்று சொந்தம் கொண்டாட முடியாது. அகங்காரம், தகவல்களை மாத்திரம்தான் சேகரிக்கும். அது, பலவற்றைப் பற்றிய உண்மைகளைச் சேகரிக்கும்; பல மத சாத்திரங்களை எடுத்துக் கூறும். அதனால் என்ன பயன்?

தியானத்திற்குள் செல்லுவது என்பது, உங்களுடைய சேகரிக்கப்பட்ட தகவல்களிடமிருந்து அப்பால் செல்லுவது என்று அர்த்தம். இந்தத் தகவல்கள் அல்லது உலக விஷயங்களிலிருந்து முழுமையாகத் தாண்டிச் சென்றால், 'அறிதல்' ஆரம்பமாகும். அதைக் கற்றுக் கொள்ளுபவர், சற்று வித்தியாசமாகவே இருப்பார். தான் அறிந்து கொண்டிருக் கிறோம் என்று அவர் ஒருக்காலும் சொந்தம் கொண்டாடுவ தில்லை. அவர், எப்பொழுதும் தன் அறியாமையைப் பற்றி விழிப்பாகவே இருக்கிறார். அவர் எந்த அளவுக்கு அதில் விழிப்பாக இருக்கிறாரோ, அந்த அளவுக்கு அவர், அந்தப் புதியதை வரவேற்கும் தன்மையில், திறப்பாக இருக்கிறார்.

நீங்கள் ஏதாவது புதிதாகக் கற்றதுபோல அறிந்தால், அதை உடனே ஒதுக்கிவிடவும். இல்லாவிட்டால், அது உங்களுடைய கற்றதில் ஒரு பாகமாகிவிடும். மற்றும் உங்களுடைய சேகரிக்கப் பட்ட விஷய ஞானத்தில் அது ஒரு அங்கமாகி விடும். உங்களு டைய அறிதல், உங்களுடைய இறந்தகால அனுபவத்திலிருந்து வருமேயானால், அதுவும் கடன் வாங்கப்பட்டதாகிறது. ஏனென்றால், இப்பொழுது நீங்கள் புதிதாக அறிந்த அதே மனிதன் இல்லை. இந்த விஷய ஞானம், உங்களுடைய இறந்தகால அனுபவத்திலிருந்து வந்தாலும் அல்லது அடுத்தவர்களிடமிருந்து வந்தாலும், அதனில் எந்த வித்தியாசமும் இல்லை.

நேற்றைய 'நான்' மிகத் தொலைவில் இருக்கிறது; அது எப்பொழுதோ இறந்து விட்டது. அதை, நீங்கள் உங்களுடைய ஞாபகத்தில் தவிர, வேறு எங்கும் காண முடியாது. நீங்கள்

எப்படி இப்பொழுது எனக்கு அந்நியமாக இருக்கிறீர்களோ, அப்படியேதான், நேற்றையே 'நானும்.' பார்க்கப்போனால், அது உங்களைவிட, மிகவும் அந்நியமாகவே இருக்கிறது. ஏனென்றால், நீங்கள் இப்பொழுது, எனக்கு மிக அருகில் இருக்கிறீர்கள். இக் கணத்தில், நீங்கள் அமைதியாக இருந்தால், நீங்கள் நானாகவே இருக்கிறீர்கள்; நீங்கள் என்னுடைய முழு பாகமாகவே இருக்கிறீர்கள்!

ஆனால், நேற்று, என்னிடம் நிகழ்ந்த ஒன்றை, நான் இப்பொழுது உங்களுக்குத் தெரிவித்தால், இப்பொழுது உங்களிடம் பேசிக்கொண்டு இருக்கும் அந்த 'நான்,' அதே ஆள் அல்ல. அந்த மனிதன் நேற்றோடு இறந்துவிட்டான்; அது ஒரு இறந்த அறிவிப்புதான். நான் இந்தக் கணத்தில் வாழவில்லை என்று அர்த்தம். இப்பொழுது நான் என்னையே அதற்கு ஏதுவாக இருக்க தயாரித்துக் கொண்டுள்ளேன். என் மூலமாக அந்த இறந்தது இப்பொழுது தன்னை உறுதிப்படுத்திக் கொள்ளுகிறது. அந்த இறந்த ஏதோ ஒன்றை நம்புவது என்பது... சரியே இல்லை; அது ஒருக்காலும் நடக்காது.

நான் நேற்றைய ஞாபகத்தோடு, இன்றைக்கும் வாழ்ந்தால், நான் இன்றைக்கு வாழ்வதற்கு தகுதியில்லை என்று அர்த்தம். நான், இப்பொழுது இங்கே, இந்தக் கணம் வாழ வேண்டும், இப்பொழுது நிகழ்தலில் வாழ வேண்டும். நான் இப்பொழுது சொல்லுவது அனைத்தும் இந்தக் கணத்தில், என் மூலமாக வருவதாக இருக்க வேண்டும். அது என்னுடைய இறந்த காலத்திலிருந்து வந்தால், அது கடன்வாங்கப் பட்டதற்குச் சமம். அது இறந்தகால நிகழ்ச்சிதான். அது இறந்த சவம் தான்- அது 'அறிதல்' அல்ல.

'அறிதல்' என்பது அப்போதைக்கப்போது நடப்பது. ஆனால், சகல அறிவிப்புகளும், இறந்த கால விஷய ஞானத்தையும், மற்றும் ஞாபகத்தையுமே சார்ந்து உள்ளது. நீங்கள் உங்களுடைய ஞாபகத்திலிருந்து, கடன் வாங்கினால் நீங்கள் இந்தக் கணத்தில் அறிதலாக இல்லை. ஒருவர், வேறு யாரிடமிருந்தோ அல்லது

தன்னுடைய சொந்த பழைய ஞாபகத்திலிருந்தோ, எதையும் கடன் வாங்கக் கூடாது. ஒருவர் கணத்துக்குக் கணம் வாழ வேண்டும். மற்றும் உங்களிடம் வருபவை அனைத்தும், உங்களுடைய அறிதலில் ஒரு புதிய பாகமாகும் தன்மையில் நீங்கள் வாழ வேண்டும்.

நான் உங்களைப் பார்த்தால், எனக்கும், அந்தப் பார்வைக்கும் இடையில் என்னுடைய ஞாபகம் வராமல் இருந்தால் மட்டுமே, என்னுடைய 'பார்த்தல்' என்பது அறிதலாக மாறும். மாறாக, நான் உங்களை என்னுடைய பழைய ஞாபகத்தோடு பார்த்தால், நான் இப்பொழுது உங்களை உண்மையிலேயே பார்க்கவில்லை. ஆனால், நான் உங்களை என்னுடைய பழைய ஞாபகத்தோடு பார்க்காவிட்டால், என்னுடைய 'பார்வை' அங்கு தியானத் தன்மையுடையதாகிறது. அதைப் போல, என்னுடைய கை அறிந்த பழைய அனுபவ ஞாபகத்தோடு, இப்பொழுது நான் உங்களைத் தொடாவிட்டால், அந்தத் 'தொடுதல்' அங்கு தியானத் தன்மையுடையதாகிறது. ஆகவே, இப்படி முன்பு அறியாதத் தன்மையில், 'இப்பொழுது இங்கே' நிகழும் அனைத்தும் தியானத் தன்மையுடையதாகிறது.

மூன்றாவது, நான் அழுத்தமாக சொல்ல விரும்புவது, ஒரு தியானத் தன்மையுள்ள மனம், கணத்துக்குக் கணம் வாழுகிறது என்பதுதான். அது எதையும் சேர்த்து வைப்பதில்லை; கணத்துக்குக் கணம் வருபவைகள் அனைத்தும் அப்போதைக் கப்போது வாழ்கிறது. 'இப்பொழுது இங்கே' என்பதற்கு அப்பால், அது செல்லுவது இல்லை. வருபவை அனைத்தையும் வரவேற்கும் தன்மையில் அது எப்பொழுதும் இங்கேயே இருக்கிறது.

இறந்தவை அனைத்தும் இறந்தவையே; சென்றவை அனைத்தும் சென்றவையே. சென்ற காலம் முடிந்து விட்டது; வருங்காலம்' இன்னும் வரவில்லை. இறந்த காலத்திற்கும், வருங்காலத்திற்கும் இடையில் ஏதோ ஒன்று உயிரோட்டமாக இருக்கிறது.

இறந்தகாலம் என்பது உங்களுடைய ஞாபகத்தின் ஒரு பகுதி; வருங்காலம் என்பது உங்களுடைய எதிர்பார்ப்பின் ஒரு பகுதி. இரண்டுமே உங்களுடைய மன சம்பந்தப்பட்டது. அவற்றுக்கென்று எந்த உயிர்த்தன்மையும் கிடையாது. அவை மனிதனின் படைப்புகள். இந்த உலகத்தில், மனித இனம் இல்லாவிட்டால், இங்கு எந்த எதிர்காலமோ அல்லது இறந்த காலமோ இருக்காது. அப்பொழுது இங்கு, 'இப்பொழுது', 'இங்கே' மட்டும்தான்- எந்தவித காலமும் இல்லாமல், எந்தவித வருதலோ அல்லது செல்லுதலோ இல்லாமல்- இருக்கும். தியானத்தன்மையுள்ள மனம் 'இப்பொழுதில்' மட்டும்தான் வாழ்கிறது. இது ஒன்றுதான் இருப்பது.

ஒரு ஜென் சந்நியாசியை, தூக்கிலிட உத்திரவாகியது. அந்த தேசத்து அரசன், அவரைக் கூப்பிட்டு, "உனக்கு இன்னும் 24 மணி நேரம்தான் இருக்கிறது- நீ அதை எப்படி வாழப் போகிறாய்?" என்று கேட்டான்.

இதைக்கேட்டு, அந்த சந்நியாசி சிரித்தவாறு, "நான் எப்பொழுதும் வாழுவது போல- கணத்துக்குக் கணம்! என்னைப் பொறுத்தவரையில், இந்த கணத்துக்கு மேலே எதுவும் கிடையாது. ஆகவே, எனக்கு இன்னும் 24 மணி நேரம் இருந்தால் என்ன? 24 வருடம் இருந்தால் என்ன? எனக்கு இதில் எந்த வித்தியாசமும் இல்லை. நான் எப்பொழுதுமே, கணத்துக்குக் கணம் வாழ்ந்து வந்திருப்பதால், இந்த கணமே எனக்கு அதிகம்தான். 24 மணி நேரம் என்பது மிக அதிகம்; இந்த ஒரு கணமே எனக்கு போதும்," என்றார்.

அந்த அரசனால், அவரைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்த சந்நியாசி மேலும் அரசனிடம், "நான் உங்களை ஒன்று கேட்க அனுமதி கொடுங்கள். நீங்கள் தொடர்ந்து இரண்டு கணங்கள் ஒரே சமயத்தில் வாழ முடியுமா?" என்று கேட்டார்.

யாருமே அப்படி வாழ்ந்தது கிடையாது. வாழ்வதற்கு ஒரே வழி, ஒரு சமயத்தில் ஒரு கணம் வாழ்வதுதான். தொடர்ந்து இரண்டு கணங்கள் உங்கள் கையில் கொடுக்கப்படவில்லை.

ஏன், அந்த ஒரு கணமே, உங்களுடைய கையில் இல்லை. உங்கள் வசம் இல்லை. நீங்கள் சற்று உங்களுடைய இறந்த காலத்துக்குச் சென்றாலோ, அல்லது வருங்காலத்தை எதிர்நோக்கினாலோ, அதை உங்களால் முழுமையாகப் பிடிக்க முடியாது; அந்த அளவுக்கு அது மிகவும் வழுக்கும் தன்மை படைத்ததாகவே இருக்கும். அது உங்களிடமிருந்து சுலபமாக நழுவிவிடும்; நீங்கள் அதை சுலபமாக தவற விட்டுவிடுவீர்கள். 'இப்பொழுது, இங்கே' எதையும் வாங்கும் தன்மை படைத்த மனம்தான்; அப்படி ஒரு தியானத் தன்மை நிகழக்கூடிய ஒரு தகுந்த சூழ்நிலையை ஏற்படுத்த முடியும்.

நான்காவது, இறுக்கமாக இருத்தல். தியானத்தைப் பற்றி நினைக்கும் மற்றும் பேசும் மக்கள், தியானத்தைக் கடுமையாகவும், இறுக்கமாகவும் அணுகுகிறார்கள். அதை அவர்கள் ஒரு வேலையாகவே கருதுகிறார்கள்; விளையாட்டாக அல்ல. ஆனால், நீங்கள் அதை இறுக்கமாக அணுகினால், அது உண்மையாக நிகழக்கூடிய சூழ்நிலையை, உங்களால் ஒருக்காலும் ஏற்படுத்த முடியாது. கடுமையாக இருத்தல் என்பது இறுக்கம் தான். ஒரு இறுக்கமான மனம், ஒரு போதும் தியானத் தன்மையில் இருக்காது.

நீங்கள் தியானத்தை, ஒரு குழந்தையின் விளையாட்டு போலவே எடுத்துக் கொள்ள வேண்டும். தியானத் தன்மையுள்ள மக்கள், விளையாட்டுத்தனம் உள்ளவர்களாகவே இருக்க வேண்டும்- உயிர் தன்மையோடு விளையாடிக் கொண்டு, வாழ்க்கையோடு விளையாடிக் கொண்டு- எடையற்று, இறுக்கமற்று; வேலை செய்யும் மனநிலையில் இல்லாமல், ஓய்வான மன நிலையில் அந்த ஓய்வான கணத்தில் தான், அந்த விளையாட்டான கணத்தில் தான், அந்த நிகழ்வு ஏற்படுவது சாத்தியம்.

ஒரு கடுமையான அல்லது இறுக்கமான மனம் மதத் தன்மையுடையதாக முடியாது. ஆனால், எல்லா பழைய மதவாதிகளும், மிகவும் கடுமையாகவே இருக்கிறார்கள்! அது

எப்படி இருக்கிறது என்றால், நீண்ட முகத்தோடு கூடிய ஒரு வியாதி பிடித்தவன்தான், மதத் தன்மையுடையவன் போல! ஆனால், தியானம் என்பது ஏதோ நீங்கள் 'கட்டாயம்' செய்ய வேண்டிய ஒன்று அல்ல. அது எந்தவித நோக்கமும் கொண்டது அல்ல. அதனுடைய முடிவு, அதிலேயே அடங்கி இருக்கக்கூடிய ஏதோ ஒன்றுதான் அது. ஆகவே, அதனாலேயோ மற்றும் அதன் மூலமாகவோ, நீங்கள் அடையக் கூடியது எதுவும் இல்லை- அதை, எதற்கும் நீங்கள் ஒரு கருவியாக கையாள முடியாது.

ஆனால், நான் பார்க்கிறவரையில், தியானத்தில் ஆர்வம் உள்ளவர்கள், உண்மையாகவே அதில் ஆர்வம் உள்ளவர்களாக இருப்பதில்லை. அவர்கள், வேறு ஒன்றில் குறி வைத்து, தியானத்தை அதை அடையக் கூடிய வழியாக, கருவியாக கையாள நினைக்கிறார்கள். அவர்கள் ஒரு அமைதி நிலையில் ஆர்வம் உடையவர்களாக இருக்கலாம். அல்லது ஒரு இறுக்கமற்ற மனநிலை ''ய அடைய நினைக்கலாம்- இப்படி அவர்களுக்கு எதில் வேண்டுமானாலும் ஆர்வம் இருக்கலாம்- ஆனால், அவர்களுக்கு உண்மையான தியானத்தில் ஆர்வம் இல்லை. ஆகவே, அவர்களால் தியானத்திற்கான திறந்த மனநிலையில் இருக்க முடியாது.

தியானத்தின் முடிவு, அதிலேயே இருப்பதில் ஆர்வம் உடையவர்களுக்கு மாத்திரம்தான் உண்மையான தியானம் நிகழும். உண்மையான அமைதி ஏற்படும்; ஆனால், அமைதி என்பது வேறு ஒன்று. சலனமற்றத் தன்மை ஏற்படும்; ஆனால் அது வேறு ஒன்று. தெய்விகத் தன்மை ஏற்படலாம்; ஆனால் அது வேறு ஒன்று. இவை யாவும் அதனால் ஏற்பட்ட வேறு விளைவுகள்; அவை தானே வரும். அவை நீங்கள் எதிர்பார்க்கும் பலன்கள் அல்ல. அப்படி நீங்கள் அதில் விருப்பப்பட்டால், அந்த விருப்பம், ஒருவித இறுக்க நிலையை ஏற்படுத்தி விடும்.

தெய்விகம் வரலாம். ஆனால், வருபவை அனைத்தையும், நீங்கள் தெய்விகம் என்று சொல்லுவதுதான் நல்லது; எல்லாமே பேரானந்தமானது தான். நீங்கள் விருப்பமற்ற நிலையில்

இருக்கும்பொழுது, உங்களுடைய தியானத்தில் நிழலாக சுற்றி வளைத்து அவை உங்களிடம் வரலாம். இது, வாழ்வில் ஏற்படும் அற்புதங்களில் ஒன்று. எவை அழகாகவும், உண்மையாகவும், கவர்ச்சியாகவும் இருக்கின்றனவோ, அவை சுற்றி வளைத்துத்தான் உங்களிடம் வரும். நீங்கள், அவற்றை நேரடியாக தியானத்தின் மூலமாக அணுக முடியாது. ஏனென்றால், அப்படி நேரடியாக அதை அணுகினால்- சந்தோஷத்திற்காக, தெய்விகத்திற்காக, இப்படி எதைக் குறித்தும் நீங்கள் விருப்பப்பட்டால்- நீங்கள் அதை இழப்பீர்கள். அது தானே வந்து உங்களை ஆக்ரமிக்காது. ஆகவே, ஒன்றை அடைய தியானத்தை ஒரு சாதனமாக பயன்படுத்தாதீர்கள்; அதை அப்படிப் பயன்படுத்த முடியாது. உங்களுடைய எதிர்பார்ப்பும், இறுக்கமான நிலையும், அதற்குப் பெருந் தடங்கலாக இருக்கும். தியானத்தின் பயன் வெளியே அல்ல; அது, அதற்கு உள்ளேயே அடங்கி இருக்கிறது. இதை ஆழ்ந்து புரிந்து கொள்ளுங்கள்.

முன்பு, உங்களிடம் இருந்த விளையாட்டுத்தனம்தான், தியானம் என்பது. உங்களுடைய அந்த சிறு பிள்ளைத் தனம் மறைந்து விட்டது. ஆனால், இப்பொழுது நீங்கள் அந்த சிறுபிள்ளைத்தனத்தோடு கூடிய விளையாட்டை, மீண்டும் அடையலாம். நீங்கள் பழையபடி, பல வர்ணங்களை வைத்துக் கொண்டும், மலர்களை வைத்துக் கொண்டும், மாறும் பல விளையாட்டு சாமான்களை வைத்துக் கொண்டும் மீண்டும் விளையாடலாம். நீங்கள் அந்த விளையாட்டுத் தளத்தில், ஓய்வாக இருக்க முடியும்; விளையாட வேண்டும் என்று அவசியம் கூட இல்லை. இந்த ஓய்வான கணத்தில் அது நிகழ்வதற்கு ஏற்ற சூழ்நிலை தானே அமையும்; அந்தப் பேரானந்தம் அப்பொழுது ஏற்படும். உயிர்த்தன்மையோடு விளையாடும் குழந்தைகளாக, எப்போதும் மாறினால், கோயிலே கூட ஒரு விளையாட்டுக் கூடமாக மாறிவிடும்.

நீங்கள் இப்பொழுது என்னிடம் 'யோகா' மற்றும் 'யோகி' என்றால் என்னவென்று கேட்கிறீர்கள். தியானத் தன்மையில்

உள்ளவனை 'யோகி' என்று அழைக்கலாம். ஒருவன் தியானத் தன்மையில் வாழ்வது, சாப்பிடுவது, குளிப்பது, தூங்குவது என்று அவன் முழு வாழ்வே மற்றும் ஒவ்வொரு செய்கையும் தியானத் தன்மையில் பரிமளிக்கும். அவன், இந்த உயிர்த்தன்மையை ஒரு சுமையாகக் கருதாமல், ஒரு விளையாட்டாகக் கருதுவான். ஒரு யோகிக்கு, இறந்த காலத்தைப் பற்றியோ அல்லது எதிர்காலத்தைப் பற்றியோ எந்தக் கவலையும் இல்லை. அவன், இப்பொழுது மட்டும் நிகழ்காலத்தில் வாழ்கிறான். வாழ்க்கை என்பது எந்தக் குறிக்கோளையும் அடையாமல், ஒரு தொடர்ந்த ஓடுதல் அல்லது நீரோட்டம் போலத்தான். ஏனென்றால், உண்மையான விளையாட்டில், எந்த குறிக்கோளும் கிடையாது.

ஆனால், நாம் விளையாட்டிலும், ஒரு குறிக்கோளை ஏற்படுத்தி விடுகிறோம். நாம் அதில் உள்ள விளையாட்டுத் தனத்தை அழிக்கிறோம்; அதையும் ஒரு வேலையாகப் பாவிக்கிறோம். குறிக்கோள் இல்லாத வேலையே கிடையாது; அதைப்போல குறிக்கோளோடு எந்த விளையாட்டும் விளையாட்டாக இருக்காது. ஆனால், நாம் விளையாடும் பொழுதும், ஒரு குறிக்கோளை ஏற்படுத்திக் கொள்ளும் வகையில், அதில் எதையோ அடைவதற்கு உள்ளது போலவும் நினைத்துக் கொள்ளுகிறோம். நாம் ஒரு வேலையை, வேலைக்காக மட்டும் செய்வது இல்லை- கலையை கலைக்காக செய்வதுபோல- கலையை, கலைக்காக மட்டும் செய்யும் பொழுது, அது தியானத்தன்மை வாய்ந்ததாகிறது. பாடல், பாடலுக்காக மட்டும் பாடுவது என்பது தியானத் தன்மையுடைய தாகிறது; அதைப் போலவே அன்பு மற்றும் காதல் அனைத்தும்.

ஒன்றின் வழியும், முடிவும் ஒன்றானால், அது தியானத் தன்மையை அடைகிறது. ஆனால், வழிகள் ஆரம்பமாகவும், முடிவு குறிக்கோளாகவும் மாறினால், மற்றும் அதற்கிடையில் ஒரு தொடர்ந்த செயல் இருந்தால், அது ஒரு வேலையாகி விடுகிறது. இப்பொழுது அதை நீங்கள் கடுமையாகத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும். பின்பு, உங்களுடைய வெகுளித்

தனம் அழிக்கப்பட்டு, அங்கு பரபரப்பு, இறுக்கம், சுமை மற்றும் போராட்டம் ஏற்பட்டு விடுகிறது.

வழியே முடிவாகவும், முடிவே வழியாகவும் இருக்க வேண்டும். இந்தத் தன்மையோடு அணுகும் எதுவும், தியானத் தன்மையுடையதாகிறது. ஆரம்பமே, முடிவாக இருக்க வேண்டும்; உங்களுடைய முதல் அடியே, முடிவான அடியாக இருக்க வேண்டும். உங்களுடைய பிறப்பே, இறப்பாக இருக்க வேண்டும். சந்திப்பே, பிரித்தலாக இருக்க வேண்டும். இந்த இரண்டு மாறுபட்ட தன்மைகளும், ஒரு முழுமையின் இரு கூறுகளாக இருக்கின்றன. உண்மையில் அவை இரண்டும் ஒன்றுதான். நீங்கள் அப்படி அதை ஒருமையில் பார்த்தால், உங்களுடைய மனம் தியானத் தன்மையுள்ளதாகிறது. பிறகு, உங்களிடம் சுமையோ மற்றும் இறுக்கமோ இருக்காது. பிறகு, இந்த வாழ்க்கையே, ஒரு விளையாட்டாக, லீலையாக மாறிவிடுகிறது.

இயேசுவின் சிலுவை ஒரு இறுக்கமான காட்சி; ஆனால், கிருஷ்ணர் விளையாட்டுத் தனமாகவே வாழ்ந்தார். கிருஷ்ணரின் ஆடல், இயேசு சிலுவையைத் தூக்கிச் செல்லுவதிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. அது, இயேசுவுக்கு ஒரு சுமைதான்; அதை அவர் சுமந்துதான் ஆகவேண்டும். ஆகவேதான், இயேசு ஒருக்காலும் சிரித்திருக்க மாட்டார் என்று கிறிஸ்துவர்கள் நம்புகிறார்கள். அவர், அந்த பழுவான சிலுவையைச் சுமந்து செல்ல வேண்டுமானால், அவர் எப்படி சிரித்திருக்க முடியும்? மேலும், தனக்காக மட்டும் அந்த சிலுவையை அவர் சுமக்கவில்லை. இந்த முழு மனித இனத்துக்காகவே, அவர் அதைச் சுமந்து சென்றிருக்கிறார்- அது இதுவரை இறந்தவர்களுக்கும் மற்றும் இனிமேல் வருவோர் களுக்கும் சேர்த்துத் தான். ஆனால், இது உண்மையான இயேசுவின் ஓவியம் என்று நான் நினைக்கவில்லை. அது கிறிஸ்துவர்கள் ஏற்படுத்திய ஓவியம்தான். ஒரு போதும் சிரித்திராத இயேசு என்றால் கற்பனை பண்ணிக் கூடப் பார்க்க முடியவில்லை. சிரிக்க இயலாத ஒருவன், மதத்தன்மையை அடைவதற்குத் தகுதியில்லாதவனாக ஆகிறான்.

சிரிப்பில், பல வகை உண்டு. ஒருவன், அடுத்தவனைப் பார்த்துச் சிரித்தால், அது மதத்தன்மைக்கு புறம்பானது. ஆனால், ஒருவன் தன்னைப் பார்த்துச் சிரித்துக் கொள்ளுவது என்பது மதத்தன்மையானது. தன்னையே பார்த்துச் சிரித்துக் கொள்ளும் மனிதன், இறுக்கமாக இருக்க முடியாது. அவன், விளையாட்டுத் தனம் உள்ளவனாகவே இருப்பான். அவனுக்கு இந்த வாழ்க்கையே ஒரு முடிவு இல்லாத விளையாட்டாகவும், இலக்கு இல்லாத விளையாட்டாகவுமே இருக்கும். அவன் எதையும் எதிர்காலத்தில் அடைய வேண்டியதில்லை. ஏனென்றால், என்னென்ன ஒருவனுக்குக் கிடைக்க வேண்டுமோ, அத்தனையும் இந்த நிகழ்காலத்திலேயே இருக்கிறது.

ஒன்றை அடைய நினைக்கும் மனம், வருங் காலத்திலிருந்து தன்னை ஒருக்காலும் பார்த்துக் கொள்ளாது. அது எப்பொழுதும் வருங்காலத்திலேயே இருக்கும். வருங்காலத்தில் சஞ்சரிக்கும் மனம், இறந்த காலத்தில்தான் வேர் விட்டிருக்கிறது. ஏனென்றால், வருங்காலம் என்பது, இறந்தகாலத்தின் எதிரொலி தான். நாம் இறந்த காலத்தின் ஆசையை, வருங்காலத்தில் நிறைவேற்ற ஆசைப்படுகிறோம். ஆகவே, வருங்காலம் என்பது, இறந்த காலத்தின் தொடர்தான். வருங்கால ஞாபகங்கள் என்பது, இறந்தகால அனுபவத்தின் மிக அழகிய எதிர்பார்ப்பு தான்.

ஒரு தியானத் தன்மையுள்ள மனிதன், நிகழ்காலத்தில் வாழுகிறான். ஏனென்றால், உண்மையாக வாழ அவனுக்கு வேறு எந்த வழியும் கிடையாது. நீங்கள் இந்த உயிரோட்ட முள்ள, உண்மையான வாழ்வைத் தள்ளிப் போட நினைத்தால், நீங்கள் இறந்த காலத்திலோ அல்லது எதிர்காலத்திலோ வாழலாம்.

யோகா என்பது தியான முறை அல்ல. ஆனால், அது தியானம் நிகழ, ஏற்ற ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தும் ஒரு வழியாகும். யோகி என்பவன் உண்மையாக வாழ ஆரம்பிக்கும் அவன் இந்தத் தருணத்தில் வாழ்கிறான்; அவனுக்கு வாழ்வின்

குறிக்கோள் என்று எதுவும் கிடையாது- ஒரு துறவி மற்றும் ஒரு சந்நியாசி.

சாதாரணமாக, ஒரு துறவி அல்லது சந்நியாசி என்பவன் வாழ்க்கையைத் துறந்தவன் என்றே நாம் கருதிக் கொண்டு இருக்கிறோம். ஆனால், ஒரு உண்மையான சந்நியாசி என்பவன், இப்பொழுதுதான் உண்மையாக வாழுபவன். 'சந்நியாசம்' என்பது துறவு அல்ல; அது வாழுவதற்கான ஆரம்ப தீட்சை. அது இறந்த காலத்தையும் மற்றும் பிறக்காத எதிர்காலத்தையும் துறப்பதுதான். அது, உண்மையாக, வாழுதலைத் தள்ளிப் போடுதலையும் மற்றும் தற்கொலைக்கு ஒப்பான செயல்களில் ஈடுபடுவதையும் துறப்பதுதான். அது, வாழ்க்கைக்குள் புகுவதின் ஒரு ஆரம்பம். ஆகவே, யோகா என்பது, வாழ்வின் புரியாத புதிர்களைப் புரிந்து கொள்ளும் ஆரம்பம் மற்றும், தியானம் நிகழக்கூடிய ஒரு சரியான சூழ்நிலையை ஏற்படுத்தும் ஒரு முறையே தவிர, வேறு எதுவும் இல்லை.

யோகாவை ஏற்படுத்திய நாடு இந்தியா மாத்திரமல்ல. எந்த இடத்திலெல்லாம் மற்றும் எப்பொழுதெல்லாம், ஒருவன் உண்மையாக வாழ்ந்தானோ, அங்கேயெல்லாம் யோகா ஏற்பட்டிருக்கிறது. புத்தர், தன்னுடைய யோகத்தையும், மஹாவீரர் தன்னுடைய யோகத்தையும் மற்றும் இயேசு தன்னுடைய யோகத்தையும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆகவே, இந்த உலகத்தில் ஆயிரமாயிரம் யோகங்கள் நிலவுகின்றன.

ஒவ்வொரு தனிப்பட்ட மனிதனும், தனக்கென்று ஒரு வழியை மற்றும் உண்மையை நேரடியாக அணுக, தனக்கென்று ஒரு கதவை ஏற்படுத்திக் கொண்டார்கள். ஆகவே, யாரும், வேறு யாரையும் பின்பற்றுவதில்லை. நீங்கள் அப்படி யாரையாவது ஒருவரைப் பின்பற்றினால், அப்பொழுது உங்களால் ஒரு யோகியாக முடியாது. பின்பற்றுபவர், ஒருக்காலும் யோகியாக முடியாது. பின்பற்றுதல் என்பது, நீங்கள் மீண்டும் ஒரு பாதுகாப்பைத் தேடுவதற்குச் சமம்தான். ஏற்கெனவே அடைந்தவரை, நீங்கள் பின்பற்றுதல் மூலம், நீங்களும் அதை

அடைய முடியும் என்று நிச்சயமாகக் கருதுகிறீர்கள். ஆனால், அந்த அடைந்தவரின் வழி, உங்களுக்கு ஏற்ற வழியாக நிச்சயம் இருக்காது. ஆமாம். அது அப்படி இருக்காதுதான். ஏனென்றால், ஒவ்வொரு மனிதனும், தனித்தன்மையுடையவன். ஆகவே, ஒவ்வொருவரும் தங்கள் வழியை, தாங்களே உண்டாக்கிக் கொள்ள வேண்டும்.

ஒருவன், அந்தப் பாதையில் நடந்து சென்று எங்கேயோ ஒன்றை அடைய, அது ஒன்றும் ஏற்கெனவே போட்ட பாதை யல்ல. நீங்களே ஒரு பாதையை ஏற்படுத்திக் கொள்ளுங்கள்; அதில் நீங்கள் நடந்து மேலே செல்லுங்கள். நீங்கள் அதை எவ்வளவு நீளமாக உண்டாக்கிக் கொள்ளுகிறீர்களோ, அவ்வளவு அதிகமாக அதில் நீங்கள் நடந்து செல்லுவீர்கள். ஒருவன் உண்டாக்கிய பாதையில், வேறு யாரும் நுழைய முடியாது. ஏனென்றால், அந்தப் பாதை உங்களுக்குள் இருக்கிறது. அதில் பொதுவான அடையாளமோ அல்லது மைல் கல்லோ அல்லது வேறு எந்த வெளிக் குறியீடோ கிடையாது. புத்தர் ஒரு குறிப்பிட்ட பாதையைப் பின்பற்றினார். ஆனால், அது அவருக்குள்ளே உள்ள ஒரு தனிப்பட்ட பாதை. அதில் வேறு யாரும் நடக்க முடியாது.

யாரும், வேறு யாருடைய பாதையையும் ஒரு போதும் எடுத்துக் கொள்ள முடியாது. என்னுடைய இடத்தில், நீங்கள் இறக்க முடியாது. ஆனால், எனக்காக நீங்கள் இறக்கலாம்- இதுவேறு- ஆனால், என்னுடைய இறப்பை, நீங்கள் ஈடுகட்ட முடியாது. நீங்கள் எனக்காக இறந்தாலும், அது உங்களுடைய இறப்புதான்; அது நீங்களாக ஏற்படுத்திக் கொண்டது. அது ஒருக்காலும் என்னுடைய இறப்பாகாது.

அதைப்போல, நீங்கள் என்னுடைய இடத்தில் இருந்து கொண்டு, உங்களுடைய அன்பை வெளிப்படுத்த முடியாது. அதற்கு வேறு எந்த மாற்றமோ, உதவியோ மற்றும், பதில் தன்மையோ எதுவும் கிடையாது. என்னுடைய அன்பு எனக்கே உரியது; என்னுடைய இறப்பு, எனக்கே உரியது. அப்படி

இருக்கும்பொழுது, என்னுடைய வாழ்க்கை, எப்படி உங்களுடைய வாழ்க்கையாகும்? என்னுடைய வாழ்க்கை, என்னுடையதுதான். அதில் வேறு யாரும் நுழைந்து வாழ முடியாது. அது முழுமையாக எனக்கே உரியது மற்றும் தனித்தன்மை படைத்தது. அதை வேறு யாருக்கும் என்னால் பங்கிட்டுக் கொடுக்க முடியாது.

ஆகவே, ஒவ்வொருவரிடமும் ஒரு தனிப்பட்ட யோகா இருக்கிறது. மற்றும் ஒவ்வொருவரும் அதைத்தானே ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். ஒவ்வொருவரும், தன்னுடைய முழுமையான உள் இருட்டிலும் மற்றும் முழுமையான தனிமையிலும், அதைத் தேட வேண்டும். ஆனால், அந்தத் தேடுதலே, அந்த இருட்டைப் போக்கும் வெளிச்சமாக ஆகிறது. ஏனென்றால், தன்னுடைய தனிமையை ஒருவன் பிரக்ஞையாக உணரும் பொழுது, அந்தப் பிரக்ஞையில் அந்தத் தனிமையை அழிக்கும் கருவியாகி, அவனுக்கே உரிய தைரியத்தை ஏற்படுத்தி விடுகிறது.

நீங்கள் உங்களுடைய ஒருமையை முழுமையாக உணர்ந்தால், பிறகு உங்களிடம் எந்தப் பயமும் உண்டாகாது. வேறு யாரும் உங்களுடன் இருக்கக் கூடிய அமைப்பு உங்களிடம் இல்லை என்பதை நீங்கள் பூரணமாக உணரும்பொழுது, அங்கு பயத்திற்கு வேலை ஏது? பொதுவாக, பயம் என்பது உங்களுடைய வருங்கால விருப்பத்திலும், கனவுகளிலும் மற்றும் வேறு நபர் உங்களுடன் இருக்கக்கூடிய சாத்யம் இருப்பதாக நீங்கள் கருதும் கற்பனையாலும் தான் ஏற்படுகிறது. ஆனால், நீங்கள் உங்களுடைய ஒருமை நிலையில் (Aloneness) முழுமையாக, பிரக்ஞையாக உணர்ந்தால், அங்கு பயம் ஏற்பட வழி கிடையாது. ஆகவே, இந்த நிலையில் நீங்கள் அதிலிருந்து தப்புவதற்கு, எந்த வழியும் கிடையாது.

நீங்கள் உங்களுடைய முழுமையான தனிமையை ஏற்றுக் கொள்ளும் அந்த கணத்திலேயே, நீங்கள் சமூகத்தைக் கடந்த நிலையில் ஒரு யோகியாகி விடுகிறீர்கள். சமூகத்தை விட்டு செல்லுதல் என்பதற்கு அர்த்தம் இதுதான். நீங்கள் சமூகத்தை

விட்டு அகன்று செல்லுதல் என்று அதற்கு அர்த்தம் கிடையாது- யாராலேயும் சமூகத்தை விட்டு அப்பால் செல்ல முடியாது- நீங்கள் எங்கே சென்றாலும், அங்கேயும் ஒரு சமூகத்தை உண்டு பண்ணி விடுவீர்கள். மரங்கள் மற்றும் விலங்குகளோடு கூட ஒரே குடும்பத்தை ஏற்படுத்திக் கொண்டு விடுவீர்கள்; பிறகு அதுவே உங்களுடைய சமூகமாகி விடும். ஒரு தனிப்பட்ட விசித்திரமாக, சமூகம் உங்களைத் தொடர்ந்து வரும். நீங்கள் எங்கே சென்றாலும், உங்களுக்கென்று ஒரு தனிப்பட்ட இடத்தை நீங்கள் வாழ ஏற்படுத்திக் கொள்ளுவீர்கள். அந்த எல்லைக்குள் இருப்பவை அனைத்தும், உங்களுடைய சமூகத்தின் அங்கத்தினராவார்கள்.

நீங்கள் தனிமையில் இருப்பதை, ஒரு கண நேரம் நீங்கள் அறிந்து கொண்டாலும்- தனிமையாக உங்களுக்கென்று ஒரு வழியை ஏற்படுத்துதல், அதில் தனிமையாகச் செல்லுதல், தனிமையில் வசித்தல் மற்றும் இந்த கணத்தில் தனிமையாக பங்கெடுத்துக் கொள்ளுதல்- அது உங்களிடம் ஆழமாக ஊடுருவ உங்களுடைய சமூகம் மறைந்து விடுகிறது. ஆகவே, நீங்கள் எல்லாவற்றிலும் தனிமையாக இருக்கிறீர்கள்.

இப்பொழுது குரு என்று யாரும் உங்களுக்குக் கிடையாது. மற்றும் நீங்கள் பின்பற்றுவதற்கு எதுவும் கிடையாது. உங்களுக்கென்று எந்தவித ஏணியோ அல்லது வழிகாட்டு பவரோ கிடையாது. நீங்கள் தனியாக இருக்கிறீர்கள்; நீங்களே இப்பொழுது ஒரு தனிமை தான். அதை அசுத்தப்படுத்த, அதை கலப்படம் செய்ய, வேறு யாரும் கிடையாது. அது அவ்வளவு அழகானது. வெகுளியானது மற்றும் சுத்தமானது. இந்தத் தனிமைதான், உங்களுடைய பாதை, தியானம் மற்றும் யோகாவாகும்.

இருந்தும், நீங்கள் இந்தத் ஒருமையோடு என்ன செய்வது என்று கேட்கலாம். நீங்கள் செய்வதற்கு ஒன்றும் இல்லை. ஏனென்றால், நீங்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும், நீங்கள் அதிலிருந்து தப்பித்துச் செல்லும் காரியத்தைத் தவிர வேறல்ல.

ஒவ்வொரு செயலும், நீங்கள் அந்தத் தனிமையை மறக்கும் காரியமாகிவிடும். நீங்கள் தப்பித்து, தனிமைப்படுத்தக் கூடியது அல்ல இந்தத் தனிமை. நீங்கள் அத்துடன் இருந்து, அதில் ஆழமாகச் சென்று அதனுடன் வாழ வேண்டும். அந்த வாழ்வின் பாதையில், நீங்கள் முழுமையான தனிமையில்தான் நடந்து செல்ல வேண்டும். அந்தக் கூட்டத்தில், உங்களையொத்த பிரயாணிகள் இருந்தாலும், உங்களைப் பொறுத்த வரையில், நீங்கள் முழுமையான தனிமையில்தான் இருக்க வேண்டும்.

வீதியில் இரண்டு பேர் நடந்து சென்றால், அவர்கள் இருவரும் சேர்ந்து நடக்கவில்லை. அவர்கள் இருவரும் தனித்தனியாகவே நடக்கிறார்கள்- இரண்டு ஒருமைகள், சேர்ந்து நடந்து செல்லுகின்றனர். ஒரே குடும்பத்தில், ஐந்து பேர்கள் சேர்ந்து வாழலாம்; அதாவது ஐந்து தனித் தன்மைகள் ஒரு குடும்பத்தில் வாழ்கின்றன. ஆகவே, ஒரு குடும்பத்தில் வாழுங்கள்; ஆனால், நீங்கள் தனிமையில் வாழ்வதையும் புரிந்து கொள்ளுங்கள்.

நீங்கள், உங்களுடைய ஒருமையைப் புரிந்து கொண்ட கணத்தில், நீங்கள் பிறரிடத்திலும் மற்றும் அவர்களுடைய ஒருமையிலும் கருணை உடையவர்களாகி விடுவீர்கள். இந்தக் கருணைதான் ஒருவன் உண்மையாக யோகாவில் இருப்பதை சுட்டிக்காட்டிவிடுகிறது. ஏனென்றால், நீங்கள் உங்களுடைய தனிமையைப் புரிந்து கொண்டதால், உங்களால் அடுத்தவர் களுடைய தனிமையையும் சரியாகப் புரிந்து கொள்ள முடிகிறது.

ஒவ்வொருவரும் தனிமையில்தான் இருக்கிறார்கள்; கணவன், மனைவி, குழந்தை அனைவரும். ஆனால், அவர்கள் எந்தவித கருணையுமின்றி, பச்சாதாபம் இன்றியே வாழுகிறார்கள். ஏனென்றால், அவர்கள் தாங்கள் தப்பிச்செல்ல, தகுந்தவர்களை உபயோகிக்கிறார்கள். தன்னுடைய தனிமையிலிருந்து தப்பிச்செல்ல, மனைவி, தன் கணவனை ஒரு கருவியாக உபயோகிக்கிறார். இதனால்தான், ஆளுடமை (Possession) ஏற்படுகிறது. தன்னுடைய கணவன், தன்னை மறந்துவிட்டால்

தன்னை விட்டுச் சென்றுவிட்டால், தான் தனிமைப்படுத்தப் படுவோம் என்று மனைவி பயப்படுகிறாள்- அப்பொழுது கணவன், மனைவி தப்புவதற்கு உதவி செய்கிறான். அவளுடைய ஒருமையைப் பற்றி, அவளுக்கு விழிப்புணர்வு இல்லை. மேலும், அதைப்பற்றி அவள் புரிந்து கொள்ளவும் விரும்புவதில்லை. ஆகவே, அதற்கு மாறாக, அவள் தன்னுடைய கணவனிடம் விழிப்புணர்வாக இருக்கிறாள். அப்பொழுது அவள் தன்னுடைய உடமையாகக் கருதிக்கொண்டு அவனையே தொங்கிக் கொண்டு இருக்கிறாள். அதைப்போலவே, கணவனும், தன் இயல்பாக, மனைவியைக் கருதுகிறான்; அப்பொழுது அவனுடைய தனிமையிலிருந்து தப்பிக்க, மனைவி ஒரு கருவியாகிறாள்.

நாம் ஒருமையில் இருக்கிறோம். மனிதன் ஒருமையில் இருக்கிறான் என்ற புரிந்து கொள்ளுதல் ஏற்படும் கணத்திலேயே அவனிடம் தப்பித்தல் உணர்வு ஏற்படாது. ஏனென்றால், உங்களால் தப்பிக்க முடியாது என்பதையும் நீங்கள் அறிந்து கொள்ளுவீர்கள். அது உங்களுடைய வெறும் விருப்பாகவே இருக்கலாம். ஆனால், உண்மையில் தப்பித்தல் நடைபெறாது! ஒரு மனைவி, எப்படி கணவன் இல்லாத நிலையில் தனிமையில் இருக்கிறாளோ, அதைப் போலவே அவள் தன் கணவனோடு இருக்கும் போதும் தனிமையில் இருக்கிறாள். நாம் ஒரு மாயையான, பொய்யான தப்பித்தலையும் மற்றும் சேர்ந்து இருத்தலையும் ஏற்படுத்திக் கொள்கிறோம். நம்முடைய குடும்பங்கள், நாடுகள், மற்றும் கூட்டு அமைப்புகள் அனைத்தும், ஏன் இந்த முழு சமூகமே, தனிமையிலிருந்து தப்பித்தல்தான்.

இப்படியிருக்க, இப்படி சேர்ந்து வாழுதல் என்பதில் எந்த ஆதாயமும் இல்லை என்று யாரும் ஏன் நினைப்பதில்லை? இது எவ்வளவு அருவருப்பானது? நீங்கள் உங்களுடைய அறையில், தனிமையில் இருந்தால், உங்களுடை தனிமையில் உங்களுக்கு அலுப்பு ஏற்படும். ஒரு அலுப்பான மனிதன், இன்னொரு அலுப்பான மனிதனோடு சேர்ந்து வாழ்ந்து, இருவரும் அலுப்பைக் கடந்து செல்ல நினைக்கிறார்கள்.

கணிதப்பூர்வமாக, அதனுடைய முடிவு மாறாகவே இருக்கும்; அந்த அலுப்பு இப்பொழுது இரண்டு மடங்காகிவிடும்! இப்பொழுது, ஒவ்வொருவரும், அடுத்தவரிடம்தான் தவறு இருக்கிறது என்று நினைக்க ஆரம்பித்து விடுகிறார்கள். ஒவ்வொருவரும் அடுத்தவரை மறுத்து அவர்களுக்குள்ளே, மனவேற்றுமையை ஏற்படுத்திக் கொள்ளுகிறார்கள்.

ஆகவே, யோகி என்பவன் இந்தப் பச்சையான உண்மையை அறிந்தவனாகி, யோகாவுக்கு வருகிறான். அதாவது, ஒவ்வொருவருடைய இயல்பான தன்மையே தனித்து இருத்தல் தான் என்றும், அதற்காக யாரும் எதுவும் செய்ய முடியாது என்றும், மற்றும் ஒருவன் தனியாகவே வாழ வேண்டும் என்றும் அறிந்து கொள்கிறான். இதை ஒருவன் பிரக்ஞையாக ஒத்துக் கொள்ளும் போது, ஒரு பெருத்த மாறுதல் அல்லது வெடித்தல் அவனிடம் நேரிடுகிறது. இப்பொழுது, தப்பிக்கத் தேவை இல்லை. ஏனென்றால், தப்பிக்க எந்த வழியும் இல்லை. அவன் தன்னில்தான் வாழ ஆரம்பிக்கிறான். அவனால் தனியாகவே வாழவும் முடியும்; ஆனால் அவன் தனித்து இருக்க மாட்டான். சமூகத்தில் சேர்ந்து, தன்னுள்ளே தனித்தும் இருப்பான்.

அவன் மக்களைத் தேடியோ அல்லது குகைகளைத் தேடியோ செல்லமாட்டான். ஏனெனில், இப்பொழுது அவன் எங்கே இருந்தாலும், ஏன் ஒரு சந்தைக் கூடத்திலேயோ அல்லது ஒரு கூட்டத்திலேயோ இருந்தாலும், தான் தனியாகத்தான் இருக்க வேண்டும் என்பது அவனுக்கு மிக நன்றாகத் தெரியும். அப்பொழுது, ஒவ்வொருவரும் வித்தியாசமாகவே அவனுக்குத் தென்படுவார்கள். ஒவ்வொருவரும் தனித்தனியாக! ஒவ்வொருவரின் முழுமையான தனிமையைக் கண்டு, அவனிடம் கருணை பொங்கும்.

அப்படி, பிறரிடம் அவனுக்கு கருணை எழும்பும் பொழுது, அந்த யோகி தியான அனுபவத்தைப் பெறுகிறான். அப்பொழுது, தியானம் இரண்டு தலையுள்ள அம்பாகிறது; ஒரு தலை, தியானத்தை நோக்கிக் காட்டுகிறது; அடுத்த தலை கருணையை

நோக்கிக் காட்டுகிறது. உங்களுடைய உள்ளுலகத்தில், நீங்கள் தியானத்தையும், வெளி உலகத்தில், நீங்கள் கருணையையும் உணர்வீர்கள்.

புத்தர் இரண்டு வார்த்தைகள் உபயோகிப்பார்: ஒன்று, 'பிரக்ஞை' (Prajna); அடுத்தது 'கருணா' (Karuna) என்பதாகும். ஏனென்றால், அடிப்படையில், மதம் இந்த இரண்டு வார்த்தைகளில்தான் இருக்கிறது. 'பிரக்ஞை' என்றால் தியானம் என்பதாகும்- அறிதலின் உச்சம். கருணா என்றால் கருணை என்பதாகும். பிரக்ஞை அல்லது தியானம் என்பது ஜுவாலை யாகவும், கருணா மற்றும் கருணை என்பது ஒளியாகவும் எங்கும் பரவி, இந்த உலகத்தை நிரப்பும் ஒளி வெள்ளமாகிறது. இரண்டும் ஒன்றாகவே வரும்- அவை இரண்டும் ஒன்றுதான்.

நீங்கள் இந்த யோகா அல்லது அந்த யோகாவைக் கொண்டோ அல்லது இந்த மதம் மற்றும் வேறு மதங்களைக் கொண்டோ எதையும் எண்ணாதீர்கள். இப்படி எண்ணுவது அனைத்துமே அடிப்படையில் தவறுதான். எதையும், வாழ்வு மற்றும் உயிர்த்தன்மையின் வழியாக எண்ணவும். உங்களிடம் வரும் ஒவ்வொரு கணத்திலும் வாழ ஆரம்பியுங்கள். அதை முழுமையாக, முழுத்தனிமையில் வாழுங்கள். வாழ்க்கையை கணத்துக்கு கணம் வாழுங்கள். திறப்பாக இருங்கள்; அதாவது அந்த அறியாததற்குத் திறப்பாக இருங்கள். வருபவை அனைத்தையும் வரவேற்றுங்கள். மறுப்பதும் மற்றும் ஏற்காததும் தான் நாத்திகமாகும். ஏற்றுக்கொள்ளுதல்- அதாவது எல்லாவற்றிற்கும் ஆமாம் போடும் உணர்வு, எல்லாவற்றையும் எந்தவித நிபந்தனையும் இன்றி ஏற்றுக் கொள்ளல்- என்பதே மதத்தன்மையாகும்.

ஒரு தகுந்த சூழ்நிலையை ஏற்படுத்துங்கள்; நிகழுதல் தானே நடக்கும். ஆனால், அதை முன்கூட்டியே தீர்மானிக்க முடியாது மதிப்பு மிக்கது எதையும் உங்களால் தீர்மானிக்க முடியாது இயந்திரத்தனமானவற்றை மட்டும் தான் உங்களால் முன்கூட்டியே தீர்மானிக்க் முடியும். ஒரு இயந்திரத்தின்

செயலை சுலபமாக தீர்மானிக்க முடியும். ஆனால், வாழ்க்கையைத் தீர்மானிக்க முடியாது. வாழ்வு தீர்மானிக்க முடியாத ஒன்று. ஒருவன் அந்த சூழ்நிலையை ஏற்படுத்தி, அது தன் இயல்பாக, தானே நிகழுவதற்கு அதை அனுமதிக்க வேண்டும்.

உதாரணமாக, நான் ஒரு விருந்தாளியை வரவேற்க வீட்டை சுத்தம் செய்து, தயார்ப்படுத்த வேண்டும். ஆனால், தயார் படுத்துவது என்பது விருந்தாளி இல்லை. அவர் வரலாம் அல்லது வராமல் போகலாம். விருந்தாளிக்கு, இந்திய வார்த்தை 'அதிதி'யாகும். இது மிக அழகான வார்த்தை. இதற்கு அர்த்தம், விருந்தாளியின் வருகை தெரியாது மற்றும் தேதியற்றது என்பதாகும். அவர் இப்பொழுதும் வரலாம் அல்லது அவருடைய வருகைக்காக ஒருவர் தன் வாழ்நாள் முழுவதும் காத்திருக்கவும் நேரிடலாம். விருந்தாளியை வரவேற்பதற்கு, இதுதான் சோதனை. உங்களால் காத்திருக்க முடிந்தால் மற்றும் அந்தக் காத்திருத்தலில், உங்களுக்கு அலுப்பு ஏற்படாவிட்டால்– அதுதான் உங்களுடைய அன்பின் அடையாளம். இப்பொழுது, நீங்கள் இதயத்துடிப்போடும், அன்புடனும் காத்திருக்க வேண்டும்; அந்தக் காத்திருத்தல், ஒவ்வொரு கணமும் தொடர வேண்டும். ஏனென்றால், அந்த ஆத்மிக வெடித்தல், எந்த நேரமும் ஏற்படலாம். ஒருவன் தொடர்ந்து பிரக்ஞையாக இருக்க வேண்டும்;. மற்றும் தொடர்ந்து காத்திருக்க வேண்டும்; அப்பொழுது, விருந்தாளி வராமலே கூடப் போகலாம். அல்லது அந்த நிகழ்ச்சி நடக்கக்கூடாத சாத்யமும் உண்டு என்பதை அவன் நன்றாக அறிந்திருக்க வேண்டும்.

இப்பொழுது, காத்திருக்கப் பொறுமை இல்லாத மக்கள் கூட்டம் சகல விதமான நிச்சயத்தன்மையை ஏற்படுத்திக் கொண்டுள்ளார்கள். அவர்கள், "இதைச் செய்யுங்கள்; அந்த நிகழ்ச்சிக்கு உத்திரவாதம்" என்று கூறுகிறார்கள். ஆனால், அதுபோலும் நடக்காது! அந்த விருந்தாளி நிச்சயம் வருவார் என்று தெரிந்துவிட்டால், பிறகு நீங்கள் காத்திருக்கத் தேவையில்லை. அந்த உறுதியானது, காத்திருத்தலைக்

கொன்றுவிடுகிறது. விருந்தாளி வருவார் என்று நிச்சயமாகிவிட்டால், காத்திருப்பது என்ற கேள்விக்கு இடமே இல்லை.

இப்படி ஒரு நிலையற்ற தன்மையின் சாத்தியக் கூற்றை ஒருவன் முழுமையாகப் புரிந்துகொண்டால், அவனுடைய இதயம் காத்திருத்தலாகவே மாறிவிடுகிறது. அதனுடைய ஒவ்வொரு உயிர்த்துடிப்பும், காத்திருத்தல்தான். ஒவ்வொரு மூச்சும், காத்திருத்தல்தான். நிகழுதல் அனைத்திலும், கணத்துக்குக் கணம் ஒருவன் முழு விழிப்புணர்வாக இருக்கிறான்– மழை பெய்தல், மலர் மலருதல், நட்சத்திரங்கள் இப்படி ஒவ்வொன்றிலும், விழிப்புணர்வாக இருக்க வேண்டும். ஏனென்றால், அந்த விருந்தாளி எப்படி வருவார், எப்பொழுது வருவார் என்று யாராலேயும் கணித்துச் சொல்ல முடியாது. அவர் எப்பொழுது வந்து கதவைத் தட்டுவார் என்று யாருக்கும் தெரியாது.

ஆகவே, யோகி என்பவன் தூக்கமில்லாது காத்திருப்பவன். அவன் தூக்கத்தில் கூட, காத்துக் கொண்டு இருப்பான்; ஏனென்றால், அந்த வருகை யாருக்குத் தெரியும்? நீங்கள் தூங்கும்பொழுது கூட, அவர் வரலாம். அப்பொழுது அவர் திரும்பிச் செல்லுவதைத் தவிர, வேறு வழியில்லை. ஆகவே, யோகி என்பவன் ஒவ்வொரு கணமும் விழிப்பாகவே இருப்பவன்– காத்துக் கொண்டு, காத்துக் கொண்டு, நம்பிக்கையின் மேல் நம்பிக்கையாக, சகல நிலையற்ற தன்மையின் நிலையில் கவனம் வைத்து... ஆனால், எதையும் உறுதிபடுத்த முடியாது. நான் அது நடக்கும் என்று மட்டும்தான் சொல்லுவேன்; அது அப்படியே நடந்திருக்கிறது. எப்பொழுது என்று என்னால் ஒருக்காலும் சொல்லமுடியாது.

காத்திருத்தல் மட்டும்தான், சிரமமான வேலை. ஏனென்றால், நாம் எப்பொழுதும் ஒருவித அவசரத்திலேயே இருக்கிறோம். நவீன காலத்து மனிதனின் அவசரமே, மதத் தன்மையற்றதாகிறது. அது நவீன சமூகத்தை, பொருள் வளத்தை

நோக்கி முழுமையாகச் செலுத்துகிறது. எதற்கும் சந்திக்க முடியாத நிலையில், எல்லாவற்றிற்கும் அவசரப்படுகிறோம். ஆனால், அதற்கு இது ஒன்றுதான் சோதனை. நாம் நின்று, கடவுளைப் பார்க்க முடியாத அளவுக்கு வெகுவேகமாக ஓடிக் கொண்டு இருக்கிறோம். நாம் தொடர்ந்து ஓடிக் கொண்டு இருக்கிறோம்; ஓடும் மனிதனிடம், காத்திருத்தல் என்பது ஒருக்காலும் நடக்காது.

காத்திருக்கும் மனிதன், உட்கார்ந்து கொண்டு இருக்க வேண்டும்; ஓடுபவனாக இருக்க முடியாது.

நீங்கள் செயலில் உங்களை ஈடுபடுத்திக் கொண்டால், நீங்கள் காத்திருக்கும் மனத்திலிருந்து தப்பிக்கிறீர்கள்.

ஜப்பானிய மொழியில் 'தியானா' (Dhyana) அல்லது தியானத்திற்கு 'சாஜென்' (Zazen) என்று பெயர். இதன் அர்த்தம் 'வெறுமனே அமர்ந்திருத்தல்' அல்லது 'காத்திருத்தல்' என்பதாகும்- எதுவுமே செய்யாமல். இதனால், நீங்கள் ஒரே நிலையில் சுமார் ஐந்து மணி நேரம் தொடர்ந்து உட்கார்ந்திருக்க வேண்டும். ஆனால், நீங்கள் அப்படி உட்கார்ந்துகொண்டு, உங்கள் மனத்தை வேறு எதிலாவது ஈடுபடுத்திக் கொண்டு இருக்கலாம் என்று இதற்கு அர்த்தம் இல்லை. ஆனால், நீங்கள் உட்கார்ந்து கொண்டு இருக்கும்போது, உங்களுக்குத் தூக்கம் வந்தால், நீங்கள் வெறுமனே தூங்கிக்கொண்டு, காத்திருக்கவும்; வேறு எதையும் செய்யாதீர்கள். அப்பொழுது, நீங்கள் சாப்பிடவேண்டுமானால், வேறு எந்தச் சிந்தனையும் இல்லாமல், வெறுமனே சாப்பிட்டு காத்திருக்கவும்- வேறு எதையும் செய்யாதீர்கள். இப்படி முக்கியமானது அனைத்தும் நடைபெறலாம்; இருந்தும் நீங்கள் உட்கார்ந்திருக்கிறீர்கள் மற்றும் காத்துக் கொண்டு இருக்கிறீர்கள்- வேறு எந்த வேலையும் செய்யாமல். இதுதான் தியானம். இதுதான் யோகா.

இது துறத்தல் இல்லை; ஆனால் வாழ்வதற்கு, அதாவது உண்மையாக வாழ்வதற்கு இது ஒரு ஆரம்பம். அந்த பழைய துறத்தல் என்பதற்கு நான் முற்றிலும் எதிரானவன். ஏனென்றால்,

அவை அனைத்தும் வாழ்வின் மறுப்பு, வாழ்வின் எதிர்ப்பு மற்றும் கடவுள் தன்மையின் மறுப்பு (Anti-God) ஆகும். அவர்கள் கடவுள் ஏற்படுத்திய வாழ்க்கையை முற்றிலும் மறுப்பதால், கடவுளையே மறுப்பவர்களாகிறார்கள். அவர்கள் உண்மையிலேயே கடவுளை முழுமையாக ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்கள், “கடவுளே, நாங்கள் உங்களை ஏற்றுக் கொள்கிறோம்; ஆனால் நீங்கள் உண்டாக்கிய வாழ்க்கையை மறுக்கிறோம். உங்களுக்கும், வாழ்க்கைக்கும் இடையே உள்ளவற்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறோம்,” என்று சொல்லுகிறார்கள். ஆனால், இதில் தேர்ந்தெடுப்பதற்கு எதுவும் இல்லை. வாழ்வே தெய்விகம்; வாழ்வே கடவுள். இதுதான் உண்மை.

ஒருவன், எதையும் தேர்ந்தெடுக்கக்கூடாது. ஆகவே தேர்ந்தெடுக்காது இருங்கள். வாழ்வில் வாழுங்கள். அதில் ஆழமாக இருங்கள், அதனுடன் ஐக்கியப்பட்டு இருங்கள்; இருந்தும் தனிமையில் இருங்கள். ஏனென்றால், தனிமைதான் உங்களுடைய இயல்பு, இயற்கை. நீங்கள் தனிமையில்தான் இருக்கிறீர்கள். எல்லாமே வரும், போகும்; இருந்தும் உங்களுடைய தனிமையை ஒரு போதும் எதனாலேயும் அழிக்க முடியாது. ஏனெனில், அது உங்களுடைய இயற்கைத் தன்மையின் ஒரு பகுதி. இந்தத் தனிமைதான் அடிப்படை உண்மை; இதிலிருந்துதான் தியானம் ஆரம்பித்து வளர வேண்டும்; இதிலிருந்துதான் யோகாவின் நிகழ்ச்சி முறைப்படி ஆரம்பமாக வேண்டும். மற்றும் இதிலிருந்துதான் ஒருவன் முடிவில் ஒரு யோகியாகி, உண்மையாகத் தனித்தன்மையுள்ளவனாகிறான்.

உண்மை இயல்பு என்பது ஒருவனின் தனித்தன்மையிலிருந்துதான் வரவேண்டும்; ஆகவே, இறந்த கோட்பாடுகளை நம்ப வேண்டாம்- கர்ம யோகா, பக்தி யோகா, ஞான யோகா மற்றும் ராஜ யோகா, இப்படி அனேக யோகாக்கள் இருக்கின்றன. எத்தனை மக்கள் இருக்கிறார்களோ, அதைப் போல் அதில் நடந்து செல்ல அத்தனை வழிகள் உண்டு. ஒவ்வொருவரும் தங்களுடைய யோகத்தை, தாங்களேதான்

ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்; அப்பொழுதுதான், ஒருவன் தன் உண்மைத்தன்மையை உணர முடியும்; இல்லாவிட்டால், பொய்யான, கடன் வாங்கப்பட்ட உணர்வுதான் ஏற்படும்.

இப்படி பல பொய்யான புரிந்து கொள்ளுதல் இப்பொழுது இருக்கின்றன. பின்பற்றுபவர்கள் என்று தங்களைக் கூறிக் கொள்ளுபவர்கள் அனைவரும், தங்களுடைய பொய்யான கடவுளைத்தான் உணர்ந்திருக்கிறார்கள்; உண்மையான கடவுளை அல்ல. ஏனென்றால், அவர்களுடைய பாதையில், எங்கேயோ தன்னுடைய உண்மையான இழப்பை அல்லது உயிர்த்தன்மையை இழந்துவிட்டார்கள். அவர்கள் வேடதாரிகள். ஒரு வேடதாரி அல்லது வேடதாரிகள் உண்மையான உணர்தலை ஒருக்காலும் அடைய முடியாது; அவர்கள் பொய்யான கடவுளைத்தான் உணர்ந்துகொள்ள முடியும். இந்த மாதிரியான பொய்யான உணர்ந்து கொள்ளல் என்பது எளிதானது மற்றும் சுலபமானது; ஆனால், இதனால் எந்த ஆதாயமும் இல்லை. இதனால், ஒருவன் எதையும் அடைய முடியாது.

உண்மையான கடவுள் என்பது ஒன்றே ஒன்றுதான். ஆனால், பல பொய்யான கடவுள்கள் இருக்கின்றன; கிறிஸ்துவக் கடவுள், ஹிந்துக் கடவுள், ஜைனக் கடவுள் மற்றும் முகமதியர் கடவுள் என்று; இந்த மதங்கள் நடந்து சென்ற கடவுளை அடைவதற்கான வழிகள் அனைத்தும் பொய்தான். உண்மையான வழி என்பது தனி ஒருவனுக்குரியது. அதில் நடந்து செல்ல, ஒருவன் தைரிய மிக்கவனாக இருக்கவேண்டும்; அவன் தன்னையே முழுமையாக நம்பிக் கொண்டு, ஏற்றுக் கொண்டு, அறிந்தவை அனைத்தையும் ஒதுக்கி விட்டு, சகல விஷய ஞானங்களையெல்லாம் அலட்சியப்படுத்திவிட்டு, அந்த அறியாததில் குதிக்க வேண்டும்.

கடவுள் ஒரு முழுமையான 'ஒருமை' தான். நீங்கள், "கடவுளோடு ஒன்றாக இருக்கிறேன்" என்று சொல்லும்போது, நீங்கள் மீண்டும் ஒரு அடுத்தவரை உண்டாக்குகிறீர்கள். உங்களுடைய 'கடவுள்' என்பது, நீங்கள் மீண்டும் உங்களிட

மிருந்து தப்பித்தலதான்- அப்பொழுது, அவர் உங்களுக்கு அந்நியமாக இருக்கிறார். அந்நியம் என்பது முன்பு உங்கள் மனைவி, மற்றும் நண்பர்கள். இப்பொழுது, நீங்கள் அந்த அந்நியமான கடவுளோடு ஒன்று கலந்து விட வேண்டும்.

ஆனால், அந்தக் கடவுளோடு, உங்களால் ஒன்றுகலக்க முடியாது. ஏனென்றால், நீங்கள் ஏற்கெனவே அதனுடன் ஒன்று கலந்துதான் இருக்கிறீர்கள். உங்களுடைய முழுமையான உணர்ந்து கொள்ளல் என்பதுதான், அதாவது நீங்களே கடவுள் என்பதும் மற்றும் நீங்கள் அவரிடமிருந்து ஒருபோதும் விலகியில்லை என்பதும் தான் அந்த முழுமையான தன்மை. அவரோடு அல்லது, அதோடு ஒன்றாக இருப்பது சாத்திய மில்லை; அதைப்போல அவரோடு தொடர்பு கொள்ளுவதும் சாத்தியமில்லை. ஏனென்றால், தொடர்பு கொள்ள குறைந்தது இரண்டு பேர் வேண்டும். நீங்கள் உங்களுடைய முழுமையை உணர்ந்து கொள்ளும் போது, கடவுளோடு தொடர்பு கொள்ளுதல் என்பது இப்பொழுது நிகழாது. ஏனென்றால், இப்பொழுது நீங்களே கடவுள், நீங்களே தெய்விகம்! இப்பொழுது மாறுபட்ட இருவேறு தன்மைகளிலிருந்து, ஒருமை என்ற மொழியும் அகன்று விடுகிறது.

"இருவேறு மாறுபட்ட தன்மைகளை இந்த மனம்தான் ஏற்படுத்தியதா?"

நீங்கள், உங்களுடைய முழுமையான தனிமையில் முழுமையாக உணர்ந்து கொண்டால், உங்களுக்கு மனம் இருக்காது. மனம் கடந்தகாலத்தைச் சார்ந்தது, அது உங்களுக்கு அந்நியம் தான். சாதாரணமாக, நீங்கள் தனிமையில் இருக்கும்பொழுது, உங்களுடைய மனம் பேசிக்கொண்டேதான் இருக்கும்; அப்பொழுது அது உங்களுக்கு அந்நியமாகிறது. ஆகவேதான் உங்களுக்கும், அந்நியமான அதற்கும் உரையாடல் நடக்கிறது. ஆனால், நீங்கள் முழுமையாக தனிமையில் இருக்கும்பொழுது, நீங்கள் தனியாக இருக்கிறீர்கள்.

நீங்கள் முழுமையாக தனியாகவே இருக்கிறீர்கள். உங்கள் மனத்தை எங்கும் காண முடியாது; கடவுள் என்று வேறு யாரும் கிடையாது; அப்பொழுது நீங்களே தெய்விகமாகிறீர்கள்.

ஆகவே, நீங்கள் கடவுளோடு ஒன்றாக ஆக வேண்டும் என்று நான் கூறமாட்டேன். ஏனென்றால், அப்படிக் கூறுவது, ஒரு இரண்டுபட்ட தன்மையை ஏற்படுத்திவிடும்; அது, கடவுள் வேறு, நீங்கள் வேறு என்று பிரித்துவிடும். ஏன், உயிர்த்தன்மை என்பது தெய்விகம் என்று கூறுவது கூட அதைப் பிரிப்பதாக ஆகிறது. தெய்விகமற்ற உயிர்த் தன்மை என்று ஏதும் கிடையாது. அது தெய்விகம் அல்லது அது உயிர்த்தன்மை. அவ்வளவுதான். இப்படி இரண்டு வார்த்தைகளைச் சேர்த்துக் கூறவேண்டிய அவசியம் இல்லை. அதை, 'உயிர்த்தன்மை' என்று கூறினாலே போதும்; அல்லது, அதை, 'தெய்விகம்' என்று கூறினாலே போதும். தெய்விகமான உயிர்த்தன்மை என்று கூறும்பொழுது, நாம் அதை இரண்டாகப் பிரிக்கிறோம். அப்பொழுது, உயிர்த்தன்மை என்பதுதான் தெய்விகம் என்றும், வேறு எதுவோ ஒன்று, தெய்விகமற்றது என்றும் ஆகிவிடுகிறது. ஆனால், அப்படி எதுவும் வாழ்க்கையில் கிடையாது. உயிர்த்தன்மையின் வேறு பகுதி என்று எதுவும் கிடையாது; தெய்விகமற்றது என்று எதுவும் கிடையாது.

உயிர்த்தன்மையேதான் 'ஒருமை.' அந்த ஒருமையைப் பற்றிப் பேசுவதுகூட சரியில்லை. ஆகவேதான், இந்தியாவில், 'அத்வைதம்' என்ற வார்த்தையைத் தேர்ந்து எடுத்திருக்கிறோம்; இதன் அர்த்தம் இரண்டு அல்ல என்பதாகும். அதைப்போல அது, ஒருமையாகவும் தன்னை அர்த்தம் செய்து கொள்ளவில்லை. அது வெறுமனே இரண்டு அல்ல என்று மட்டுமேதான் சொல்லுகிறது; இரண்டை மறுக்கிறது. ஏன், 'ஒன்று' என்று கூறுவது கூட, 'இரண்டுக்கு' ஒரு வரிசையை ஏற்படுத்திவிடுகிறது. ஏனென்றால், இரண்டு மூன்று என்று இல்லாமல் ஒன்று இருக்காது. இப்படி அந்த வரிசை சென்று கொண்டே இருக்கிறது. ஆனால், நீங்கள் உங்களுடைய முழுமையான தனிமையை உணர்ந்துகொள்ளும் பொழுதே,

இரண்டு இல்லை என்பதும் உங்களுக்குத் தெளிவாகும்; மற்றும் இரண்டு ஒரு போதும் இருக்க முடியாது என்பதும் தெளிவாகும்.

ஆகவே, நீங்கள் கடவுளோடு ஒன்றாக ஆக முடியும் என்று நான் கூற முடியாது. ஏனென்றால், நீங்கள் எப்பொழுதும் அவராகவே இருக்கிறீர்கள். நீங்கள் அவரிடமிருந்து ஒருபோதும் வேறாக இல்லை. வேறுபடுவது என்பது உங்களுடைய மாயை. இந்த மாயையின் காரணத்தினாலேயே, நீங்கள், அடுத்த மாயையான 'ஒருமை' என்பதையும் ஏற்படுத்திக் கொண்டுள்ளீர்கள். பிரித்தல் என்பதே மாயை; அது ஒரு மனக் கொள்கை. இப்பொழுது அதை மறுப்பதற்கு, நீங்கள் வேறு ஒரு கொள்கையை ஏற்படுத்துகிறீர்கள். ஆனால், பிரித்தல் என்பதே பொய்யாக இருக்கும்பொழுது, அந்த ஒருமையும் பொய்யாக ஆகிறது.

நீங்கள் ஒருமை, ஒன்றுகலத்தல் அல்ல. உங்களோடு வேறு யாரும் கிடையாது; அந்நியம் சென்றுவிட்டது; அது தானே மறைந்து விட்டது. அந்த அந்நியம் மறைந்துவிட்ட நிலையில், மனமும் நின்றுவிடுகிறது. உங்கள் மனம்தான் அந்த அந்நியம். மனம் இல்லாதபொழுது, அந்த அந்நியமும் இல்லை. இதை ஆழ்ந்து புரிந்து கொள்ளுங்கள்.

இது எப்படி இருக்கிறது என்றால், நீங்கள் ஓடும் ஆற்றுக்கு நடுவில், ஒரு களிமண் அணையைப் போட்டால் எப்படியோ, அப்படித்தான். அந்த ஆறு ஒன்றுதான்; அது எப்பொழுதுமே ஒன்றுதான். ஆனால், இப்பொழுது அந்த ஆற்றுக்கு நடுவில், ஒரு அணை போடப்பட்டுள்ளது. அது இரண்டாகப் பிரிந்து இருக்கிறது. அதாவது, அந்தக் களிமண் அந்த ஆற்றை இரண்டாகப் பிரித்திருக்கிறது. அந்தக் களிமண், அந்த ஆற்றுக்கு அந்நியம்தான்; ஆனால், அந்த ஆறு ஒன்றுதான்; அந்த ஆற்றோட்டம் ஒன்றுதான்- அது எப்பொழுதுமே ஒன்றுதான்; அது இப்பொழுதும் ஒன்றுதான்- அந்தக் களிமண் தடுப்பை நீக்கிவிட்டால், அந்த ஆறு மறுபடியும் ஒன்றாக ஆகிவிடுகிறது.

அந்தத் தடுப்புத்தான், அறியாமையை உண்டாக்குகிறது. அந்தத் தடுப்பு அங்கே இருப்பதால்தான், அந்தத் தனித்த உயிர்த்தன்மையை மறுப்பதற்காக, நாம் தத்துவங்களை ஏற்படுத்தியுள்ளோம். மதத்துக்கும் தத்துவத்திற்கும், இதுதான் வித்தியாசம். தத்துவம் மதத்துக்கு புறம்பான தத்துவங்களுக்கு வலுவூட்டுகிறது; மதம் அந்த மறுப்பு என்ற கருணையை தகர்த்தெறிகிறது.

தத்துவம், இரண்டு என்று எதுவும் இல்லை என்றும், இருவேறு தன்மை என்பது பொய் என்றும் மற்றும் அந்த ஒன்றுதான் உண்மை என்றும் சொல்லுகிறது. இரண்டு என்ற கொள்கைக்கு மாறாக, ஒன்று என்ற கொள்கை உருவாகியது. ஆனால், மதத்தன்மை வாய்ந்தவன், "அந்த ஒன்று எங்கே இருக்கிறது? அடுத்தது எங்கே இருக்கிறது? என்று கேள்வி எழுப்புகிறான். இரண்டு என்று எப்பொழுதுமே இருந்தது கிடையாது. கருத்து என்பது ஒரு கொள்கைதான்; ஒன்று என்பதும் ஒரு கொள்கைதான்; இரண்டுமே கொள்கைதான்.

உண்மை கொள்கையற்றது; அது கொள்கையற்ற பேரியக்க பிரபஞ்ச உயிர்த்தன்மை. ஆகவே, தெய்விகம் என்றோ, கடவுள் என்றோ கூறாதீர்கள். மற்றும் இப்பொழுதுதான் கடவுளோடு ஒன்றாக இருக்கிறேன் என்றும் கூறாதீர்கள்.

இப்பொழுது இருப்பது வெறும் தனிமைதான். இப்பொழுது நீங்கள் இருக்கிறீர்கள்; பிரிப்பதற்கு அங்கு வேறு யாரும் கிடையாது; மற்றும் ஒன்று சேருவதற்கும் அங்கு வேறு ஒருவரும் கிடையாது. இந்த ஒரு தனிமை நிலையே, சமாதி ஆகிறது.

"தூக்கம், தனிமைத்தனம் உடையதா?"

கிடையாது. தூக்கம், அதன் இயல்பில் தனித்தன்மை உடையது அல்ல. அது ஒருமையும் அல்ல. இருமையும் அல்ல. அது வெறும் பிரக்ஞையற்ற நிலைதான். அது எப்படி உள்ளதோ, அப்படியே நீங்களும் பிரக்ஞையற்ற

வராகிறீர்கள். உங்களுடைய சாதாரண பிரக்ஞை நிலையில், நீங்கள் இந்த இரண்டையும் புரிந்து கொள்ளுகிறீர்கள். நீங்கள் சாதாரண தூக்கநிலையில் ஒருமையைப் பற்றியோ அல்லது இருமையைப் பற்றியோ உங்களிடம் எந்த பிரக்ஞைத் தன்மையும் கிடையாது. ஆனால், உண்மையான விழிப்பு நிலையில், தியானத்தில் மற்றும் சமாதி நிலையில்– நீங்கள் உங்களுடைய தனித்தன்மையைப் பற்றி விழிப்புணர்வாக இருக்கிறீர்கள்.

தூக்க நிலைக்கும், விழிப்பு நிலைக்கும், ஒற்றுமையும் உண்டு; வேறுபாடும் உண்டு. தூக்க நிலையில், நீங்கள் இந்த இரண்டிலும், பிரக்ஞையாக இருக்கமாட்டீர்கள். சமாதி நிலையில் மற்றும் தியான நிலையில், நீங்கள் இதில் விழிப்பாக இருக்கிறீர்கள். உங்களால் முழுமையாக விழிப்பு நிலையில் இருக்க முடிந்தால், அங்கு இருமைநிலை இருக்காது- தூக்கநிலையில் உள்ளதுபோலமாறாக, அங்கு ஒருமை நிலை நிகழும்.

தூக்கத்தில், உங்களுடைய மனம் தூங்குகிறது. சமாதியில், உங்களுடைய மனம் இறக்கிறது. ஆகவே, தூக்கமும், சமாதியும் ஒன்று போலவே காணப்படும்; ஆனால், அவை அப்படி அல்ல. ஏனென்றால், சமாதிக்குப் பிறகு, மனம் மீண்டும் உயிர்பெறாது. தூக்கத்திலிருந்து, நீங்கள் காலையில் விழித்தெழும்போது, உங்கள் மனம் மேலும் வலுவடைகிறது; மேலும் புத்துணர்ச்சி பெறுகிறது. மீண்டும் அதில் இருமை நிலை காணப்படும். ஆனால், சமாதிக்குப் பிறகு, உங்களால் மீண்டும் வரமுடியாது. இப்பொழுது 'ஒருமை' என்பது சாசுவதமானது, தெய்விகமானது என்று ஆகிறது.

ஆகவே, சமாதியும், சுசுப்தியும் (Susbupti)– கனவுகளற்ற தூக்கம், ஒன்றுபோலவே இருக்கும். சமாதிநிலை என்பதை விழிப்போடு கூடிய சுசுப்தி என்றும் அல்லது சுசுப்தி என்பதை தூக்கத்தோடு கூடிய சமாதி என்றும் சொல்லலாம்.



## "டைனமிக் தியானம் என்றால் என்ன?"

"டைனமிக் தியானத்தைப் பற்றி, முதலில் நீங்கள் அறிந்து கொள்ள வேண்டியது என்ன வெனில், ஒரு இறுக்கமான நிலையிலிருந்து, தியானம் நிகழ்வதற்கு ஏற்ற தகுந்த சூழ்நிலையை ஏற்படுத்தும் முறைதான் இது என்பதாகும். உங்களுடைய முழுமையான இறப்பு நிலை (Being) முழுமையாக இறுக்க நிலையை அடைந்தால், அடுத்து நிகழக்கூடியது ஓய்வாக இருத்தல்தான். சாதாரணமாக, ஓய்வு நிலைக்கு ஒருவன் நேரடியாகச் செல்ல முடியாது. ஆனால், உங்களுடைய முழுமையான இறப்புநிலை, முழுமையான இறுக்க நிலையின் உச்சத்துக்குச் சென்றால், பிறகு அடுத்த நிலை தானே தன் இயல்பாக ஏற்படும்; அமைதி உதயமாகும்."

அந்த முறையில் முதல் மூன்று கட்டங்கள், உங்களுடைய இறப்பு நிலையில் எல்லா அடுக்குகளின் மூலமாக, அந்த இறுக்க நிலையின் உச்சத்தை அடைவதற்கு ஏதுவாக சில பயிற்சிகள் செய்யப் படுகின்றன. முதல் அடுக்கு, உங்களுடைய 'பூத உடல்.' அதற்கு அடுத்து 'பிராண உடல்.' இது உங்களுடைய இரண்டாவது உடல் மற்றும் ஆதாரப்பூர்வமான உடல். இதுவே 'எத்திரிக்' உடலாகும் (Etheric Body). அதற்கு மூன்றாவது உடல், 'ஆஸ்ட்ரல்' உடலாகும் (Astral Body).

உங்களுடைய ஆதாரப்பூர்வமான உடல், நம் மூச்சை ஆதாரமாக்கிக் கொள்கிறது. சாதாரணமாக நாம் உள்வாங்கும் பிராணவாயு மாறினால், அந்த ஆதாரப்பூர்வமான உடலும் மாறவே செய்யும். இந்த முறையில், முதல் கட்டமாக செய்யும் பத்து நிமிட ஆழ்ந்த வேகமான மூச்சு விடுதல், உங்களுடைய முழு ஆக்கப்பூர்வமான உடலில் ஒரு முழுமையான இரசாயன மாறுதலை ஏற்படுத்தும் ஒரு வழியாகும்.

மூச்சை வெளியே விடுதல், மிகவும் ஆழமாகவும், வேகமாகவும் இருக்க வேண்டும். எவ்வளவு ஆழமாகவும், வேகமாகவும் விடமுடியுமோ, அவ்வளவு ஆழமாகவும், வேகமாகவும் அதை விட வேண்டும். அப்படி உங்களால் இரண்டையும் சேர்த்துச் செய்ய முடியாவிட்டால், எவ்வளவு வேகமாக செய்ய முடியுமோ, அவ்வளவு வேகமாகச் செய்யுங்கள். வேகமாக மூச்சு விடுதல், உங்களுடைய ஆக்கப்பூர்வமான உடலின் ஆதாரத்தில் ஓங்கிக்குத்தும் சம்மட்டியாக இருக்கும்; இதில் ஏதோ ஒன்று விழித்து எழ ஆரம்பித்து, உங்களுடைய சக்தியின் தேக்கம் உடைந்து திறக்கும். அந்த மூச்சுவிடுதல், உங்களுடைய முழு நரம்பு மண்டலத்தில், வெண்மையாகப் பாயும் மின்சாரத்தை ஒக்கும்.

ஆகவே, நீங்கள் எவ்வளவு வேகமாக மூச்சை விட முடியுமோ அவ்வளவு வேகமாகவும், ஆழமாகவும், முதல் கட்டத்தில் விட வேண்டும். நீங்கள் அதில் முழுமையாக செயல்பட வேண்டும்; நீங்கள் அதிலிருந்து வெளியே ஒரு கணம் கூட நழுவக்கூடாது. உங்களுடைய இருப்பு நிலை அனைத்தும், இந்த முதல்கட்ட மூச்சு விடுவதில்தான் இருக்க வேண்டும். இப்படி, நீங்கள் மூச்சுவிடுதல் மற்றும் மூச்சை இழுத்தல் போன்ற ஒரு குழப்பமான செயலில்தான் இருக்க வேண்டும்- மூச்சு வெளியேறுதல், மூச்சு உள்ளே வருதல். நீங்கள் அதில் முழுமையாக இருந்தால், உங்களுடைய எண்ணங்கள் நிற்கக்கூடிய நிலைமைக்கு அது வந்துவிடும். ஏனென்றால், உங்களுடைய எண்ணங்களுக்கு தேவையான சக்தி, இப்பொழுது

அதற்குச் செல்லாது- எண்ணங்கள் உயிரோடு இருக்க போதுமான சக்தி எதுவும் இப்பொழுது மீதமாக இல்லை.

பிறகு, உங்களுடைய மின்சாரத்தன்மை வேலைசெய்ய ஆரம்பிக்கும் பொழுது, இரண்டாவது கட்டம் ஆரம்பமாகிறது. உங்களுடைய உடல் சக்தி உங்களுக்குள்ளே சுற்றிச் சுழலும்போது, உங்களுடைய நரம்பு மண்டலம் தூண்டப்பட்டு, உங்கள் உடலில் பலவித புதுமைகள் ஏற்பட ஆரம்பிக்கின்றன. உங்களுடைய உடல் விருப்பப்படி இயங்க, நீங்கள் சுதந்திரமாக அனுமதிக்கிறீர்கள்.

இந்த இரண்டாவது கட்டம், அது விருப்பப்படி செல்ல அனுமதித்ததோடு, அதனுடன் நீங்கள் இயல்பாக ஒத்தும் வருகிறீர்கள். மொத்தத்தில், நீங்கள் உங்கள் உடலோடு இணைந்து செயல்படவேண்டும். ஏனெனில், உடலின் மொழி வெறும் சமிக்ஞைதான்; இதை சாதாரணமாக எல்லோரும் தவற விட்டு விட்டார்கள். உங்களுடைய உடல் ஆட விரும்பினால், உங்களால் அந்த செய்தியை உணர முடியாது. ஆகவே, உங்கள் உடல் ஆடுவதற்கு, ஆசைப்படுவது போல சற்று தெரிந்தாலும், அதனுடன் உடனே ஒத்துழையுங்கள். அப்பொழுதுதான், அதன் மொழியை உங்களால் புரிந்து கொள்ள முடியும்.

இந்த இரண்டாவது கட்ட 10 நிமிட நேரம், எது நிகழ்ந்தாலும், அதை முழுமையாக, உச்சமாகச் செய்யவும். இந்த முறையில் செய்யப்படும் அனைத்தையும், அதன் உச்சத்தன்மைக்கு குறைவாகச் செய்யக்கூடாது. நீங்கள் ஆடவோ, குதிக்கவோ அல்லது சுத்தவோ ஆரம்பிக்கலாம். உங்களிடம் எது நிகழ்ந்தாலும், உங்களுடைய சக்தி தன்னை எப்படி வெளிப்படுத்திக் கொள்ள விரும்பினாலும், அதனுடன் முழுமையாக ஒத்துழையுங்கள். ஆரம்பத்தில் அது சற்று தூண்டுதல் போலவும், மென்மையான தூண்டுதல் உணர்வாகவுமே இருக்கும்- நீங்கள் அதை அடக்கக்கூடிய வகையில், அது அவ்வளவு மென்மையாகத்தான் இருக்கும்.

ஆகவே, அது உங்களுடைய பிரக்ஞைத் தன்மைக்கு ஒருக்காலும் வராது; நீங்கள், அதை பிரக்ஞையற்று, தெரியாமலேயே அடக்கி விடுவீர்கள். ஆகவே, உங்களிடம் சற்று தூண்டுதல் ஏற்பட்டாலும், உங்கள் மனத்தில் சற்றுக் குறிப்பு தெரிந்தாலும், அதனுடன் ஒத்துழைக்கத் தயங்காதீர்கள்; அதில் ஆழ்ந்து செல்லுங்கள், தீவிரமாகச் செல்லுங்கள் மற்றும் அதன் உச்சத்துக்கே செல்லுங்கள்.

அதன் உச்சத்தில்தான், முழுமையான இறுக்கம் ஏற்படும்; வேறு வகையில் ஏற்படாது. நீங்கள் ஆடும் ஆடல், அதன் உச்சத்துக்குச் செல்லாவிட்டால், அதனால், பலன் இல்லை. அது உங்களை எங்கும் அழைத்துச் செல்லாது. மக்கள் பல தடவை ஆடுகிறார்கள்; ஆனால், அது அவர்களை எங்கும் அழைத்துச் செல்லவில்லை. ஆகவே, உங்கள் ஆடல், அதன் உச்சத்துக்குச் செல்லவேண்டும்- முன்கூட்டியே தீர்மானிக்காது. அது இயல்பாக, உள்ளுணர்வாக அனுமதிக்கவும். உங்களுடைய பகுத்தறிவு மற்றும் புத்திசாலித்தனம் என்று எதுவும் அதன் குறுக்கே வரக்கூடாது.

இந்த இரண்டாவது கட்டத்தில், நீங்கள் வெறும் உடலாக இருங்கள், முழுமையாக அதில் ஒன்றி இருங்கள். முதல் கட்டத்தில், எப்படி நீங்கள் முழுமையாக மூச்சாக இருந்தீர்களோ, அதைப் போல. நீங்கள் உங்கள் செயலை, அதன் உச்சத்துக்குக் கொண்டு சென்றால் ஒரு புதுமையான, புத்துணர்ச்சி உங்களுக்குள்ளே எழும்பும். ஏதோ ஒன்று உங்களுக்குள் உடைகிறது. உங்களிடமிருந்து உங்கள் உடல் ஐக்கியமாவதை உணர்வீர்கள். நீங்கள் அப்பொழுது அதை வெறும் காட்சியாக நின்று கவனிக்காதீர்கள். நீங்கள் முழுமையாக உங்கள் உடலோடு வெறுமனே ஐக்கியமாகி விடவேண்டும்; அது எங்கு செல்ல விரும்புகிறதோ மற்றும் அது என்ன செய்ய விரும்புகிறதோ அவற்றை அப்படியே அனுமதிக்கவும்.

உங்களுடைய செயல்கள் உச்சத் தன்மைக்கு செல்லும் கணத்தில் ஆடுதல், கத்துதல், சிரித்தல், பகுத்தறிவற்று இருத்தல், எந்த முட்டாள்தனத்தையும் செய்தல்- அப்பொழுது அந்த நிகழ்வு ஏற்படும். நீங்கள் ஒரு சாட்சியாகிறீர்கள். இப்பொழுது, நீங்கள் வெறுமனே கவனிக்கிறீர்கள்; அங்கு எந்த ஐக்கியப் படுதலும் இல்லை- அப்பொழுது நீங்கள் தன் இயல்பாக எழுந்த பிரக்ஞையோடு கூடிய சாட்சித் தன்மையாகிறீர்கள். நீங்கள் அதைப் பற்றி எண்ண வேண்டிய அவசியம் இல்லை- அது தானே நிகழ்கிறது.

இதுதான் இந்த முறையின் இரண்டாவது கட்டம். எப்பொழுது முதல் கட்டம் முழுமையாய், நடைபெறுகிறதோ, அப்பொழுதுதான் உங்களால் இரண்டாவது கட்டத்துக்குச் செல்ல முடியும். அது காரில் உள்ள 'கியரை' ஒக்கும். முதல் கியரின் வேகம் எப்பொழுது அதன் உச்சத்தன்மைக்குச் செல்கிறதோ, அப்பொழுதுதான் இரண்டாவது கியரை மாற்ற முடியும்; இல்லாவிட்டால் முடியாது. அதைப் போல, இரண்டாவதிலிருந்து, மூன்றாவது கியருக்கு, அந்த இரண்டாவது கியரின் வேகம் அதன் உச்சத்துக்குச் செல்லும் பொழுது தான் மாற்ற முடியும். டைனமிக் தியானத்தில், நாம் நம்முடைய மனம் கியரில் சம்பந்தப்பட்டு இருக்கிறோம். உங்களுடைய முதல் கியராகிய உடலை, மூச்சை வேகமாகத் தள்ளுவதன் மூலமாக, அதன் முடிவான உச்சத்தன்மைக்குக் கொண்டு சேர்த்தால்தான், நீங்கள் இரண்டாவது கியருக்கு மாற முடியும். பிறகு நீங்கள் இந்த இரண்டாவது கியரில் முழுமையாக, தீவிரமாக, ஒன்றுபட்டு, மிச்சம் மீதி என்று எதையும் பின்னே வைக்காமல், ஈடுபட வேண்டும்.

நீங்கள் டைனமிக் தியானத்தில் முதன் முதலாக ஈடுபட முடியாது. இது கொஞ்சம் சிரமம்தான். ஏனென்றால், நாம் அந்த அளவுக்கு இந்த உடலை அடக்கி வைத்திருக்கிறோம். ஆகவே, அந்த அடங்கிய வாழ்க்கைதான், நம்முடைய இயல்பாகி விடுகிறது. ஆனால், அது இயற்கையானது அல்ல! ஒரு குழந்தையைப் பாருங்கள். அது, தன் உடலோடு மிக இயல்பாக

விளையாடும். அது அழுது கத்தினால், அது முழுமையாக, உச்சத்தில்தான் கத்தும். அந்த சப்தத்தைக் கேட்பதுதான் எவ்வளவு அழகு? ஆனால், ஒரு மனிதனின் அழுகை சப்தம் எவ்வளவு அருவருப்பானது? ஒரு குழந்தை கோபத்தில் கூட அழகாகவே இருக்கும்; அதில் ஒரு முழுமை மற்றும் உச்சத்தன்மை இருக்கும். ஆனால், ஒரு மனிதன் கோபப் பட்டால், அது அருவருப்பாகத்தான் இருக்கும்; ஏனென்றால், அது முழுமையில் இயங்கவில்லை. எதுவும், அதன் உச்சத்தில் மிக அழகாகவே இருக்கும்.

நாம், நம் உடலை மிகவும் அடக்கி வைத்திருப்பதால், இரண்டாவது கட்டம் சற்று கடினமாகவே இருக்கும். ஆனால், நாம் நம் உடலோடு இயல்பாக ஒத்துழைத்தால், அந்த மறைந்த மொழியை, நம்மால் மீண்டும் ஞாபகத்துக்குக் கொண்டு வரமுடியும். நீங்கள் மீண்டும் குழந்தையாகிறீர்கள். அப்பொழுது, ஒரு புதிய உணர்வு உங்களிடம் ஏற்படுகிறது; நீங்கள் எடையற்று இருப்பீர்கள். அடக்குதல் இல்லாத உடல் எடையற்று இருக்கும்.

உங்களுடைய உடல், முழுமையாக அடக்குதலற்று இருக்கும்பொழுது, உங்கள் வாழ்க்கை முழுவதும் அடக்கப்பட்ட பல உணர்வுகள் வெளியே தூக்கி எறியப்படுகிறது. இது ஒரு 'வெளியேற்றுதலாகும்.' ஒருவன் இந்த வெளியேற்றுதலை செய்து வந்தால், அவன் ஒருநாளும் மனநிலை பாதிக்கப்பட்டவனாக மாட்டான்; அது ஒருக்காலும் நடக்காது. ஒரு மனநிலை பாதிக்கப்பட்டவன், இந்த செயலைக் கையாண்டால், அவன் சாதாரண நிலைக்கு வந்துவிடுவான். ஒருவன் இந்த செயலில் ஈடுபட்டு, அதன் உச்சத்துக்குச் சென்றால், அவன் தன் பைத்திய நிலைக்கு அப்பால் செல்கிறான். அந்த பைத்திய நிலையின் அடி விதை கொல்லப்படுகிறது; இந்த செயலில் அது எரிக்கப்படுகிறது.

இந்த இரண்டாவது கட்டம், மனநிலைச் சிகிச்சைத் தன்மையுடையது. இந்த வெளியேற்றுதல் மூலமாகவே, ஒருவன் தியானத்திற்குள் செல்ல முடியும். ஒருவன் முதலில் தன்னை

முழுமையாக சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆனால், நாம் எல்லாவற்றையும் அடக்க வேண்டும் என்றும், எல்லாவற்றையும் உள்ளே அமுக்கி வைக்க வேண்டும் என்றும், அப்பொழுதுதான் அவை உங்களுடைய பிரக்ஞையற்ற நிலைக்குச் சென்று, உங்களுடைய ஆத்மாவில் இரண்டறக் கலந்து, உங்களுடைய முழு இருப்பு நிலையில் பரவி, அழிவுக்கு வழி செய்யும்- இதுதான் நம்முடைய நாகரிகம் நமக்கு கற்றுத் தந்த பாடம்.

அடக்கப்பட்ட ஒவ்வொரு ஆவியும், பிணைக்கக்கூடிய உயிருள்ள விதையாகிறது. இதை நாம் அகற்ற வேண்டும். ஒருவன் அதிகம் நாகரிகம் உள்ளவனாக இருந்தால், அவன் அதிகம் பைத்தியத் தன்மையுள்ளவனாகிறான். ஒருவன் எந்த அளவுக்கு நாகரிகமற்றவனாக இருக்கிறானோ, அந்த அளவுக்கு அவன் குறைவான பைத்தியத் தன்மையில் இருக்கிறான். ஏனென்றால், அவன் இப்பொழுதும் உடலின் மொழியைப் புரிந்துகொண்டு அதனோடு ஒத்துழைக்கிறான். அவனது உணர்வு இன்னும் அடக்கப்படவில்லை; அது இன்னும் அவனுடைய இருப்பில் மலருவதற்காகவே இருக்கிறது.

இந்த இரண்டாவது கட்டத்தை முழுமையாகச் செய்ய வேண்டும். நீங்கள் உங்கள் உடலுக்கு அப்பால் செல்லக்கூடாது; நீங்கள் அதனோடு தான் இருக்க வேண்டும். பொதுவாக நீங்கள் ஏதாவது செய்தால், அதை முழுமையாகச் செய்யுங்கள். அப்பொழுது நீங்கள் செயலாகிறீர்கள்; செய்பவனாக அல்ல. முழுமையாக இருங்கள் என்று நான் சொல்லுவதன் அர்த்தம் இதுதான். செயலாக ஆகுங்கள், நடிப்பாக ஆகுங்கள்; நடிப்பவனாக இருக்காதீர்கள். ஒரு நடிப்பவன் எப்பொழுதும் நடிப்புக்கு வெளியே தான் இருக்கிறான்; அவன் ஒருபோதும் அதில் இல்லை. நான் உங்களை நேசித்தால், நான் அதில் இருக்கிறேன். ஆனால், நான் உங்களை விரும்புவது போல நடித்தால், நான் அந்த விரும்புதலுக்கு வெளியேதான் இருக்கிறேன்.

இந்த இரண்டாவது கட்டத்தில், அநேக நிகழ்வுகள் ஏற்படலாம். ஒவ்வொரு தனி மனிதனுக்கும் பல வித்தியாச மானவை நிகழும். ஒருவன் ஆட ஆரம்பிப்பான். அடுத்தவன் கதறி அழ ஆரம்பிப்பான். ஒருவன் அம்மணமாக இருப்பான். அடுத்தவன் குதிக்க ஆரம்பிப்பான். வேறு ஒருவன் உரத்துச் சிரிக்க ஆரம்பிப்பான். எதுவும் நிகழலாம்.

உள்ளே இருந்து முழுமையாக வாழுங்கள். பிறகு, நீங்கள் மூன்றாவது கட்டத்துக்குச் செல்லலாம்.

இந்த மூன்றாவது கட்டம், இயல்பான தொடர் நிகழ்ச்சியாக ஏற்கப்படுகிறது. முதல் கட்டத்தில், உங்கள் உடல் மின்சாரம். நீங்கள் அதை 'குண்டலினி' என்றும் அழைக்கலாம். விழித்தெழுகிறது. அது மெல்ல சுழன்று, நகர ஆரம்பிக்கிறது. அப்பொழுதுதான், உங்கள் உடல் எதையும் அனுமதிக்கும் தன்மையுள்ளதாக ஆகிறது; அதற்கு முன்பு கிடையாது. உள்ளே நகருதல் ஆரம்பமான பின்புதான், வெளி நகருதல் ஏற்படும்.

இரண்டாவது கட்டமான 'வெளியே தள்ளுதல்.' இதன் உச்சத்துக்கு நீங்கள் வரும்பொழுது, பத்து நிமிட மூன்றாவது கட்டம் ஆரம்பமாகிறது. சுபிமந்திரத்தை தீவிரமாக மீண்டும் மீண்டும் சொல்ல ஆரம்பியுங்கள். "ஹோ! ஹோ! ஹோ!" என்று. உங்களுடைய மூச்சினுள் தூண்டப்பட்ட அந்த சக்தி, வெளியேற்றுதல் மூலமாக தன்னை வெளிப்படுத்திக் கொண்டு, இப்பொழுது உள்ளும், புறமும் நகர ஆரம்பிக்கிறது. அந்த சக்தியை, இந்த மந்திரம்தான் ஒழுங்குபடுத்துகிறது. அதற்கு முன்பு, இந்த சக்தி மேலும், கீழும் சென்றது; இப்பொழுது அது உள்ளேயும், வெளியேயும் செல்ல ஆரம்பிக்கிறது.

உங்களுக்குள்ளே, இந்த ஒலியை ஓங்கி அடித்துக் கொண்டே இருங்கள்– 'ஹோ! ஹோ! ஹோ!' உங்களுடைய உயிர்த்தன்மை அனைத்தும் இந்த ஒலியைத் தவிர, வேறு எதுவாகவும் இல்லாது நீங்கள் முழுமையாக களைப்படைய வேண்டும்; அப்பொழுது தான், நான்காவது கட்டமான தியானம் நிகழும்.

நான்காவது கட்டம் என்பது ஒன்றுமற்ற நிலை. அமைதி மற்றும் காத்திருத்தல் தான். நீங்கள் முதல் மூன்று கட்டங்களிலும் ஒருமையாக, சுத்தமாக எதையும் மீதி வைக்காமல் சென்றிருந்தால், பிறகு இந்த நான்காவது கட்டத்தில், நீங்கள் ஆழ்ந்த ஒய்வுத்தன்மையில், தானே விழுவீர்கள். இப்பொழுது உங்கள் உடல் களைப்படைந்து விட்டது. உங்களுடைய எல்லா அடக்குதலும், வெளியே தள்ளப் பட்டுவிட்டது. எல்லா எண்ணங்களும் வெளியேறிவிட்டன. இப்பொழுது, ஒய்வு, தானே ஏற்படுகிறது- அது நிகழ. நீங்கள் எதையும் செய்ய வேண்டியதில்லை. இதுதான் தியானத்தின் ஆரம்பம்.

தியானத்திற்கான, சூழ்நிலை உண்டாக்கப்பட்டு விட்டது. இப்பொழுது, நீங்கள் அங்கே இல்லை. இப்பொழுது தியானம் நிகழலாம். நீங்கள் இப்பொழுது திறப்பாக, காத்திருத்தலாக மற்றும் வரவேற்கும் தன்மையில் இருக்கிறீர்கள். இப்பொழுது தியானம் நிகழ்கிறது.

"ஆத்மிக வழிகாட்டுதலுக்காக, என்னிடம் வரும் மக்கள், ஒழுங்குபடுத்தப்பட்ட மனத்தை உடையவர்களாக இருக்கிறார்கள். இதைப் போன்ற மக்கள், தீவிரமான உணர்வுகளை வெளியேற்றும் தன்மை யுள்ள இந்த டைனமிக் தியானத்தை எப்படி கடைப்பிடிப்பது?"


ப்படிப்பட்ட மக்கள், ஒழுங்கு முறையில்தான் ஒட்டிக் கொண்டு இருப்பார்கள். அமைதியற்ற, நிலையற்ற மனதுக்கு ஆரம்பத் தேவை எதுவெனில், பிரக்ஞையாக ஒழுங்கற்று இருத்தல்தான். அப்பொழுதுதான் அதைக்கடந்து செல்ல முடியும். நீங்கள் ஒழுங்குமுறையில் இருக்கலாம், ஆனால், ஒழுங்குமுறை என்பது புறத்தே நெறிப்படுத்துதல் ஆகும்- உள் இருப்புநிலை அப்படியே தான் இருக்கும். அதாவது உள்ளே ஒழுங்கற்ற தன்மையும், வெளியே ஒழுங்கோடு கூடிய தன்மையும் உள்ளதாக இருக்கும். ஒழுங்கற்ற

தன்மை உங்களுடைய இதயத்தில் இருக்கும். மாறாக வெளியே ஒழுங்குத்தன்மை, நீங்களாக ஏற்படுத்திக் கொண்ட பழக்க வழக்கங்களின் பகுதியாக இருக்கும். ஆகவே, முதலில் அந்த இறுக்கம், குழப்பம், ஒழுங்கற்றத் தன்மை அனைத்தும், அதன் உச்சத் தன்மையை அடையட்டும். பிறகு வெடித்தல் நிகழும். அதன் விளைவாக, ஒரு இயல்பான ஒழுங்குமுறை ஏற்படும்.

உங்களிடம் ஆத்மிக வழிகாட்டுவதற்காக வரும் மக்களிடம் இந்த முறையைப் ப்ற்றி எடுத்துச் சொல்லுங்கள். அவர்களே அந்த மாற்றத்தையும் மற்றும் கடந்து செல்லுதலையும், உணர்வார்கள். இதை அவர்கள் ஒரு பரிசோதனையாகப் பயிலட்டும்- அவர்களுடைய அமைதியற்ற மனத்தோடு, அவர்களுடைய சந்தேகத்தோடு. அப்பொழுது, அதன் மூலமாக ஏதும் நிகழ்ந்தால், அந்தப் பயிற்சி தானே தொடர்ந்து செயல் படும்; அவர்களை நம்பச் செய்ய வேண்டிய அவசியம் இல்லை.

உள்ளே உள்ள குழப்ப நிலை, தானே வெடிக்க வேண்டும். அதை உள்ளேயே நிலைப்படுத்தவோ அல்லது ஆழமாகப் புதைக்கவோ கூடாது. அதை முழுமையான அழுத்தத்தில் வெளியேற்ற வேண்டும். அமைதி, தெய்விகத் தன்மை மற்றும் நிர்வாணா அனைத்தும், மனத்தை நிலைப்படுத்துதலால் வருவதில்லை; அது வெடித்தலால் நிகழ வேண்டும். அப்பொழுது இயல்பான அமைதி தானே வரும்; அதை வெளியிலிருந்து நீங்களாக ஏற்படுத்த முடியாது.

நீங்கள், உங்களை முழுமையாக வெளிப்படுத்த வேண்டும். ஆமாம். அது பைத்தியக்காரத்தனமாகவே இருக்கும்; அது பைத்தியத் தன்மைதான். ஏனென்றால் நீங்கள் ஒரு பைத்தியம். உங்களுக்குள்ளே உள்ளதை, நீங்களே வெளியிட அனுமதித்தால், அந்த பைத்தியத் தன்மை தானே வெளியே வரும். அப்பொழுது, நீங்கள் அதை அந்நியமாகவே உணர்வீர்கள். நீங்கள் வெளியே தள்ளக்கூடியவைகள், உங்களுக்கேக்கூட தெரியாமல் இருக்கும். ஆனால், அது உங்களுடைய வெளியிடுதல்தான். உங்களுக்

குள்ளே, என்ன இருக்கிறதோ, அதுவே உண்மையான வெளியிடு தலாகும்.

ஆகவே, வெளியே தள்ளக் கூடிய பல விஷயங்கள் மற்றும் பல உணர்வுகள் உங்களுடைய பிரக்ஞையற்றத் தன்மையில் ஆழமாகப் புதைக்கப்பட்டுள்ளது. அவை அனைத்தும் பல பிறவிகளாக, பல நூற்றாண்டுக் காலமாக புதைக்கப் பட்டுள்ளவை. உங்களுக்குள்ளே அந்த ஒழுங்கற்ற தன்மைகள், உங்களுக்கே தெரியாமல் புதையுண்டு கிடக்கின்றன. அவை வெளியே வரவேண்டும். நமக்குள்ளே உள்ள அந்த ஆவிகள் வெளியே வரவேண்டும். நீங்கள் அதை வெளியிட்டால்தான், அவை வெளியேறும்- உங்களுடைய உள்மையத்திலிருந்து, முழுமையாக, மொத்தமாக அவை யாவும் வெளியேற வேண்டும். ஒருவன், தன்னுடைய உள் பைத்திய நிலையிலிருந்து அப்பால் செல்ல, முதலில் அவன் பிரக்ஞையாக பைத்தியமாக வேண்டும்.

உங்களிடம் வருபவர்கள், இந்த டைனமிக் தியானத்தை, ஒரு பரிசோதனையாக முயற்சி செய்து பார்க்கட்டும். அவர்கள், நம்புதலுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டாம் என்று சொல்லுங்கள். அதை அவர்களே செய்து பார்த்து, தங்களிடம் என்ன நிகழுகிறது என்பதை அவர்களே அறிந்து கொள்ளச் சொல்லுங்கள். ஆனால், அவை நிகழ்ந்தே ஆகவேண்டும். ஏனென்றால், நான் சொல்லும் அந்த பைத்தியத்தன்மை ஒவ்வொருவருக் குள்ளேயும் இருக்கிறது.

"இந்த முறையில், ஏதாவது மனோவசியம் (Hypnosis) கலந்து இருக்கிறதா?"



ந்த முறையை, ஒருவன் பயிற்சி செய்ய ஆரம்பிக்கும் பொழுது, அங்கு நம்பிக்கை, வாக்குறுதி மற்றும் மனோவசியம் என்ற கேள்விக்கே இடமில்லை. அதற்கு மாறானதுதான் உண்மை நிலை. பொதுவாக நாம் சாதாரண நிலையிலும், மற்றும் நல்ல மனநிலையிலும் இருக்கிறோம்

என்று வாழ்க்கையில் நம்புவதற்கு நம்மை நாமே மனோவசியம் செய்து கொள்ளுகிறோம். இதுதான் மனோவசியம். இந்த முழு உலகமே ஒரு மிகப்பெரிய பைத்தியக்கார விடுதிதான். இதில் நாமே நம்மை வசியம் செய்து கொண்டு, நாம் மிகவும் இயல்பாகவும், புத்தி சுவாதீனத்தோடும் இருப்பதாக நினைத்துக் கொள்கிறோம். ஆனால், நம்முள் மறைத்திருக்கும் அந்த பைத்தியத்தன்மை, வெளியே வர எப்பொழுதும் முயன்று கொண்டேதான் இருக்கிறது. அது நமது கனவுகளில் வெடித்து வெளியேறிக் கொண்டுதான் இருக்கிறது.

எல்.எஸ்.டி மற்றும் மெஸ்கலின் (Mescaline) போன்ற போதை மருந்துகளால், நாம் மயங்கிய நிலையில் இருக்கும் பொழுது, அது வெடித்து வெளியே வருகிறது. ஆனால், அந்த எல்.எஸ்.டி. போன்ற போதை மருந்துகள், உங்களுக்குள்ளே இருக்கும் பைத்தியக்காரத்தனம் வெடித்து வெளியே வரத்தான் உதவி செய்கிறதே தவிர, அவை உங்களிடம் எந்த பைத்தியக் காரத்தனத்தையும் ஏற்படுத்துவதில்லை; அதைப் போலத்தான் உங்களுடைய கனவுகளும், அவை வெடித்து வெளிவர உதவுகின்றன. மருந்துகளும், உங்களை உரித்துக் காண்பிக்க உதவுகின்றன- அதுதான் உங்களுக்குள்ளே உள்ள உங்களுடைய உண்மையான நிலை. ஆகவேதான், ஆரம்ப சாதனையாளர் களுக்கு அல்லது தேடுபவர்களுக்கு, மருந்துகள் மூலமாக தங்களுடைய உண்மையான நிலையை அறிந்து கொள்ளுவது என்பதை பழைய மதங்கள் கடைப்பிடித் திருக்கின்றன. உங்களுக்குள்ளே உள்ளதை மற்றும் உங்களுக் குள்ளே உள்ள உண்மையான இருப்பு நிலையைத் தெரிந்து கொள்ள, அவர்கள் போதை மருந்துகளை உபயோகித்ததாகத் தெரிகிறது.

மனத்தை ஒழுங்குபடுத்த முயலுவது என்பது ஒரு முட்டாள்தனமானது. உங்களுடைய மிக ஆழமான உண்மை நிலையைப் பற்றி, உங்களுக்கு எதுவும் தெரியாது. ஆனால், வெளியிலிருந்து, நீங்கள் ஒழுங்கு முறைகளை ஏற்படுத்திக் கொள்ளுகிறீர்கள். நீங்கள் ஒரு ஒழுங்குபடுத்துபவராகத் தோன்ற லாம்; ஆனால், உங்களுக்குள்ளே உள்ள பைத்தியத்தன்மை

அப்படியேதான் இருக்கும். பிறகு, முடிவான தன்மை இரண்டுபட்டதாகி விடுகிறது (Schizo phrenia). உங்களுக்குள்ளே இரண்டு உயிர்த்தன்மைகள் சேர்ந்தாற்போல் இயங்க ஆரம்பித்து விடுகின்றன. ஆகவே, உங்களுடைய முழு உயிர்த் தன்மையே பிளவுபட்டுவிடுகிறது. உங்களுக்குள்ளே எப்பொழுதும் தொடர்ந்து போராட்டமும், முடிவற்றத் தன்மையும் நிகழ்ந்துக் கொண்டே இருக்கின்றன. நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். போராட்டம் உங்களுடைய சக்தியை பரவலாக்கிவிடுகிறது. ஆகவே, உங்களுடைய உயிர்ச் சக்தியை அல்லது இறப்பு நிலையைச் சீராக்க மற்றும் ஒருமுகப்படுத்த, நீங்கள் செய்யவேண்டிய முதல் செயல் என்னவெனில், மனத்தை ஒழுங்கு படுத்துதல் அல்ல; மாறாக உங்களுக்குள்ளே உள்ளதைப் பற்றித் தீர்க்கமாக அறிந்து கொள்ளல் தான்.

உங்களுக்குள்ளே உள்ளது, உங்களுடைய இருப்பு நிலையில் ஒரு பாகமாக ஆகும் கனவன்று. அவை பல நூற்றாண்டு காலமாக அடக்கி வைக்கப் பட்டிருக்கிறது. நீங்கள் மாத்திரம் உங்களுக்குள்ளே உள்ளதை அடக்கி வைக்கவில்லை; இந்த முழு மனித இனமே அதை அடக்கித்தான் வைத்து நிற்கிறது. நீங்கள், அந்தத் தொடர் நிகழ்ச்சியில் ஒரு அங்கம்தான். நீங்கள் அதை தெரிந்தோ, பிரக்ஞையாகவோ அடக்கவில்லை- அப்படி செய்வது ஒரு சமூக வழிவழியாக வந்த செயலாகிவிட்டது.

ஆகவே தான், இந்த முறையைப் பற்றி பயம் எழுந்துள்ளது. எல்லா பைத்தியக்காரத் தனத்திற்கும், இறுக்க நிலைக்கும், போராட்டம் மற்றும் பல ஒழுங்கற்ற தன்மைக்கும் அடிப்படை இந்த அடக்கப்பட்ட, தடுக்கப்பட்ட சமூக கூட்டு மனம்தான். நாம், நமது உணர்வை சுதந்திரமாக வெளியேற்ற அனுமதித்தால், பல அடக்கப்பட்ட உணர்வுகள், சேர்ந்து வெளியேறி விடுமோ என்ற பயம் உங்களிடம் இருக்கிறது. ஆமாம், அது ஏற்படத்தான் செய்யும். இந்த பயம் தான் இந்த முறையைப் பற்றிய சந்தேகத்தை எழுப்புகிறது. அந்த சந்தேகமே, மறுபடியும் அவற்றை அடக்குவதற்கான கருவியாகி விடுகிறது.

ஆகவே, இந்த முறையைப் பற்றி ஆரம்பத்தில் நம்ப வேண்டாம் என்றும், இந்த பரிசோதனையை சுமார் பதினைந்து நாட்களுக்கு முயற்சி செய்து பார்க்கவும் என்றும் உங்களுடைய மாணவர்களிடம் எடுத்துக் கூறுங்கள். அவர்கள், ஒரு நாளைக்கு ஒரு மணி நேரம் வீதம் பதினைந்து நாட்களுக்கு முயற்சி செய்து பார்க்கட்டும்- பத்து நிமிட ஆழ்ந்த, தீவிரமான மூச்சு விடுதலில் ஆரம்பித்து, அடுத்தடுத்த கட்டங்களுக்குச் சென்று மூச்சை வெளியிடுவது மிகவும் ஆழமாகவும், தீவிரமாகவும், வேகமாகவும் இருக்கட்டும்; அதில் எந்த ஒழுங்கு முறையும் தேவையில்லை. அப்படி நீங்கள் அதை ஒழுங்குமுறைப்படுத்தி வெளியிட்டால், அந்த வெடித்தல் நிகழாது. ஏனென்றால், நீங்கள் இன்னும் உங்களையே ஒழுங்கு படுத்துவதில்தான் இருக்கிறீர்கள். ஆகவே, அது எப்பொழுதும், அதன் இயல்பான ஒழுங்கற்ற தன்மையிலேயே இருக்கட்டும். நீங்கள் அதற்குக் கொடுக்க வேண்டிய முக்கியத்துவம், ஆழம், வேகம், தீவிரம் என்பவைகள்தான். நீங்கள் அந்த மூச்சு விடுதலுக்கு, வெளியே இருக்காதீர்கள். உங்களுடைய முழு இருப்பு நிலையே அதில்தான் இருக்க வேண்டும்- முழுமையாக ஈடுபட வேண்டும், மிச்சம் மீதி என்று எதுவும் இருக்கக்கூடாது.

அப்படி நீங்கள் முழுமையாக, ஈடுபட்டால், உங்களுடைய உடல் மற்றும் மனம் முழுமையும் துடிக்க ஆரம்பிக்கும்; உங்களுடைய உடல் மின்சாரம் நகர ஆரம்பிக்கும். நீங்கள் முன்பு அறிந்திராத, உணர்ந்திராத ஏதோ ஒன்றை இப்பொழுது உங்கள் உடலில் நீங்கள் உணர்ந்தால், இந்த முறை உங்களை வந்து அடைந்து விட்டதாகக் கருதுங்கள். பிறகு சந்தேகத்திற்கு இடம் இல்லை. ஏனென்றால், நீங்கள் முன்பு அறிந்திராத ஒன்றை, அனுபவப்பூர்வமாக இப்பொழுது அறிந்து கொண்டீர்கள்.

நாம், நம்முடைய உடல் மின்சாரத்தை ஒருபோதும் உணரமாட்டோம். ஏனென்றால், நாம் அடக்கப்பட்ட நிலையில் இருக்கிறோம்; நம் மனம் மாத்திரமல்ல, உடலும் சேர்த்துதான். இயற்கையின் இயல்பான ஏற்பாட்டிற்கு ஏற்ப, நாம் நம்முடைய

உடலில் இல்லை; நாம் நம்முடைய உடலின் புத்திசாலித் தனத்தை அடக்கியே வைத்திருக்கிறோம்.

இந்த முறையின் முதல் கட்டத்தில் செயல்படும் ஆழமான, வேகமான மூச்சு விடுதலால் ஏற்படும் துடிப்பினால், ஒருவனின் உடலில் உள்ள மின்சாரம் உடல் முழுவதும் பரவ ஆரம்பிக்கிறது. அப்பொழுது, அவன், சமூக ஒழுக்க அடக்கப்பட்ட பிடியிலிருந்து மெல்ல விடுபட ஆரம்பிக்கிறான். அவனுடைய இந்த உடல் மின்சார சக்தியானது, மிகவும் வலுவானது; அப்பொழுது, அவனை உங்களுக்குக் கீழ்ப்படியாக கட்டாயப்படுத்த முடியாது; அது அந்த அளவுக்கு வலுவானது. அந்த சக்தி, அதன் இயல்பாக விழிப்படைந்து வளரும்பொழுது, நீங்கள் உயிரோடுதான் இருக்கிறீர்கள் என்ற சந்தேகம் உங்களுக்கே ஏற்படும். மேலும், நீங்கள் உங்களுடைய சமூக ஒழுக்கக் கட்டுப்பாட்டுக்கு அடிமையாக இருப்பதையும், உங்களால் உணர முடியாது. அப்பொழுது நீங்கள், உங்களையே ஒரு எல்லையில்லாத நிலையிலும், கட்டுப்பாடில்லாத நிலையிலும், மற்றும் எல்லையற்ற சக்தி பெற்றும் இருப்பதை உணர்வீர்கள். இந்த கணத்தைத்தான், விழிப்புணர்வு பெற்றவர்கள், 'தாங்களே கடவுள்' (Aham Brahmasmi) என்று வர்ணிக்கிறார்கள்.

நீங்கள் விடும் ஆழமான, வேகமான, விறுவிறுப்பான மூச்சு விடுதலால், சாதாரணமாக உறங்கும் உங்கள் உடல் மின் சாரத்தில் தூண்டப்பட்டு, அந்த ஓட்டத்தால் ஏற்படும் புதுமை உணர்வினால்தான், இந்த உணர்ச்சிகரமான அறிவிப்பான, 'அகம் பிரமம்' அல்லது 'நானே கடவுள்' என்பது வெளிப்படுகிறது. பிறகு, உங்கள் உடலில் ஏற்படும் ஒவ்வொரு உணர்வும் உண்மையானதாகவே இருக்கும்.

இதை உண்மையென்று தான் நாம் அழைக்கிறோம். ஏனென்றால், இது நம் உடல் வழியாக நிகழுகிறது. நான் உங்களைத் தொடுவதாலும், பார்ப்பதாலும், உங்களை நான் உண்மை என்று கூறுகிறேன். நான் உங்களைத் தொடமுடியா விட்டால், நீங்கள் ஒரு பிரமையாக அல்லது கற்பனையாகத்தான்

இருப்பீர்கள்; என்னால் உங்களை நம்ப முடியாது; உங்களைப் பிறருக்குக் காட்ட முடியாது. ஆகவே, நம்முடைய உண்மை நிலை, நம்முடைய உடலால்தான் வெளி உலகத்துக்கு உணர்த்தப்படுகிறது.

ஆகவே, உடல் வழியாக ஏற்படும் உணர்வுகளுக்கு, திறப்பாக அமையும் எந்த முறையும் நமக்கு உண்மையாகத்தான் தோன்றுகிறது. பிறகு, உங்களிடம் எந்த சந்தேகமும் ஏற்பட எந்த வழியும் கிடையாது; நீங்கள் மேற்கொண்டு மேலே செல்லலாம்.

ஆகவேதான், இந்த முறையில் உள்ள, முதல்கட்ட மூச்சு விடுதலை நான் அழுத்தமாக வலியுறுத்துகிறேன். பிறகு அடுத்த இரண்டாவது கட்டத்தில், இந்த மூச்சு தானே செயல்பட்டுக் கொண்டே இருக்கும். இதற்கிடையில், உங்கள் உடலில் பல செயல்கள் ஏற்பட ஆரம்பிக்கும்; அவை பல பரிணாமங்களில் வெளிப்படலாம். ஆனால், அதே நிகழ்தல் அனைத்தும் உங்களுடைய அடக்கப்பட்ட ஒழுங்கு முறைகளால் ஏற்பட்டது அல்ல. அவை அனைத்தும் தானே தன் இயல்பாக நிகழ்பவை!

**"இந்த முறையை பயிற்சி செய்யும்பொழுது எப்படி ஒருவனால் உட்கார்ந்திருக்க முடியும்?"**

நீங்கள் எந்த நிலையிலும் உட்கார்ந்திருக்கலாம். ஆனால், நீங்கள் நின்று கொண்டு இருப்பது மிகவும் நல்லது. உங்கள் கண்கள் மூடி இருக்க வேண்டும். இந்த முறையை, வெறும் வயிற்றில் தான் செய்யவேண்டும்.

இரண்டாவது கட்டத்தில், உங்கள் உடலைத் தளர்த்தி, ஓய்வாக செயல்பட வைக்கவும்; அதற்கு ஒரு சுதந்திரத்தைக் கொடுக்கவும்; அதை ஒரு போதும் அடக்காதீர்கள். நன்றாக மூச்சை இழுத்து விட்டுக் கொண்டு, உங்கள் உடலை அது விருப்பப்படி ஆடவோ, அடிக்கவோ, நகரவோ, சிரிக்கவோ,

செல்லவோ... அனுமதிக்கவும். உங்கள் உடலில் எது நிகழ்ந்தாலும், நிகழட்டும். அவற்றை அப்படியே அனுமதிக்கவும். உங்கள் உடல், தன் இயல்பாக செயல் படட்டும். அப்பொழுது தானே நிகழ்வுகள் ஏற்பட ஆரம்பிக்கும். இப்படி உங்களுடைய மூச்சு அழுத்தமாகவும், வேகமாகவும், நடக்கும்பொழுதும், உங்களுடைய உடல், தன் இயல்பாக செயல்படும்பொழுதும், இந்த முறையின் மூன்றாவது கட்டத்தை ஆரம்பித்து, 'ஹூ! ஹூ! ஹூ!' என்ற சுபிமந்திரத்தை மீண்டும், மீண்டும் வேகமாகச் சொல்லவும். அந்த ஒலிகளின் உச்சரிப்பில் எந்த இடைவெளியும் இருக்கக்கூடாது; அந்த அளவுக்கு அதை மிகத் தீவிரமாகச் சொல்ல வேண்டும். அப்பொழுது, நீங்கள் எந்த சக்தியையும் அடக்கவில்லை என்பது உங்களுக்குப் புரியும். அந்த அளவுக்கு நீங்கள் அத்துடன் ஐக்கியமாகி விடுகிறீர்கள். அந்த சொற்களின் உச்சரிப்பின் வேகத்தை, ஒலியின் ஆழத்தை மெல்ல மெல்ல அதிகமாக்கிக் கொண்டே செல்லுங்கள்.

முதல் கட்டத்தில், உங்களுடைய முழு கவனம் அனைத்தும், உங்களுடைய மூச்சில்தான் இருக்க வேண்டும். நீங்கள் மூச்சை ஆழமாகவும், தீவிரமாகவும் விட்டால், முதல் நிலையின் தொடர்ச்சியாக, இரண்டாவது நிலை எழும்பும்; உங்கள் உடல் தானே நகர ஆரம்பிக்கும். நீங்கள் ஒரு நிடம் கூட ஓய்வு எடுக்க முடியாது. அது தொடர்ந்த முயற்சியாகவே இருக்கும். இந்த இரண்டாவது கட்டத்தில் உங்கள் உடல் சுதந்திரமாக தளர்வு நிலைக்கு வரட்டும். அது, இறந்த காலத்தில் சேர்ந்தவைகளை எப்படி வெளியிட நினைக்கிறதோ, அப்படியே வெளியிட அதற்கு முழு சுதந்திரம் கொடுக்கவும். உங்கள் உடல் அப்பொழுது நகர, ஆட... ஆரம்பிக்கும். விரைவில் நீங்கள் உங்கள் உடலிலிருந்து ஏதோ ஒரு வகையில் தனித்து இருப்பதாக, உணர ஆரம்பிப்பீர்கள். அப்பொழுது நீங்கள், உங்கள் உடல் அழுவதையும், கதறுவதையும், செறுமுவதையும், சிரிப்பதையும் தெளிவாய்ப் பார்க்க முடியும். அப்படிச் செய்யும் ஒன்றோடு, நீங்கள் சம்பந்தப்படுத்திக் கொள்ளாதவாறு அது அமைந்திருக்கும். ஏதோ இயந்திரத்தனமாக குதிப்பதையும்,

ஆடுவதையும், நீங்கள் உங்களிடம் பார்ப்பீர்கள். உங்களுடைய உடல் உங்களிடமிருந்து தனியானது என்பதை, நீங்கள் பார்க்க ஆரம்பிப்பீர்கள். உங்களுடைய உடல் தானே இயந்திரத்தனமாக செயல்படும் பொழுதுதான் உங்களுடைய பிரக்ஞைத் தன்மை தான் வேறானது என்பதை உணர்ந்து கொள்ளும்; அதுவரை, அது உடலோடுதான் ஐக்கியப்பட்டு இருக்கும்.

"உடலோடு சம்பந்தப்படாது, நம்மால் ஏன் சாதாரணமாக இருக்க முடியவில்லை?"

சாதாரணமாக, நாம் நம் உடலோடு ஐக்கியப்பட்டுத் தான் இருக்கிறோம். ஏனென்றால் நமக்கும், நம் உடலுக்கும் அப்பொழுது எந்த இடைவெளியும் கிடையாது. நீங்கள் என்ன செய்கிறீர்களோ, அதுவே உங்கள் உடலும் செய்கிறது; அல்லது பின்னது, முன்னதாகவும் நடக்கும். நீங்களும், உங்கள் உடலின் செயலும் ஒன்றுபோலவே இருக்கும். ஆனால், அதை உங்கள் உடல் தன் இயல்பாக எடுத்துக் கொண்டால், அது இயந்திரத் தனமாகி விடுகிறது. பிறகு, திட்டமற்ற எண்ணமற்ற நிகழுதல் தானே செயல்பட ஆரம்பிக் கின்றன. "இதை நான்தான் செய்கிறேனா? இதை நான் தான் உணர்கிறேனா?" என்று ஆச்சரியப்பட்டு, பிறகு நீங்கள் அதைச் செய்யவில்லை என்பதைத் தெரிந்து கொள்ளுகிறீர்கள். அதை, நீங்களாக செய்யவில்லை; இருந்தும் அந்த ஆடல் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது— மிகவும் தீவிரமாக!

அப்பொழுது, ஒரு சிறு இடைவெளி ஏற்படுகிறது; அதாவது செய்பவனுக்கும், செயலுக்கும் இடையில் அது தானே உண்டாகிறது. அதை நீங்களாக செய்யவில்லை. இப்பொழுது, உங்கள் உடல் இயந்திரத்தனமாக இயங்குகிறது.

இயந்திரத்தனமான செயலோடு, உங்களுடைய பிரக்ஞைத் தன்மை, தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்ளாது. அது உங்கள் விருப்பப்படி கணத்துக்குக் கணம் செயல்படாத வரையில்,

உங்களால் ஒரு இயந்திரத்தோடு உங்களை ஐக்கியப் படுத்திக் கொள்ள முடியாது. நான் இந்த ஒலிபெருக்கியிடம், 'சற்று நகரு' என்று சொல்லி, அதுவும் அப்படியே நடந்து கொண்டால், நான் அதனோடு சம்பந்தப்படுத்திக்கொள்ள, சகல சாத்தியமும் உண்டு. இப்பொழுது அது என்னுடைய அங்கமாகிவிடுகிறது. நான் 'நகரு' என்று சொல்லும்பொழுது, அது நகருகிறது. நான் என் கைகளிடம், நகரு என்று சொல்லும்பொழுது, அது எப்படி நகருகிறதோ, அதைப் போல. இதுதான் ஐக்கியமாதலின் அடிப்படை விதி. இப்படி நகருதல் மூலமாக, நகருவதும், நகர்தலும் ஒன்றாகிவிடுகின்றன.

ஆனால், உங்களுடைய உடல், உங்களுடைய பிரக்ஞைத் தன்மையின் உந்துதல் இல்லாமல், கட்டளையில்லாமல் நகர்ந்தால், அது ஒரு தனித்த இயந்திரமாகிவிடுகிறது. அப்பொழுதுதான், நீங்கள் உங்கள் உடலிலிருந்து தனித்து இருப்பதைப் பார்க்க முடியும்.

ஆகவேதான், நான் உடல், நகருதலுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறேன். அந்த நகருதல் தானே செயல்படட்டும். அதில் என்ன நிகழ்கிறதோ, அது நிகழட்டும். அப்பொழுது, உங்களுடைய உடல் ஒரு இயந்திரம் போலவும், மிருகம் போலவும், பைத்தியம் போலவும் நடந்து கொள்ளுவதை உங்களால் பார்க்க முடியும். அதனுடன் இப்பொழுது உங்களால் சம்பந்தப்படுத்திக் கொள்ள முடியாது. ஆகவே, நீங்கள் தனியாகவே இருப்பீர்கள். இப்பொழுது, நீங்கள் ஒரு சாட்சியாக இருப்பதை உணர ஆரம்பிப்பீர்கள்.

இந்த முறையின், இரண்டாவது கட்டத்தில், உடலில் நடப்பவை அனைத்தையும், சாட்சியாகப் பார்க்க ஆரம்பிப்பீர்கள். உங்கள் உடல் அசைகிறது. உங்கள் கைகள் இங்கும் அங்கும் அலைபாய்கிறது. மற்றும் பல முத்திரைகளை ஏற்படுத்துகிறது. இந்த முத்திரைகளை, நீங்கள் முன்கூட்டியே தீர்மானிக்கவில்லை; அது பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது. உங்களுடைய உள் சாட்சித் தன்மை, உங்களுடைய இருப்பு

நிலைக்கு வருகிறது. அந்த நிகழுதல், ஏதோ உங்களுக்கு வெளியே நிலவுவதாக, நீங்கள் அதைப் பார்க்க ஆரம்பிக்கிறீர்கள்; இப்பொழுது நீங்கள் செய்பவனாக இல்லை; மாறாக பார்ப்பவனாக இருக்கிறீர்கள். நீங்கள் ஏதாவது செய்ய வேண்டும் என்ற கேள்விக்கு இப்பொழுது இடமில்லை; நீங்கள் அதைப் பார்க்க ஆரம்பிக்கிறீர்கள்.

ஆரம்பத்தில், நீங்கள் உங்கள் உடலோடு ஐக்கியப்பட்டுத் தான் இருப்பீர்கள். ஆனால், இந்த முறையில், உங்களையே நீங்கள் மேலும் மேலும் தீவிரமாக ஈடுபடுத்திக்கொள்ள, செயல் மறைய ஆரம்பிக்கிறது. உங்களுடைய உடல் கீழே விழ ஆரம்பிக்கும்பொழுது, நீங்கள் விழவில்லை என்றும் உங்கள் உடல்தான் விழுந்திருக்கிறது என்பதையும் உணர ஆரம்பிப்பீர்கள்.

பிறகு, மூன்றாவது கட்டத்தில், நீங்கள் 'ஹோ! ஹோ! ஹோ!' என்று தீவிரமாகச் சத்தம் போட வேண்டும். நீங்கள் முழுமையாக பைத்தியமாக வேண்டும். அந்த சத்தத்தில், நீங்கள் மேலும் மேலும் ஆழமாகச் செல்லுவீர்கள். இப்பொழுது உங்களுடைய முயற்சியை, அதன் உச்சத்துக்குக் கொண்டு வருவீர்கள். ஏனென்றால், அந்த உச்சத்திலிருந்துதான், நீங்கள் உங்களுடைய மிக ஆழத்தில் உள்ள இருப்பு நிலையில் விழ முடியும். நீங்கள் எந்த அளவுக்கு பைத்தியமாகிறீர்களோ, அந்த அளவுக்கு அந்த உச்சத்தின் தீவிர நிலைக்குச் செல்லுவீர்கள்; அடுத்து நீங்கள் அந்த அளவுக்கு கீழே விழுந்து, மிக ஆழத்தில் செல்ல முடியும்; அப்பொழுது உங்களுடைய புத்தி சுவாதீனம் மிகவும் தெளிவடைகிறது.

பைத்திய நிலையைக் கடந்த பிறகுதான், உண்மையான மன ஆரோக்கியம் ஏற்படுகிறது. நீங்கள் இறுக்கத்தின் உச்சத்தை அடையும் பொழுதுதான், உண்மையான ஓய்வுத்தன்மை ஏற்படுகிறது. பிறகு நாலாவது கட்டம் ஆரம்பமாகிறது; அப்பொழுது உங்களுடைய மனம் அமைதியடைகிறது.

இப்பொழுது, ஒவ்வொன்றும் பத்து நிமிட நேரமுள்ள, மூன்று கட்டங்களில் முடிவடைந்த பிறகு, நான்காவது கட்டம் ஆரம்பமாகிறது; இதில் நீங்கள் பத்து நிமிட நேரம், முழு ஓய்வில் இருக்க வேண்டும். மூன்று கட்டங்களில் செய்த அனைத்தையும் உடனே நிறுத்துங்கள்; அப்பொழுது, நீங்கள் எந்த நிலையில் இருந்தாலும், அப்படியே உறைந்த பனிபோல் இருங்கள். இப்பொழுது நீங்கள் எதையும் செய்யத் தேவை இல்லை. செயல் என்ற கேள்விக்கே இடமில்லை. ஏனென்றால், நீங்கள் இப்பொழுது முழுமையாக சோர்வடைந்து விட்டீர்கள்; உங்களுடைய முழு இருப்பு நிலையும் ஓய்வுக்கு வந்துவிட்டது. இப்பொழுது வருபவை அனைத்தும், நிகழுபவை அனைத்தும் இயந்திரத்தனமாகவே இருக்கிறது.

இந்த முறையே தொடர்ந்த பல கட்டங்கள் அடங்கியது. ஒவ்வொன்றும், தானே முந்தைய கட்டத்திலிருந்து அடுத்ததற்குச் செல்லுகிறது. நீங்கள் மூன்றாவது கட்டம் வரை தொடர்ந்து தீவிரமாக இயங்கினால், பிறகு, நான்காவது கட்டத்தை நீங்களாக தொடங்காவிட்டாலும், அது முன் கட்டங்களின் தொடராக, தனி இயல்பாக தானே நிகழ ஆரம்பிக்கிறது. அது அப்படித்தான் செயல்படவேண்டும்- எல்லா சக்தியும் வெளியேறிய பிறகு நீங்கள் தானே விழக்கூடிய நிலை வந்தே தீரும். மேற்கொண்டு செய்வதற்கு எதுவும் இல்லை.

நான்காவது கட்டம் என்பது, நீங்கள் எதையும் செய்யத் தேவையில்லாத நிலை. இதைத்தான் நான் 'தியானா'- தியானம் என்று அழைக்கிறேன். முதல் மூன்று கட்டங்கள் என்பது படிகள் போல; நான்காவது கட்டம் என்பது கதவு. பிறகு நீங்கள் இருக்கிறீர்கள்; அங்கு நீங்கள் செய்வதற்கு ஒன்றும் இல்லை- மூச்சை வேகமாக விடுதலோ, உடல் அசைவோ, கத்துதலோ எதுவும் கிடையாது- ஒரே அமைதி நிலைதான்.

இந்த முறையின் முதல் மூன்று நிலைகள் ஒரு வகையில் நீங்களே செய்ய வேண்டும்; ஆனால், நான்காவது கட்டம் தானே வரவேண்டும். உங்களுடைய செயல் என்று எதுவும் இல்லாமல்

ஏதோ நிகழ்கிறது. அது ஒரு அருளாக வருகிறது. நீங்கள் ஒரு சூன்யமாக ஒன்றும் அற்ற நிலையாக மாறுகிறீர்கள்- அதில் ஏதோ நிரம்புகிறது. நீங்கள் அங்கு இல்லாதபொழுது, ஏதோ ஆத்மிகமானது அதில் நிரப்பப்படுகிறது.

நீங்கள் அங்கே இல்லை. ஏனென்றால், அங்கு செயல் என்று எதுவும் இல்லை. செய்பவன் இல்லாத நிலையில், அங்கு அகங்காரம் மறைகிறது. செய்பவன்தான் அகங்காரம். ஆகவே, முதல் மூன்று கட்டங்களில், நீங்கள் இருக்கலாம். ஏனென்றால், நீங்கள் செய்வதற்கு அதில் ஏதோ இருக்கிறது- மூச்சுவிடுதல், நகருதல், கத்துதல்... இப்படி. ஆனால், இப்பொழுது இந்த நான்காவது கட்டத்தில், நீங்கள் இருக்க வேண்டியதில்லை. ஏனென்றால், அங்கு செய்தல் என்று எதுவும் இல்லை.

அகங்காரம் என்பது உங்களுடைய பழைய செயல்களின் கூட்டு ஞாபகத்தைத் தவிர வேறில்லை. ஆகவே, ஒருவன் எவ்வளவு அதிக வேலை செய்கிறானோ, அந்த அளவுக்கு அவன் அகங்காரமிக்கவனாக இருப்பான். உங்களுடைய செயல் சமூக சேவையாக இருந்தாலும், அல்லது மத சம்பந்தமானதாக இருந்தாலும், இப்படி நீங்கள் எதைச் செய்தாலும், அது உங்களுடைய அகங்காரத்தின் ஒரு பகுதியாகிவிடுகிறது. அகங்காரம் என்பது தனித்த ஒரு பொருள் அல்ல; அது உங்களுடைய இறந்தகால செயல்களின் ஞாபகம்தான். ஆகவே, செயல்கள் அந்த அந்த கணங்களில், நீங்கள் அங்கு இல்லை. ஆனால், அங்கு வேறு ஏதோ நிகழுகிறது. நீங்கள் எதையும் செய்யாவிட்டாலும், நீங்கள் உங்கள் பிரக்ஞையாக இருக்கிறீர்கள்; அமைதியாகவும், முழு பிரக்ஞையில் இருக்கிறீர்கள். நீங்கள் உடலளவில் சோர்வடைந்து இருந்தாலும், உள்ளத்தளவில் பிரக்ஞையாக இருக்கிறீர்கள். அங்கு வெறும் பிரக்ஞை மட்டும்தான் இருக்கிறது. அதாவது ஆழமான எதையும் அப்படியே அனுமதிக்கும் பிரக்ஞை நிலையில், இப்பொழுது எல்லாம் மறைந்த வெறுமையான பிரக்ஞை நிலையில்.

நாலாவது கட்டம் முடிந்த பிறகு, அது உங்களிடம் ஒரு ஞாபகமாக மாறுகிறது; அதை நீங்கள் பிறகு ஞாபகப் படுத்திக் கொள்ளலாம். ஆனால், அந்தக் கணத்தில், பிரக்ஞைத் தன்மையைத் தவிர வேறு எதுவும் கிடையாது. அந்த சூன்யமான கட்டத்தில், நீங்கள் பிரக்ஞையாக இருக்க எதுவும் கிடையாது. பிறகு, அங்கு ஒரு சிறு இடைவெளி இருப்பதைப் புரிந்து கொள்கிறீர்கள். ஒரு குறிப்பிட்ட கணத்தில், உங்கள் மனம் வேலை செய்ய ஆரம்பிக்கிறது; அப்பொழுது ஒரு இடைவெளி ஏற்படுகிறது. அது விட்டு விட்டு வருவதை உங்களால் உணர முடியும். அந்த இடைவெளிகள் உங்களுடைய ஞாபகத்தின் ஒரு பகுதியாகி விடுகிறது.

நம்முடைய ஞாபகம், நிகழ்ச்சிகளைப் பதிவு செய்கிறது; இந்த இடைவெளி ஒரு மாபெரும் நிகழ்ச்சிதான். மனம் இயந்திரத் தன்மை வாய்ந்தது. அது எல்லாவற்றையும் பதிவு செய்து கொள்ளுகிறது. அது ஒலியைப் பதிவு செய்யும் நாடா போல இருக்கிறது; ஒலியற்ற நிலையில், அந்த இடைவெளியையும், அமைதியையும் அது பதிவு செய்து கொள்ளுகிறது. அதைப்போல, மனமும், எப்பொழுதும் எல்லாவற்றையும் பதிவு செய்து கொள்ளுகிறது. பார்க்கப் போனால், அந்த இடைவெளியைப் பதிவு செய்ய, அது நுட்பமாக வேலை செய்கிறது. நாடாவில் பதிவு செய்யும் இயந்திரம் நான் சொல்லுவதை, சற்று மழுங்கலாகக் கூட பதிவு செய்யும். ஆனால், அது என்னுடைய சப்தமின்மையை, மழுங்கலடிக்க முடியாது. மனம், அந்த சப்தமற்ற இடை வெளியை மிகக் கூர்மையாகப் பதிவு செய்கிறது; அதில் தவறு நேருவதற்குச் சந்தர்ப்பம் கிடையாது.

ஆகவே, அந்த இடைவெளி, இப்பொழுது ஞாபகப் படுத்தப்படுகிறது– அந்த இடைவெளி தெய்விகமானது. ஒரு வகையில், ஞாபகப்படுத்திப் பார்க்கக் கூடிய நிகழ்ச்சிகள் பளுவாகவும், இறுக்கமாகவும் இருக்கும்; ஆனால், அமைதியான இடைவெளி, பேரானந்த மயமாகவே இருக்கும். இந்த இடைவெளிதான் தியானம் என்பது.

"இந்த நான்காவது கட்டத்தில் ஒருவன் பலவற்றை அனுபவிக்கிறானா?"

அனுபவம் என்பது மனரீதியானது. 'ஆத்மிக அனுபவம்' என்று தனியாக எதுவும் கிடையாது. அது வெறும் இடைவெளிதான். அங்கு அனுபவிப்பவர் யாரும் கிடையாது. ஆகவே, நீங்கள் அனுபவம் என்ற வார்த்தையை இங்கே உபயோகிக்க முடியாது. அனுபவமற்ற நிலையைத்தான், நீங்கள் அனுபவமாக அனுபவிக்கிறீர்கள். வார்த்தையைப் பொருத்தவரையில், அதை நான் 'இடைவெளி' என்றுதான் கூறுவேன்.

சுட்டிக் காட்டுதல் அனைத்தும், மாறான நிலையில் (Negative) தான் இருக்கும். மொழி என்பது நிகழ்ச்சிகளுக்காவே இருக்கிறது; அமைதி மற்றும் நிசப்தமான நிலைக்கு அல்ல. ஒரு மொழியின் உதவி கொண்டு, நான், என்னுடைய தியான அனுபவத்தை வெளியிட முனைந்தால், அந்த வார்த்தை, முழுமையாக என்னைப் பொறுத்தே இருக்கும். அடுத்தவரைப் பொறுத்தவரையில், என்னுடைய அந்த வார்த்தை அர்த்தமற்றே இருக்கும். ஏனென்றால், அனுபவத்தை, வார்த்தையால் சுட்டிக்காட்ட முடியாது. ஆகவே. நீங்கள் அதை 'பிரமாண்' என்றோ, 'நிர்வாணா' என்றோ அல்லது இந்த அர்த்தத்தில் நீங்கள் எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். ஆனால், அது பல பெயர்களுக்கிடையே, நீங்கள் தேர்வு செய்தலாகவே இருக்கும்.

ஒவ்வொரு பெயரும் மற்றொன்றைப் போலவே அர்த்தமற்றது. அப்படியே எல்லா மதத்தின் வார்த்தைகளும்- கிறிஸ்துவம், இந்து, புத்தமதம்- எல்லாமே அர்த்தமற்றதே. அவற்றுக்குள்ள ஒற்றுமை, அதாவது எல்லா மதங்களின் முக்கிய ஒற்றுமை எதில் காணப்படுகிறது என்றால் அவற்றினுடைய மொழிகளின் வார்த்தை அனைத்துமே தவறானது என்பதில்தான். அவை அப்படித்தான் இருக்க முடியும். இது, நான் சுமத்தும் குற்றம் அல்ல; உண்மை- ஏனென்றால், ஒன்றுமற்ற இடைவெளியே

வெளியிட முடியாது. அதை உணரத்தான் முடியும். உணருதலுக்கு எந்த மொழியிலும் வார்த்தை கிடையாது.

"நான்காவது கட்டத்தில், அகங்காரம் மறைந்தால், அந்த நான்காவது கட்டத்துக்குப் பிறகு என்ன நிகழும்- அதாவது ஒருவன் தியானத்திலிருந்து திரும்ப சாதாரண நிலைக்கு வரும் பொழுது?"

உங்கள் அகங்காரம் மீண்டும் வரும்; ஏனென்றால், அந்த முழு இயந்திரத்தன்மை அப்படியேதான் இருக்கும். அது இன்னும் இறக்கவில்லை. அந்த முழு இறந்த காலமும் அப்படியேதான் இருக்கிறது. ஒரு சில நேரம், ஒரு சில நிமிடங்கள், நீங்கள் அதில் ஒரு பாகமாக இல்லை. நீங்கள் உங்கள் அகங்காரத்தையும், மற்றும் மனத்தையும் தாண்டிச் சென்றீர்கள். அவ்வளவுதான். நீங்கள் அந்த வீட்டை விட்டு தற்காலிகமாகச் சென்றீர்கள்; இப்பொழுது திரும்பியும் வந்து விட்டீர்கள். ஆனால், நீங்கள் செல்லும் பொழுது உள்ள அதே ஆளாக திரும்பி வரவில்லை. ஏனென்றால், இப்பொழுது நீங்கள் ஏதோ அப்பால் இருக்கும் ஒன்றைப் புதிதாக அறிந்து வந்திருக்கிறீர்கள். ஆகவே, நீங்கள் பழைய ஆளாக இருக்க முடியாது; இருந்தும் திரும்பி வந்திருக்கிறீர்கள்.

நீங்கள் எவ்வளவுக்கெவ்வளவு, அதில் சுலபமாக செல்லவும் பிறகு திரும்பி வருவதுமாகவும் இருந்தால், நீங்கள் வெளியேயும் இல்லாமல், உள்ளேயும் இல்லாமல் இருக்கக்கூடிய ஒரு புதிய கட்டம் ஆரம்பமாகும். இதுதான் அதன் உச்சத்தன்மை. அப்பொழுது, நீங்கள் வெளியே செல்ல விரும்பும் பொழுது, வெளியே செல்லலாம்; உள்ளே வர விரும்பும் பொழுது உள்ளே வரலாம். நீங்கள் இப்பொழுது வெளியேயும் இல்லை; மற்றும் உள்ளேயும் இல்லை. நீங்கள் இரண்டையும் கடந்து விட்டீர்கள். இதுதான் 'சமாதி' எனப்படுவது.

என் விருப்பப்படி நான் வருவதும், போவதுமாக இருக்கும்பொழுது, உள்ளும், புறமுமாக இருக்கும் பொழுது,

என்னுடைய நோக்கப்படி, இங்கே இருப்பதிலேயோ, அல்லது இல்லாது இருப்பதிலேயோ, மனத்திற்கு மேலும் மேலும் சுலபமாகிவிட்டால், பிறகு உள்-வெளி இரண்டையும் உங்களால் தாண்டிச் செல்ல முடியும். அப்பொழுதுதான், உண்மை நிலையை அடைய முடியும். இதுதான் சமாதி. நான்காவது கட்டத்தில், நிகழ்வது இதன் ஒளிக்கீற்று மட்டும்தான். இதை ஜென் புத்திஸம் 'சத்தோரி' (Satori) என்று அழைக்கிறது. ஆனால் சத்தோரி, சமாதி அல்ல. அது, சமாதி நிலையின் சிறிய ஒளிக்கீற்றுதான். ஏனென்றால், நீங்கள் இப்பொழுதும் இதிலிருந்து திரும்பி வந்து விடலாம். ஆனால், உங்களால் சமாதியிலிருந்து திரும்பி வர முடியாது. அது ஒரு வழிப்பாதைதான்!

"சமாதியை அடைந்த ஒரு சிலருக்கு என்ன நிகழ்கிறது?"

"ஒரு சிலர் அடைந்தால்" என்று நீங்கள் சொன்னதால், அங்கு யாரோ இருக்கிறார்கள் என்று அர்த்தமாகிறது. யாரும் அங்கு இல்லாவிட்டால் தான், உங்களால் அதை அடைய முடியும். தியானத்திற்குள் ஒரு சிலர் செல்லுவதும் மற்றும் ஒரு சிலர் தியானத்திலிருந்து வெளியே வருவதும்– இதுதான் ஆத்மாவின் உணர்வு. ஆனால், யாரும் சமாதியை அடைய முடியாது. ஏனென்றால், சமாதியை அடையும் பொழுது, அங்கு யாருமே கிடையாது.

டைனமிக் தியானத்தின் நான்காவது கட்டத்தை அடைந்தவுடனேயே, பல மதங்கள் நின்றுவிடுகின்றன. ஆகவேதான், அவை 'ஆத்மா' என்று ஒன்று உண்டு என்று கூறுகின்றன. ஏனென்றால், அவை அறிந்தது எல்லாம், ஆத்மாவிலிருந்து வருவதும் மற்றும் செல்லுவதும் என்பவற்றைத்தான். ஆனால், அந்த நான்காவது கட்டம் என்பது ஒரு சிறு ஆத்மிக ஒளிக்கீற்றுதான். நீங்கள் வெளியே செல்லுகிறீர்கள். அதாவது உங்கள் உடலிலிருந்து, உங்கள் மனத்திலிருந்து, உங்கள் அகங்காரத்திலிருந்து- பிறகு அதில் மீண்டும் வருகிறீர்கள். நீங்கள் திரும்பாமலேயே இருப்பது

என்பது இங்கு இல்லை; நீங்கள் திரும்பிவிடக்கூடிய ஒவ்வொரு சாத்தியமும் இதில் உண்டு.

நீங்கள் திரும்ப வருகிறீர்கள். ஏனென்றால், உங்களுக்காக, அந்த ஏற்பாடு காத்துக்கொண்டு இருக்கிறது. நீங்கள் திரும்பி வருகிறீர்கள். அப்பொழுது, அது தானாக வேலை செய்ய ஆரம்பித்துவிடுகிறது. அப்பொழுது, விட்டவை அனைத்தும், அந்த இடைவெளி ஞாபகத்தில் இருக்கின்றன. ஆனால், அந்த இடைவெளி, உங்களை மீண்டும் மீண்டும் அழைக்கிறது.

ஜென் போன்ற சில மதங்கள், இந்த ஆத்மிக ஒளிக்கீற்றை, இந்த சத்தோரியை, சமாதியின் முடிவான அனுபவமாகக் கருதுகின்றன. ஆனால், இது சமாதி இல்லை; ஏனென்றால், நீங்கள் திரும்பி வரக்கூடிய காரியம் அனைத்தும் அதற்கு உண்டு. உங்களுடைய அகங்காரம் இன்னும் இறக்கவில்லை. நீங்கள்தான் அதிலிருந்து தற்காலிகமாக குதித்து இருக்கிறீர்கள். ஒரு சில கணம், நீங்கள் அதன் பிடியிலிருந்து விடுபட்டிருக்கிறீர்கள்; ஆனால், இப்பொழுது, மீண்டும் வந்துவிட்டீர்கள். சத்தோரி, வெறும் எதிர்த்து செல்லுவது அல்ல; அதில் நீங்கள் பற்று வைக்காதீர்கள்.

வெளியே குதித்தலில், நீங்கள் உங்களையே சுலபமாக இணைத்துக் கொள்ளலாம். ஏனென்றால், அது அவ்வளவு ஆனந்தமானது. அந்த அனுபவத்தில் நீங்கள் செல்லும் ஒவ்வொரு தடவையும், அது உங்களுக்கு ஒரு சில புதுமையையும், புல்லரிப்பையும் ஏற்படுத்துகிறது. ஆகவே, நீங்கள் அந்த தியான அனுபவத்திற்குள் மீண்டும் தொடர்ந்து சென்று அந்த உணர்வைப் பெற்று, திரும்பி வர விரும்புகிறீர்கள். மெல்ல, மெல்ல அது ஒரு தொடர்ந்த ஏற்பாடாகிவிடுகிறது. நீங்கள் திரும்பி வரும் பொழுது, நீங்கள் அந்த முடிவான அனுபவத்தை, முடிந்தவரை பெற்றிருக்கிறீர்கள் என்று நினைத்துக் கொள்ளுகிறீர்கள். ஏனென்றால், அந்த அனுபவம் அவ்வளவு பேரானந்தமானது. ஆனால், அதற்கு அப்பால் உள்ள உண்மையான முழு பேரானந்தத்தை, நீங்கள் இன்னும்

அறியவில்லை. ஆகவே, தியானத்தின் ஒவ்வொரு அனுபவமும், அதை தொடர்ந்த, இயந்திரத்தனமான செயல்களின் ஒரு பாகமாகி விடுகிறது. இப்பொழுது, அந்த இடைவெளி கூட, அந்த தியானமும் கூட, உங்களுடைய இயந்திரத் தனமான செய்கைகளின் அங்கமாகி விடுகிறது.

இந்தக் கட்டத்திலேயே நின்ற மதங்கள் அனேகம் இந்த உலகத்தில் இருக்கின்றன. ஆகவேதான் அவை, தனிப்பட்ட ஆத்மா இருக்கிறது என்று கூறுகின்றன. பிரமாண் (Brahman) என்பதைப் பற்றி, அவற்றால் நினைக்கக்கூட முடியவில்லை. நீங்கள் நான்காவது கட்டத்தைக் கடந்த பிறகுதான், பிரமாண் நிலை வருகிறது. அதாவது நீங்கள் அங்கு சென்று, மீண்டும் திரும்பி வரும்பொழுது, அந்த இடைவெளி ஆனந்தத்தில் தொடர்ந்து சேர்ந்து இல்லாதபொழுது, நீங்கள் இப்படி செல்லுவதையும், வருவதையும் ஒரு சாட்சியாக நின்று பார்க்க ஆரம்பிக்கும் பொழுதும் மற்றும் தியான மனநிலையையும், தியானமற்ற மனநிலையும் அப்படி பார்க்க ஆரம்பிக்கும் பொழுதும் நீங்கள் ஒரு மென்மையான, நுட்பமான கட்டத்தை அடைந்திருக்கிறீர்கள். பிறகு, இதுவும் ஒரு பழக்கம்தான் என்றும், அதை உங்களால் பல பிறப்புகளுக்கு நீட்டிக்க முடியும் என்பதையும் அறிந்து கொள்ளுகிறீர்கள். அது சமாதி இல்லை; அது, அந்த முடிவான விழிப்பு நிலை இல்லை என்றும், அதுவும் சத்தோரிதான் என்றும் அறிந்து கொள்ளுகிறீர்கள்.

நீங்கள் இதைக் கவனிக்க ஆரம்பிக்கும்பொழுது, ஒரு அமைதியான விழிப்பு நிலை உங்களுக்குள்ளே ஏற்படுகிறது. இந்தத் தேர்ந்து எடுக்காத விழிப்புநிலையை, அமைதியான விழிப்புநிலையை, நீங்கள் இந்த கட்டத்தில்தான் அறிய முடியும்; ஒரு போதும் அதற்கு முன்பு இல்லை.

"சத்தோரிக்குப் பிறகு என்று நீங்கள் நினைக்கிறீர்களா?"

ஆமாம். சத்தோரிக்குப் பிறகுதான், அதற்கு முன்பு ஒரு போதும் அல்ல. நீங்கள், உங்களுடைய அகங்காரம் வெளியே செல்லுவதையும், மற்றும் அது மீண்டும் உள்ளே வருவதையும், நீங்கள் உங்களுடைய அமைதியான பிரக்ஞைத் தன்மையாக்கிவிட்டால், அந்த முடிவான வெடித்தல் நிகழ முடியும். அந்த வெடித்தலில் கரைந்து நீங்கள் உள்ளுக்கும், புறத்திற்கும் அப்பால் செல்லுகிறீர்கள்.

இதுதான் 'நிர்வாண நிலை,' 'பிரம்ம-யுபலபதி,' (Brahma-Upalabadhi) 'மோட்சம்'- இப்படி நீங்கள் உங்கள் விருப்பப்படி அதை எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். இந்த நிலை, மனத்தால் ஒரு போதும் பதிவு செய்யப்படுவதில்லை; அதைப் பதிவு செய்யவும் முடியாது. ஏனென்றால், அதில் உள்ள அதன் இயல்பான இயந்திரத்தன்மை இப்பொழுது கரைந்து சென்றுவிடுகிறது.

"இதற்குப் பிறகு, ஒருவரால் உடலோடு ஜீவித்திருக்க முடியுமா?"

நிச்சயமாக. ஏனென்றால் உடலின் வேலை, வேறு விதமானது. அதனுடைய செயல் நுட்பம் அதனுள்ளேயே அடக்கியிருக்கிறது. ஒருவன் விரும்பினால் அதனோடு வாழலாம்; விரும்பாவிட்டால், அதிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளலாம். பார்ப்பவர்களுக்கு, ஒருவர் தன் வீட்டிலேயே வசித்துக் கொண்டு இருப்பது போலத் தோன்றும்; ஆனால், அதில் வசிப்போருக்கு, அந்த வீடு, அதன் தன்மையை இழந்துவிட்டது. இப்பொழுது இந்த முழு பிரபஞ்சமே, அவனுடைய உடலாகி விடுகிறது.

"இன்னும் தனித்த உடல் என்று அவருக்கு இருக்கிறதா?"

கிடையாது. ஆனால், பிறருக்கு அப்படித் தோன்றலாம். நான் அதை வார்த்தைகளால் சொல்ல முயன்றால், பிறகு அது முழுவதுமே பிரச்சினையாகி விடும். ஏனென்றால், தியானத் தன்மைக்கு அப்பால் ஒருவர் சென்றால், அங்கு என்ன நிகழும் என்று நாம் சொல்ல முனையும்பொழுது, அது தன்னையே மாற்றிக் கொள்ளுகிறது. அதை ஒருக்காலும் யாராலேயும் விளக்க முடியாது. ஏனென்றால், அதை எப்படி விளக்கினாலும், அது புதிய மாறுபட்டையும், எதிர் அர்த்தத்தையுமே கொடுக்கும்.

இந்த ஐந்தாவது நிலை என்பது, அது வரை இருந்தது அனைத்தும் வெடித்து சிதறுவது ஆகும். உங்களுடைய ஞாபகம், அறிவு, உங்களுடைய அகங்காரம், உங்களுடைய தனித்தன்மை, உங்களுடைய இருப்பு நிலை, உங்களுடைய ஆத்மா போன்ற அனைத்தும், உங்களிடம் உள்ள அனைத்தும், இப்பொழுது இல்லை; நீங்கள் அவற்றையெல்லாம் தாண்டிச் சென்று விட்டீர்கள். நீங்கள் என்று எதுவும் இப்பொழுது இல்லை; ஆனால், நீங்கள் எல்லாமாக இருக்கிறீர்கள். இதுதான் 'பிரமாண்' (Brahman) மற்றும் பிரபஞ்ச பிரக்ஞைநிலை என்பதன் அர்த்தம்.

டைனமிக் தியானம் உங்களை நான்காவது கட்டம் வரை அழைத்துச் செல்லும்; ஐந்தாவது கட்டம், இந்த முறைக்கு அப்பால் உள்ளது. சத்தோரியை அடைய நான்காவது நிலை வரைதான் உங்களுக்கு உதவியாக இருக்கும். ஆகவேதான், கிருஷ்ணமூர்த்தி, உங்களுக்கு உதவி என்று எதுவும் தேவையில்லை. என்று கூறுகிறார். அந்த ஐந்தாவது கட்டம், வழிகாட்டுதலுக்கு அப்பால் உள்ளது. அமைதியான விழிப்புணர்வு என்பது எப்பொழுதுமே வழிகாட்டுதலுக்கு அப்பால்தான் இருக்கும். ஒன்று அது நிகழவேண்டும் அல்லது நிகழாது.

ஐந்தாவது நிலை என்பது உயிர்த் தன்மைதான் (Existence).

ஒவ்வொரு நாளும், புத்தரிடம் கேட்கப்பட்ட கேள்வி, "ஞானம் அடைந்த ஒருவருக்கு என்ன நிகழும்? அவர் எங்கே செல்லுகிறார்? அவர் இருக்கிறாரா, இல்லையா?" என்பதுதான்.

இதே கேள்விகளை, புத்தரிடம் மீண்டும் மீண்டும் கேட்கப்பட்ட பொழுது, அவர், "இவை தேவையற்ற கேள்விகள். இப்படி கேட்பதை விட்டுவிடுங்கள். இந்தக் கேள்விகளை மட்டும்தான், நீங்கள் கேட்கக் கூடாது" என்பார். அவரிடம் கேட்கக் கூடாதவை என்று பதினோரு கேள்விகளை பட்டியல் போட்டு வைத்திருந்தார். அவற்றில், இதுவும் ஒன்று. இதனால், புத்தருக்கு பதில் சொல்லத் தெரியவில்லை என்று அர்த்தம் இல்லை. அவரால் பதில் சொல்ல இயலவில்லை. ஏனென்றால், எப்படி அதைச் சொன்னாலும், அது தவறாகவே முடியும் மற்றும் அது புதிய பிரச்சினைகளை உண்டு பண்ணிவிடும்.

**"வாழ்வின் குறிக்கோள் என்ன? நான் ஏன் ஒழுக்க முறைகளையும், தியான முறைகளையும் அல்லது யோகாவையும் கடைப்பிடிக்க வேண்டும்? ஒருவருடைய வாழ்வின் பணி எதுவாக இருக்கும்?"**

வாழ்வு என்பது, தீர்க்க முடியாத ஒரு புரியாத புதிர். அப்படி அதைத் தீர்க்க முடிந்தால், அது புதிரே இல்லை. வாழ்வுக்கு, பணி என்று எதுவும் கிடையாது. ஏனென்றால், புரியாத புதிரில் பணி செய்ய என்ன இருக்கிறது? அதில் விளையாட்டு மட்டும் அல்லது 'லீலை' மட்டும்தான் உண்டு.

இந்த முழு உயிர் இயக்கமும், சக்தி விளையாட்டுதான். விளையாட்டு என்றாலே குறிக்கோள் அற்றது அல்லது அதன் குறிக்கோள் அதிலேயே உள்ளது என்று அர்த்தம். எதையும் வெளியில் அடைய வேண்டியது என்று அதில் எதுவும் இல்லை. அப்படி விளையாடுவதே, நீங்கள் அடைய வேண்டியது அவ்வளவுதான். வாழ்வுக்குப் பணி கிடையாது. ஏனென்றால்,

வாழ்வில் வளருவது என்பதே நீங்கள் அடைய வேண்டிய குறிக்கோள். ஆகவே, நீங்கள் பலவிதங்களில் வாழலாம்; நீங்கள் பல காரியங்களைச் செய்யலாம்.

இவை எல்லாம், உங்களுடைய சக்தியின் வெளிப்பாடு தான். அதாவது குறிக்கோளற்ற பிரபஞ்ச விளையாட்டு. ஆகவே தான், அது ஒரு புரியாத புதிராக இருக்கிறது.

மேற்கு, கிழக்கை விட, புதியவற்றைக் கண்டுபிடிப்பதில் மிகவும் ஆர்வமாக இருக்கிறது. இதில், அது மிகவும் பரபரப்பாகவும், கேள்வி மேல் கேள்வி கேட்டுக் கொண்டும் இருக்கிறது. ஆனால், ஒரு மதத்தன்மை வாய்ந்த பிரக்ஞைத் தன்மையை அதனால் ஒருபோதும் உண்டாக்க முடியாது. ஏனென்றால், வாழ்க்கை குறிக்கோளற்றது என்பதை அதனால் புரிந்து கொள்ள முடியாது. நம்மால் முட்டாள்தன்மையிலும் ஒரு புத்திசாலித் தனத்தையும், குறிக்கோளற்றதில் குறிக்கோளும் உடையதைப் பார்க்க முடியும. வாழ்வு இயங்கிக்கொண்டு இருக்கிறது; அவ்வளவுதான். உயிரியக்கம் இருக்கிறது. அதுபோதும். எதற்காக நீங்கள் மேலும் கேட்க வேண்டும்? உயிரியக்கத்தை விட, அதற்கு மேலாக வேறு எது இருக்க முடியும்?

நீங்கள் சத்தோரியை அடையும் பொழுது, குறிக்கோளற்ற வாழ்வின் பேரானந்த உணர்வு, உங்களை ஆக்ரமிக்க ஆரம்பிக்கிறது. வாழ்வே ஒரு விளையாட்டுதான். ஆகவேதான், ஜென் சந்நியாசிகள் இறுக்கமற்று, மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். இறுக்கமான நிலையில் உள்ளவன் யாரென்றால், அந்தப் புரியாததை, அற்புதமானதை, அந்தப் பேரானந்த மதத் தன்மையை உணராதவனே. சத்தோரி நிகழ ஆரம்பிக்கும் பொழுது, நீங்கள் விளையாட்டுத்தனம் உடைய்வராகிறீர்கள். வாழ்க்கையே மாஜிக்காகி விடுகிறது. அதில் எந்த இறுக்கமும் இல்லை. அதைக்கண்டு நீங்கள் சிரிக்கலாம். ஒரு சமண சந்நியாசி, புத்தரைக் கண்டும் சிரிப்பார். ஆனால், அது மிகவும் அழகானது–

அது எந்த அளவுக்கு என்றால், அதைப்போல வேறெங்கும் ஒரு போதும் நிகழ்ந்திராத தன்மையில்.

"இந்தக் கட்டத்துக்கு வர, மக்கள் பயப்படுகிறார்கள். ஏனென்றால், அது சமூகத்தின் ஒழுங்கு முறையை தொல்லைப் படுத்தும் என்பது அவர்களுக்குத் தெரியும்."

ஆமாம். அது தொல்லை கொடுக்கும்தான். ஏனென்றால், இந்த சமூகம் என்பது கடுமை என்ற வியாதியால் துயரப்படும் மக்களால் ஏற்படுத்தப் பட்டது. இந்த முழு சமூகமும், இந்த குறிப்பிட்ட வியாதியால் ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறது. அது, ஒவ்வொன்றிலும் ஆக்ரமிக்கிறது. ஒவ்வொன்றையும், அது ஒரு ஒழுங்கு முறையிலும், ஒரு குறிப்பிட்ட பிரிவிலும், எல்லைப்படுத்தி வைத்திருக்கிறது.

விளையாட்டை நீங்கள் எல்லைப்படுத்த முடியாது. நான் ஒருவரை விரும்பினால், காதலித்தால் அதுவே விளையாட்டு. ஆனால், அதுவே திருமணத்தில் முடிந்தால், அந்த விளையாட்டு மறைந்து விடுகிறது; அது கடுமையான விஷயமாகி விடுகிறது. காதல் எப்பொழுதுமே விளையாட்டுத் தன்மையுடையதாகும். ஆகவேதான் அது கணத்துக்குக் கணம் இயங்குகிறது; அது வரும், போகும். ஆனால், திருமணம் என்பது நிலையானது. அது வரும்; ஆனால் அது ஒரு போதும் செல்லாது. அது ஒரு வரைபடம், எல்லை கொண்டது மற்றும் நிலையான ஒழுங்கு முறை உள்ளது.

"திருமணம் என்பது ஆத்மிகமானது அல்ல என்று நீங்கள் கூறுகிறீர்களா?"

ஆமாம். அப்படி இருக்க முடியாதுதான். திருமணம் ஒருக்காலும் ஆத்மிகமானதாக இருக்க முடியாது. ஏனென்றால், அது நிலையானதாகி விடுகிறது. ஆனால், நான் திருமணத்தை ஒரு உதாரணமாகவே உபயோகிக்

கிறேன். உண்மையில் இந்த முழு சமூகமும், ஆத்மிகமாக இருக்க முடியாது. ஏனென்றால், அது பல சட்டதிட்டங்களுக்கு உட்பட்டது. சட்டதிட்டங்கள் என்பது எப்பொழுதுமே இறுக்கம் நிரம்பியது. நீங்கள் அதனுடன் விளையாட்டுத் தன்மையுடன் அணுக முடியாது.

சினாவுக்கு போதிதர்மர் சென்ற பொழுது. அவர், தன் ஒரு செருப்பை தன் தலையில் வைத்துக் கொண்டு, அடுத்ததை தன் காலில் பொட்டுக் கொண்டே சென்றார். இதைப் பார்த்த அரசர், ''நீங்கள் என்ன செய்கிறீர்கள்? இது என்ன முட்டாள்தனம்?'' என்றார்.

அதற்கு போதி தர்மர், "நான் ஜோக் அடிக்கிறேன்," என்றார்.

அரசர், "நாங்கள் ஜோக்கை எதிர்பார்க்கவில்லை -அதாவது சிரிக்கும் சாதுவை," என்றார்.

அதற்கு போதி தர்மர், "ஒரு உண்மையான சாதுவினால், எப்படி கடுமையாக இருக்க முடியும்?" என்றார். மேலும் அவர், "கடவுள் கடுமையாகவே இல்லை. அவர் எப்பொழுதும் விளையாட்டில் தான் இருக்கிறார்" என்றார்.

விளையாட்டுத் தனத்திலிருந்துதான் நிச்சயமான புதுமைப் படைப்பு நிகழ்கின்றது; ஆகவே, சத்தோரியிலிருந்துதான் மிக அதிகமாக புதுமைப்படைப்பு நிகழுகிறது.

**"சத்தோரி, உள் அறிதலை அளிக்கிறதா?"**

உள் ஞானம், மற்றும் இந்த அனுபவம், அந்த அனுபவம் என்பவற்றுக்கு ஆசைப்படுதல் என்பது கடுமைத் தன்மையான வியாதியின் ஒருங்கிணைந்த செயல் என்று கூறலாம். உங்களுடைய கடுமை நிறைந்த மனம், மதத்தன்மையின் அனுபவத்தைக் கூடப் பிரித்துப் பார்க்க முயலுகிறது. அது, அவற்றில் வல்லமை படைத்து இருக்க விரும்புகிறது: 'என்னிடம் உள்ஞானம் இருக்கிறது. எனக்கு இது தெரியும், உங்களுக்கு இது

தெரியாது. நான் உங்களுக்கு போதனை செய்கிறேன்' என்று மனம் கூறும். இப்படி இந்த சமூகத்தின் ஒழுங்குபடுத்தலை மனம் மீண்டும் ஒழுங்குபடுத்த முனைகிறது. உங்களுக்குப் புரிகிறதா? இந்த காரணத்திற்காகவே, மத ரீதியான சமூகம் உண்டாக்கப் பட்டிருக்கிறது. ஆசிரமம், மடாலயம், மதக்கூடம் போன்றவை தான், இந்த வேறுபட்ட விபரீதமான சமூகம்.

ஆனால், ஒரு உண்மையான ஆத்மிகவாதி எப்பொழுதும் விளையாட்டுத் தனம் மிக்கவராகவே இருப்பார். அவருடைய வாழ்க்கையே ஒரு விளையாட்டுத்தான். அவர் செய்யும் எதிலும், அவர் கடுமையாகவே இருப்பதில்லை.

பொதுவாக, எந்த கடுமையான செயல்களிலிருந்தும், எதுவும் உருப்படியாக வருவதில்லை. கடுமைத்தனம், பழையவற்றை மட்டும்தான் திரும்பவும் செய்யும். ஏனென்றால், அது எப்பொழுதும் சமூகம் மற்றும் அதன் சட்டதிட்டங்களை ஒட்டித்தான் நினைத்துக் கொண்டிருக்கும். சட்டதிட்டம், ஒழுங்குமுறை என்பது பழைய பழக்க வழக்கங்களிலிருந்துதான் உண்டாகும்- அவற்றை தினமும் கண்டுபிடிக்க முடியாது. ஒரு விளையாட்டுத்தனம் உள்ளது எப்பொழுதும், அப்போதைக் கப்போதுதான் செயல்படும். அதற்கு எந்த சட்டதிட்டங்களும் கிடையாது. ஆகவே, அது எப்பொழுதும் பாதுகாப்பற்றே இருக்கும். அது எப்பொழுதும் இழக்கக் கூடிய சூழ்நிலையில் தான் இயங்கும். ஏனென்றால் அதற்கு எந்தப் பாதுகாப்பும் கிடையாது.

ஒருவன் சத்தோரியை அனுபவிக்க ஆரம்பிக்கும் பொழுது, ஒவ்வொரு கடுமைத்தனமும் அல்லது இறுக்க நிலையும் முட்டாள் தனமாகிவிடும். தியானம் நிகழ்வதற்கான அறிகுறி இதுதான். மேலும், சத்தோரியை அடைந்த மனிதன் ஒரு எதிர்ப்பாளனாகவும் மாறிவிடுவான். இதைத்தவிர அதற்கு வேறு காரணம் இருக்க முடியாது. அவன், எல்லா கடுமைத் தனத்திற்கும், ஒழுங்குமுறைகளுக்கும் எதிர்ப்பதால் அவன் ஒரு எதிர்பார்ப்பாளனாகவே மாறிவிடுகிறான்.

"அப்படி அவர்கள் எதிர்ப்பாளராக மாறிவிட்டால், அவர்களை எப்படி இந்த சமூகத்தால் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர முடியும்?"



ந்த உலகம், இப்படி அலங்கோலமாக இருப்பதற்குக் காரணமே, இந்தக் 'கட்டுப்பாடு' என்ற நியதிதான். கட்டுப்பாடு என்ற ரீதியில், நீங்கள் நினைக்க ஆரம்பிக்கும்பொழுதே, நீங்கள் அடக்குதலை கையாள வேண்டும். மற்றும் நீங்கள் அடுத்தவர்களுடைய தனித் தன்மையை அழித்து, ஒரே மாதிரித் தன்மையை உண்டாக்க வேண்டும். நீங்கள் மனிதர்களுடைய தனித் தன்மையை அழித்து, ஒழுக்கக் கட்டுப்பாடு மற்றும் ஒரே தன்மையை ஏற்படுத்தினால், உங்களுடைய எதிர்பார்ப்புக்கு மாறாக, ஒழுங்கற்ற தன்மையே ஏற்படும். இந்த ஒழுங்கற்ற தன்மை, எதிர்ப்பான மனத்திலிருந்து வராமல், இறந்த சட்டதிட்டங்களின் எதிர்செயலால் (Reaction) வருவதால் அதனுடைய ஒழுங்கற்றத் தன்மையில் எந்த ஒழுக்கத்தன்மையும் இருக்காது.

ஒரு எதிர்ப்பான மனம் (Rebellious) ஒரே ஒரு நாளில் மட்டும் ஜெயித்தாலும், அதில் எந்த ஒழுங்கற்ற தன்மையும் இருக்காது. ஏனென்றால், அங்கே எந்த ஒழுங்குத் தன்மையும் கிடையாது. ஒழுங்குத் தன்மையும், ஒழுங்கற்ற தன்மையும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள். ஒருவன் ஒழுங்குத் தன்மையை ஏற்படுத்த முனைந்தால், அவன் ஒழுங்கற்றத் தன்மையையே ஏற்படுத்தி விடுவான். ஒழுங்குத் தன்மையில் ஈடுபடும் மனம், ஒழுங்கற்றத் தன்மைக்கு வித்திட்டு விடுகிறது.

உங்களை ஒழுங்குபடுத்தும் மனிதனிடம், உங்களுடைய அகங்காரம் எதிர்ச்செயல் செய்ய அல்லது பழிவாங்கவே முனைகிறது. ஆனால் இது வெறும் செயல்தான். எதிர்ப்பு அல்ல. எதிர்ப்பாளன் என்பவன் தன் சத்தோரிக்குப் பிறகுதான் வருவான். அப்படிப்பட்டவர்கள் ஒரு சிலர்தான் இருப்பார்கள். இயேசு, புத்தர், சாக்ரட்டீஸ் போன்று. ஆனால், எதிர்ச்செயல் செய்பவர்கள், பல்லாயிரக்கணக்கோர் ஏற்படுவார்கள்.

உதாரணமாக கம்யூனிஸ்டுகள்- மார்க்ஸ் (Marx), பாக்குமின் (bakumin), லெனின் அல்லது மாவோ (Mao) போன்றவர்கள். இவர்கவெளல்லாம் எதிர்ச்செயல் புரிபவர்கள், அவர்கள் எதிர்ப்பாளர்கள் அல்ல. ஒரு எதிர்ப்பாளன் என்பவன் ஒரு இயல்பான சக்தி அல்லது நிகழுபவன் (Phenomenon). நீங்கள் இயல்பாக இயங்கும் பொழுதுதான், நீங்கள் உண்மையிலேயே வாழ்கிறீர்கள். இந்த உலகம் முழுமுமையுமே, இப்படி இயல்பாக இயங்கினால்...

ஒவ்வொரு கண்டுபிடித்தலும், புதுமையை வெளியிடுதலும், விளையாட்டுத் தனத்திலிருந்துதான் வெளிவந்திருக்கின்றன. ஐன்ஸ்ட்டின், ஆர்க்கிமிடிஸ், நியூட்டன் போன்றவர்கள் எல்லாம் விளையாடினார்கள். நீங்கள் கடுமைத்தன்மையில் இல்லாத பொழுது, அனேக புதுமைகள் வெளிவரும்; உங்களுடைய மனம் ஒருமுகப்பட்டு இல்லாத பொழுது, எல்லாவற்றையும் அனுமதிக்கும் தன்மையில் இருக்கும் பொழுது, அந்தப் புதுமை நிகழ்வுகள் தானே ஏற்படும்.

நியூட்டன், ஒரு ஆப்பிள் மரத்துக்குக் கீழே உட்கார்ந்திருந் தார். ஒரு ஆப்பிள் பழம் கீழே விழுந்தது. அப்பொழுது அவரிடம் ஏதோ நிகழ்ந்தது. ஆர்க்கிமிடிஸ், குளியல் தொட்டியில் படுத்து இருக்கும் பொழுது ஏதோ நிகழ்ந்தது. அவர் உடனே அதிலிருந்து குதித்து, "யுரேக்கா! யுரேக்கா! நான் கண்டு பிடித்தேன்! நான் கண்டு பிடித்தேன்!" என்று கூறிக்கொண்டே வெளியே ஓடினார். சோப்புக் குமிழியுடன் விளையாட, ஐன்ஸ்ட்டினுக்கு மிகவும் பிடிக்கும். அப்பொழுது ஒரு சமயம் இந்தப் பிரபஞ்சம் பற்றிய ஞானம் அவருக்கு திடீரென்று உதமாயிற்று. அவருடைய விரிவடைந்து கொண்டே இருக்கும் பிரபஞ்சம் பற்றிய கருத்து, சோப்புக் குமிழி விரிந்து சுருங்குவதைப் பார்த்தே பிறந்தது.

மனித வரலாறு என்பது சாதாரண கொள்கை கோட் பாடுகளை வகுத்தவர்கள், ஆண்டவர்கள், ஆளப்பட்டவர்கள் அடங்கிய பட்டியல் அல்ல. இதைப் போன்ற மக்கள் கூட்டம்

மனித குலத்துக்கு உருப்படியாக எதையும் வழங்கியதில்லை- அவர்கள் எந்த புதுமைப் படைப்பையோ, ஓவியமோ, கவிதையோ அல்லது சங்கீதத்தையோ அளிக்கவில்லை. ஆனால், ஒரு சில கடுமைத் தன்மை இல்லாத சுய சிந்தனையாளர்கள் மட்டும் இப்படிப்பட்ட புதுமைப் படைப்புகளைச் செய்திருக்கிறார்கள். தங்கள் உயிர்ச்சக்தியோடு விளையாடும் ஒருசில பெயர் தெரியாதவர்களினால் தான் அவை படைக்கப் படுகின்றன. அவர்கள் எதையும் கடுமைத் தன்மையுடன் அணுகி இருந்தால், அவர்கள் வியாபாரம் செய்து பெரிய கோடீஸ்வரர் களாகவோ அல்லது பல தொழிற்சாலைகளை ஆரம்பித்து பெரும் பணக்காரர்களாகவோ மாறி இருப்பார்கள்.

ஆகவே, நீங்கள் செய்ய வேண்டிய முதல் காரியம், உங்கள் வாழ்க்கையோடு விளையாடுவதுதான். பிறகு பல புதுமைகள் மதம், விஞ்ஞானம், கலை போன்றவற்றில் தானே நிகழ ஆரம் பிக்கும். எல்லாம் கடுமைத்தன்மை இல்லாத, விளையாட்டுத் தனம் மிக்க மனத்தின் வழியாக வெளிப்படுவதுதான்.

வாழ்வில் எந்தக் குறிக்கோளோ, இலக்கோ எதுவும் இல்லை. வாழ்வே போதும்! அதுவே அளவுக்கு அதிகம்தான். அதில், நீங்கள் உண்டாக்கிய ஒவ்வொரு குறிக்கோளும் ஒதுக்கப்பட வேண்டியவைதான். ஏனென்றால், அவை அனைத்தும் வாழ்வுக்கு எதிரானவை; மதம் என்ற பெயரில், கொள்கை மற்றும் ஒழுக்கம் என்ற பெயரில் பேசுபவை அனைத்தும் அரசியல் தனத்தைத் தவிர வேறில்லை. தலைமை, குரு, சீடன்- எல்லாமே முட்டாள்தனமானவை.

நீங்கள் டைனமிக் தியானத்தைப் பயிற்சி செய்தால், நீங்கள் உங்களையே அந்தக் 'குழப்புதலில்' ஆழ்த்திக் கொண்டால், அடுத்து நீங்கள் எல்லாவற்றையும் அதன் போக்கில் செல்ல முழுமையாக அனுமதித்தால், நீங்கள் வாழ்க்கையில் கொண்டிருந்த கொள்கை இலக்கு மற்றும் குறிக்கோள் அனைத்தும் தானே சென்று விடும்.

ஆகவே, டைனமிக் தியானத்தைப் பயிற்சி செய்யவும். அதை உங்கள் முழு சக்தியை உபயோகித்து செய்யவும்- அதை அதன் உச்சத்தன்மைக்கே கொண்டு செல்லவும். நீங்கள் அதில் முழு பைத்தியமாகவே ஆகிவிடவேண்டும். அப்பொழுதுதான் உண்மையான சுவாதீனம் உங்களிடம் ஏற்படும். அப்பொழுது தான், உங்களால் அடுத்தவர்களுக்கு உதவமுடியும்.



"பழங்கால முறைப்படி, ஆசனங்களைப் பயிற்சி செய்தால், அது தியானத்திற்கு உதவுமா?"

மனிதனில் சிறப்பியல்பு என்பது, அவனுடைய உடலைப் பொருத்தோ அல்லது மனதைப் பொருத்தோ அமைவது இல்லை; அது இந்த இரண்டையும் சார்ந்தது. இருந்தாலும் நாம் அதை மனரீதியானது (Psychosomatic) என்று சொல்லுவதுதான் சரியானதாக இருக்கும். ஆழ்ந்து பார்த்தால் மேற்சொல்லிய இரண்டுக்கும், எந்தவித இடைவெளியும் கிடையாது. ஆகவே, உடல் ரீதியாக ஏதும் மாற்றம் நிகழ்ந்தால், உடனே அது மனநிலையிலும் ஒரு அதிர்வை உண்டாக்கி விடுகிறது; அதைப்போல பின்னதில் உள்ள மாற்றமும் முன்னதைப் பார்க்கிறது. தத்துவவாதிகள், மனிதன் உடலாகவோ அல்லது மனமாகவோ அல்லது இரண்டும் சமநிலையில் ஆனால் தனித்தனியாக இருப்பதாகவோ கருதும் பழக்கம் உள்ளவர்களாக இருக்கிறார்கள்; ஆனால், அவை இரண்டும் ஒன்றாக இருப்பதாக அவர்கள் நினைப்பதே இல்லை. என்னைப் பொருத்தவரையில், அவை இரண்டும் ஒன்றாகக் கலந்தே இருக்கின்றன. இதை நவீன விஞ்ஞானமும் ஒத்துக்கொள்ளுகிறது.

வெளியில் தெரியும் மனம்தான் பார்க்கப்படும் உடல்; பார்க்க முடியாத உடல்தான், மனம். இவை இரண்டும் ஒரே உயிர்த்தன்மையின் இரு வேறு துருவ நிலைகள் (Polarities). மனம் என்பது நம்முடைய புலன்களை யெல்லாம் கடந்து செல்லக் கூடியதும் மற்றும் புலன்களின் பிடியிலிருந்து அப்பால்

இயங்கக்கூடியதும் ஆகும். மாறாக உடல் என்பது நம்முடைய புலன்களின் பிடியில் இயங்குவது ஆகும். இந்த இரண்டுக்கும் உள்ள வேறுபாடு, நம்முடைய புலன்கள் அதன் செயல்களுக்கு உட்பட்டது ஆகும்.

மனிதனுடைய அனுபவம் என்பது மனமும், உடலும் ஒருங்கே கலந்தியங்கிவரும் வெளிப்பாடுதான். இப்படி இரண்டும் ஒருங்கே கலந்தியங்குவது என்று சொல்லுவது கூட சரியில்லை. ஏனெனில் அவை ஒன்றேதான்! அதில் உள்ள வேறுபாடு அதன் அதிர்வுகளில்தான் உள்ளது. புலன்களின் வழியாக வரும் அதிர்வுகளை ஏற்றுக்கொள்ளும் சாதனம்தான் உடல் என்பது. மனம் என்பது, புலன்களின் ஆற்றலுக்கு அப்பால் கடந்து செல்லக்கூடிய மென்மையான அதிர்வுகளைக் கொண்டது.

இப்படி ஏன் நான் சொல்லவேண்டும்? மேற்கத்திய மனநலப் பிரிவில் 'ஜேம்ஸ்-லேங் கோட்பாடு' (James-lange Theory) என்று ஒரு புகழ்பெற்ற கோட்பாடு ஒன்று உண்டு. மனத்தை, உடல் பின்பற்றுகிறது என்றுதான் நம்முடைய பகுத்தறிவு எப்பொழுதும் சொல்லிக் கொள்ளுகிறது. நீங்கள் பயத்தில் இருந்தால், உங்களுடைய உடல் அதிலிருந்து தப்பித்து ஓட முனைகிறது. அதைப்போல, நீங்கள் கோபத்தில் இருந்தால், உங்களுடைய உடல் சண்டைபோட தயாராகிறது. ஆனால், மனநல வல்லுநர்களாகிய ஜேம்ஸும், லேங்கும் ஒரு முற்றிலும் மாறுபட்ட கோட்பாட்டை வெளியிடுகிறார்கள். அதாவது, ஓடுவதைப் பயம் ஏற்படுத்துவதில்லை. மாறாக ஓடுவது பயத்தை உண்டாக்குகிறது.

அவர்களைப் பொறுத்தவரையில், உடல் முதலில் அங்கம் வகிக்கிறது; பிறகுதான் மனம் வருகிறது. உடல் முதலில் தன்னைத் தயார்படுத்திக் கொள்ளாவிட்டால், உங்களால் பயப்படவோ அல்லது கோபப்படவோ முடியாது என்பதே அவர்களது வாதம். உங்கள் உடல், உங்களுடைய கோபத்துக்கு ஏற்றவாறு தன்னைத் தயார்படுத்திக் கொண்டு அதை வெளியிடாவிட்டால், உங்களுடைய கோபம் வெறும்

மனரீதியானது என்று உங்களால் எப்படி நிரூபிக்க முடியும் என்று அவர்கள் வாதிடுகிறார்கள். அவர்கள் உறுதிப்படச் சொல்லுவது என்னவென்றால், உங்களுடைய கண்கள் சிவப்பாகா விட்டால் மற்றும் உங்களுடைய கைமுட்டி, தாக்கத் தயாராகாவிட்டால், உங்கள் உள்ளே கோபத்தை யாராலேயும் கண்டுபிடிக்க முடியாது என்பதுதான். அவர்களுடைய வாதம் அல்லது கோட்பாடு சரியென்றே தோன்றினாலும், உண்மையில் அது சரியில்லை. ஆமாம். உடலின் வெளிப்பாடு மிகவும் முக்கியம்தான்; அதனுடைய வெளிச்செயல் இல்லாமல், மனத்தின் செயல் இல்லாமல், வெளிப்படுத்த முடியாதுதான். அதற்காக, உடலின் வெளிச்செயல் இல்லாமல், மனநிலை ஒருக்காலும் இயங்க முடியாது என்று அர்த்தமாகாது.

உடலைக்கொண்டு ஒருவன், கோபத்தின் சாயலை வெளிப்படுத்தலாம்; இருந்தும் ஒரு நடிகனைப் போல, உள்ளத்தளவில் கோபமில்லாமல் இருக்கலாம். ஒரு நடிகன், தன் நடிப்பாற்றலால் முழுமையான கோபத்தை வெளிக் காட்டலாம்; அப்பொழுது அவனுடைய உடலைப் பொறுத்த வரையில், அது முழு கோபத்தால் துடிக்கலாம். ஆனால், உள்ளத்தளவில், அவனிடம் சிறிதும் கோபம் இருக்காது. மாறாக ஒருவன், தன்னுடைய உடல் தோற்றத்தால், மிகுந்த அன்பு காட்டலாம்; ஆனால் அவனுடைய உள்ளத்தே எந்தச் சிறு அன்பு உணர்வும் இருக்காது. ஆகவே, மன உணர்வுக்கு சம்பந்த மில்லாமல், ஒருவருடைய உடல் எதையும் வெளிப்படுத்தலாம்.

உடலின் வெளிப்பாடு இல்லாமல், மனம் கூட வேறுவிதமாக உணரலாம். ஏனென்றால், முழுமையான உணர்வு, நம்முடைய வசத்தில் இருக்கிறது; ஆனால் மென்மையான, ஆழமான உணர்வு நம் வசத்தில் இல்லை. நாம், நம்முடைய கோபத்தை பெரும்பாலும் உடல்வழியாகவே உணர்கிறோம்- பிறருடைய கோபத்தை மாத்திரமல்லாது, நம்முடைய கோபத்தையும்தான். அந்தக் கோப உணர்வு, விதை வடிவத்தில்; சக்தி மிகுந்ததாக, உங்களுடைய மன ஆழத்தில் இப்பொழுதும் இருக்கிறது, எப்பொழுதும் இருக்கும். ஆனால், அது உடலின் மொத்த

உணர்வாக தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாதவரையில், அதை உங்களால் உணர முடியாது.

ஜேம்ஸ்-லேங் கொள்கை, ஐம்பது சதம்தான் சரி- எப்பொழுதுமே, பகுத்தறிவு ஐம்பது சதம்தான் சரியாக இருக்கும். ஆனால், ஜேம்ஸ்-லேங் கண்டுபிடித்த இந்தக் கொள்கையைப் பற்றி, நம்முடைய யோகா, பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தெரிந்து வைத்திருந்தது. ஆகவேதான், ஆசனங்களும், முத்திரைகளும் ஏற்பட்டன. மனத்தில் ஏற்படும் மாற்றங்களுக்கு ஏற்ப, உடலிலும் பல முத்திரைகளையும், மாற்றங்களையும் ஏற்படுத்தும் என்று யோகா பல காலமாக புரிந்து வைத்திருக்கிறது.

மேலும், மாறுபட்ட நிலையும் சாத்தியம்தான் என்று அது போதிக்கிறது. அதாவது, உடல் ஒரு குறிப்பிட்ட நிலையை எடுத்துக் கொண்டால், அதற்கு ஏற்ப மனத்திலும் சில மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஆனால், ஜேம்ஸ்-லேங் கொள்கையைப் போலவே, இதுவும் சரியில்லை. ஏனென்றால், நீங்கள் அப்படி நடிக்கலாம்; நீங்கள் புத்தரைப் போல, பத்மாசனத்தில் அமர்ந்திருக்கலாம்; அதனால், உங்களுடைய உள்ளத்தில், புத்தரின் மனமாற்றம் உங்களிடம் ஏற்பட்டிருக்கும் என்று சொல்ல முடியாது. மாறாக, வேறு ஒருவர் புத்தர் தன்மையில் இருக்கும் பொழுது, அவருடைய உடல், தானே புத்தரின் ஆசனத்தை எடுத்துக் கொள்ளலாம்; இங்கு நடிப்பு இல்லை.

ஆகவேதான், நான் ஆசனத்துக்கு எதிரியாக இருக்கிறேன். உடலின் ஆசன மாற்றம் தானே நிகழவேண்டும் அல்லது நீங்களாக அதைச் செய்ய வேண்டும். நீங்களாக அவற்றைச் செய்தால், அதற்கு ஏற்ப உங்களுடைய மனத்திலும் மாற்றம் நிகழும் என்று யாராலேயும் உறுதி செய்ய முடியாது. அது வெறும் பாவனை அல்லது நடிப்பாகிவிடும்- இது நமக்கு சுலபமாக கை வந்த கலைதான்! நீங்கள் புத்தரைப் போல உட்கார்ந்திருக்கலாம். அல்லது மஹாவீரரைப் போல

நின்றுகொண்டு இருக்கலாம்- இதில் எந்தப் பிரச்சினையும் இல்லை. ஆனால், இது அர்த்தமில்லாதது; இதனால் எந்தப் பயனும் இல்லை.

இந்த ஆசனங்களெல்லாம், எங்கிருந்து வந்தன? புத்தரின் மனநிலை, எப்பொழுதெல்லாம் உங்களிடம் ஏற்படுகிறதோ அப்பொழுது உங்களுடைய உடல் அதற்கு ஏற்றவாறு தன்னிலையை அமைத்துக் கொள்ளுகிறது. உங்கள் உடல், அப்படித்தான் பின்பற்ற வேண்டும்; அப்படித்தான் அது பின்பற்றும். இது பல நூற்றாண்டு காலமாக அறியப்பட்டது தான். ஆகவே, உடலில் ஒரு சில ஆசன நிலைகளை உண்டாக்கிக் கொண்டால், அதற்கு ஏற்றவாறு மனநிலையிலும் மாற்றம் நிகழும் என்பது ஆச்சரியப்படக் கூடியதுதான். அப்படி ஏற்படவேண்டும் என்று அவசியம் இல்லை. மாறாக, இது மிகவும் ஆபத்தான கற்பனையும் ஆகும். நீங்கள் இப்படி பாவித்துக் கொண்டால் அல்லது நடித்துக் கொண்டிருந்தால், நீங்கள் மற்றவர்களை மாத்திரமல்ல, உங்களையும் ஏமாற்றிக் கொள்ளுகிறீர்கள். இது உண்மையிலேயே ஆபத்தானது.

நீங்கள் புத்தர் ஆசனநிலையில் உட்கார்ந்திருந்தால், அது உங்களிடம் ஒரு மாய மயக்க உணர்வை ஏற்படுத்தலாம். இப்பொழுது, நீங்கள் அந்த புத்தா உணர்வை அடைந்திருப்பதாக நினைக்கக் கூடும். நீங்கள் ஒருவித அமைதியை, சலனமற்ற தன்மையை உணரக்கூடும். ஆனால், அந்த உணர்வுகள் மெய்யானவையே. ஏனென்றால், அவை தானே உங்களிடம் வரவில்லை; மாறாக அவற்றை நீங்களே ஏற்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். அது உங்கள் உள்ளே இருந்து வரவில்லை; மாறாக அது வெளியே இருந்து உங்களை அடைந்திருக்கின்றது. அந்த உணர்வு, உங்களுக்கு இதமாகவே இருக்கும். ஆனால், அது உங்களால் உண்டாக்கப்பட்டது. உங்களுடைய உடல்தான் அந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிறது.

நாம் இப்படி பல பிறவிகளாக செய்து வந்து கொண்டுதான் இருக்கிறோம். இதைத்தான், நாம் சாதாரண, தினசரி

வாழ்க்கையில் செய்து வருகிறோம். நாம், உள்ளத்தில் எந்த உணர்வும் இல்லாமல், சிரித்துக் காட்டுகிறோம்; இது வெறும் பாவனைதான். ஆனால், இப்படி சிரிக்கும்பொழுது, ஒரு உள்ளுணர்வு ஏற்படத்தான் செய்யும். ஆனால், இந்த உள்ளுணர்வு பொய்யானது. அதனால், நீங்களே ஏமாற்றப் படுகிறீர்கள். அது வெறும் பாவனைதான் என்பதை நீங்கள் மறக்கக்கூடிய சாத்தியம் மிக அதிகம். ஆகவே, நீங்கள் உண்மையிலேயே அன்பினால் சிரிப்பதாக நினைக்கக்கூடிய அளவுக்கு அதனால் ஏமாற்றப்படுகிறீர்கள். இந்த பாவனையால், இந்தப் பொய்யான நடிப்பால், உண்மையான, முழுமையான புரட்சிகரமான இழப்புக்கு நிகரான மாற்றமடையக்கூடிய அன்பைத் தவறவிட்டவராகிறீர்கள்.

ஆகவேதான், நான் ஆசனம் மற்றும் முத்திரைகளை முற்றிலுமாக மறுக்கிறேன். அவற்றை, உங்களுடைய பயிற்சியால் ஏற்படுத்தக்கூடாது. அவை தானே வந்தால், சரிதா ன் கண்டிப்பாக வரும். ஆனால், தானே வர அனுமதியுங்கள்; அப்படி வந்தால் அவை ஒரு முக்கியமாக தன்னைச் சுட்டிக் காட்டுகிறது என்பதை அறிந்துகொள்ளுங்கள். அப்பொழுது அவை, உங்களை ஏமாற்றவில்லை. மாறாக, உங்களிடம் உள்ள ஏதோ ஒன்றை, உங்களுக்கும் மற்றவர்களுக்கும் காட்டக்கூடிய குறியீடாக, வெளிப்படுத்துகிறது என்பது விளங்கும்.

ஆனால், அவை உங்கள் உள்ளே இருந்து வருவதாக இருக்கட்டும். அவற்றை நீங்கள் வெளியிலிருந்து உங்களிடம் திணிக்க முயலாதீர்கள். அப்படி நீங்கள் வலுக்கட்டாயமாகச் செய்தால், அது, ஒரு தனித்தன்மை வாய்த்தவனுக்கு ஏற்றவாறு இல்லாமல், பொதுப்படையாக அமைந்திருப்பதால், அதனுடைய தேவை அல்லது குறிக்கோள் இழக்கப்படுகிறது. நீங்கள் புத்தாத் தன்மையை அடைந்தால், ஒரு குறிப்பிட்ட ஆசனம் அல்லது ஒரு குறிப்பிட்ட உடல் பாவனை தானே ஏற்படுகிறது. அது, கௌதம புத்தரின் ஆசன நிலையையே ஒத்திருக்க வேண்டும் என்று அவசியம் இல்லை; அதில் ஏதோ

ஆதாரமான நுண்ணிய வேறுபாடு இருக்கத்தான் செய்யும். ஆனால், அவை பொதுப்படையாக ஒன்று போலவே இருக்கும். ஏனென்றால், நீங்கள் கௌதம புத்தர் இல்லை. உங்களுடைய முழு தனித்தன்மையும், உங்களுடைய உடல் மற்றும் மன செயல்பாடுகள் அனைத்தும் முற்றிலும் வேறானவை. ஆகவே, அவை கௌதம புத்தரைப் போல ஒருக்காலும் இருக்காது. நீங்கள் புத்த ஆசன நிலையை உங்களிடம் ஏற்படுத்திக் கொண்டால், அது உங்களுடைய தனித்தன்மையின் உணர்வோடு ஒருக்காலும் ஒத்துப் போகாது. எவ்வளவோ ஆசனங்கள் இருக்கின்றன. அவை, ஒவ்வொருவரிடமும் நிகழவேண்டிய அவசியம் இல்லை.

மஹாவீரர், ஒரு மிகவும் வித்தியாசமான நிலையில் உட்கார்ந்திருக்கும் பொழுது, சமாதிநிலை அடைந்தார். அதற்கு 'கோதுஹாசன்' (Goduhasan) என்று பெயர். ஒரு பெண், பசுவிடமிருந்து பாலைக் கறக்கும் பொழுது, எப்படி உட்கார்ந்திருப்பாளோ, அப்படி அது ஒத்து இருக்கும். ஆனால், அதன்பிறகு வேறுயாரும் அந்த ஆசன நிலையில், சமாதியை அடையவில்லை- வேறு யாரும் அப்படி உட்கார்ந்திருக்க வில்லை. அப்படி ஒருவரால் பல நூற்றாண்டுக் காலமாக உட்கார்ந்திருக்க முடியும். பொதுவாக சமாதியைப் பொறுத்தவரையில், எதுவுமே தர்க்கத்துக்கோ, பகுத்தறிவுக்கோ உட்பட்டது அல்ல.

எதற்காக, மஹாவீரர் அந்த நிலையில் உட்கார்ந்திருக்க வேண்டும்? புத்தரின் ஆசன நிலை சரியே; ஆனால், மஹாவீரரின் உடல்பாவனை, தவறாகவேபடும். அதை அவர் பயிற்சி செய்யவில்லை; அது தானே வந்தது. அவருக்குள்ளே, ஏதோ நிகழ்ந்தது. அப்பொழுது அவர் உடல் தோற்றத்தில் ஒரு வகை மாற்றம் ஏற்பட்டது. அந்த பாவனை நமக்குத் தவறாகத் தோன்றினாலும், அவர், ஆசனப் பயிற்சி பெற்றிருந்தால், அவர் புத்தர் போல உட்கார்ந்திருக்கலாம். ஏனென்றால், அதுதான் பழங்கால வழக்கப்படியுள்ள தியான ஆசன முறை. ஆனால்,

அவர் எதையும் அப்படியே அனுமதிக்கும் தன்மைப் படைத்தவராக இருந்தால், சமாதி நிலை கிட்டும்பொழுது, அவருடைய தனித்தன்மைக்கு ஏற்றவாறும் மற்றும் அவருடைய உடல் நிலைக்கு ஏற்றவாறும், அது தானே ஒருவித உடல் பாவனையை ஏற்படுத்திக் கொண்டு விட்டது.

ஒவ்வொருவரும், தன் தனித்தன்மையை வெளியிடத் தான் வேண்டும். யாரும். மற்றொருவரைப் போல இருக்க முடியாது; அது யாராலேயும் முடியாது. ஒவ்வொருவரும், ஒவ்வொரு விதமாக தனித்தன்மையில் மலரக்கூடிய விதத்தில் தனித்தன்மையுடையவர்களாகவே இருக்கிறார்கள். வெளியே இருந்து எதையாவது உங்களிடம் திணித்தால், அது ஒரு பொதுப்படையான கோட்பாடாகத்தான் இருக்குமேயொழிய, ஒருக்காலும் அது உங்களுடைய தனித்தன்மைக்கு ஏற்றவாறு, ஒத்த லயத்தில் அமையாது.

ஆகவே, நான் ஆசனங்களுக்கு எதிராக இருக்கிறேன் என்று சொல்லும்பொழுது, அதற்கு எந்தக் காரணமும் இல்லை என்று நான் கூறவில்லை; அவை முட்டாள் தனமானது என்று நான் சொல்லவில்லை. நான் சொல்லுவது என்னவென்றால், அதை நீங்களாக பயிற்சி செய்ய வேண்டாம் என்பதே; இதுதான் முட்டாள்தனம். அவை தானே வரட்டும்; அது தானே வரும். அப்படி அவை தானே வரும்பொழுது, அதற்கு சில காரணங்கள் இயல்பாக இருக்கும். அவை உங்கள் உடலில் வேலை செய்யும்; அதன் மூலமாக, புதிய சூழ்நிலைக்கு ஏற்றவாறு, உங்கள் உடல் தானே தன் பாவனையை அமைத்துக் கொள்ளும்.

நீங்கள் தலைகீழாக நின்றுகொண்டு, உங்களால் தூங்க முடியாது; அது ஒருக்காலும் நடக்காது. ஏனென்றால், தூக்கம் ஒருவித உடல் பாவனையைச் சார்ந்தே இருக்கிறது. நீங்கள் கீழே படுத்திருந்தால், தூக்கம் வரவேண்டிய அவசியம் ஏதும் இல்லை. ஆனால், தூக்கம் வரும்பொழுது, நீங்கள் கண்டிப்பாகக் கீழே படுத்திருக்க வேண்டும். நான் சொல்லவருவது என்னவென்றால், நீங்கள் எதையும் வெளியிலிருந்து துவங்கக்

கூடாது; அது தானே உங்கள் உள்ளேயிருந்து துவங்க வேண்டும் என்பதுதான். அந்த மலருதல் உங்கள் வெளியே இருந்து அல்ல; அதனுடைய ஆணிவேர் உங்கள் உள் இருப்பு மையத்திலிருந்து உண்டாக வேண்டும். ஆகவே, நீங்கள் தியானத்தில் ஆரம்பிக்க வேண்டும்; மற்றவை அனைத்தும் அதைப் பின் தொடரட்டும். ஒரு குறிப்பிட்ட ஆசனம் எப்பொழுது தேவைப்படுகிறதோ, அப்பொழுது அது தானே வரும். அது, எப்பொழுது தேவை யில்லையோ, அப்பொழுது அது தானே விலகிச் சென்றுவிடும்.

**"சிலசமயம், டைனமிக் தியானத்தின் இரண்டாவது கட்டத்தில், நான் ஆசனங்களைச் செய்ய ஆரம்பித்து விடுகிறேன். நானே அதைச் செய்கிறேன் என்று என்னால் உறுதியாகக் கூற இயலவில்லை. ஏனென்றால், அதை நானே பயிற்சி செய்ய விரும்புகிறேனா அல்லது அது தானே என்னிடம் நிகழ்கிறதா என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இதில் உள்ள வித்தியாசத்தை, ஒருவன் எப்படி அறிந்து கொள்ளுவது?"**

வித்தியாசத்தைப் பற்றி எதுவும் நினைக்க வேண்டாம். அவை தானே வரட்டும். தியானத்தில் அவை தானே வந்தால், அப்படியே வரட்டும். பிறகு அவை தானே சென்றுவிடும். ஆனால், உங்கள் பயிற்சியால் அவை வந்தால், அவை ஒரு போதும் உங்களை விட்டுச் செல்லாது.

அதனுடைய தேவை முடிந்துவிட்டால் அல்லது பூர்த்தி அடைந்து விட்டால், அவை தானே விலகிச் சென்றுவிடும். ஆகவே, அதைப் பற்றி எந்த சிந்தனையும் வேண்டாம். அவை பயிற்சியால் வருகிறதா அல்லது தானே வருகிறதா என்பதை உங்களால் முன்கூட்டியே தெரிந்துகொள்ள முடியாது. அவை உண்மையாக தானே நிகழ்ந்ததாக இருந்தால், அதனுடைய தேவை பூர்த்தியான பின்பு அவை தானே விலகிச் சென்றுவிடும். இதை, நீங்கள் ஆசனங்களை செய்யும் பொழுது, உங்களால் அறிந்துகொள்ள முடியாது- அந்த வித்தியாசத்தை உங்களால்

வெளியிட முடியாது. ஆனால், கொஞ்சம் கொஞ்சமாக, அந்த வித்தியாசத்தை உணர முடியும்.

நீங்கள் ஒரு ஆசனாத்தைப் பயிற்சி செய்யும் பொழுது, அது தானே நிகழுவதிலிருந்து முற்றிலும் வித்தியாசமாகவே இருக்கும். அவற்றுக்கிடையே உள்ள வேறுபாடு மிக நுண்மையாகவே இருக்கும்; ஆனால், அது இருந்தே தீரும். நீங்கள் அதைச் செய்யும் பொழுது, அது ஒரு குறிப்பிட்ட ஒழுங்கு முறையில்தான் நடைபெறும். ஆனால், அது தானே வந்து உங்களிடம் நிகழும் பொழுது, அதில் எந்த ஒழுங்கு முறையும் இருக்காது; அது ஒரு வரைமுறைக்கு உட்பட்டதாக இருக்காது. அது ஒழுங்கற்ற தன்மையில்தான் (Chotic) தன்னை வெளிப்படுத்திக் காட்டும். அது அப்படி ஒழுங்கற்ற தன்மையில் அல்லது இழப்பு நிலையில் வெளிப்படுவதுதான், உங்களுக்கு உபயோகமாக இருக்கும்.

ஒரு ஒழுங்கு முறையுள்ள செயல், உண்மையில் உபயோகப் படாது. ஏனென்றால், அது எப்பொழுதும் பிரக்ஞையான மனத்தின் செயலாகவே இருக்கும். அது ஒருபோதும் ஆழமாகச் செல்லாது. அது ஒழுங்கற்ற, குழப்ப நிலையில் செயல்பட்டால் தான். அது ஆழமாகச் செல்ல முடியும். அப்பொழுதுதான் பிரக்ஞையற்ற தன்மையை அதனால் அடைய முடியும். ஏனென்றால், உங்களுடைய பிரக்ஞையற்ற மனம், எப்பொழுதும் மிகப் பெரிய ஒழுங்கற்றத் தன்மையில் தான் இருக்கிறது.

உங்களுடைய பிரக்ஞையற்ற மனம், இந்த உலகத்தில் ஆரம்ப நிலையை ஒத்து இருக்கிறது. அதில் எல்லாமே, ஒரு அமைப்பில் சக்தியுடையதாக இருக்கிறது. அவை இன்னும் ஒரு குறிப்பிட்ட வடிவத்தையோ, அமைப்பையோ ஏற்படுத்திக் கொள்ளவில்லை; எல்லாமே தூங்கிக் கொண்டு சோம்பேறித் தனமாக, மங்கலாக, நிலையற்று இருக்கின்றன. நீங்கள் அதில் இப்பொழுது ஒரு ஒழுக்கமுறையை ஏற்படுத்தினால், உங்களால் எதையும் சாதிக்க முடியாது. நீங்கள் அந்த பிரக்ஞையற்ற மனத்தைத் தான் சுற்றிச் சுற்றி வருவீர்கள். ஏனென்றால், பிரக்ஞை நிலையை, நீங்கள்

ஒழுங்கு முறையில் செலுத்த முடியும். ஆனால், பிரக்ஞையற்ற நிலையை, உங்களால் ஒழுங்குமுறையில் செலுத்த முடியாது. ஆனால், இந்த பிரக்ஞையற்ற நிலைதான் தியானத்திற்கு ஆதாரமாக, ஆணிவேராக இருக்கிறது.

தியானம் என்பது நீங்கள் இந்த பிரக்ஞையற்ற நிலையில் குதிப்பதுதான். அது குழப்ப நிலையில் இருக்கும். ஒரு குழப்புதல் தான்; வடிவமற்ற நிலையில் இருக்கும் வடிவமற்ற தன்மை தான். அது, தன்னை எதிலும் செலுத்துவதுதான். மேகத்தில் ஒழுங்கற்று மிதப்பதையும், வரைபடம் இல்லாத முன்பின் தெரியாக, எல்லையற்ற கடலில் செல்லுவதையும் அது ஒக்கும். ஆகவே, அதில் ஒழுங்குள்ள மனத்தோடு செல்லாதீர்கள்; இதற்கு செல்லாமல் மிதப்பதே மேல்.

நீங்கள் உங்களுடைய பிரக்ஞையான மனத்திலேயே சுற்றிச் சுற்றி வாருங்கள். அதில், ஒன்றையே திரும்பத் திரும்பச் செய்து, அதை ஒரு பழக்கமாக்கிக் கொள்ளுங்கள். உங்களையே நீங்கள் இந்த பிரக்ஞை மனத்தோடு ஒழுங்கு படுத்திக் கொள்ளுங்கள். ஆனால், இந்தப் பிரக்ஞையான மனம் எப்பொழுதுமே கீழான நிலையில்தான் இருக்கும். ஏனென்றால், அதனால் குழப்ப நிலையை ஏற்றுக் கொள்ள முடியாது. அதனுடைய பிரக்ஞை நிலைக்கு அப்பால் அதனால் ஒரு போதும் உயிர்வாழ முடியாது. அது, தன்னை ஒருக்காலும் தாண்டிச் செல்லாது. அதற்கும், அந்த எல்லையற்ற பிரபஞ்ச நிலைக்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது.

ஒரு ஒழுங்குமுறையுள்ள மனம், காந்தியைப் போல சிறந்த மனிதனாக விளங்க முடியும். ஆனால், அவருடைய மனம் மிகச் சிறியது. ஏனென்றால், அவர் பிரக்ஞை மனத்தையும் மற்றும் ஒழுங்கு முறைகளையுமே பற்றிக் கொண்டு இருப்பவர். அவர் ஒரு போதும், ஒழுங்கற்ற நிலைக்குச் செல்லமாட்டார். அவர் ஒருபோதும் அதைத் தொடமாட்டார்.

உங்களுடைய பிரக்ஞையான மனம் என்பது உங்களுடைய வீட்டின் பின்புறத்தில் உள்ள தோட்டத்தைப் போல ஒரு

ஒழுங்கு முறையில் அமைந்திருப்பது. அது ஒரு போதும் காடாகாது. மாறாக, உங்களுடைய பிரக்ஞையற்ற மனம் என்பது எல்லையற்ற அடர்ந்த காட்டைப் போல ஒழுங்கற்று அமைந்திருப்பது. உங்களுடைய பிரக்ஞையற்ற மனத்தின் எல்லையை உங்களால் ஒருக்காலும் கண்டறிய முடியாது. ஆகவே, நீங்கள் அங்கே தொலைந்து போகக் கூடிய சாத்தியம் மிக அதிகம். பிரக்ஞையோடு உள்ள மனத்தில் நீங்கள் வசிப்பது பாதுகாப்பானது; அதில் எந்த அபாயமும் இல்லை. ஆனால், பிரக்ஞையற்ற நிலைக்குச் செல்வது என்பது அபாயகரமானது. அதற்கு மிகுந்த தைரியம் தேவை.

தியானத்தில் முன்னேற, உங்கள் உடலையும், மனத்தையும் ஒழுங்குபடுத்தாதீர்கள். ஒழுங்கற்ற நிலையில் வாழ முனையுங்கள்; இழப்பு நிலையில் வாழ முனையுங்கள். அபாயகரமான மனநிலையில் வாழ முனையுங்கள். என்னைப் பொறுத்தவரையில், தியானம் என்பதன் அர்த்தம் இதுதான்; அதாவது பாதுகாப்பற்ற நிலையில் வாழ்வது, குழப்ப நிலையில் வாழ்வது மற்றும் எல்லையற்றதில் வாழ்வது.

ஆனால், ஒழுங்குமுறை உங்களை வந்து அடையாது என்று அதற்கு அர்த்தம் இல்லை. அது தானே வரும். ஆனால், அது மிகச் சுதந்திரத்தில் உங்களை வந்து அடையும். அது உங்களுக்குள்ளே இருந்து கிளம்பும் ஒரு உயிரோட்டமுள்ள ஒழுங்கு முறையாகவே இருக்கும்; அது எப்பொழுதும் அந்த எல்லையில்லாததைத் தொட்டுக் கொண்டே இருக்கும்; எப்பொழுதும் அது சக்தி மிகுந்த குழப்ப நிலையிலேயே இருக்கும்; எப்பொழுதும் அது வெடிக்கும் தன்மையில் இருக்கும்; எப்பொழுதும் அது தெரியாதவற்றிலேயே, கணத்துக்குக் கணம் ஒரு ஒழுங்கற்ற ஒழுங்குமுறையிலேயே நிகழ்ந்த வண்ணமாக இருக்கும். அது வெளியில் ஒழுங்கற்றதாகவே தெரியும். ஆனால், அதனுடைய ஒழுங்குநிலை அதனுள்ளேயே அடங்கியவாறு இருக்கும்.

நீங்கள் வெளித்தன்மையில், உங்களை ஒழுங்குபடுத்திக் கொண்டால், நீங்கள் அந்த பிரக்ஞையற்ற எல்லையில்லாத நிலையை அறிந்து கொள்ளக்கூடிய வாய்ப்பை இழக்கக்கூடிய சகல சாத்தியமும் ஏற்பட்டு விடும். உங்களுடைய பிரக்ஞையான மனம், ஒரு மனமே அல்ல. அதில் எந்த உயிரோட்டமும் இல்லை. அது இந்த சமூகத்தால் ஏற்படுத்தப்பட்ட ஒரு உபயோகமுள்ள சுகவிதானே தவிர வேறல்ல; அது நீங்கள் அல்ல. நாம் பிறரோடு கலந்து வாழ வேண்டி இருப்பதால், நம்மை பிறர் அறிந்து கொள்ள நமக்குச் சில வெளித்தன்மைகள் தேவையாக இருக்கின்றன. அவற்றை பிறர் அறிந்து கொள்ள, அதன் மீது பிறர் நம்பிக்கை வைக்க அவை அவசியமாகிறது; அது பிறரால் திணித்த ஒழுக்க நியதிகள் மற்றும் சமூகத்துக்கு ஏற்ற தனி குணாதிசயங்கள் ஆகும். பிறரோடு உங்களுக்கு உள்ள தொடர்பால், இந்தப் பிரக்ஞை மனம் ஏற்பட்டிருக்கிறது. அது, உங்களுக்கும், உங்களைச் சேர்ந்தவர்களுக்கும் ஒரு தொடர்பாக இருக்கிறது. ஆனால், அது நீங்கள் உங்களோடு தொடர்பு கொள்ள, உங்களை அறிந்து கொள்ள எந்த உதவியும் செய்யாது.

ஒரு கதை, என் ஞாபகத்துக்கு வருகிறது.

புத்தரின் செய்தியைப் பரப்புவதற்காக அரசன் அசோகன், தன் மகனை இலங்கைக்கு அனுப்பினான். அவன், இலங்கை சென்று அந்த அரசனை சந்தித்து, ஒரு கேள்வியைக் கேட்டான்: "இந்த உலகத்தில் உள்ள மக்களில், சிலரோடு நீங்கள் சம்பந்தப்பட்டிருக்கிறீர்கள். மற்றும் சிலரோடு நீங்கள் சம்பந்தப் படாமல் இருக்கிறீர்கள். இப்படி உங்களிடம் இரண்டு பிரிவுகள் இருக்கின்றன. இந்த இரண்டு பிரிவுகளிலும் சேராது வேறு யாராவது உங்களிடம் இருக்கிறார்களா?" என்று.

அதற்கு அரசன், "நான் இருக்கிறேன்," என்றான்.

அசோகனின் மகன், "அப்படியென்றால், இப்பொழுது அந்தச் செய்தியை உங்களுக்கு என்னால் அளிக்க முடியும். அந்தச் செய்தியை உங்களிடம் சொல்லக்கூடிய அளவில், நீங்கள்

அறிவுக் கூர்மை உள்ளவர்தான். எதற்காக நான் அந்தக் கேள்வியைக் கேட்டேன் என்றால், அந்த இரண்டு பிரிவுகளில் சம்பந்தப்படாத வேறு ஏதும் உண்டா அல்லது எல்லாமே அந்த இரண்டு பிரிவுக்குள்தான் அடக்கம் என்று நீங்கள் கருதுகிறீர்களா என்று நான் அறிந்து கொள்ளுவதற்காகவே," என்றான்.

அந்த மூன்றாவது வகை- உங்களிடம் சம்பந்தப்பட்டோ அல்லது சம்பந்தப்படாமலோ உள்ள- என்பது உங்களுடைய உயிர்த்தன்மையின் பிரக்ஞையற்ற நிலைதான்; இதுதான் தியானத்துக்கு உரியது. இந்த உலகத்தைப் பொருத்தளவில் நீங்கள் அதில் சம்பந்தப்பட்டோ அல்லது சம்பந்தப்படாமலோ இருப்பதற்கு, பிரக்ஞையான மனம் உதவி செய்கிறது. ஆனால், உங்களின் தனிப்பட்டத் தன்மையைப் பொறுத்து, உள் அளவில் அது உங்களுக்கு ஒருக்காலும் உதவியாக இருக்காது.

தியானம் என்பது பிரக்ஞையோடு ஒன்றை நடைமுறைப்படுத்துதல் என்று அர்த்தம் இல்லை; உங்களுக்குள்ளே நீங்கள் முயற்சி ஏதும் இன்றிக் குதித்தல் என்பதுதான் அதன் அர்த்தம். ஒழுங்குமுறையோடு, நீங்கள் ஒன்றில் படிப்படியாக முன்னேறலாம்; ஆனால், குதிப்பதற்கு எந்த முன்னேற்பாடான ஒழுங்குமுறையும் தேவையில்லை. டைனமிக் தியானத்தின் முதல் மூன்று கட்டங்கள், தியானத்தின் கட்டங்களாக ஒரு போதும் இல்லை; அவை, நீங்கள் தியானத்தில் குதிப்பதற்கான ஒரு சரியான சூழ்நிலையை ஏற்படுத்தும் கட்டங்கள்.

உண்மையான தியானம் என்பது உங்களுடைய குதித்தல் தான்- தெரியாததனுள் ஒரே குதியாகக் குதித்தல் ஆகும். ஆகவே, உங்களுடைய உடலை ஒழுங்கு படுத்தவேண்டாம்; அது எங்கு செல்ல விரும்புகிறதோ, அப்படியே அதை அனுமதிக்கவும். உங்களை, நீங்கள் அந்த அறியாதவற்றில் செலுத்த அனுமதியுங்கள்; நிகழுதல் தானே நிகழும்; ஆசனங்களும் நிகழலாம். ஆனால், எது உங்களுக்குத் தேவையோ, அது தானே நிகழும். இப்பொழுது ஆசனம் உங்களிடம் நிகழலாம்- அந்த

ஆசனங்களை உங்களால் முன்பே தீர்மானிக்க முடியாது. அதைப் பற்றி எந்த விளக்கமும் இதுவரை கொடுக்கப்படாதது ஏனென்றால், பல புதுமை ஆசனங்கள் ஏற்படக்கூடிய சாத்தியம் மிக அதிகம்; அது எல்லையில்லாதது. ஆனால், நாம் பயிற்சி பெறும் ஆசனங்கள் அனைத்தும் பொதுவாக ஏற்கெனவே நம்மால் முறைப்படுத்தி வைக்கப்பட்டவை. ஆசனங்கள் எல்லையில்லாது இருப்பது போல, முத்திரைகளும் எல்லையில்லாது இருக்கின்றன. இவையும் இயல்பாக நிகழும்.

ஆகவே, ஆசனங்கள் வரட்டும்; பிறகு தானே செல்லட்டும். அவற்றை முன்கூட்டியே பயிற்சி செய்யாதீர்கள். அதற்கு முக்கியத்துவம் கொடுக்காதீர்கள். அவை தானே வரட்டும்; தானே செல்லட்டும். அது ஒன்றும் பெரிய கவனத்துக்குரிய விஷயம் இல்லை. நான் அதற்கு மாறாக இருக்கிறேன் என்று சொன்னதன் அர்த்தம் இதுதான். நீங்கள் அதற்கு ஒருக்காலும் எந்த முக்கியத்துவமும் கொடுக்க வேண்டாம்.

இன்னொன்று சொல்ல வேண்டும். ஆசனங்களுக்கு உணர்ச்சிகரமான சுத்தப்படுத்தும் தன்மை உண்டு. சாதாரணமாக, நம்முடைய மனம், பிறரைக் கொண்டோ அல்லது பிற சூழ்நிலைகளைக் கொண்டோ தான் செயல்படும். அதாவது, பிற பொருள்களின் செயலுக்கு ஏற்றவாறுதான் அது மறு செயல் செய்யும். அதுவாக தானே செயல் புரியாது. ஒரு மனிதன், எந்தவித வெளி உந்துதல் இல்லாமல் தானே செயல் ஏதும் செய்தால், அவனை நாம் பைத்தியக்கார விடுதியில் அடைத்துவிடுவோம். ஏனென்றால், அவனுடைய செயல் முட்டாள்தனமாகவும், அறிவுக்குப் புறம்பாகவும் தான் இருக்கும். அவன் ஏதும் செயல் செய்தால், அது பிறரைக் கருதியோ மற்றும் பிற சூழ்நிலைகளைக் கருதியோ இருக்காது. அவன் தன் உள் உந்துதலுக்கு ஏற்றவாறு செயல்படுகிறான்.

நமக்குள்ளே எவ்வளவோ விஷயங்கள் அடக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. நம்மால் செயல் செய்ய முடியாத காரணத்தால், நாம் எதிர்ச்செயல் செய்ய வேண்டிய ஒரு

சூழ்நிலைக்காக எப்பொழுதும் காத்துக் கொண்டு இருக்க வேண்டியதாகிறது. நீங்கள் கோபமாக இருந்தால்– நீங்களாக வெறும் கோபத்தில் இருக்க முடியாது. அதற்கு ஏற்ற ஒரு சூழ்நிலைக்காகக் காத்துக் கொண்டு இருக்க வேண்டும். நீங்கள் அப்படிக் கோபப்பட, எதிர்ச்செயல் செய்ய, யாராவது அதற்கு ஏற்ற சூழ்நிலையை உண்டாக்க வேண்டும். அப்படி வெளித் தூண்டுதல் இல்லாமல், நீங்களாகவே கோபப்பட்டால், உங்களை எல்லோரும் பைத்தியம் என்றே அழைப்பார்கள். ஏன், நீங்கள் எதிர்ச்செயல் செய்யும் பொழுது கூட, நீங்கள் பைத்தியம் போலத்தான் காட்சி அளிப்பீர்கள்! ஏதோ ஒன்றின் செயலுக்காக, நீங்கள் எதிர்ச்செயல் செய்தால், நீங்களும் திருப்திப்பட்டுக் கொள்ளுகிறீர்கள், பிறரும் திருப்திப்பட்டுக் கொள்ளுவார்கள். ஆனால், உங்களுடைய செயல், எதிர்ச் செயலாக இல்லாவிட்டால், அதற்கு எந்தக் காரணமும் இல்லாத காரணத்தால், உங்களைப் பைத்தியம் என்றே கருதுவார்கள்.

நீங்கள், உங்களுக்குள்ளே வெளியேற்றக்கூடிய அனேக விஷயங்களை அடைத்து வைத்திருக்கிறீர்கள்; ஆனால் அவை வெளியேற்றப்படாமலே இருக்கின்றன. ஏனென்றால், அவற்றை வெளியேற்றக் கூடிய தகுந்த சூழ்நிலை கிடைக்கவில்லை. ஆகவே, நீங்கள் அவற்றை மேலும் அடக்கிக் கொண்டும், அவற்றோடு சண்டைப் போட்டுக் கொண்டும் தான் இருக்கிறீர்கள். வெற்று ஆகாயத்தில், உங்களுடைய அன்பை வெளிப்படுத்த முடியாது. ஆகவே, உங்களுடைய அன்பை வெளிக்காட்ட சந்தர்ப்பம் இல்லாத பொழுது அதை நீங்கள் உங்களுக்குள்ளே அடைத்து வைக்கிறீர்கள். அப்பொழுது ஒரு வித்தியாசமான நிகழ்வு ஆரம்பமாகிறது. இப்பொழுது நீங்கள் அன்பால் நிரப்பப்படுகிறீர் கள்; அதை வெற்று வெளியில் கூட வெளியிட முடியாத நிலையில் இருக்கிறீர்கள். அப்பொழுது, உங்களுடைய அன்பைப் பகிர்ந்து கொள்ளக் கூடியவர்கள் யாராவது வந்தால், அதை அவர்களோடு மகிழ்ச்சியாகப் பகிர்ந்து கொள்ளுகிறீர்கள்; ஆனால், இப்பொழுது உங்களோடு பகிர்ந்து கொள்ள அருகதை

இல்லாதவர்களிடமும் கூட, அதை செயல்படுத்த விரும்புகிறீர்கள். ஆகவே, உண்மை நிலை அடக்கப்படுகிறது; பொய்யானது செயல்புரிய ஆரம்பிக்கிறது. இப்படியாக உங்கள் வாழ்க்கையே, ஒரு குழப்பத்தில் நடைபெறுகிறது.

இரண்டு காரணங்களுக்காக, உணர்ச்சிகரமான சுத்தப்படுத்துதல் அல்லது வெளியேற்றுதல், தியானத்துக்கு அவசியமாகிறது. ஒன்று, உங்களுடைய அடக்குதல், அதிர்வுகள், குணாதிசியங்கள், உணர்வுகள், செயல்கள், முத்திரைகள் அனைத்தும் வெளியேற்றப்பட வேண்டும். எதிர்ச்செயல் செய்து அல்ல; ஆனால் வழிந்தோடும் சக்தியாக, எதனோடும், எவரோடும் சம்பந்தப்படாமல், தானே செயலாக வெளியேற வேண்டும். டைனமிக் தியானத்தில், அவற்றை வெளியேற்ற முடியும், எந்தக் குறியும் இல்லாமல்...

நீங்கள் அழ ஆரம்பிக்கிறீர்கள்; நீங்கள் சிரிக்க ஆரம்பிக் கிறீர்கள். ஆனால், அவை எதனை நோக்கியும் இல்லாமல் இருந்தாலொழிய, அவை முழுமையாக வெளிவராது. அதற்கு எந்தக் காரணமும் தேவையில்லை. அதனுடைய காரணம், அதற்குள்ளே இருக்கிறது. இப்பொழுது நீங்கள் எதை வெளிப்படுத்த நினைத்தாலும், அது முழுமையாக வெளியேறுகிறது. அதை அடக்க வேண்டிய அவசியம் ஏதும் இல்லை. இப்பொழுது, நீங்கள் ஆகாயத்தில் அன்பு செலுத்துகிறீர்கள்; காற்றோடு கலந்துரையாடுகிறீர்கள். ஏன், கடவுள்களோடு கோபமாக இருக்கிறீர்கள்! -எதைக் குறித்தும், எதை நோக்கியும் இல்லாமல். அப்பொழுது, நீங்கள் ஒரு முழுமையான வெளியேற்றுதலாக இருக்கிறீர்கள். உங்களுடைய அடக்கப்பட்ட மனம், தொலைந்து போகிறது. இதுதான் உணர்வுமயமான சுத்தப்படுத்துதல் என்பதாகும். ஆகவே, எந்த சூழ்நிலையும் சாராமல், நீங்கள் அவற்றை வெளியேற்ற வேண்டும். சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு, நீங்கள் அவற்றை வெளியேற்றினால், அந்த அடக்குதலை முழுமையாக வெளியேற்ற முடியாது; அந்த அளவுக்கு உங்களுடைய மனம் அடக்கப்பட்டு இருக்கிறது.

இரண்டாவது, நீங்கள் இந்த வெளியேற்றுதலை அனுமதித்தால், நீங்களாக செயல் செய்வதை நிறுத்தி விடுவீர்கள். ஏனென்றால், செயல் என்பது அடக்குதலோடு மிகவும் சம்பந்தப்பட்டது. உங்களுடைய சூழ்நிலையும், உங்களுடைய தேவைகளும் ஒத்துப்போவது இல்லை. உங்களுடைய தேவைகளுக்கு ஏற்ப சூழ்நிலை அமைவது இல்லை. அதைப் போல சூழ்நிலை உங்களுக்குச் சாதகமாக இருக்கும் பொழுது, உங்களுடைய தேவைகள் ஏற்கெனவே முடிந்து போய் விட்டிருக்கும். நீங்கள் பொய்யாக செயல்படக்கூடிய வகையில் தள்ளப்படுகிறீர்கள்.

தியானத்தில், இந்த வெளியேற்றுதல் இடம் பெற்றால், உங்களுக்குள்ளே ஒரு புதிய வாழ்வு பரிணமிப்பதை உணருவீர்கள். நீங்கள் மீண்டும் செயல்புரிய வேண்டிய அவசியம் இல்லை. இப்பொழுது நீங்கள் காரணம் ஏதும் இல்லாமல் தைரியமாக சிரிக்கவோ, அழவோ முடியும்; எந்த சூழ்நிலையிலும், அடுத்தவர் யாரும் இல்லாத நிலையிலும், நீங்கள் செயல் புரிய முடியும். அடுத்து உங்களிடம் வித்தியாசமான தைரியம் ஏற்படும். அதாவது, எந்த செயலும் செய்யாமல் இருக்கக் கூடிய தைரியம் உங்களிடம் ஏற்படும். இப்படி செயலற்று இருப்பது என்பது உங்களுடைய மிகுந்த தைரியத்தை சுட்டிக்காட்டுகிறது. அப்பொழுது உங்களுடைய தனித்தன்மை உண்மையானதாகிறது. இந்த உண்மையான தன்மை, வெளியேற்றுதலுக்குப் பிறகுதான், உங்களை உணர்வுமயமாக சுத்தப்படுத்திக் கொள்ளுவது மூலமாகத்தான், உங்களை வந்து அடையும்.

உண்மையான ஆசனங்கள் மற்றும், முத்திரைகள் அனைத்தும் ஒருவகை வெளியேற்றுதல் தான், வெளிப்பாடுதான், ததும்பி வழிதல் தான். அது எந்த அளவுக்கு ததும்பி வெளியேறுகிறதோ, அந்த அளவுக்கு நீங்கள் எடையற்று இருக்க ஆரம்பிப்பீர்கள். ஒருநாள், நீங்கள் முற்றிலும் எடையற்று இருப்பதை உணர்வீர்கள். இந்தப் புவி ஈர்ப்பு சக்தி உங்களை ஒன்றும் செய்யாத நிலை ஒரு கட்டத்தில் ஏற்படும்; நீங்கள் எடையற்று

இருப்பீர்கள்! அந்த எடையற்ற நிலையில்தான், நீங்கள் அந்த தனிமையில், தனியாகச் செல்ல முடியும்.

நீங்கள் ஆசனங்களைப் பயிற்சியாகச் செய்தால், அங்கு உணர்வுப்பூர்வமான வெளியேற்றுதல் இருக்காது; அடக்குதல் தான் இருக்கும். இதுதான் இரண்டுக்கும் உள்ள அடிப்படை யான வேறுபாடு. நீங்கள் ஆசனங்களைப் பயிற்சியாகச் செய்தால், அது அடக்குதலுக்கே வழிவகுக்கும். ஆனால், அவை தானே நிகழ்ந்தால், அது இயல்பான வெளிப்படுதலாகவும், வெளியேற்றுதலுமாகவும் இருக்கும்.

நீங்கள் ஆசனங்களைப் பயிற்சி செய்தால், அது உங்களுடைய முழுமையான அடக்குதலின் அங்கமாக அமைந்துவிடும். உங்களுடைய மனம் தயார் நிலையில் இல்லாத பொழுது, நீங்களாக ஆசனத்தைத் திணித்தால், நீங்கள் உங்கள் உடலை ஒரு குறிப்பிட்ட நிலையில் இருக்கக் கட்டாயப் படுத்துகிறீர்கள். உங்களுடைய விருப்பத்துக்கு ஏற்ப, அது செயல் புரிய வேண்டியுள்ளது. உங்களுடைய தர்க்க முடிவுப்படி, இந்த மாதிரியான உடற்பயிற்சியை நீங்கள் மேற்கொண்டால், உங்களிடம் இரண்டுபட்ட குணாதிசய பிளவுகள் (Spilt Personality) ஏற்பட்டு விடுகின்றன. பிறகு, நீங்கள் இரண்டு விதமாக ஆகிறீர்கள். அதாவது அடக்கப்பட்ட ஆளாகவும் மற்றும் அடக்கிக்கொண்டு இருக்கும் ஆளாகவும் மாறி விடுகிறீர்கள்.

என்னைப் பொறுத்தவரையில், யோகா என்பது இரண்டாகப் பிளவுபடுவதில்லை; ஒன்றாக இருப்பதுதான். அது ஒரு ஒருங்கிணைப்பு, பிளவு அல்ல. நான் ஆசனாவை, யோகாசனா என்று எப்பொழுது கூறுவேன் என்றால், அது தானே நிகழுதலாக வரும் பொழுதுதான். அதை நீங்கள் உங்களிடம் திணித்துக் கொண்டால், அதை ஒரு போதும் யோகாவில் சேர்க்க முடியாது. யோகா பயிற்சி என்பது வெறும் உடற்பயிற்சிதானே தவிர, யோகா அல்ல. ஆகவேதான் நான் யோகா என்ற வார்த்தையை உபயோகிப்பது இல்லை. ஆனால், 'ஆசனா' என்ற வார்த்தையை உபயோகித்து வருகிறேன்.

யோகாசானம் என்பது, உங்களிடம் தானே நிகழும் ஆசனாதான். அது உங்களிடம் இயல்பாக வந்து, செயல்படுகிறது. இல்லாவிட்டால், அது உங்களிடம் திணிக்கப்பட்ட ஒரு ஒழுங்குமுறைதானே தவிர, வேறல்ல. அது, உங்கள் உடலை ஆரோக்கியமாக வைக்க உதவலாம். ஆனால், அது ஒரு போதும் ஆத்மிகமானதாகாது. அது ஒரு போதும் உங்களை ஒருங்கிணைப்பில் நிலை நிறுத்தாது. இப்படி அடைந்த உங்கள் உடல் ஆரோக்கியத்துக்கு, நீங்கள் கொடுக்கும் விலை மிகவும் அதிகம். அதன் விலை, நீங்கள் மனரீதியாக இரண்டாகப் பிளவுபடுதல்தான். இந்த ஆசனங்களைப் பயிற்சி செய்து அவர்கள் அடையும் முழு அனுபவம் எல்லாம் மெல்ல, மெல்ல குறைவான ஆத்மிகத்தையும் மேலும் மேலும் மென்மையான உடல் ஆரோக்கியத்தையும் பெறுவதாகத்தான் இருக்கும்.

ஆனால், இது ஒரு வித்தியாசமான இயற்கை நிகழ்வுதான். இந்த ஆசனங்களெல்லாம், தியானத்தோடு கலந்தது போலத் தான் தோன்றும். அப்படித்தான் இருக்கவேண்டும்- இருந்தாலும், இந்த உலகம் முழுவதும், ஆசனாவைப் பற்றி பேசுகிற அளவுக்கு, தியானம் மற்றும் தியான் அனுபவங்களைப் பற்றிப் பேசுவதில்லை. இப்பொழுது எல்லாமே தலைகீழாக மாறிவிட்டது. அவர்கள் ஆசனங்களை, தியானத்தோடு கலந்து கற்பித்து வருகிறார்கள். அதாவது தியானம் என்பது வேறுவிதமான ஆசனா என்ற முறையில்; ஆனால், தியானம், ஒருபோதும் ஆசனாவாக முடியாது. தியானம் என்பது அடிப்படை மற்றும் அடித்தளம். அதுதான் எல்லாவற்றிற்கும் ஆரம்ப விதை. எல்லாமே தியானத்தையே ஆதாரமாகக் கொண்டு செயல்பட வேண்டும். ஏனென்றால், தியானம் தான் ஆரம்பம்; மற்றவை எல்லாம் அதைப் பின் தொடர்ந்து தான் வரவேண்டும்.

"டைனமிக் தியானம் செய்த பிறகு, காலம் செல்லச் செல்ல என்னால் தியானத்தில் ஆழ்ந்து செல்ல முடியுமா?"

காலம் செல்லச் செல்ல, நீங்கள் மேலும் அதிக ஆழமாகச் செல்ல ஆரம்பிப்பீர்கள். ஒருவன் கிணற்றை வெட்டி மேலும், மேலும் கீழே ஆழமாகச் செல்லுவது போல, உங்களாலும் ஆழமாகச் செல்ல முடியும். அவன் அதே முயற்சியுடன், அதே வேகத்தோடு, அதே முறையில் மெல்ல மெல்ல ஆழமாகச் செல்லுவது போல, நீங்களும் அப்படி ஆழமாகத் தியானத்தில் செல்ல முடியும். கொஞ்சம் கொஞ்சமாக, மண் நீக்கப்பட்டு, கிணறு மெல்ல மெல்ல ஆழமாகச் சென்று கொண்டே இருக்கிறது– தண்ணீர் மேலே பொங்கி வரும் வரை.

சாசுவதமான நீர் அங்கே இருக்கிறது– நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம், பூமியின் அடுக்குகளை முழுமையாக அகற்ற வேண்டியது தான். நீங்கள், அந்தக் கிணறு வெட்டு பவனைப் போல அதே முயற்சியில், அதே வேகத்தில், அதே முயற்சியுடன் தோண்டிக் கொண்டே செல்லுங்கள். அப் பொழுது ஏற்படும் எந்த மாறுதல்களைக் கண்டும் கவலைப்பட வேண்டாம். அந்த பூமியின் அடுக்குகள் ஒன்று போலத்தான் இருக்கும். அவற்றை முழுமையாக அகற்றுங்கள். ஆழ்ந்த பிரக்ஞையற்ற நீர், மிக ஆழமான நிலையில் உங்களுக்காக உங்களுக்குள்ளே காத்துக் கொண்டு இருக்கிறது. உங்களுக்கும், உங்களுடைய பிரக்ஞையற்ற மனத்துக்கும், இடையில் பல அடுக்குகளாக பூமி இருக்கிறது– அந்த அடுக்குகள் என்பது பிரக்ஞையற்ற தன்மையின் பாதுகாப்பின்மைக்கும் மற்றும் அதன் தாக்குதல்களும் எதிராக உள்ள அடக்கப்பட்ட அதிர்வுகள் மற்றும் அடக்கப்பட்ட எண்ணங்கள் தான். நீங்கள் தான் அந்தத் தடுப்பை உண்டாக்கிக் கொண்டீர்கள். ஆகவே, நீங்கள்தான் ஆழமாக அதில் தோண்டிக் கொண்டே செல்ல வேண்டும்.

அப்படிச் செல்லும் பொழுது, நீங்கள் மேலும் மேலும் கீழே ஆழமாக செல்லுவதை உணர மாட்டீர்கள்; எப்பொழுது அதை உணருவீர்கள் என்றால், நீங்கள் அந்த நீரை அடையும் பொழுதுதான்; உங்களுக்குள்ளே உங்களுடைய ஆதார சக்தி வெடித்து மேலே கிளம்பும் பொழுதுதான். இல்லாவிட்டால்,

நீங்கள் உலர்ந்த பூமியைத்தான் தோண்டிக் கொண்டே இருப்பீர்கள். இப்பொழுது நீங்கள் கண்ட பூமி, அதே பூமி அல்ல. நீங்கள் தோண்டி எடுத்து, தூக்கி எறிந்த அந்த மண் இப்பொழுது அங்கு இல்லை. ஆனால், நீங்கள் தோண்ட வேண்டியது, இன்னும் இருக்கிறது.

உங்களையும் மற்றும் உங்கள் தியானத்தையும் தான், இந்தத் தோண்டுதல் குறிப்பிடுகிறது. அது அந்த சக்தி வெடித்தலை மட்டும் குறிப்பிடுவது இல்லை. அந்த வெடித்தல், உங்களுடைய முயற்சியின் உச்சமாக நிகழுகிறது; அது ஒரே ஒரு நேரத்தில் நிகழ்ந்துவிடும். அது உங்களுக்குள்ளே வெடிக்கிறது; நீங்கள் அதனோடு வெடிக்கிறீர்கள். அது காலத்திற்கு அப்பால் நிகழுதல் ஆகும்.

ஆகவே, முதலில் தோண்டிக் கொண்டே செல்லுங்கள். ஆனால், இந்த வேலை அலுப்பையும், சோர்வையும்தான் ஏற்படுத்தும். ஆனால், உங்களுடைய ஒவ்வொரு அடியிலும், நீங்கள் ஏதோ ஒன்றை அடையக் கூடியதாக இருப்பதால், அது ஒரு போதும் அலுப்பைக் கொடுக்காது- நீங்கள் அதன் பலனை நிச்சயமாக அடையப் போகிறீர்கள்; நீங்கள் அதை அடைவதற்காக, மேலும் மேலும் செல்வதற்கான அவா உங்களை மேலும் மேலும் தூண்டிக் கொண்டே தான் இருக்கும். ஆனால், தியானத்தில் ஒரு கட்டம் வரும் வரை, எல்லாமே அலுப்பாகவும், சோர்வாகவும் இருக்கத்தான் செய்யும். அது ஒன்றுபோல இல்லாவிட்டாலும், பொதுவாக ஒன்றுபோலத் தான் காணப்படும். ஒவ்வொரு கணமும், நீங்கள் மேலும் மேலும் ஆழமாகச் சென்று கொண்டே இருக்கிறீர்கள். ஒரு கட்டத்தில், அது வெடித்து மேலே கிளம்பாத வரை, நீங்கள் எவ்வளவு ஆழம், கீழே சென்றிருக்கிறீர்கள் என்பதை உங்களால் தீர்மானிக்க முடியாது.

அது நிகழும் பொழுது, அந்தக் கணத்துக்குள்ளேயே உங்களுடைய முயற்சி முழுமையானதை, நீங்கள் அறிந்து கொள்ளுவீர்கள். அதுவரை, நீங்கள் இருட்டிலேதான் தடவிக்

கொண்டு இருப்பீர்கள்- நம்பிக்கையின் மேல் நம்பிக்கை வைத்து, எதுவுமே கைகூடாத நிலையில். பிறகு திடீரென்று, அது உங்களை வந்து அடையும். தியானத்தைப் பொறுத்தவரையில், அது மெல்ல மெல்ல அடையக் கூடியது அல்ல. உங்களுடைய முயற்சி வேண்டுமானால் மெல்ல மெல்ல இருக்கலாம். அது ஒன்று நிகழவேண்டும் அல்லது நிகழாமல் இருக்க வேண்டும்.

ஆகவே, நீங்கள் அதனோடு பொறுமையாகக் காத்துக் கொண்டு இருக்க வேண்டும். மேலும் இயற்கையாகவே ஒவ்வொருவருக்கும் அது ஒவ்வொரு நேரத்தில் நடக்கும். உங்களுக்கும், உங்கள் ஆழத்துக்கும் இடையில் எவ்வளவு மண் அடர்த்தியாக சேர்ந்திருக்கிறது என்பது எவருக்கும் தெரியாது. அது மெல்லியதாக ஒரே அடுக்காகக் கூட இருக்கலாம். அப்பொழுது சிறிது முயற்சியிலேயே, அந்த மண்ணைத் தோண்டி மேலே தூக்கிப் போட்டுவிடலாம்; அல்லது பல பிறவியாக பல அடுக்குகளாக அடர்த்தியாக சேர்த்தும் வைத்திருக்கலாம். ஆகவே, அது ஒவ்வொரு தனி மனிதனைப் பொறுத்து அமைகிறது.

ஆனால், ஒரு விஷயம் முக்கியமானது. அதுதான் பொறுமை- அதாவது பயனை எதிர்பார்க்காத பொறுமை மற்றும் சலிப்பில்லாத முயற்சி. பொதுவாக, பயனை எதிர்பார்க்காத வேலை என்பது பொறுமையைத்தான் குறிக்கும். நீங்கள் பலனுக்காக வேலை செய்தால், அதையே இலக்காக வைத்திருந்தால், அந்த இலக்கு தொலைந்துதான் போகும். பொறுமை இன்மைதான், இலக்குக்காக ஏங்கும். நீங்கள் பொறுமையாக தியானப் பயிற்சியை மேற்கொண்டு வந்தால், அதுவே அந்த மாற்றத்தை ஏற்படுத்தும். தியானத் தன்மையை நீங்கள் அடைய முடியாவிட்டாலும், நீங்கள் மாற்றம் அடைவீர்கள். ஏனென்றால், பொறுமையாக இருத்தலும், பயன் கருதாது முயற்சி செய்தலும் சாதாரண விஷயமல்ல; அதற்கு மன வலிமையும் மற்றும் தாங்கிக் கொள்ளக் கூடிய மிகுந்த சக்தியும் தேவை. அந்த மன வலிமை கூடிக்கொண்டே போகும்.

ஏனென்றால், உங்களுக்கும் உங்களுடைய மிக ஆழ்ந்த நிலைக்கும் இடையில் உள்ள அடக்கப்பட்ட பல அடர்த்தியான அடுக்குகளையெல்லாம் அகற்றப்பட்டு, அந்த முடிவான வெடித்தல் நிகழுவதற்கு, காலம் தேவை. நீங்கள் உங்களுடைய முழுமையான பொறுமையில் உங்களுடைய தீர்மானத்தில் வலுவாக இருந்தாலொழிய, அந்த வெடித்து நிகழுதலின் அதிர்ச்சியை உங்களால் தாங்க முடியாது. அந்த பேரானந்த வெடித்தலுக்கு, அதைத் தாங்கிக் கொள்ளக் கூடிய ஆழமான வலிமை தேவைப்படுகின்றது; அதற்கு மிக வலுவான உள் உறுதி தேவையாக இருக்கிறது.

ஆமாம். அதற்கு மிகுந்த வலுவான உறுதிப்பாடு தேவையாகத்தான் இருக்கிறது. உங்களுக்கும், உங்கள் உள் ஆழத்துக்கும் இடையில் மண் மெல்லிய அடுக்கில் இருந்தாலும், உங்களுடைய உறுதிப்பாடு வலுவடைய, போதுமான காலம் தேவையாகவே இருக்கிறது. பயனைக் கருதாமல் ஒருவன் இதில் வாழ முனைந்தால், சிறந்த பயனை அடையக்கூடிய சாத்தியம் மேலும் மேலும் கூடும். இல்லாவிட்டால், அந்த சிறந்த பயனை அடையக்கூடிய தகுதி இல்லாமல் போய்விடும். நீங்கள் எதிர்ப்பார்க்காத பொழுது, அது உங்களை வந்து அடைந்தால், அதனுடைய தாக்குதல் பொறுக்க முடியாததாகிவிடும். நீங்கள் சமநிலையை இழந்து, பைத்தியமாகக் கூட ஆகிவிடலாம். அது ஒரு மிகச்சிறந்த நிகழ்தல் மற்றும் பிரபஞ்ச நிகழுதலாகும். அது, கடல் ஒரு துளிக்குள் பாய்வது போல! அதற்கு ஏற்ப நீங்கள் உங்களைத் தயார் படுத்திக் கொள்ள வேண்டும். அது, நீங்கள் பொறுமையாகவும், முடிவில்லாது வேலை செய்வதன் மூலமாகவே கிடைக்கும்.

ஆகவே, பயனைக் கேட்காதீர்கள்; பொறுமையாக காத்திருங்கள். ‘சாதனை’ என்பதன் அர்த்தம் இதுதான். அது, ஒன்றின் மேல் நம்பிக்கை வைப்பது அல்ல; அது உங்களுக்குள்ளே நம்பிக்கையாக இருப்பதுதான். அது ஒன்றின் மேல் உண்மையாக இருப்பது அல்ல; அது, உங்களுக்குள் மன

உண்மையாக இருப்பதுதான். காலம் செல்லச் செல்ல, நீங்கள் ஆழமாகச் சென்று கொண்டே இருப்பீர்கள். அது காலம் கடந்து செல்லுதல் அல்ல; அது, நீங்கள் பொறுமையாக இருப்பதனால் தான்- அது, நீங்கள் பயனை எதிர்பார்க்காது, காலத்தால் கட்டுப்படாமல் இருப்பதினால் தான். நீங்கள் எதையும் அடையாமல், வெறுமனே சென்று கொண்டு இருப்பதால் மற்றும் உங்களுடைய தளராத முயற்சியால், நீங்கள் ஆழமாகச் சென்று கொண்டே இருக்கிறீர்கள். இவைதான் உங்களிடம் ஒரு உறுதிப்பாட்டை ஏற்படுத்துகிறது; இவைதான், அந்த மாபெரும் வெடித்தலைத் தாங்கக் கூடிய சக்தியை ஏற்படுத்துகிறது. நீங்கள் அந்த பிரபஞ்சத்தோடு இணைந்து செல்ல, ஒரு குறிப்பிட்ட முதிர்ச்சி தேவையாக இருக்கிறது- எப்படி கர்ப்பம் தரிக்க, ஒரு முதிர்ச்சி தேவைப்படுகிறதோ, அதைப் போல. இந்த பிரபஞ்ச நிகழுதலில், அந்த பிரபஞ்சமே உங்களை நோக்கி வருகிறது. அதுவே உங்களுடைய மறுபிறப்பாகிறது.

இந்தியாவில் பிராமணர்களும், க்ஷத்திரியர்களும் மற்றும் வைசியர்களும் இரண்டு தடவை பிறக்கிறார்கள் என்றும், சூத்திரர்கள் ஒரு தடவை தான் பிறக்கிறார்கள் என்றும் கூறுகிறார்கள். ஆனால், நான் கூறுகிறேன்: யார் ஒருவன், ஒரு பிறவி மட்டும் எடுக்கிறானோ அவன் சூத்திரன்; யார் ஒருவன் மீண்டும் இரண்டாவது பிறவி எடுக்கவில்லையோ, அவனும் சூத்திரன் தான் என்று. ஆகவே, நாமெல்லோரும் சூத்திரர்கள்தான், தீண்டத் தகாதவர்கள் தான். ஏனென்றால், அந்த தெய்விகம் உங்களைத் தொடவில்லை. ஆனால், நீங்கள் பொறுமையாகவும், உண்மையாகவும் இருந்தால், அந்த மறுபிறவி தானே நிகழும். ஆகவே, அதற்காகக் காத்திருங்கள், அதற்காகப் பிரார்த்தனை செய்யுங்கள்; அதற்காக நம்பிக்கை வையுங்கள். ஆனால் அவசரப் படாதீர்கள்.

"அந்த வெடித்தல் (Explosion) நிகழுவதற்கு முன்பு, மனரீதியாக பல நிலைகளைக் கடக்க வேண்டியது அவசியமாகிறதா?"

ல்லை. பல மனநிலைகளைக் கடக்க வேண்டிய அவசியம் இல்லை. அதற்காக, நீங்கள் அவற்றைக் கடந்து செல்லவில்லை என்று அர்த்தமாகாது. நீங்கள் அவற்றைக் கடந்து செல்லும் பொழுது, அவற்றைக் கவனிக்க முடியாத அளவுக்கு, அந்த வேகத்தில் செல்லுகிறீர்கள்; அல்லது, அந்த மன உலகத்துக்குள் ஒவ்வொரு அடியையும் கவனித்து வைக்கும் அளவுக்கு நீங்கள் மெல்ல மெல்லவும் செல்லலாம். ஆனால், அவற்றைக் கடந்துதான் செல்ல வேண்டும். ஏனெனில், அவை உங்களுக்கும், உங்கள் உள்மைய ஆழத்திற்கும் இடையில் இருக்கிறது— அதாவது நீங்கள் இப்பொழுது இருக்கும் நிலைக்கும், இனிமேல் இருக்கப் போகும் நிலைக்கும் இடையில். ஆனால், அவற்றை அனுபவப்பூர்வமாக உணராத வகையில் 'ஜெட்' வேகத்தில் அதனுள் செல்லுவீர்கள்; அல்லது மாட்டுவண்டியைப் போல, மெல்ல மெல்ல கூட செல்லலாம். நீங்கள் அதன் பரப்பளவைக் கண்டுகளிக்க விரும்பினால், மாட்டு வண்டியில் பிரயாணம் செய்யலாம்.

மாட்டு வண்டி பிரயாண முறையும் மற்றும் ஜெட் பிரயாண முறையும் இருக்கின்றன. நான் கூறும் டைன்மிக் தியானம், ஜெட் பிரயாணம் போன்றது. இதன்மூலம், நீங்கள் அந்த பல மன அடுக்கு நிலைகளை உணராதவகையில், அவ்வளவு வேகமாகச் செல்லுகிறீர்கள்.

ஆனால், நீங்கள் சித்துகளில் (Psychic Powers) ஆர்வம் காட்டினால், -அது உங்களுடைய பிரக்ஞையற்ற நிலையில் இருந்தாலும்- இந்த ஜெட் பிரயாண முறையை மேற்கொண்டாலும், நீங்கள் சாதாரண மாட்டு வண்டியில் பிராயணம் செய்வதாகவே உணருவீர்கள். ஆகவே, ஆத்மிக சக்தியில் அல்லது சித்துகளில், மிக ஆர்வமுடையவர்களாக நீங்கள்

இருந்தால், அப்பொழுது மன அடுக்குகளை மெல்ல கடந்து செல்லும் பொழுது, நீங்கள் அதனால் சிறைப்படுத்தப் படுவீர்கள்.

நீங்களே உணர்ந்து கொள்ள முடியாத அளவுக்கு, அந்த மிக ஆழமான ஆசை உங்களிடம் இருந்துகொண்டேதான் இருக்கிறது. பொதுவாக, நம்முடைய மனம் அடிப்படையில் சக்தியை தேடுதலிலேயே இருக்கிறது. அந்த சக்தி வெளி உலகத்தைச் சார்ந்ததாக இருந்தாலும் சரி அல்லது உள் உலகத்தைச் சார்ந்ததாக இருந்தாலும் சரி. அது எப்பொழுதும் அதைத் தேடுவதிலேயே குறியாக இருக்கிறது. ஆனால், அது இந்த சக்திகளைத் தேடாத அளவுக்கு, ஒருவன் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மன அடுக்குகள் இருப்பது உண்மைதான். ஆனால், சக்திகளில் அல்லது சித்துகளில் நாட்டம் கொண்டால், நீங்கள் அதில் எங்கேயோ மாட்டிக் கொண்டு விடுவீர்கள்.

உள் உலகத்தைப் போல, வெளி உலகம் அவ்வளவு சக்தியை உங்களுக்குக் கொடுக்காது- உள்ளே உள்ள சக்தி மிகவும் மகத்தானது. உண்மையில், ஒரு மனித உடலில் உள்ள அணு சக்தியானது வெடித்துச் சிதறினால், இந்த உலகத்தையும், அதன் முழு ஜீவராசிகளையும் ஒருங்கே அழிக்கக் கூடிய அளவுக்கு, அவ்வளவு மகத்தானதாக இருக்கிறது.

பௌதிகர்கள் (Physicists), அணு சக்தியைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால், யோகிகள் மனநிலை சக்தியைப் பற்றி (Psychic) பேசுகிறார்கள். இரண்டிலும் சக்தி ஒன்றுதான்- அணுகுமுறையில்தான் வேறுபாடு. பௌதிகர்கள், உடல் அணுவை அணுகுகிறார்கள். யோகிகள் மனநிலை அணுவை அணுகுகிறார்கள். இந்த இரண்டு அணுகு முறைகளும், ஒரே பொருளின் இரண்டு மாறுபட்ட துருவநிலையைக் குறிப்பதாகும்.

யோகா உள்ளேயிருந்து அணுகுகிறது; ஆகவே, யோகிகள் சித்துகளைப் பற்றிப் பேசுகிறார்கள். அவை அங்கே இருக்கின்றன. ஆனால், அதை மாத்திரம் கருத்தில் கொண்டு, நீங்கள் தேடிக் கொண்டு சென்றால், அதனால் நீங்கள்

சிறைப்படுத்தப்படுவீர்கள்; அது மிகவும் வருத்தப்படக்கூடியது மற்றும் இரக்கப்படக்கூடியது. ஏனென்றால், நீங்கள் அந்த சித்து சக்தியை அடையும் பொழுது, நீங்கள் அந்தப் பிரபஞ்ச முழுமையான பேரானந்த நிலைக்கு மிக அருகில் வருகிறீர்கள். அந்த தெய்விக மலருக்கு, மிக அருகில் நீங்கள் நெருங்குகிறீர்கள். ஆனால், அதைத் தொடக் கூடிய உங்கள் கைகளையே நீங்கள் தடுக்கிறீர்கள். ஆகவே, ஒருவன் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

டைனமிக் தியானத்தில், ஒருவன் அந்த அளவுக்கு சித்த சக்தியில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. ஏனென்றால், அது ஒரு மிக வேகமான 'ஜெட்' முறையைச் சேர்ந்தது. அந்த சித்த சக்தியை கவனிக்காத அளவுக்கு, நீங்கள் அவ்வளவு வேகமாக அதைக் கடந்து செல்லுகிறீர்கள். ஆனால், அவற்றைப் பற்றிக் கேட்டும் படித்தும் நம் மனத்தில் பலவற்றை சேர்த்தும் வைத்திருப்பதால், அந்த சக்திகளைப் பற்றி மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியது அவசியமாகிறது. அவை அங்கே இருப்பது உண்மைதான். ஆனால், அதைப் பொறுத்து, அவற்றிடம் எந்த முக்கியத்துவமும் இல்லை.

சாதாரணமாக, சக்தியைத் தேடும் மனம், உங்களை சும்மா இருக்கவிடாது. ஏனென்றால், அது அடிப்படையில் மிக மூர்க்கமாகவே இருக்கும். மூர்க்கத்துக்கு, ஆக்ரமிப்புக்கு, சக்தி தேவை. பொதுவாக, நாம் எல்லோருக்கும் மேலாக, சக்தி படைத்து, உயர்ந்த நிலையில், அந்தஸ்தோடு இருக்கவே விரும்புகிறோம். இது அணுசக்தியின் மூலமாகவோ அல்லது மனசக்தி மூலமாகவோ நிகழும்; அதன்மூலம் ஒருவர் அரசியல் தலைவராகலாம். அல்லது ஆத்மிகவாதியாகலாம். ஆனால், ஒரு ஆக்ரமிக்கும் குணம் படைத்த மனம் ஒருக்காலும் ஆத்மிகமாக மாற முடியாது- அதனுடைய கீழான நிலையில் அது பொருள்களின் அடிப்படையில் வெளிப்படுகிறது; அதனுடைய மேலான நிலையில், அது மனசக்தியாக வெளிப்படுகிறது. ஆனால், ஒருவன் தெய்விகத்தையும், பேரானந்தத்தையும் மற்றும் உண்மையையும் தேடினால், இந்த சக்திகளில் விருப்பம்

கொள்ளலாகாது. அப்பொழுது அவன் இந்த சக்திகளை ஒதுக்க வேண்டும். மற்றும் பொறுமையாக காத்திருக்க வேண்டும். இயேசு, "பொறுமைசாலிகளே ஆசீர்வதிக்கப் பட்டவர்கள், இவர்களே இந்த மண்ணுக்கு உரியவர்கள்" என்று சொல்லுகிறார்.

ஆனால், நீங்கள் இந்த மண்ணுக்கு உரியவர்களாக விரும்பினால், நீங்கள் வலிமையற்றவர்களாக இருக்கக் கூடாது. அதுதான் உங்களுடைய விருப்பமாக இருந்தால், நீங்கள் வலிமையற்றவனாக இருக்கக் கூடாது. கோழை என்பவன் பணிவானவன்தான். அவன் அதிகாரத்தை விரும்ப மாட்டான். அவன் அந்த எல்லையிலிருந்து முழுமையாக ஒதுங்கி விடுவான். அந்த வகையில், அவன் ஏழைதான். அவன் யாருமே இல்லை. (No One). யாருமே இல்லை என்ற நிலையில்தான், ஒருவன் எல்லாவற்றிற்கும் உரியவனாகிறான். யாருமற்ற நிலையில் தான், ஒருவன் எல்லாவற்றிலும் இருக்கிறான்.

அதிகாரத்தைத் தேடக்கூடாது; சக்தியில் விருப்பம் கொள்ளக் கூடாது. அது உங்களிடம் வந்தால், அதைச் சாட்சியாக நின்று கவனித்து மெல்ல அதைக் கடந்து செல்லுங்கள். அதனோடு ஒரு கணம் கூட உறவு வைத்துக் கொள்ளாதீர்கள். ஒரு வினாடி தயக்கம் கூட, அதனோடு நெருங்கி ஒரு வினாடி இருத்தல் கூட, மிகுந்த அபாயத்தை ஏற்படுத்தி விடும். அது உங்களை ஊழலாக்கி விடும். அதிகாரம் ஊழலுக்கு வழிவகுப்பது என்பது அதனுடைய அமைப்பினால் அல்ல; நீங்கள் அதன் பின்னே ஓடுவதால் தான் அந்த நிலை ஏற்படுகிறது. ஒரு பழமொழி: "முழுமையான அதிகாரம், முழுமையான ஊழலாகும்." உள் சக்தியைப் போல, வெளிச்சக்தி அவ்வளவு ஊழல் செய்யாது. உள் சக்தி அதிக முழுமையில் இயங்குகிறது; அதிக சுதந்திரத்தில் இயங்குகிறது. ஆகவே, அது உங்களுடைய அகங்காரத்தை அதிகரிக்க வலுவாக்க மிகவும் உதவி செய்கிறது.

வெளி சக்தி அல்லது அதிகாரம் எப்பொழுதும் பிறரையே சார்ந்து இருக்கிறது. நீங்கள் அதில் முழுமையில் இல்லை. நீங்கள் ஒரு முழு அதிகாரமிக்கவராக இல்லை. நீங்கள் எப்பொழுதும்

அடுத்தவரைச் சார்ந்தே இருக்கிறீர்கள். எங்கேயோ உள்ள ஒருவர் உங்களுடைய வீழ்ச்சிக்குக் காரணமாகி விடுவார். ஹிட்லர் அடைந்த அதிகாரம் முழுமையாக வெளித்தன்மையைச் சார்ந்தே இருந்தது. இப்படிப்பட்டவர் ஒரு மிக உயர்ந்த பிரமிட்டின் உச்சியில் நின்று கொண்டு கொக்கரிக்கலாம். ஆனால் அவர்கள் அந்த பிரமிட்டையே சார்ந்து நிற்கிறார்கள். ஆகவே, அவர்கள் ஒருவித நடுக்கத்துடனே இருக்கிறார்கள். அதில் உள்ள ஒரு சிறு கல் உடைந்தால் போதும்... அவர்கள் அந்த பிரமிட்டிலிருந்து தூக்கி எறியப்பட்டு, தலைகீழாக கீழே விழுந்து விடுவார்கள்.

பிறரைச் சார்ந்து இல்லாத காரணத்தால், உள் மனசக்தி முழுமையானதாகிறது. நீங்களே அதற்கு முழு குருநாதராகிறீர்கள். ஆகவே, அது அதிக ஆணவம் உள்ளதாகிறது. வெளி சக்தி, ஒருவனை ஊழல்படுத்துகிறது. உள்சக்தி அவனை அதிக அளவில் ஊழலாக்குகிறது. ஆனால், அந்த சக்தி என்பது ஊழலற்றது. ஏனென்றால், தெய்விகம் மற்றும் ஆத்மிகம் என்பதும் சக்திதான். ஆனால், அதைத் தேடுதலும், அகங்காரத்தில் ஆவல் கொள்ளுதலும் தான் ஊழலுக்கு வித்திட்டு விடுகிறது. நாம் ஊழலில், அகங்காரத்தில் விருப்பம் உடையவராக இருந்து அதற்கு ஏற்ப அதிகாரமும் கிடைத்துவிட்டால், நம்முடைய ஊழல் வெளிப்படையாகிறது. அதற்கு முன்பு, அது மறைந்தே இருக்கிறது. ஊழலுக்கு அதிகாரம் அவசியம்.

ஆகவே, உள் மனசக்தி அல்லது ஆத்மிக சக்தியைப் பொருத்தவரையில், ஒருவன் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அது அங்கே இருக்கிறது. ஆனால், நீங்கள் அதைக் கவனிக்க வேண்டாம். அதை அலட்சியப்படுத்தி கடந்து செல்லுங்கள்; அதற்கு வெறும் சாட்சியாக இருங்கள். அவை உங்களோடு இருக்கும்; உங்களிடம் வேலை செய்து கொண்டு இருக்கும். ஆனால், அவை உங்களுடைய நிழல் போலவே இருக்கும்– அவை வெறுமனே உங்களைப் பின்தொடர்ந்து வரும். பல அற்புதங்கள் உங்களைச் சுற்றி நிகழும்; ஆனால் நீங்கள்

அதில் பிரக்ஞையாக இருக்க மாட்டீர்கள். அதன் மூலமாக, நீங்கள் உங்களுடைய அகங்காரத்தை வலுவாக்கிக் கொள்ள மாட்டீர்கள்.

இந்த டைனமிக் முறையில் நீங்கள் வெகுவேகமாக அந்த மனசக்தி அடுக்குகளைத் தாண்டிச் செல்லுகிறீர்கள். உங்களுக்கும், உங்கள் உண்மை நிலைக்கும் இடையில் உள்ள அனைத்தும் அப்படியேதான் இருக்கும்.

ஆனால், அவை உங்களை நிழல் போலத்தான் பின் தொடர்ந்து வரும். சித்துக்கள் உங்களிடம் இருக்கும்; அற்புதங்கள் நிகழலாம். மாற்றங்கள் நிகழலாம். உங்களுடைய சக்தியை அடுத்தவர் உணரலாம்; ஆனால், உங்களால் உணர முடியாது. உங்களால் எனக்கு இது நிகழ்ந்தது என்று ஒருவர் வந்து உங்களிடம் கூறினால், நீங்கள் அவரைப் பார்த்து, "எல்லாம் அவனால், என்னால் அல்ல; நான் யாராகவும் இல்லை" என்றுதான் கூறுவீர்கள். 'தான் தொட்டதால், மக்கள் குணமடைந்தார்கள்' என்று அவர்கள் சொல்லியதைக் கேட்டு, இயேசு சொன்னார்: "அது என்னால் அல்ல; அவனால். நான் யாருமே இல்லை. நான் அவனுக்கு ஒரு வேலைக்காரன் தான். நான் அவனுடைய கருவிதான்."

ஆகவே, உங்களிடம் ஆத்மிக சக்தி இருக்கும். ஆனால், அது உங்களுடைய அகங்காரத்தை மையமாகக் கொண்டு இயங்காது; அது கடவுளை மையமாகக் கொண்டு இயங்குகிறது; கடவுள் தன்மையாக செயல்படுகிறது. ஆனால், நீங்கள் அதைப்பற்றி நினைக்கக்கூட மாட்டீர்கள். அவை வந்தால், அதை வெறுமனே கடந்து செல்லுங்கள்; அதற்கு வணக்கம் சொல்லுங்கள். அவ்வளவுதான்.



# 4 'எல்.எஸ்.டி' — பொய்யான சமாதிக்கு ஒரு குறுக்கு வழி



"எல்.எஸ்.டி. போதை மருந்தை உட் கொண்டு பரிசோதனை செய்த பொழுது, சமாதி நிலையைப் பற்றி படித்த விளக்கத்தைப் போன்று ஒரு உணர்வு என்னிடம் நிகழ்ந்தது. மற்றும் குண்டலினி மேலே கிளம்புவது போலவும், சக்கராக்கள் திறந்து கொள்ளுவது போலவும் உணர்ந்தேன். இந்த முழு பிரபஞ்சத்தோடு, நான் ஒன்றானது போலவும் உணர்ந்தேன். இவை சமாதியின் உண்மையான அனுபவமா என்ன? எல்.எஸ்.டி.யை உபயோகித்து, நிலையான புரிந்து கொள்ளுதலை அடைய முடியுமா? தியானத்திற்குத் துணை செய்ய இந்த எல்.எஸ்.டி.யை உபயோகப்படுத்துவதால், ஏதும் தீங்கு விளையுமா?"

உங்களுடைய அனுபவங்கள் உண்மையானது அல்ல. அவை சமாதியில் இல்லை; அவை வெறும் ரசாயன மாற்றத்தால் ஏற்பட்டவையே. மனம், எதைப் பார்க்க விரும்புகிறதோ, அதை அப்படியே வெளியில் படர விடும். சமாதிக்கான பிரக்ஞையற்ற (Unconscious) ஆசையைக் கூட. நீங்கள் சமாதியைப் பற்றி அறிந்த அல்லது படித்த அனுபவத்தை, எல்.எஸ்.டி. போன்ற மருந்துகளின் உதவியால் மனம் அதை வெளியில் காட்ட முடியும்.

எல்.எஸ்.டி. மற்றும் இதர போதை மருந்துகள் எல்லாம், மனம் தன் ஆசையை வெகுவாக வெளியில் படர உதவி செய்யும். எல்லா சாதாரண தடங்கல்களும் நீக்கப்படுகின்றன.

பகுத்தறிவு மற்றும் பிரக்ஞை மனம் விலக்கப்படுகிறது. அப்பொழுது நீங்கள் முழுமையாக பிரக்ஞையற்ற மனத்தின் பிடியில் இருக்கிறீர்கள். ஆனால், எல்.எஸ்.டி.யின் உதவியால், பிரக்ஞையற்ற மனம் தானே உங்களை சமாதி நிலைக்கு அழைத்துச் செல்லாது. நீங்கள் உங்களுடைய பிரக்ஞையற்ற மனத்துக்கு, சில சங்கதிகளை சமாதியையொட்டி சொல்லியிருந்தால், அதைப் போன்ற அனுபவம் ஏற்படலாம். அதாவது நிறங்கள், குறிப்பிட்ட அனுபவங்கள் இப்படி... பிரக்ஞையற்ற மனத்தின் முன்கூட்டியே இருக்கும் செய்திகளை மனத்தால் வெளியே படரவிட முடியும். ஆனால், குண்டலினியைப் பற்றியோ அல்லது சமாதியைப் பற்றியோ, உங்களுக்கு முன்கூட்டியே ஏதும் தெரியாத நிலையில், இந்த எல்.எஸ்.டி. மூலமாக உங்களால் அந்த அனுபவத்தைப் பெற முடியாது.

ஒருவன், ஒருவித பயத்தால் பீடிக்கப்பட்டால், அவன் அந்த பயத்தை பலவற்றில் வெளியே படரவிடுவான். ஒருவன், ஏதோ ஒன்றைப் பற்றிய பயத்தை அடக்கினால், அந்த பயம் தானே தன்னிடம் உண்டாவதாக உணருவான். ஆகவே, எல்.எஸ்.டி போன்ற மருந்துகளால் பல வித்தியாசமான அனுபவங்கள் பல வித்தியாசமானவர்களுக்கு ஏற்படலாம். உங்களுடைய பிரக்ஞையற்ற மனத்தில் விதை வடிவமாக உள்ள பல சங்கதிகள் வெளியே வர, இந்த மருந்துகள் உதவி செய்யும். அது அன்பாக இருந்தால், அந்த அன்பு வெளியே படரும்; அது வெறுப்பாக இருந்தால், அந்த வெறுப்பு வெளியே வரும். எல்.எஸ்.டி என்பது மனத்தை விரிவாக்கும் மருந்து- உங்கள் மனத்தின் உள்ளே விதை வடிவத்தில் உள்ளவைகளை மரமாக்கி வெளியே காட்ட அது உதவி செய்யும்.

நீங்கள் குண்டலினியை உணரலாம்; நீங்கள் சக்கராவை உணரலாம். நீங்கள் இந்த பிரபஞ்ச முழுமையோடு ஒன்றாக, ஒரு லயத்தில் ஒத்து இருப்பதாகவும் உணரலாம். இவையெல்லாம் விதை வடிவத்தில் ஏற்கெனவே உங்களுடைய பிரக்ஞையற்ற மனத்தில் இருப்பதாலேயே, அப்படி

உணருகிறீர்கள். அப்படி அவை ஏற்கெனவே அங்கு இல்லாவிட்டால், இந்த எல்.எஸ்.டி.யால் அவற்றை வெளிப்படுத்த ஒருக்காலும் உதவ முடியாது.

இது உண்மையான சமாதி அனுபவம் இல்லை. உங்களுடைய பிரக்ஞையற்ற விருப்பத்தினால், இந்த சமாதி உணர்வை நீங்கள் அடைகிறீர்கள். உடல் ரீதியாக அனுபவப்பட, இந்த எல்.எஸ்.டி. பிரக்ஞையற்ற மனத்துக்கு உதவி செய்கிறது. ஆகவே, நீங்கள் அனுபவப்பட்டது என்னவென்றால், நீங்கள் விரும்பிய ஒன்று, மனத்திரையில் வெளிக்காட்டப்பட்டதுதான். இது ஒன்றும் ஆத்மிக வெளிப்பாடு அல்ல; அது உண்மையான சமாதி அல்ல. அது ஒரு கனவே தவிர வேறல்ல. அது வெறும் கனவுத் தன்மைதான்.

இரவில், நீங்கள் கனவு காண்பது என்பது, உங்களுடைய பிரக்ஞை மனத்தின் தடைகளையெல்லாம் விலகியதினாலேயே ஏற்படுகிறது. உங்கள் மனத்தில் அடக்கப்பட்ட ஆசைகள், விருப்பங்கள் அனைத்தும், உங்கள் கனவில் உருவம் எடுத்துக் கொள்ளுகிறது; உங்களுடைய கற்பனைகள் அங்கே உருவம் பெறுகிறது. ஆனால், நீங்கள் கனவு காணும் பொழுது, அது கனவு தான் என்று உங்களால் அறிந்து கொள்ள முடியாது.

எல்எஸ்டி என்பது ரசாயன முறையில் கனவு காண்பதுதான். அது இயற்கையான வழியல்ல. எல்.எஸ்.டி. மூலமாக, உங்களுக்குத் தெரியாத பலவற்றை, நீங்கள் காண முடியும். அதுவரை புரிந்து கொள்ளாததை உங்களால் புரிந்து கொள்ள முடியும். ஆனால், இந்தப் புரிந்து கொள்ளுதல் அனைத்தும், வெறும் தோற்றம் தான்; உண்மையல்ல. அவை அழகானவை; ஒரு அருமையான கனவைப் போல, அவை கவர்ச்சிகரமானவை.

ஆனால், எல்.எஸ்.டி. அர்த்தமற்ற பயத்தைக் கூட பெரிதுபடுத்திக் காட்டும். அது உங்களைப் பொருத்தது. எல்.எஸ்.டி.யைப் பொருத்தது அல்ல. உங்களுடைய மனம் கொடுமைப்படுத்தப்பட்டால், துண்டு துண்டாக்கப்பட்டால், அனேக தேவையில்லாத கற்பனைகள் உள்ளே

அடக்கப்படுகிறது; பிறகு அவை எல்.எஸ்.டி.யின் உதவியால் வெளியே வருகின்றன. இதன் மூலமாக, பலர் நரகத்தைக் கூட அனுபவித்திருக் கிறார்கள்; மற்றும் பலர் பூதங்களைக் கண்டிருக்கிறார்கள். அது, ஒருவரைப் பொறுத்தே அமைகிறது. வெளியே வரத் தயாராக இருக்கும் அனைத்தையும், வெளியே படர்ந்து விரிய, இந்த போதை மருந்துகள் உதவி செய்கின்றன.

ஆகவே, எல்.எஸ்.டி. மூலமாக ஏற்பட்ட அனுபவத்தை, சமாதி என்று தவறாக எண்ணிக் கொள்ளாதீர்கள். அந்த அனுபவங்களோடு சேர்ந்து இருக்க வேண்டாம்; அப்படி இருந்தால், உங்களுடைய தியானத்திற்கு அதுவே தடங்கலாகி விடும். இந்த எல்.எஸ்.டி. ஏற்படுத்திய கனவுகளால், நீங்கள் பலவற்றை மிக அதிகமாக உணர்ந்திருக்கிறீர்கள்; ஆகவே உண்மையான தியானத்தில், நீங்கள் நுழையும் பொழுது, அந்த உணர்வு முன்னதோடு ஒப்பிடுகையில், மிகவும் சாதாரண மாகவே இருக்கும்; அந்த அளவுக்கு, உண்மையான தியானத்தில், சக்தி வெளிப்பாடு இருக்காது. ஏனென்றால், உண்மையான தியானத்தில் அது அவ்வளவு முக்கியமல்ல. ஆகவே, இது உங்களிடம் ஒரு சோர்வையே ஏற்படுத்தும். ஏனென்றால், உண்மையான தியானத்தில், நீங்கள் எதையோ இழந்திருப்பதை உணர்வீர்கள்- உங்களுக்கு ஏற்கெனவே தெரிந்து, இந்த தியானத்தின் மூலமாக வெளி வராது. பிறகு மனம், "இந்த எல்.எஸ்.டி.யே தேவலாம்," என்றுதான் கூறும். பின்பு, நீங்கள் மேலும், மேலும் எல்.எஸ்.டியை எடுத்துக் கொண்டால், உங்கள் மனம் மெல்ல மெல்ல தியானத் தன்மையிலிருந்து விலகி விடும். பிறகு, தியானம் மற்றும் அதன் அனுபவங்கள் அனைத்தும் மெல்ல மெல்ல குறைந்து சாதாரணமாகிவிடும்.

ஆகவே, மீண்டும் எல்.எஸ்.டியை எடுத்துக் கொள்ளாதீர்கள். அதை, ஒரு பரிசோதனைக்காக எடுத்துக் கொள்ளலாம். ஆனால், அது உங்கள் மனத்தில் ஒரு பாதிப்பை நிச்சயம் உண்டாக்கி விடும். அந்த பாதிப்பு அபாயகரமானது. ஏனென்றால், நீங்கள் எப்பொழுதும் மறுபடி உங்களை உண்மையான தியானத்தோடு ஒத்துப் பார்க்கிறீர்கள். அப்பொழுது உண்மையான தியானம்,

உண்மையற்றதாகக் காணப்படும். ஏனென்றால், பொய்யானது அப்பொழுது உண்மையாகத் தோற்றம் அளிக்கும்.

அப்பொழுதும், இந்த ஒத்துப் பார்த்தல் ஒருக்காலும் சரியாக இருக்காது. ஏனென்றால், நீங்கள் எல்.எஸ்.டி.யின் வசத்தில் இருக்கும்பொழுது, நீங்கள் பார்த்ததை உங்களால் சரியாக ஞாபகப்படுத்திப் பார்க்க முடியாது. ஏனென்றால், நீங்கள் ஞாபகப்படுத்தும் பொழுது, நீங்கள் அதிலிருந்து வெளியே வந்து விடுகிறீர்கள். நீங்கள் விழித்தெழுந்த பிறகு, எப்படி உங்கள் கனவை, உங்களால் சரியாக ஞாபகப்படுத்திப் பார்க்க முடியவில்லையோ, அதைப்போல. இப்பொழுது நீங்கள் அந்தக் கனவை மீண்டும் கற்பனை பண்ணிப் பார்க்கிறீர்கள்- இப் பொழுது நீங்கள் அதில் பலவற்றை நீங்களாகவே சேர்க்கிறீர்கள். அதைப்போல, எல்.எஸ்.டி.யின் வசத்தில் இல்லாதபொழுது, முன்பு இருந்த நிலையை, உங்களால் சரியாக ஞாபகப்படுத்திப் பார்க்க முடியாது. இப்பொழுது ஒரு மெல்லிய பேரானந்த உணர்வு மட்டும்தான் இருக்கும். இப்பொழுது அந்த அனுபவத்தை மீண்டும் உங்களுடைய கற்பனையில் கொண்டு வருகிறீர்கள். ஆனால், இது, நீங்கள் அடைந்த அந்த உண்மையான அனுபவத்தை ஒத்து இருக்காது. அது இயலாத காரியம். நீங்கள் எதையோ பார்த்த மற்றும் அறிந்த உணர்வு உங்களிடம் இப்பொழுது இருக்கிறது. இந்த உணர்வு பொய்தான்.

இரசாயன போதை மருந்துகளை உபயோகிப்பதால், ஒருவிதமான பேரானந்தம் வெளிப்படும். இந்த மருந்துகளால், நீங்கள் முழுமையாக ஓய்வு நிலையை அடைகிறீர்கள். அந்த சமயம் உங்களுடைய இறுக்க நிலை தளர்கிறது. அதனால், அங்கே அந்த இறுக்க நிலை இப்பொழுது இல்லை என்று அர்த்தமாகாது. அவை மீண்டும் உங்களிடம் வரக் காத்துக் கொண்டு இருக்கின்றன. இப்பொழுது, அவை உங்கள் பார்வையில் இல்லை. அவ்வளவுதான். ஆகவே இப்பொழுது நீங்கள் முழுமையான ஓய்வில் இருக்கிறீர்கள். நீங்கள் இந்த எல்.எஸ்.டியை பழக்கப்படுத்திய பிறகு, முழுமையான இறுக்கமற்ற நிலையை அடைந்ததினால் ஏற்பட்ட அந்த

பேரானந்த உணர்வை, தொடர்ந்து இருக்க வேண்டும் என்று நீங்கள் விருப்பப்படுவீர்கள்; அது ஒரு பின் விளைவு போலவே தொடர்ந்து வரும். இந்த மாய பேரானந்த நிலையில், நீங்கள் பார்த்ததையும், கேட்டதையும் மீண்டும் கற்பனையால் காணுகிறீர்கள். ஆனால், இப்பொழுது, அதில் 90 சதம் கற்பனைதான் இருக்கும்.

உங்களுடைய ஞாபகத்துக்கும், அனுபவத்துக்கும் உள்ள தூரம் எவ்வளவு அதிகமாக இருக்கிறதோ, அவ்வளவு அதிகமான அழகோடும், ஆனந்தத்தோடும் அது உங்களுக்குத் தோன்றும். பிறகு அது உங்களுடைய அற்புதமான ஞாபகமாகி விடும். இப்பொழுது, நீங்கள் ஒவ்வொரு தடவை தியானம் செய்யும்போதும், அந்தக் கற்பனையோடு ஒப்பிடுகையில், அது தெளிவில்லாமல் காணப்படும். ஏனெனில், இப்பொழுது நீங்கள் செய்யும் தியானம் உண்மையானது. கற்பனையான கனவல்ல. அதனுடைய முன்னேற்றம் படிப்படியாகத்தான் இருக்கும்; திடீரென்று நிகழ்வது இல்லை. அது ஒரு போதும் உங்களை ஆக்ரமிக்காது. இந்த இரண்டையும், நீங்கள் ஒப்பிட்டுப் பார்த்தால், தியானத்தின் முன்னேற்றம் ஒன்றுமற்றது போலவே தோன்றும்.

உண்மையான உலகத்தில், காலம் கலந்திருக்கிறது. ஆனால், எல்.எஸ்.டி. மற்றும் சாதாரண கனவு அனுபவத்தில், நீங்கள் விழித்திருக்கும் நிலையில் உள்ள காலம் மறைந்து விடுகிறது. பல வருடங்களில் உண்மையாக ஏற்படும் நிகழ்வுகளை நீங்கள் உங்ளுடைய கனவில், ஒரே கணத்தில் பெற்றுவிடலாம். அது ஒரே வினாடியில் உங்களை ஆக்ரமித்து, உங்களுடைய முழு ஞாபக சக்தியைக் குலைத்து விடுகிறது. அந்த ஒரு சில விநாடிகளில், உங்களுடைய இறுக்கமெல்லாம் மறைந்து போய்விடும். நீங்கள் மிகுந்த ஓய்வுத்தன்மையில், அந்த பிரபஞ்சத்தின் ஒத்த லயத்தை உணருவீர்கள். தடங்களெல்லாம் அகற்றப்பட்டு, உங்களுடைய 'நான்' என்பது மறைந்து போயிருக்கும். அப்பொழுது இந்த உலகமே ஒன்றாகி விடும். நீங்கள் மீண்டும் மீண்டும் இந்தக் கற்பனை மயக்க

ஞாபகத்தையும், உண்மைத் தன்மையையும் ஒப்பிடும் அளவுக்கு, அது அவ்வளவு திடீரென்று பேரானந்த மயமாகவே இருக்கும்; இந்த ஒப்பிடுதலை பிறகு உங்களால் தவிர்க்க முடியாது. அந்த ஞாபகம் மேலும் மேலும் பேரானந்த மயமாக இருக்க, உங்களுடைய உண்மை நிலை தேய்ந்து, தெளிவில்லாமல் போய்விடும்.

ஆகவே, எல்.எஸ்.டி.யின் அனுபவத்தோடு, உங்களுடைய தியானத் தன்மையை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டாம். முதலில், உங்களால் அதை ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. ஏனென்றால், அவை இரண்டும் வெவ்வேறு மனநிலையில் இருக்கின்றன. ஒரு மனத்தில் உள்ள தெளிவற்ற, தேய்ந்த ஞாபகத்தை, மறு மனதுக்கு அப்படியே கொண்டு வர முடியாது. அடுத்ததாக, ஏற்கெனவே நடந்தவற்றை ஒப்பிடும் பொழுது, அந்த அனுபவங்களை வெளிப்படுத்தி அதே பிரக்ஞையற்ற மனம்தான், இப்பொழுதும் ஒப்பிட்டுப் பார்க்கிறது. நீங்கள்தான் இந்த எல்.எஸ்.டியை எடுத்தவரும், இப்பொழுது நீங்கள்தான் தியானம் செய்வதும். இந்த இரண்டு நிலைகளிலும், அதே பிரக்ஞையற்ற விதை அப்படியே இருக்கிறது.

நீங்கள் ஞாபகத்தில் கொள்ள வேண்டிய இன்னுமொன்றும் இருக்கிறது. அதாவது, தியானத்தைப் பற்றி முன்பே ஏற்படுத்திக் கொண்ட கொள்கை கோட்பாடுகளை வைத்துக் கொள்ளாதீர்கள்; அதனுடைய பயன் எப்படி இருக்கும் என்று எண்ணாதீர்கள். தியானத்தில் செல்லுவது என்பது, வரைபடம் இல்லாத கடலில் செல்லுவது போலத்தான். என்ன நிகழும் என்று முன்பே உங்களால் எதையும் தீர்மானிக்க முடியாது. என்ன நிகழும் என்று முன்பே நீங்கள் நினைத்தால், அது நிகழ ஆரம்பித்துவிடும்; ஆனால், இது உங்களுடைய மன வெளிப்பாடுதான். நீங்கள் இப்படி எல்.எஸ்.டியிலும் செலுத்தலாம் மற்றும் தியானத்திலும் செலுத்தலாம். ஏனென்றால், பிரக்ஞையற்ற நிலை என்பதே வெளியே செலுத்தும் ஒரு இயந்திர சாதனம்தான்.

குண்டலினி மற்றும் சத்கராக்களைப் பற்றிய சகல விஷய ஞானங்களையும் மற்றும் பல அறிந்தவற்றையெல்லாம் நீங்கள் வெளியே தூக்கி எறிய வேண்டும். ஏனென்றால், எல்.எஸ்.டி. போன்ற மருந்துகளின் உதவி இல்லாமலேயே, உங்களுடைய மனம் சாதாரணமாகவே, தன்னிடம் உள்ளவைகளை வெளியே திரையிட்டுக் காட்டவே செய்யும். நீங்கள் தியானம் செய்யும் பொழுது கூட, நீங்கள் எல்.எஸ்.டியோடு இருந்த அனுபவத்தை வெளிப்படுத்திக் காட்ட முடியும். ஆனால், இப்பொழுது ஏற்படும் அனுபவம் மெலிதாகவே இருக்கும். ஏனென்றால், இப்பொழுது உங்களுக்கு எல்.எஸ்.டி. உதவி இல்லை. ஆனால், அனுபவ நிகழுதல் என்பது ஒன்றுதான்.

குண்டலினி மற்றும் சத்கராக்கள் போன்றவை இல்லை என்று இதனால் நான் கூறவில்லை. எந்த அனுபவமும் நிகழவில்லை என்று நான் கூறவில்லை; அனுபவங்கள் ஏற்படத்தான் செய்யும். ஆனால், அதைப் பற்றி நீங்கள் முன்கூட்டியே அறிந்திருக்கக்கூடாது. அப்படி இருந்தால், அந்த அறிதல்தான் வெளிப்படும். நீங்கள் முழுமையாக அறியாததில் இருக்க வேண்டும்; நீங்கள் கள்ளம்கபடு அற்று ஒன்றும் தெரியாதவனாக இருக்கவேண்டும். நீங்கள் தியானத்தில் மேலே செல்ல, இதுதான் அடிப்படை விதிமுறையாகும். ஒவ்வொன்றையும் நீங்கள் நேரடியாக அறிந்து கொள்ள வேண்டும். மற்றும் அனுபவப்பட வேண்டும். 'அது அப்படித்தான் என்று நீங்கள் முன்பே முடிவு கட்டிவிடக் கூடாது. விஷய ஞானத்தை தகவல்களோடு குழப்பிக் கொள்ளக் கூடாது.

ஆகவே, நீங்கள் அறிந்த அனைத்துத் தகவல்களையும் வெளியே தூக்கி எறியுங்கள். அறிவதில் உள்ள ஆர்வத்தை முடிவுக்குக் கொண்டு வந்து விடுங்கள். ஒரு சூன்யத்தில் செல்லுவது போல, வெகுளித்தன்மையில் மேலே செல்லுங்கள். இப்பொழுது உங்களுக்கு எதுவும் தெரியாது. ஆகவே, எல்லாமே ஆச்சரியமாகவே தோன்றும். எல்லாமே ஆச்சரியமாகவே இருக்கும். நீங்கள், 'ஆமாம், அது முன்பே எனக்குத் தெரியும்' என்றோ, 'அது முன்பே என்னிடம் நிகழ்ந்தது' என்றோ

சொன்னால், அது உங்களிடம் எந்த ஆச்சரியத்தையும் ஏற்படுத்தாது. பிறகு நீங்கள் தெரியாதவற்றில் நுழையவில்லை; நீங்கள் தியானத்தில் நுழையவில்லை.

ஆகவே, உங்களையே நீங்கள் ஏமாற்றிக் கொள்ள நிறைய வாய்ப்புகள் உண்டு. மனம் தந்திரமிக்கது. உங்களுடைய பிரக்ஞையற்ற நிலை பல தந்திரங்களைக் கையாளும். இதைப் போன்ற ஏமாற்றுத்தனம், நீங்கள் எல்.எஸ்.டி.யை உபயோகித்தாலும் நடைபெறும் அல்லது சாதாரண தியானத்திலும் நடைபெறலாம். ஏனென்றால், இந்த இரண்டிலும் பிரக்ஞையற்ற மனம் ஒன்றுதான். நீங்கள் தியானத்தில் ஆழ்ந்து செல்ல வேண்டுமானால், நீங்கள் உங்களுடைய பிரக்ஞையற்ற மனத்தை மாற்ற வேண்டும்; அதாவது அதை நீங்கள் வெறுமையாக்க வேண்டும். அது 'அறியும் தன்மை'யுடையதாக மாற்ற வேண்டும். அது திறப்பாகவும், தெரியாதவற்றை எதிர்கொள்ளும் தன்மை படைத்ததாகவும் இருக்க வேண்டும். ஏனென்றால், தியானம் என்பதே தெரியாதனுள், அறியாதனுள் செல்லுவதுதான்.

தியானம் உங்களுக்குள் நிகழும்பொழுது, உங்களைச் சுத்தப்படுத்துதல் அல்லது வேண்டாதவற்றை வெளியாக்குதல் மிகவும் அவசியமாகிறது. உங்களுடைய பிரக்ஞையற்ற மனம் சுமையற்று இருக்க வேண்டும்; அதில் எந்த கர்ம விதையும் இருக்கக் கூடாது. 'சஹீஜ் சமாதி' (Saheej samadhi) என்பது விதையோடு கூடிய சமாதியாகும். இதன் அர்த்தம் உங்களுடைய வெளிப்படுத்தலோடு கூடிய சமாதி என்பதாகும். இது சமாதி நிலையில் சேர்த்தி அல்ல. இது வெறும் வார்த்தைதான்.

இன்னொரு வார்த்தை இருக்கிறது. இதன் பெயர் 'நிர்ஹீஜ சமாதி' (Nirheej Samadhi) என்பதாகும்; அதாவது விதையற்ற சமாதியாகும். இந்த விதையற்ற சமாதிதான் உண்மையானது. ஏனென்றால், அதில் வெளிப்படுத்த எதுவும் இல்லை. நீங்கள் எதையும் வெளியே திரையிடவில்லை; ஏதோ உங்களை வந்து அடைகிறது; எதையோ நீங்கள் எதிர்கொள்ளுகிறீர்கள்.

உங்களுக்கு முன்பே எதுவும் தெரியாத, முழுவதும் புதிதாக உள்ள ஏதோ ஒன்றை நீங்கள் அறிந்து கொள்ளுகிறீர்கள். நீங்கள் அதைக் கற்பனை செய்துகூடப் பார்த்திருக்கமாட்டீர்கள். ஏனென்றால், உங்களால் கற்பனை செய்யப்படும் அனைத்தையும், உங்களால் திரையிட முடியும்.

விஷய ஞானம் எப்பொழுதும் சமாதிக்குத் தடங்கலாகவே இருக்கும். ஆகவே, 'தெரிந்தவன்' ஒருவனால், சமாதியை ஒருக்காலும் அடைய முடியாது. விஷய ஞானத்தடங்களோடு, நீங்கள் தியானத்துள் செல்ல முடியாது. நீங்கள் முழுவதுமாக வெறுமையாக, ஒன்றும் அற்று இருந்தாலொழிய, உங்களால் சமாதியின் வாசலைத் தொடமுடியாது. அப்பொழுதுதான உண்மையானது நிகழ ஆரம்பிக்கும். இல்லாவிட்டால், நீங்கள் உங்ளுடைய வெளிப்படுத்துதலோடு தான் தியானம் செய்ய வேண்டி வரும்.

இப்படி, நீங்கள் உங்களுடைய தியானத்திலும் மற்றும் எல்.எஸ்.டி.யோடும் வெளியே திரையிட்டுக் கொண்டே இருக்கிறீர்கள்; இரண்டுமே வெளிப்படுத்துதல்தான். முதலில் நீங்கள் இந்த வெளிப்படுத்தும் சுமையிலிருந்து விடுதலையாக வேண்டும். இதை ஆழ்ந்து புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் அறிந்தவற்றையெல்லாம் மறந்துவிடுங்கள். எந்த ரூபத்திலும், சமாதியைக் கற்பனை செய்து கொள்ளாதீர்கள்; அதைப்பற்றி எந்த எண்ணத்தையும் முன் கூட்டியே வைத்துக் கொள்ளாதீர் கள். ஒரு குழந்தையைப் போல, வெறுமனே, இயல்பாக, மொழிகளைப் பற்றி எதுவுமே தெரியாத, எதுவுமே உங்களுக்குப் பரிச்சயமில்லாத, எல்லாமே புத்தம் புதியதாக உள்ள, உங்களிடம் எந்த வரைபடமும் இல்லாத, உங்களுக்குத் தெரியாத ஒரு தேசத்துக்குள் செல்லவும். அப்பொழுதுதான் உண்மை யானது நிகழ ஆரம்பிக்கும்.

இல்லாவிட்டால், தியானத்தில் உங்களிடம் உண்மையான புதியது நிகழ, நீண்ட காலம் ஆகும்; நீங்கள் உண்மை நிலையை முழுமையாகக் கடந்து செல்லும் பொழுது, உங்களுடைய

வெளிப்படுத்துதல் தொடர்ந்து நடைபெற்றவாறுதான் இருக்கும். அப்பொழுது இந்த எல்.எஸ்.டி. மிகவும் வீரியமாக வேலை செய்ய, உண்மையான தியானத்தன்மை தேய்ந்து ஒன்றுமற்றுக் காணப்படும். ஆனால், உங்களுடைய விஷய ஞானப் பளுவை இறக்கிவைத்தால், இந்த குண்டலினி, சக்கராஸ் போன்ற வார்த்தைகளை மறந்துவிட்டால்- இப்படி எல்லாவற்றையும் மறந்து, ஒரு குழந்தையைப் போல சென்றால், உண்மையான தியானம் நிகழும். இல்லாவிட்டால், தியானம் கூட கற்பனை மற்றும் கனவாகிவிடும்.

இதில் உள்ள வித்தியாசம், மிகவும் மென்மையானது. அதன் வித்தியாசத்தை அறிந்து கொள்ளுவது மிகவும் கடினம். ஆனால், வித்தியாசம் அங்கே இருப்பதை மறுப்பதற்கில்லை. அதைப் பற்றிய ஒன்றை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். அதாவது உங்களுடைய விஷய ஞானத்திற்கு ஏற்ப, தியானம் நிகழ்ந்தால் மற்றும் நீங்கள் நினைத்தபடியே அது நிகழ வேண்டும் என்று நீங்கள் விருப்பம் கொண்டால், பிறகு நீங்கள் அதை முக்கியப்படுத்தமாட்டீர்கள்; அதை ஒரு பெரிய விஷயமாக எடுத்துக் கொள்ள மாட்டீர்கள். ஆனால், உண்மையான தியானம் உங்களுடைய விஷய ஞானத்திற்கு ஏற்ப ஒருபோதும் நிகழாது. எந்த மத ஏடுகளோ, எந்த குருவோ, இப்படித்தான் நடக்கும் என்று அறிவிக்காத வகையில், மிகப் புதுமையாக, ஒவ்வொரு தனி மனிதனின் தனித்தன்மைக்கு ஏற்ப, மிகவும் வித்தியாசமாகவே அது நிகழும். அவர்கள் சொன்னவை அனைத்தும் ஒரு பொதுப்படையான அறிவிப்புகள்தான்; அவர்கள் சொன்னது போல, யாருக்கும் நடைபெறாது. இந்த ஏழு சக்கராக்களின் அனுபவமும் மற்றும் குண்டலினி சக்தி மேலே கிளம்பிச் செல்லுதலும் ஒவ்வொரு தனிமனிதனிடமும் வெவ்வேறாகவே இருக்கும். நீங்கள் எதிர்பார்த்தபடி அந்தப் பொதுப்படையான அறிவிப்பையொட்டி அவை நிகழ்ந்தால், அதற்கு நீங்கள் எந்த முக்கியத்துவமும் கொடுக்க மாட்டீர்கள்; நீங்கள் அதை முன்கூட்டியே கற்பனை செய்ய ஆரம்பித்து விடுவீர்கள். ஆனால், உங்களிடம் அது உண்மையாக நிகழ்வது,

அந்த அனுபவம் மிகவும் வித்தியாசமானதாகவே இருக்கும்; பிறருக்கு ஏற்பட்டது போல, ஒன்று போலவே அது ஒருக்காலும் இருக்காது. ஆகவே இந்த தியான நிகழ்தல் தனி மனிதனுக்குரியது; மனித குலத்துக்கு உரிய பொதுப்படையானது அல்ல.

ஆகவே, ஒவ்வொருவருடைய அனுபவமும் வித்தியாச மாகவே இருக்கும். ஆனால், இதைப்பற்றி ஒவ்வொருவரும் பொதுப்படையாகவே கூறியிருக்கிறார்கள். பொதுப்படையாக ஒருபோதும் அது நிகழுவதில்லை. உதாரணமாக இங்கே 20 பேர் இருக்கிறோம். ஒவ்வொருவரின் சராசரி வயதை நம்மால் கணிக்க முடியும். ஆனால், யாரும் அந்தக் கணிக்கப்பட்ட வயதில் இருக்க மாட்டார்கள். சராசரி வயது என்பது ஒரு கற்பனைதான்; பொதுவானதுதான். அதைப் போல, இங்கு இருப்பவர்களின் சராசரி உயரத்தை நம்மால் கணக்கிட முடியும்; ஆனால் யாரும் அந்த அளவில் இருக்க மாட்டார்கள். அதைப்போல, சராசரி விஷயஞானத்தையும், நம்மால் கணக்கிட முடியும்; ஆனால், யாரிடமும் அதே அளவு விஷய ஞானம் ஒருக்காலும் இருக்காது.

ஆகவே, சகல பொதுப்படையானவை அனைத்தும் கற்பனையே. ஒரு பொதுப்படையான விதியை ஏற்படுத்த வேண்டுமானால், அவை உபயோகமாக இருக்கலாம். ஆனால், வாழ்க்கையின் உண்மைத்தன்மைக்கு அது உங்களை ஒருக்காலும் அழைத்துச் செல்லாது. அவை ஒழுங்கு முறைகளை, மத ஏடுகளை மற்றும் வரைபடங்களை ஏற்படுத்த வேண்டுமானால், உபோயகமாக இருக்கலாம். ஆனால், வரைபடைத்தையும் தேசத்தையும் வைத்துக் கொண்டு, நீங்கள் குழம்பிப் போகக் கூடாது. நீங்கள் இந்தியாவின் வரைபடத்தை பார்த்திருக்கலாம். ஆனால், நீங்கள் வரைபடத்தில் கண்டதை, ஒருக்காலும் உண்மையான இந்திய நிலப்பரப்பில் பார்க்க முடியாது. நீங்கள் இந்தியாவில் நுழையும் பொழுது, அந்த வரைபடத்தை ஒருக்காலும் சந்திக்க மாட்டீர்கள். அது ஒரு பொதுப்படையான அறிவிப்பு தான். அது, இந்தியாவைப் பற்றி உங்களிடம் சில

விஷய ஞானங்களை ஏற்படுத்த வேண்டுமானால் உதவியாக இருக்கலாம். ஆனால், அந்த தேசத்தில் நீங்கள் அடையும் உண்மையான அனுபவத்துக்கு, அது ஒரு போதும் உதவி செய்யாது. மாறாக அது ஒரு தடையாக உங்களுக்கு அமைந்து விடும். முன்பு ஏற்படுத்திக்கொண்ட அவ்விஷயங்களுக்கும் மற்றும் ஒழுங்கு முறைகளுக்கும் பின்னால், அனுபவம் என்பது மறைந்தே இருக்கிறது.

நீங்கள் ஒன்றை நேரடியாக அறிந்து கொள்ளாமலேயே, உங்களால் அதைப்பற்றிய விஷயஞானத்தை சேகரிக்க முடியும். ஆனால், அது அபாயகரமானது. அந்த விஷய ஞானம், வெளி உலகைச் சார்ந்து இருந்தால், அதனால் எந்தக் கெடுதியும் இல்லை. அது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. ஆனால், அதுவே, உங்களுடைய உள் உலக அனுபவ சம்பந்தமாக இருந்தால், அது பெருத்த வித்தியாசத்தை ஏற்படுத்தும். ஏனென்றால், மனம் எதையும் திரையிட்டுக் காட்டவே விளையும்.

ஆகவே, நீங்கள் குண்டலினி அல்லது சத்கராவைப் பற்றி எதுவுமே தெரியாதது போல, உங்களுடைய தியானத்தை ஆரம்பியுங்கள். எந்தவித அபிப்பிராயமோ, தகவலோ இன்றி, தியானத்தில் செல்லவும். நீங்கள் தியானத்தில் நுழையும் பொழுது, நீங்கள் எதையும் அறிந்திருக்கக் கூடாது என்று முதலில் ஒரு நிபந்தனையை விதித்துக் கொள்ளவும். எது நிகழ்ந்தாலும், எதிர்கொள்ளும் தயார் நிலையில், திறந்த நிலையில் செல்லவும். உங்களுடைய அனுபவத்தை ஒப்பிட்டுப் பார்க்க எதுவும் இல்லை.

முதலில், நீங்கள் ஏற்கெனவே கொண்டிருந்த எண்ணங்கள் அகல வேண்டும். நீங்கள் அவற்றோடு ஒட்டிக் கொண்டு இருக்கக்கூடாது. நீங்கள் அவற்றோடு இல்லாவிட்டால், அவை தானே உங்களை விட்டு அகன்றுவிடும்; அவை தானே இறந்துவிடும். அந்த விதை எரித்து, இறந்துவிடும். ஆனால் அவற்றோடு நீங்கள் கலந்து இருந்தால், அதுவே விஷய ஞானப்

போல் ஆகி, உங்களுக்கு உதவி செய்வது போலவும், வழிநடத்துவது போலவும் செயல்பட்டுவிடும். ஆகவே எந்த தகவல்களோடும் தொக்கி நிற்காதீர்கள். அப்பொழுது, அது உங்களிடம் உயிரோடு இருக்காது. பிறகு, அது எதையும் வெளிப்படுத்த முனையாது.

இரண்டாவதாக, உங்களுடைய எல்.எஸ்.டி. அனுபவத்தை, கனவு போல மறந்துவிடுங்கள். இல்லாவிட்டால், அது உங்களுக்கும், தியானத்துக்கும் இடையில் குறுக்கிட்டுக் கொண்டேதான் இருக்கும்; அந்த ஒப்பிடுதல் நடந்து கொண்டே தான் இருக்கும். இப்படி ஒப்பிடுதல் தற்கொலைக்கு சமம்தான். நீங்கள் இப்படி ஒப்பிட்டுக் கொண்டு இருந்தால், தியானம் முடிந்து, நீங்கள் மேலும் மேலும் எல்.எஸ்.டி.யின் உதவியைத்தான் நாட வேண்டிவரும். ரசாயன உதவி என்பது மனரீதியாக மாற்றம் அடைய உதவி செய்யும்; ஆனால், அது ஒரு போதும் உண்மையான ஞான விழிப்பாகாது. ஞான விழிப்பு என்பது, உங்களிடம் ஏதோ நிகழுவது அல்ல; மாறாக அந்த ஏதோ ஒன்றில், நீங்கள் நிகழுவதாக இருக்கிறீர்கள்; ஏதோ ஒன்று உங்களிடம் ஊடுருவுவதாக இல்லை. மாறாக ஏதோ ஒன்றில், நீங்களாகவே குதிப்பது ஆகும்.

எல்.எஸ்.டி.யோடு நீங்கள் எங்கேயும் செல்லுவது இல்லை. நீங்கள் எங்கே இருக்கிறீர்களோ, அங்கேயேதான் நீங்கள் இருக்கிறீர்கள்; ரசாயன மாற்றத்தால், ஏதோ உங்களிடம் நிகழுகிறது. ரசாயன உதவியால், உங்களுடைய சாதாரண மனம், உங்களுடைய சாதாரண பகுத்தறிவு ஒருபோதும் இயல்பாக வேலை செய்வது இல்லை. உங்களுடைய பிரக்ஞையற்ற மனத்தில், நீங்கள் ஏற்படுத்திக் கொண்ட கட்டுப்பாடுகள் இழக்கப்படுகின்றன. அந்தக் கட்டுப்பாடுகள் அகல உங்களுடைய பிரக்ஞையற்ற மனம் தானே செயல் புரிய ஆரம்பித்து விடுகிறது. இப்பொழுது, நீங்கள் அதைக் கட்டுப்படுத்தவில்லை; மாறாக அந்த ரசாயன மருந்துதான் அதைக் கட்டுப்படுத்துகிறது. இப்பொழுது, நீங்கள் அதன் ஆதிக்கத்தில் இருக்கிறீர்கள்; நீங்கள் சுதந்திரமாக செயல்படவில்லை. உங்களுக்குள்ளே இருக்கும்

எல்.எஸ்.டி. இப்பொழுது சுதந்திரமாக வேலை செய்கிறது. இதனால், நீங்கள் வேலை செய்யவில்லை என்று அர்த்தம் இல்லை; ஆனால் நீங்கள் ஏதோ ஒன்றில் வேலை செய்யப்படுகிறீர்கள். உங்களிடம் ஏதோ ஒன்று நிகழ்ந்துகொண்டு இருக்கிறது; ஏதோ ஒன்றில், நீங்கள் நிகழவில்லை.

ஞான விழிப்பு என்பது ஏதோ ஒன்றில், நீங்கள் நிகழுவது என்று அர்த்தம். நீங்கள் அதில் குதிக்கிறீர்கள்; நீங்கள் ஏதோ ஒன்றை எதிர் கொள்ளுகிறீர்கள். இப்பொழுது, நீங்கள் முன்பு இருந்த அதே ஆள் அல்ல. நீங்கள் மாறிவிட்டீர்கள். இந்த மாற்றம் உங்களுடைய விழிப்புநிலை மாற்றம். அதில் நீங்கள் முழு பிரக்ஞையாக இருக்கிறீர்கள். அந்த மாற்றம், உங்களுடைய முயற்சியால் வந்தது. நீங்கள் அதற்காக ஏதோ செய்திருக்கிறீர்கள்; நீங்கள் அதை நோக்கி பிரயாணம் செய்திருக்கிறீர்கள்; நீங்கள் ஏதோ ஒன்றின் உச்சிக்குச் சென்றிருக்கிறீர்கள்.

எவரெஸ்ட் சிகரத்தில், நீங்கள் நேரடியாக அனுபவம் பெற இரண்டு வழிகள் இருக்கின்றன. முதலாவது, நீங்கள் உங்கள் படுக்கையில் இருந்தபடியே எங்கேயும் செல்லாமல் எவரெஸ்ட் சிகரத்தில் இருப்பதாக கற்பனை பண்ணிக் கொள்ளுதல்; இரண்டாவது, நீங்களே முயற்சி செய்து, எவரெஸ்ட் சிகரெத்தில் ஏறி அனுபவப்படுதல். இப்படி நீங்களே செல்லுதல், உண்மையில் உங்களிடம் ஒரு மாறுதலை ஏற்படுத்தும். நீங்கள் முயற்சி செய்து போராடி அதன் உச்சிக்குச் செல்லுதல் உங்களிடம் உண்மையிலேயே ஒரு மாறுதலை ஏற்படுத்தும். அப்பொழுது அந்த எவரெஸ்ட் உச்சி, அந்த மலையின் உச்சி மாத்திரமல்ல, உங்களுடைய முயற்சியின் உச்சமுமாகும். நீங்கள் அந்த எவரெஸ்ட்டின் உச்சியை அடையும்பொழுது, உங்களுடைய ஆற்றலையும் எவரெஸ்ட் உச்சியையும் சேர்ந்தே அடைகிறீர்கள்.

உங்களுடைய கனவில், நீங்கள் எங்கேயும் செல்லவில்லை. அப்பொழுது, நீங்கள் முன்பு இருந்த அதே நிலையில்தான், அதே நேரத்தில்தான் இருக்கிறீர்கள். இப்பொழுது

நிகழ்ந்திருப்பது ஒன்றே ஒன்றுதான்; அதுதான் உங்களுடைய கனவு. இந்தக் கனவு இரண்டு வழிகளில், உங்களிடம் வரும். ஒரு வழி: அது தியானத்தின் மூலமாகவோ அல்லது எல்.எஸ்.டி. மூலமாகவோ ஏற்படலாம். ஆகவே, அந்த அனுபவங்கள் ஒன்று போலவே இருக்கின்றன- ஏனென்றால், நீங்கள் அந்த அனுபவத்தை ஏதோ ஒரு வழியில் அடையலாம். அதற்கு, உங்களுடைய பிரக்ஞையற்ற மனம் சுமையற்று வெளிப்படுத்த எந்த அடக்குதலோ அல்லது ஆசைகளோ இன்றி இருந்தால்தான், அது நடக்கும்.

இன்னொரு வித்தியாசம் என்னவென்றால், நீங்கள் எல்.எஸ்.டி.யை எடுத்துக் கொள்ளும்போது, உங்களுடைய பிரக்ஞையான மனம் தூங்கச் செல்ல, உங்களுடைய பிரக்ஞையற்ற மனம் அதன் அதிகாரத்தை எடுத்துக் கொண்டு, வேலை செய்ய ஆரம்பிக்கிறது. ஆனால், உங்களுடைய உண்மையான தியானத்தில், உங்களுடைய பிரக்ஞை மனம் விரிவடைந்து, பிரக்ஞையற்ற மனமும் பிரக்ஞை மனமாகி விடுகிறது. பிரக்ஞை மனத்தின் சுடர் மேலும் மேலும் ஆழமாக பிரக்ஞையற்ற மனத்தினுள் சென்று, பிரக்ஞை மனமும், பிரக்ஞையற்ற மனமும் ஒன்றாகி, அவற்றில் எந்த வேறுபாடும் இன்றி, இரண்டும் ஒன்றாகிவிடும். இப்பொழுதுதான், உண்மையான தியானம் நிகழ்ந்திருக்கிறது.

**"என்னுடைய எல்.எஸ்.டி. அனுபவங்களில், நான் பல தொடர் நிறங்களை, உதாரணமாக ஆரஞ்சு மஞ்சள் நிறம், மஞ்சள் நிறம், பிறகு வெள்ளை, அடுத்து ஆழ்ந்த நீலம் என்று பல நிறங்களைக் கண்டேன். இந்த நிறங்களுக்கு என்ன அர்த்தம்?"**

அதில் சில அர்த்தங்கள் இருக்கின்றன. ஆனால், அந்த வர்ணத் தொடர் ஆளுக்கு ஆள் வித்தியாசப்படும். இருந்தும், அதற்கு அர்த்தம் உண்டு. வர்ணங்கள், வாசனைகள், சப்தங்கள்— ஒவ்வொன்றிற்கும் ஒரு அர்த்தம் உண்டு.

முதலில், நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன வென்றால், நீங்கள் உங்களுக்குள் ஆழமாகச் செல்லும்பொழுது, உங்களுடைய ஒவ்வொரு புலனிலும், ஒரு உள் விரிவடை _தல் அதற்கு ஏற்ப நிகழுகிறது. உதாரணமாக, உங்களுடைய கண்கள்; அவை சாதாரணமாக வெளியே உள்ளதைப் பார்க்கின்றன. ஆனால், உங்களுடைய கண்களை மூடிக் கொள்ளும்பொழுது, உங்களுக்குள்ளே இருப்பதை உங்களால் பார்க்க முடியும். ஒவ்வொரு வெளி அனுபவத்தின் மூலம் உள்ளேயும் சேர்த்து வைக்கப்படுகிறது. உங்களுடைய எல்லா புலன்களிலும் உங்கள் மனத்தில் ஏற்பட்ட அனுபவங்களின் தேக்கம் உள்ளது. ஆகவே, நீங்கள் உள்ளே செல்லும்பொழுது, இந்தத் தேக்கங்களை நீங்கள் சந்திக்க வேண்டிவரும். வர்ணங்களின் தேக்கத்துக்கு வரும்பொழுது, நீங்கள் பல அழகிய வர்ணங்களை காணுவீர்கள்; அதற்கு முன்பு உங்களுடைய கண்களால் அப்படிப்பட்ட வர்ணங்களை நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள். இவைதான், நீங்கள் பலகாலமாக சேர்த்து வைத்த வர்ணங்களின் தேக்கம்.

ஒரு ஓவியன் எப்படி ஒரு அழகான பெண்ணை வரைவானோ, அதைப் போலத்தான் அதுவும். அந்த ஓவியம் எந்த ஒரு தனிப்பட்ட பெண்ணின் ஓவியமாக இருக்காது- அவன் பல அழகிய பெண்களைப் பார்த்திருப்பான். இப்பொழுது அவனுடைய ஓவியத்தில், அந்தப் பல பெண்களின் முக்கிய அழகிய பகுதிகள் இடம் பெற்றிருக்கும். அவன் பார்த்தவை மற்றும் கேட்டவை அனைத்தும் அதில் ஒருங்கே இடம் பெற்றிருக்கும். அதில் உள்ள சில அம்சங்கள் ஒரு பெண்ணிடமிருந்தும், மற்றும் சில அம்சங்கள், வேறு பல பெண்களின் சாயலையும் ஒத்திருக்கலாம். ஆனால், அந்த ஓவியன் வரைந்த பெண்ணை, உண்மையில் உங்களால் எங்கேயும் சந்திக்க முடியாது. அது முழுமையான கற்பனை அல்ல; இருந்தாலும் அதை உங்களால் வேறு எங்கேயும் காண முடியாது. அது ஒரு வகையில் உண்மைதான்; ஏனெனில் அது, ஓவியனின் அனுபவத்திலிருந்து வரையப்பட்டது. இருந்தும், அது

கற்பனைதான். ஆகவே, அது உண்மையாகவும், பொய்யாகவும் இருக்கிறது.

நம்முடைய இந்தப் பிறவியிலும் மற்றும் அனேக பிறவியிலும் ஏற்பட்ட அனுபவங்களை, நம்முடைய புலன்கள் சேமித்து வைத்திருக்கின்றன. அவற்றின் முக்கிய அம்சங்கள், நமக்குள்ளே இருக்கின்றன. நம்முடைய கண்கள் வர்ணங்களையும், மற்றும் வெளிச்சம் போன்றவைகளையும், காது ஒலிகள், லயங்கள், நிசப்தம் போன்றவைகளையும் சேமித்துள்ளன. எல்லா புலன்களுக்கும், மூளையில் ஒரு சேமிப்பு அறை இருக்கிறது.

நீங்கள் மூளையில் உள்ள ஒரு குறிப்பிட்ட 'செல்' (Cell)லை ஒரு மின்சாரக்கம்பி கொண்டு தொட்டால், அந்த 'செல்' தூண்டப்பட்டு வெடிக்கிறது என்று இப்பொழுது விஞ்ஞானம் நிரூபித்து இருக்கிறது. ஒருவன் கீழே விழுந்து, அவனுடைய மண்டையில் அடிபட்டால், ஒளி அனுபவங்களைச் சேகரித்து வைத்திருக்கும் செல்கள் பாதிக்கப்பட்டு, அவன் பல நட்சத்திரங்களைப் பார்க்க முடியும். அதைப் போல, மூளையின் ஒரு குறிப்பிட்ட பகுதியில், மின்சாரக் கம்பி கொண்டு தொட்டால், ஞாபகங்கள் பாதிக்கப்படுகிறது. உங்களுடைய பிள்ளைப் பருவத்து ஞாபகங்களைச் சேகரித்து வைத்திருக்கும் மூளை செல்லில், நான் தொட்டால், நீங்கள் மீண்டும் குழந்தையாகி குழந்தைப் பருவத்தில் அடைந்த அனுபவங்கள் அனைத்தும், உங்களுடைய மூளைத் திரையில் மீண்டும் திரையிடப் படுகிறது.

நீங்கள் உங்கள் உள்ளே செல்லும்பொழுது, உங்களுக்குள்ளே உள்ள இரு அனுபவங்கள் தூண்டப்பட்டு, உங்களுடைய வெளி உலகத்துக்குத் தெரியாத பல விஷயங்களை, மிகவும் சுத்தமாக, நீங்கள் அனுபவிப்பீர்கள். உங்களுடைய வெளி உலகம் எப்பொழுதும் அசுத்தமாகவே இருக்கும். ஆனால் உங்களுடைய உள் அனுபவம் சுத்தமான அமைப்பில் இருக்கும். அது ஒரு மின்சார செயல்தான். அந்த செயல் வெறும் சக்தியாக

இருப்பதால், அது சுத்தமாக வெளிப்படுகிறது. அதை எதுவும் தடை செய்வது இல்லை. அது பளிங்கு போல் இருக்கிறது.

ஆனால், இந்த அனுபவங்களுக்கு எந்த முக்கியத்துவமும் கொடுக்க வேண்டாம். நீங்கள் உங்களுக்குள்ளே ஆழமாகச் செல்லுவதை அவை காட்டுகிறதே தவிர, வேறு எந்த பயனுள்ள அர்த்தமும் அதற்குக் கிடையாது. அவை, நீங்கள் செல்லும் வழியில் உள்ள நலன்களின் வெளிப்பாடே தவிர, அவையே நீங்கள் அடையக்கூடிய முடிவான நிலை அல்ல. நீங்கள், உங்களுக்குள்ளே அடைய வேண்டியதை அடைந்துவிட்டால், பிறகு உங்களுக்கு எந்த அனுபவமும் ஏற்படாது- ஒளியோ, ஒலியோ மற்றும் இதைப் போன்ற அனுபவங்கள் ஏதும் நிகழாது.

இப்படிப்பட்ட அனுபவங்கள் நின்றாலொழிய, நீங்கள் மனத்தைக் கடந்து செல்ல முடியாது. இந்த அனுபவங்களை யெல்லாம், நீங்கள் முடிவில்லாத பிறவிகளில் சேர்த்தவைகள் மீண்டும் வெளிப்படுகிறதே தவிர, வேறல்ல. ஆகவேதான், ஒவ்வொருவரும் வித்தியாசமாக அனுபவப்படுகிறார்கள். ஏனென்றால், ஒவ்வொருவரிடமும் வித்தியாசமான பல அனுபவங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, அவர் களுடைய புலன்களைப் பொறுத்தவரையில், ஒவ்வொருவரிட மும் வித்தியாசமான அனுபவங்கள் தான் இருக்கின்றன.

இரண்டு நாட்களுக்கு முன்பு, நாக்கு ருசியை இழந்த ஒருவர் என்னைப் பார்க்க வந்தார். அவர் அந்த ருசியை அறிந்ததே இல்லை. அதாவது அவருக்குள்ளே உள்ள ஆழமாக இருந்த அந்த ருசியை அவரால் அனுபவிக்க முடியாது. இயல்பாகவே, குருடாகவோ அல்லது நிறக் குருடாகவோ பலபேர் இருக்கிறார்கள்- நடைமுறையில் 12 பேர்களில், ஒருவர் நிறக் குருடாகவே இருக்கிறார். அவரால் மற்ற வர்ணங்களைப் பார்க்க முடியும், ஆனால் ஒரு குறிப்பிட்ட வர்ணத்தைப் பார்க்க முடியாது.

உதாரணமாக, பெர்னாட்ஷாவுக்கு மஞ்சள் மற்றும் பச்சை நிறங்களை வேறுபடுத்திப்பார்க்க முடியாது. மஞ்சள் நிறத்தைப்

பொறுத்தவரையில், அவர் வர்ணக் குருடுதான். ஆகவே, அவருடைய உள் அனுபவத்தில், அவர் மஞ்சள் நிறத்தை அனுபவித்தே கிடையாது. அவரிடம் மஞ்சள் வர்ண தேக்கம் எதுவும் கிடையாது; அவரிடம் மஞ்சள் நிற கருந்தன்மை கிடையாது. அவர் அதைப் பார்த்ததே கிடையாது; அவரைப் பொருத்தவரையில், அது இல்லாததுதான்.

ஆகவே, நம்மால் ஒவ்வொரு வர்ணத்தையும் தெளிவாகப் பார்க்க முடியாது. நாம் பார்க்கும் அந்த ஏழு வர்ணங்கள் மட்டும்தான் இங்கே உள்ள வர்ணங்கள் அல்ல. அதற்கு அப்பால் உள்ள வர்ணங்களைப் பொறுத்தவரையில், நாம் வர்ணக் குருடர்களாகவே இருக்கிறோம். அந்த ஏழு வர்ணங்களுக்கு மேலேயும் மற்றும் கீழேயும் எல்லையற்ற பல வர்ணங்கள் இருக்கின்றன. நாம் அவற்றைப் பார்க்காததினால், நம்முடைய உள் யாத்திரையில், அந்த அனுப்வம் ஏற்படாது. நாம் உணருவதும் அல்லது அனுபவிப்பதும், நாம் வெளி உலகத்திலிருந்து நமக்குள்ளே சேர்ந்த அனுபவங்களின் தேக்கம்தான்.

ஒரு சங்கீத வித்வான், தியானத்திற்குள் சென்றால், சங்கீதம் தெரியாதவனுக்குத் தெரியாத பல ஒலிகளை அனுபவிப்பான். அதைப் போல, ஒரு ஓவியம் தெரியாதவன், தெரிந்து கொள்ள முடியாத வகையில், ஓவியம் தெரிந்தவன், பல வர்ணங்களை அறிவான். வான் கோவ் (Van Gogh) போல சிறந்த ஓவியர்கள், தியானத்திற்குள் சென்றால், அவர்கள் பார்க்கும் வர்ணங்களை அல்லது வர்ணச் சேர்க்கைகளை நம்மால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது.

இதுகூட, தனிமனிதனுக்கு ஏற்ப வேறுபடும். ஆனால், ஒன்று மாத்திரம் நிச்சயம். நீங்கள் உங்களுக்குள்ளே மிக ஆழமாகச் செல்லும் பொழுது, பல நிகழ்வுகள் தானே ஏற்பட ஆரம்பிக்கின்றன. உங்களுக்கு உங்களுக்குள்ளே பல வர்ணனை அனுபவமாக சேகரிக்கப்பட்ட ஒலிகளைப் போல வாசனைகளை நீங்கள் அனுபவிப்பீர்கள். மனம் முழுமையுமே ஒரு அனுபவக்

கிடங்குதான்; அதில் உள்ள ஒவ்வொரு செல்லும், வெடிக்கக்கூடிய மற்றும் தூண்டப்படக்கூடிய நிலையில் உள்ள அனுபவக் கற்றைதான். ஆகவே, உள்ளே செல்லுங்கள். அந்த மூலத்தைத் தொடுங்கள்; அது வெடித்துத் தன்னை வெளிப்படுத்தும்.

நீங்கள் உள்ளே செல்லுவதற்கு ஒரு அறிகுறியாக இருப்பதால், இந்த அனுபவங்கள் அந்த அளவுக்கு அர்த்த முள்ளதாக இருக்கின்றன. ஆனால், இந்த அனுபவங்கள் மிகவும் கவர்ச்சிகரமாக இருப்பதால், உங்களுடைய மனம் அதிலேயே ஈடுபடவிரும்பும். அது, அதனை மீண்டும் செய்யவே விரும்பும்; ஆனால், மேற்கொண்டு முன்னேறுவதற்கு, உங்களுக்கு இவை தடையாகவே அமைந்து விடும்.

எந்த அனுபவமும் இல்லாத ஒரு கட்டத்துக்கு, உங்கள் மனம் வந்து சேர்ந்து விடவேண்டும். அனுபவமற்ற மனநிலை என்று சொல்லுவதை விட, ஒருவர் எதுவுமே அனுபவிக்காத மனநிலை என்று கூறுவதுதான் சரியாக இருக்கும். அனுபவம் என்பதே கடைசித் தடங்கள் தான். ஒருவர் தன் இயல்பாக, எந்த அனுபவமும் இல்லாத நிலைக்கு வந்துவிட வேண்டும்.

அனுபவங்கள் மறையும் பொழுதுதான், இருவேறு தன்மைகள் மறையும். நீங்கள் ஏதாவதை அனுபவிக்கும் பொழுது, இருவேறு தன்மைகள் அங்கு இருக்கவே செய்யும். அங்கே நீங்கள் இருப்பது போல, உங்களுடைய அனுபவமும் அங்கே இருக்கின்றது. அடுத்து எதுவுமே இல்லாத வேறு ஒன்றும் அங்கே இருக்கிறது. நீங்கள் இந்தப் பிரபஞ்சத்தோடு ஒன்றாக கலந்தது போல உணர்ந்தாலும், அந்த அனுபவம் கூட, அந்த இருவேறு தன்மையின் அங்கம்தான்.

உங்களுடைய தியானம் முழுமையான மலர்ச்சி நிலையை அடைந்தால், அப்பொழுது எந்த அனுபவமும் இருக்காது. நீங்கள் மட்டும்தான் அங்கு இருப்பீர்கள்; அப்படி இருத்தலே, ஒரு அனுபவமாகிறது. வேறு எதுவும் அங்கு இல்லை- உங்களுடைய இருத்தல் மட்டுமே, உங்களுடைய இருத்தல்

அனுபவம் மட்டுமே. அப்படி அனுபவம் எதும் இல்லாத கட்டத்தில், அனுபவிப்பவரே வெடிக்கிறார். அப்பொழுது அவர் அனுபவங்களுக்கு மாறாக இருக்க முடியும். அதாவது முன்னிலை (Object) இல்லாதபொழுது, தன்னிலையே (Subject) வெடிக்கிறது- இப்பொழுது தன்னிலையும் இல்லை, முன்னிலையும் இல்லை.

அப்பொழுதுதான், இருத்தலியலை (Existential) அடைவதாகிறது. அப்பொழுதுதான், உங்களால் 'கடவுள் இருக்கிறார்' என்று கூற முடியும். அப்பொழுது நீங்களும் இல்லை; இந்த உலகமும் இல்லை. கடவுள் மட்டுமே இருக்கிறார்! அந்த இருத்தல்தான் (Siness) கடவுள்.

ஆனால், அப்படிப்பட்ட பல அனுபவங்கள் ஆரம்பத்தில் ஏற்படத்தான் செய்யும். அவை யாவும் அர்த்தமுடையதாக ஆகாது. ஆனால், அவை வரும்.

"நான், நீண்ட நாட்களாக தியானம் செய்ய முயற்சி செய்கிறேன். ஆனால், தெளிவான பயனை இதுவரை நான் அடைந்தது இல்லை. என்னிடம் என்ன தவறு இருக்கிறது?"

அதற்குப் பல காரணங்கள் உண்டு. நீங்கள் மேற்கொண்ட தியான முறை தவறாக இருக்கும். அல்லது நீங்கள் பயிற்சி செய்யும் முறை தவறாக இருக்கலாம். அல்லது இரண்டுமே சரியாக இருந்து, அந்த முறைக்குப் பின்னால் உள்ள உங்களுடைய பிரக்ஞையற்ற விருப்பம் தவறாக இருக்கலாம். இப்படியிருந்தால், அந்த பிரக்ஞையற்றத் தன்மையை மாற்றிக் கொள்ள வேண்டும்.

நீங்கள் பல வருடங்களாக, ஒரு முறையை பயிற்சி செய்து, மிக மென்மையான பயனை அடைந்திருந்தால், அந்த முறையை மாற்றிப் பார்க்கவும். ஒரே முறையைக் கடைப்பிடிக்காத வகையில், பல தியான முறைகள் இருக்கின்றன. முறையில்

எந்தத் தவறும் கிடையாது. ஆனால், உங்களைப் பொருத்து, அது தவறாக இருக்கலாம்.

ஆகவே, முறையை மாற்றவும். அப்படி மாற்றுவது எப்பொழுதும் உபயோகமாகவே இருக்கும். ஒருவர், ஏதோ ஒரு முறையில் பழக்கப்பட்டுக் கொண்டால், அதனால் ஏற்படும் பயன் மிகவும் குறைவாகவே இருக்கும். எதுவுமே நிகழாத நிலையில், ஒருவர் பழக்கத்தால், ஒரே முறையைக் கடைப்பிடித்து வந்தால் அவரால் எதையுமே அடைய முடியாது. எந்த முக்கியத்துவ பயனையும் அடைய முடியாது.

என்னுடைய டைனமிக் தியான முறை ஒரு போதும் தினசரி கடைப்பிடிக்கும் ஒரே முறையாகாது. நீங்கள் அதே முறையில் செய்யக் கூடிய நிலையில் இல்லாமல், அது மிகவும் ஒழுங்கற்ற தன்மையிலும், மற்றும் குழப்ப நிலையில்தான் இருக்கும். ஒழுங்குமுறையோடு கூட, எல்லைக்குட்பட்ட தியானமுறைகள் தான், எப்பொழுதும் ஒரே மாதிரி கடைப்பிடிக்கக் கூடியதாக இருக்கும். நீங்கள் உங்களை ஒன்றில் ஒருபோதும் நிலைப்படுத்திக் கொள்ளாத அளவுக்கு, நீங்கள் ஒரு குழப்பமான முறையைக் கடைப்பிடிக்க வேண்டும். அப்பொழுது, நீங்கள் தினமும் சந்திக்கக் கூடிய ஏதோ புதுமை அதில் புதுமையாக நிகழும்.

நான் உங்களிடம் கூறிக் கொண்டிருக்கும் இந்த டைனமிக் தியான முறை ஒழுங்கற்ற நிலையில் இருப்பதால், அது உங்களுக்கு உதவியாக இருக்கும். எந்த ஒழுங்குபடுத்தப்பட்ட முறையும், இந்த நவீன காலத்து மனத்துக்கு உதவி செய்யாது. ஏனென்றால், இந்த நவீன காலத்து மனம் அடிப்படையில் குழப்ப நிலையிலும், மற்றும் அடிக்கடி மாறும் தன்மையிலும் தான் இருக்கிறது.

பழைய மனம், மாறாத நிலையான தன்மை கொண்டது. ஒருவன் எப்பொழுதும் நிலைப்பட்டே இருக்கிறான். இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு கிறிஸ்துவனாகப் பிறந்தவன், கிறிஸ்துவனாகவே இருப்பான். இன்றைக்கு, நிலைமை அப்படி

இல்லை. கிறிஸ்துவனாகப் பிறந்தவன், ஹிந்துவாக மாற முடியும். எல்லாமே ஒழுங்கற்றுதான், இப்பொழுது இருக்கிறது. ஒருவனின் குழந்தைப் பருவ மனம் ஒன்று; அவனுடைய மனம், வாலிபத்தில் வேறு ஒன்றாக ஆகிறது. ஒருநாள், ஒருவன் கம்யூனிஸ்ட்டாக இருக்கிறான்; அவனே பிறகு இமயமலைக்குச் சென்று, தியானம் செய்யலாம்.

இன்றைய மனம் நிலையானது அல்ல; அது குழப்ப நிலையிலேயே இருக்கிறது. ஆகவே, நிலையான மனங்களுக்கு ஏற்ற பழைய முறைகள் அனைத்தும் காலம் கடந்து நிற்கிறது. குழப்ப நிலையில் உள்ள மனத்துக்கு, குழப்பமான முறைதான் தேவையாக இருக்கிறது. அப்பொழுதுதான், உங்களால் ஆழமான நிலைகளை அடைய முடியும். இல்லாவிட்டால், அதனுடைய பயன், மேலோட்டமாகவே இருக்கும். நீங்கள், உங்களை ஒரு முறையில் நிலைப்படுத்திக் கொண்டால், அது உங்களுக்கு அலுப்பையே கொடுக்கும். நீங்கள் அதையே பயிற்சி செய்தால், அது தற்கொலைக்கு ஒப்பாகிவிடும். உங்களுக்கு உதவி செய்யாத எந்த முறையையும், பயிற்சி செய்யாதீர்கள். முறை உங்களுக்காக இருக்கிறது; நீங்கள் முறைக்காக அல்ல. ஏதாவது உங்களிடம் வேலை செய்யாவிட்டால், அதை உடனே மாற்றிக் கொள்ளவும்.

டைனமிக் முறையை பயிற்சி செய்து உங்களுடைய மூச்சில் விழிப்பாக இருக்கவும். வெகு சீக்கிரத்திலேயே, உங்களுக்குள்ளே நிகழும் மாற்றத்தை நீங்கள் உணருவீர்கள். ஆனால், உங்களுக்குத் தேவை ஒரு ஒழுங்கற்ற முறைதான்- ஒரே மாதிரியாக கடைப்பிடிக்கக் கூடியது அல்ல.



"இன்றைய நம்முடைய நாகரிகத்தில், என்னைப் போன்ற மக்களுக்கு, ஒரு குறிப்பிட்ட பிரச்சினை உள்ளது. அதாவது நாம் நமது புத்தியையே பயன்படுத்துகிறோம். சொல்லப் போனால் வாழ்க்கை முழுவதையும் வெறும் அறிவு பூர்வமாக மட்டுமே பார்ப்பவர்களாகி விட்டோம். அந்த அளவுக்கு மற்றைய சாத்தியத்தை நாம் மறுப்பவராக இருக்கிறோம். இதனால், வாழ்வு தன் கவர்ச்சியை இழந்து, அலுப்பாகவும், உணர்வற்றும் இருக்கிறது?''

அந்த அளவுக்கு யாருமே, தன் அறிவைப் பயன்படுத்துவது இல்லை. உங்களால் ஒரு அளவுக்கு மேல் உபயோகிக்க முடியாத தன்மையில் அது மிகுந்த சக்தி படைத்ததாகவும், வீரியம் உள்ளதாகவும் இருக்கிறது. நீங்கள் அதை ஒரு அளவுக்கு மேல் உபயோகிக்க முடியாதது மாத்திரமல்ல, அதை ஒரு போதும் முழுமையாகவும் உபயோகிக்க முடியாது. சாதாரணமாக, உங்களுடைய முழுமையான அறிவு சக்தியில், பத்திலிருந்து பதினைந்து சதவீதத்துக்கு மேல் உங்களால் உபயோகிக்க முடியாது.

அடுத்து இன்னொரு விஷயம். நீங்கள் அறிவுப்பூர்வமான வேலையைச் செய்யும்பொழுது, நீங்கள் உங்களுடைய அறிவை

உபயோகிக்க வேண்டிய கட்டாயம் இல்லை. அறிவுப்பூர்வமான வேலைகூட இயந்திரத்தனமாகிவிடும். ஒன்றின் வழிமுறை உங்களுக்குத் தெரிந்துவிட்டால் உங்களுடைய அறிவுக்கு வேலையே இல்லை. உங்களுடைய மனம் கம்ப்யூட்டர் போல வேலை செய்யும்.

அளவுக்கு அதிகமாக அறிவை உபயோகப்படுத்துவது என்பது உண்மையான பிரச்சினை அல்ல. உண்மையான பிரச்சினை, உணர்ச்சிகளை உபயோகிக்காமல் இருப்பதுதான். இன்றைய நாகரிகத்தில் உணர்வுகள் முழுமையாக அழிக்கப்பட்டு இருக்கின்றன. ஆகவே, சமச்சீர்நிலை பாதிக்கப்பட்டு, தலைகீழான தன்மை ஏற்பட ஆரம்பித்துவிட்டது. உணர்வுகளையும் சேர்த்து உபயோகித்தால், அதற்கு சமச்சீரற்ற நிலை இருக்காது.

உணர்வுக்கும், அறிவுக்கும் சரியான விகிதத்தில் ஒரு சமநிலையை ஏற்படுத்த வேண்டும். இல்லாவிட்டால், இந்த நாகரிகத்தின் முழுமை வெளிப்பாடு, வியாதியுள்ளதாகி விடும்– அது உங்களுடைய ஒரு காலை மட்டும் உபயோகிப்பது போல. நீங்கள் அதை மட்டும் உபயோகிக்கலாம். ஆனால் உங்களால் எங்கும் சென்று சேர முடியாது; அதனால் நீங்கள் களைப்பைத்தான் அடைவீர்கள். அடுத்த காலும் உபயோகப் படுத்த வேண்டும். உணர்வும், அறிவும் இரண்டு இறக்கைகள்; அதில் நீங்கள் ஒன்றை மட்டும் உபயோகித்தால், எந்தப் பயனும் இல்லை. இப்படிச் செய்தால், இரண்டு இறக்கைகளையும் சமச்சீர்நிலையில், ஒரு லயத்தில், ஒருங்கே உபயோகித்து அடையும் பேரானந்தத்தை உங்களால் ஒருபோதும் அடைய முடியாது.

உங்களுடைய அறிவை, அளவுக்கு அதிமாக உபயோகப்படுத்த பயப்பட வேண்டாம். நீங்கள், உங்களுடைய அறிவை முழுமையாக உபயோகப்படுத்தினால் தான், உங்களுடைய ஆழத்தைத் தொட முடியும். அப்பொழுதுதான் உங்களுடைய உண்மையான சக்தி தூண்டப்படும். அறிவுப்பூர்வமான நிலை என்பதால் மட்டும் நீங்கள் உங்களுடைய அறிவை உபயோகப

படுத்த வேண்டிய அவசியம் இல்லை. அறிவுப்பூர்வமான வேலை பெரும்பாலும் மேலோட்டமாகவே இருக்கும்; அது எந்த ஆழத்தையும் தொடாது; எதுவும் அதற்கு சவால் விடாது. ஆகவே, அது அலுப்பைத்தான் கொடுக்கும்; அது மகிழ்ச்சி அற்ற வேலையைத் தான் உண்டு பண்ணும். உங்களுடைய தனித்தன்மைக்கு, திறமைக்கு சவால் விடப்பட்டால்தான், அது எப்பொழுதும் மகிழ்ச்சியைத் தரும். நீங்கள் உங்களுடைய திறமையை உபயோகித்து, அந்த சவாலை ஏற்க வேண்டும். அப்பொழுது, அறிவும், உணர்வும் கலந்து உங்களிடம் பேரானந்தத்தை உண்டு பண்ணும்.

ஒருவனிடம் ஒன்று மட்டும் செயல்பட்டு, அடுத்தது இறந்த நிலையில் இருந்தால்; அவன் பிளவுபடுகிறான். அடுத்து, அந்த வேலை செய்யும் ஒரு பகுதி கூட சரியாக வேலை செய்யாது. ஏனென்றால், அதனுடைய வேலைச்சுமை அதிகமாகிறது. தனித்தன்மை என்பது ஒரு முழுமை. அதில் எந்தப் பாகுபாடும் கிடையாது. உண்மையில், அந்த முழு தனித்தன்மையே ஒரு சக்தி நீரோட்டம்தான். சக்தியை தர்க்க ரீதியாகப் பயன்படுத்தினால், அது அறிவாகிறது. அதைத் தர்க்க ரீதியாக உபயோகப்படுத்தாமல், உணர்வுப் பூர்வமாக உபயோகித்தால், அது இதயமாகிறது. இப்படி அது இரண்டு விதத் தன்மையில் செயல்படுகிறது. அதாவது ஒரே சக்தி இரண்டு வித வழிகளில் ஓடுகிறது.

தர்க்கம் மட்டும் இருந்து, இதயம் இல்லாவிட்டால், உங்களால் ஒருபோதும் ஓய்வாக இருக்க முடியாது. ஓய்வு என்றால், உங்களிடம் இப்பொழுது உள்ள அதே சக்தி வேறுவழியில் வேலை செய்கிறது. ஓய்வு என்றால் வேலையற்ற நிலை என்று ஒருபோதும் அர்த்தமாகாது. அதன் அர்த்தம் வேலை வேறு வழியில் என்பதாகும். வேலை அதிகமாகச் செய்த பகுதி இப்பொழுது ஓய்வு பெறுகிறது.

ஒருவன் தொடர்ந்து அறிவு வழியில் வேலை செய்தால், அவன் ஒரு போதும் ஓய்வு அடைவது கிடையாது. அவனுடைய

மனம் தொடர்ந்து ஒரே பாதையில் வேலை செய்வதால், அவனால் அவனுடைய சக்தியை வேறு வழியில் செலுத்த முடியவில்லை. இது அவனிடம் அலுப்பை ஏற்படுத்துகிறது. எண்ணங்கள் மேலும் மேலும் வந்து, போய்க் கொண்டிருக்கும். சக்தி பரவலாக்கப்பட்டு இழக்கப்படுகிறது. உங்களால் அதை அனுபவிக்க முடியாது. மாறாக, இந்தத் தேவையற்ற பளுவால், நீங்கள் விரக்தியையும், வேதனையையும் அடைகிறீர்கள். ஆனால், மனமோ அல்லது அறிவோ, அதன் தவறில் இல்லை. வேறு ஒரு பரிமாணம் கொடுக்காத காரணத்தால் அல்லது மாற்றுக் கதவைத் திறக்காத காரணத்தால், உங்களுடைய சக்தி உங்களுக்குள்ளே சுற்றிச் சுற்றி வருகிறது.

சக்தி ஒருபோதும் தேக்கமாக இருக்காது. எது தேங்கி நிற்காதோ, எது எப்பொழுதும் ஓடிக்கொண்டே இருக்குமோ, அதன் பெயர்தான் சக்தி. ஓய்வு என்பது தேங்கி நிற்கும் அல்லது தூங்கும் சக்தியைக் குறிப்பிடாது. விஞ்ஞான ரீதியாக, ஓய்வு என்றால், வேறு ஒரு வழியாக இப்பொழுது சக்தி ஓடுதல் என்று அர்த்தம்– அது இன்னொரு அறைக்குள் சென்று விட்டது.

ஆனால், அந்த அறைகள் வேறாக இருந்தாலும், அவை எதிர்த்தன்மையில் இல்லாமல் இருந்தால், நீங்கள் முன்பு போலவே இருப்பீர்கள்; உங்கள் மனம் ஒருக்காலும் ஓய்வு எடுக்காது. உதாரணமாக, நீங்கள் ஒரு விஞ்ஞான பிரச்சினையில் வேலை செய்தால், நீங்கள் ஒரு நாவலைப் படித்து ஓய்வில் இருக்கலாம். இப்பொழுது வேலை வேறு விதமாக இருக்கிறது. ஒரு விஞ்ஞான பிரச்சினையில் வேலை செய்வது என்பது, மிகவும் அலுப்புத் தரக் கூடிய, செயல் தீவிரம் கொண்டது. மாறாக, ஒரு நாவலைப் படிப்பது என்பது ஓய்வானது, மென்மையானது; அது பெண் தன்மையை ஒத்ததாகிறது. நீங்கள் அதே மனதை உபயோகித்தாலும், அது மாறுபட்டு எதிர்நிலையில் இருப்பதால், உங்களால் ஓய்வில் இருக்க முடியும். இப்பொழுது நீங்கள் எதையும் தீர்க்கவில்லை, நீங்கள் தீவிரமாக இல்லை; நீங்கள் வெறும் ஏற்புடையவர்களாக

இருக்கிறீர்கள்- எதையோ ஏற்றுக்கொண்டு. வேலையின் உணர்வுகளைத் தவிர, மற்றவை அனைத்தும் ஒன்றே; இங்கு இரு மாறுபட்ட தன்மைகள் உபயோகத்துக்குக் கொண்டு வரப்படுகின்றன.

அதைப் போல, நாம் விளையாடும்பொழுது நம்முடைய அறிவும், தர்க்கமும் நம்மோடு விளையாட வருவதில்லை; அதற்கு மாறுபட்ட நிலைதான் ஏற்படுகிறது. அங்கு உங்களுடைய பகுத்தறிவற்ற பகுதிதான் பங்கு கொள்ளுகிறது. அறிவு, அன்பால் சமப்படுத்தப்படுகிறது; அதைப் போல அன்பு, அறிவால் சமப்படுத்தப்படுகிறது. சாதாரணமாக, இப்படிப்பட்ட சமப்படுத்துதலை நீங்கள் வேறு எங்கும் காண முடியாது.

ஒருவர் காதல் வயப்பட்டிருக்கும்பொழுது, மற்றைய அறிவுப்பூர்வமான வேலைகளை அலட்சியப்படுத்துதலானது, ஒருவித அலுப்பையே உண்டுபண்ணும். காதல்கூட, 24 மணி நேர வேலையானால், இறுக்கத்தையே உண்டு பண்ணும். ஒன்றின் சவால் அல்லது எதிர்ப்பு இழக்கப்படும் போது, அதில் ஏற்படும் மகிழ்ச்சியும் இழக்கப்படுகிறது; அதில் உள்ள விளையாட்டுத்தனமும் இழக்கப்படுகிறது. பிறகு அது ஒரு வேலையாகி விடுகிறது. அதைப்போல, ஒரு அறிவுள்ளவன் தன்னுடைய இயல்பான உணர்வு மயமான தன்மையை அலட்சியப்படுத்தும்பொழுது, இதே நிலைதான் நிகழுகிறது.

ஆகவே, இந்த இருவேறு பகுதிகளும், இருவேறு துருவ நிலைகளும் சமநிலையில் இருக்கவேண்டும். அப்போதுதான், ஒருங்கிணைந்த தனித்தன்மையுள்ள மனித குலம் பிறக்க முடியும். இல்லாவிட்டால், அது வெறும் உணர்வுப் பூர்வமாகவோ அல்லது அறிவுப்பூர்வமாகவோ மட்டும் இருந்துவிட்டால், அது ஒரே வியாதித்தன்மையில்தான் இருக்கும். இதயத்துக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுப்பதால், கிழக்கு முடக்கப்பட்டு இருக்கிறது; அதைப்போல, அறிவுக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுப்பதால், மேற்கு முடக்கப்பட்டு இருக்கிறது. இரண்டுமே, அழிவைத்தான் அடைந்திருக்கின்றன.

இப்பொழுது மேலைநாட்டில் உள்ள புதிய தலைமுறையினர், அறிவு மற்றும் பகுத்தறிவுக்கு எதிராக செய்யப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள். அவர்களது முழு மனமும், எப்பொழுது ஒழுங்கற்ற அல்லது பகுத்தறிவுக்கு ஒவ்வாத செயலை நோக்கிச் சென்று கொண்டு இருக்கிறது. இயற்கை எப்பொழுதுமே, தன் பழியைத் தீர்த்துக் கொள்ளும். அது மிகவும் பழிதீர்க்கும் தன்மையது. அது ஒருபோதும் மன்னிப்பதோ, மறப்பதோ இல்லை. அதனுடைய இயல்பான சில பகுதிகள் அடக்கப் பட்டாலோ அல்லது நிறைவேற்றப் படாமல் இருந்தாலோ, அது, அதன்பழியைத் தீர்த்துக் கொள்ளும். மேலே நாட்டில், பகுத்தறிவற்ற பகுதி வஞ்சம் தீர்த்துக் கொள்ளும்; கீழை நாட்டில், பகுத்தறிவு மற்றும் விஞ்ஞானப்பகுதி அந்த வேலையைச் செய்கிறது. இங்கு விஞ்ஞானம், கம்யூனிஸம் மற்றும் பகுத்தறிவு போன்றவை இப்பொழுது முக்கியத்துவம் பெறுகின்றன. மாறாக, பகுத்தறிவற்றது, மதம் மற்றும் ஒழுக்கம் போன்றவை தன் வலிமையை இழந்துகொண்டு வருகின்றன. ஏனெனில், பகுத்தறிவு பலகாலமாக அடக்கப்பட்டு வந்திருக்கிறது.

என்னைப் பொறுத்தவரையில் பகுத்தறிவுக்கும், பகுத்தறி வற்றப் பகுதிக்கும் இடையே உள் சமச்சீர்நிலை இல்லாமல், மனிதகுலமோ அல்லது மனித நாகரிகமோ ஆரோக்கியமாக இருக்க முடியாது. நான், அந்த இரண்டையும் வெவ்வேறாகக் கருதவில்லை; அவை இரண்டும் ஒரே சக்தியின் இருவேறு துருவநிலைகள்தான்.

எல்லா சக்திகளுமே, இரு மாறுபட்ட நிலைகளில்தான் இருக்கும். தன்னைத் தானே உண்டாக்கிக் கொள்ள சக்திக்கு, தன்னிடத்தே ஒருவித உள் இறுக்கம் தேவையாக இருக்கிறது. அந்த இரு மாறுபட்ட துருவ நிலைகள், மின்சாரத்தில் உள்ளது போல 'பாசிட்டிவ்வாகவும்' நெகட்டிவ்வாகவும் (Positive, Negative) அல்லது காந்தத்தில் வடக்கு, தெற்கு துருவ நிலையாகவும், மிருகங்களில் ஆண், பெண்ணாகவும் இருக்கிறது. ஆனால், ஒரே ஒரு துருவ நிலையில் மட்டும், சக்தி ஒரு போதும் இருக்காது;

அது இயங்காது. அது, சவால் விடுவதற்கு, தேவையான இறுக்கத்தைத் தன்னிடத்தே உண்டுபண்ணிக் கொள்ள அதற்கு ஒரு மாறுபட்ட நிலை தேவையாக இருக்கிறது.

ஆனால், மனித சமூகத்தில், அந்த மாறுபட்ட துருவ நிலை எப்பொழுதும் அடக்கப்பட்டுத்தான் வந்திருக்கிறது- ஒன்று அறிவு அடக்கப்பட்டிருக்கும் அல்லது உணர்வு அடக்கப்பட்டிருக்கும். இதுவரைக்கும் ஒரு முழுமையான உண்மையான சமூக வெளிப்பாடு வாழ்க்கையில் நடக்கவே இல்லை. ஏனெனில், அறிவு சார்ந்த நாகரிகமோ அல்லது உணர்வு சார்ந்த நாகரிகமோதான் இதுவரை இருந்து வந்திருக்கிறது. ஒரு முழுமையான நாகரிகம் என்பது, இரு மாறுபட்ட துருவ நிலைகளும் ஒருங்கே செயல்பட, மனிதகுலம் ஒருங்கிணைந்து நடந்து கொள்வது- இது இதுவரை பிறக்கவில்லை.

ஆகவே, ஒரு துருவ நிலையை எப்பொழுதும் மற்றொன்றைக் கொண்டு சமப்படுத்தவும். இப்படி ஒரு துருவ நிலையை, நீங்கள் அதிக உபயோகத்துக்குக் கொண்டு வந்தால், அடுத்த மாறுபட்ட துருவநிலையும், முன்னதின் ஓய்வு நிலையாகி அதன் செயல்பாடு, அதற்கு ஏற்ப தூண்டப்படும். ஒருவன், தூங்கும் நிலையிலிருந்து விழிப்பு நிலைக்கு, இயல்பாக சுலபமாக எப்படி செல்லுகிறானோ, அதைப் போல, உங்களுடைய மனம் ஒரு நிலையிலிருந்து மறுநிலைக்கு, தன்னைச் சுலபமாக மாற்றிக் கொள்ள வேண்டும். ஒருவன் ஒரு நிலையில் மிகவும் நெருக்கமாக இருந்து, அடுத்த நிலைக்கு எப்பொழுதும் திறப்பாக இருக்கவேண்டும். இப்படி நிகழ்ந்தால், வாழ்வு ஒருக்காலும் சோர்வாக இருக்காது; அது ஆனந்தமாகவே இருக்கும்.

துரதிர்ஷ்டவசமாக, நாம் ஒரு நிலையிலேயே மிகவும் ஈடுபட்டு, சூழப்பட்டு இருக்கிறோம். இப்படி ஏன் ஒரே நிலையில் ஆக்ரமிக்கப்பட வேண்டும்? ஏனென்றால், அதில் நமக்குப் பயிற்சி அளிக்கப்பட்டதால் தான். இது மிகவும் சுலபம். உங்களுடைய பிரக்ஞையான முயற்சி ஏதும் இல்லாமல்,

பழக்கத்தினால், உங்களுக்கு ஏற்கெனவே தெரிந்த அந்தப் பாதையில் உங்களால் சுபலமாக செயல்பட முடியும்- பிரக்ஞை மனம் தேவையே இல்லை. ஆனால், நீங்கள் ஒரு துருவ நிலையிலிருந்து, இன்னொரு மாறுபட்ட துருவ நிலைக்கு மாறும்பொழுது, உங்களுடைய முழுமையான செயல்பாட்டை மாற்றிக் கொள்ளும்பொழுது, நீங்கள் ஒரு புதிதாக கற்றுக்கொள்ளுபவன் போல் ஆகிறீர்கள். இந்த மாறுபட்ட வெளியில், நீங்கள் ஒரு திறமைசாலி இல்லை. அதில் நீங்கள் பயிற்சி பெறவில்லை. ஆகவே, நீங்கள் அதிலிருந்து தப்புவதற்கு முயலுகிறீர்கள். இப்படிச் செய்வதால், உங்களுக்கு ஏற்கெனவே பரிச்சயமான துருவ நிலைக்கு சுமை ஏற்றுகிறீர்கள்.

இப்படி அதிக பளுவை ஏற்றுவதுதான் பிரச்சினையே. 24 மணி நேரமும், ஒருவன் திறமைசாலியாக இருக்கக் கூடாது. ஒருவன், தனக்குத் தெரியாத, தனக்கு பரிச்சயமில்லாதவற்றிலும், சில காரியங்களைச் செய்ய வேண்டும். சில சமயம், அவன் ஒரு குழந்தையைப் போல, வெகுளித்தனமாக, முதிர்ச்சி யடையாது, தெரியாத சிலவற்றில் விளையாட வேண்டும்.

ஒவ்வொரு அறிஞனிடமும், ஒரு குழந்தை உண்டு. தன்னுள்ளே குழந்தைத் தனம் இல்லாத அறிஞனே கிடையாது. இந்தக் குழந்தைத் தனம்தான், அவனுடைய சகல சக்திக்கும் ஆதாரம்! அவனுள்ளே இருக்கும் இந்தக் குழந்தையால், சில சமயம் அவன் புதுமைத்தன்மை யுடையவனாகிறான். சில சமயம் முழுவதும் வெகுளித் தன்மையுடையவனாகிறான். ஒரு கணக்கியல் நிபுணன் சிலசமயம் கவிஞனானால், அது ஒருபோதும் இழப்பாகாது. அவன், புதுமை நிறைந்த அனுபவத்துக்கு சுத்தமான மனத்தோடு தன் கணக்கை மீண்டும் தொடுவான்.

ஒருவன், தன்னுடைய கடுமை நிறைந்த தொழில் மனத்தோடு, எதையும் உருப்படியாகக் கண்டுபிடித்ததாகவோ, எதையும் புதிதாக வெளியிட்டதாகவோ வரலாறு இல்லை. ஒருவன் ஒரு குழந்தை மனத்தோடு, ஒரு வெளி ஆள் போல, ஒன்றினுள்

நுழையும் பொழுதுதான். மகத்தான கண்டுபிடிப்புகள் நிகழ்ந்திருக்கின்றன. ஒரு குழந்தை மனம்தான் கண்டுபிடிப்புக்கு ஏற்றது; வயதானது அல்ல. ஒரு வயதான மனிதன் திறமை சாலியாக இருக்கலாம். ஒரு திறமைசாலியால் புதுமையைக் கண்டுபிடிக்க முடியாது. அவன் ஒரே காரியத்தை மீண்டும் மீண்டும் செய்வான்; அதில் அவன் நிபுணனாக இருக்கலாம்; ஆனால் அவனால் புதுமை எதையும் செய்ய முடியாது. ஒரு தொழில் நிபுணனால், விஷய ஞானத்தில் புதுமையைச் சேர்க்க முடியாது. ஏனென்றால், அவன் அறிந்தது மிகவும் அதிகம். ஆகவே, அவனால் புதுமை எதையும் பார்க்க முடியாது. அதற்கு எப்பொழுதும் அவன் அந்நியனாகவே இருப்பான். தொழில் நிபுணர்கள் எப்பொழுதும் பழமையில் ஊறியவர்கள்; அவர்களால் புரட்சிப் படைப்பை உண்டு பண்ண முடியாது. அவர்களால் அப்படி இருக்கமுடியாது. ஏனென்றால் அவர்கள் தூக்க முடியாத பளுவை, தூக்கிக் கொண்டு இருக்கிறார்கள்.

எப்பொழுதாவது, ஒரு விஞ்ஞானி கவிஞனாக மாறும் பொழுது, அல்லது ஒரு கவிஞன், கணக்கியலனாக மாறும் பொழுது, அல்லது ஒரு வியாபாரி ஓவியனாக மாறும்பொழுது, அல்லது ஒரு ஓவியன், சந்நியாசியாக மாறும்பொழுது, ஏதோ புதுமை பிறக்கிறது. இப்படிப் புதுமையைப் பெறுவது என்பது புனிதமானது, பேரானந்தமானது. இல்லாவிட்டால், உங்களுடைய தினசரி வாழ்க்கை அலுப்பு நிறைந்ததாகிவிடும். ஒரு மனிதனால், இயந்திரம் போல வேலை செய்ய முடியாது. அவனால், ஒன்றையே உண்டாக்க முடியாது. ஒன்றையே இயந்திரத்தனமாக முடிவில்லாது செய்து கொண்டு இருக்க முடியாது. அப்படி அவன் செய்து கொண்டு இருந்தால், அவன் இயல்பாக இறப்பதற்கு முன்பே, இறந்து விடுவான். இறப்பு வரும் பொழுதுதான், தான் வந்து வாழ்ந்து கொண்டிருப்பதை அவன் அறிவான்.

நீங்கள் ஒரு மனித இயந்திரம் போல செயல்பட்டால், உங்களுக்குப் பதிலாக, ஒரு மனித இயந்திரமே உங்கள் இடத்தை நிரப்பக் கூடிய அபாயம் விரைவில் ஏற்படக்கூடும். இதனால்,

நீங்கள் உங்களுடைய அமைதியை இழப்பீர்கள். ஏனெனில், அந்த மனித இயந்திரம், உங்களைவிட மிகத்திறமையாக, தவறு இல்லாமல் வேலை செய்யக்கூடியதாக இருக்கும்.

சமூகத்துக்கு, உங்களுடைய தனித்தன்மை தேவையில்லை. அதற்குத் தேவை உங்களுடைய இயந்திரத்தனமான திறமை. ஒருவன் எந்த அளவுக்கு மனிதத்தன்மை நிறைந்தவனாக இருக்கிறானோ, அந்த அளவுக்கு, அவனுடைய உபயோகம், இந்த சமூகத்தைப் பொறுத்தவரை குறைவாக இருக்கும்- மாறாக, அவன் அதிக அபாயகரமாக விளங்குவான். நம்முடைய முழு நாகரிகத்தின் அமைப்பும் மற்றும் இதுவரை உலகத்தில் இருந்த சகல நாகரிகமும், மனிதனை இயந்திரத்தனமாக்குவதிலேயே குறியாக இருந்தன. அப்பொழுது அவன் திறமையானவனாகவும், கீழ்ப்படிந்தும், அபாயமற்று செயல்படுவான். இல்லாவிட்டால், புதுமையில் ஆர்வம்கொண்ட, விசாரிக்கும் தனமை கொண்ட, தேடும் தன்மை நிறைந்த, புதிய கண்டுபிடிப்பில் ஈடுபட நினைக்கும் மற்றும் தெரியாதனுள் நுழைந்து அதை வெளிப்படுத்தும் செயல்திறன் மிக்க மனம் எப்பொழுதும் தொந்தரவைத் தான் ஏற்படுத்தும். அந்த ஒரு ஒழுங்குபடுத்தப் பட்ட சூழ்நிலையில், அவனால் ஓய்வாக இருக்க முடியாது.

குழந்தை பிறந்த உடனேயே, அதனுடைய தனித்தன்மையை இந்த சமூகம் கொன்றுவிடுகிறது. அந்தக் குழந்தை தன் ஏழு வயதை முடிக்கு முன்பே, அதனுடைய தனித்தன்மை முழுமையாக அழிக்கப்பட்டுவிடுகிறது. இந்த சமூக ஒழுங்கமைப்பு அந்தக் குழந்தையின் தனித்தன்மையை அழிப்பதில் வெற்றியடையாத நிலையில் தான், ஒருவன் தன் தனித்தன்மையோடு வெளியே வருகிறான். ஆனால், இது மிகவும் அபூர்வம்.

மனிதனுடைய தனித்தன்மையை அழித்து, அவனை ஒரு இயந்திரத்தனமாக ஆக்குவதே ஒவ்வொரு சமூக அமைப்பின் குறிக்கோளாக இருக்கிறது. ஒருவனின் இயல்பான, கணத்துக்குக் கணம் செயல்படும் தன்மையும், அவனுடைய உத்வேகத்தையும்,

இயல்பான உந்துதலையும் கொன்று. அவனை ஒரு இயந்திரமாக்கும் தொழிற்சாலைகளை கல்லூரிகளும், பல்கலைக் கழகங்களும். அப்பொழுதுதான், இந்த சமூகம் அவனோடு ஒத்துப் போகும். அவனை நம்பும். அவனால் என்ன செய்ய முடியும், அவன் என்ன செய்வான் என்று இப்பொழுது சமூகத்துக்குத் தெரியும் -அவனை முன்கூட்டியே தீர்மானிக்க முடியும். நம்மால் ஒரு கணவனை, மனைவியை, டாக்டரை, வக்கீலை மற்றும் ஒரு விஞ்ஞானியை கணிக்க முடியும். அவர்கள் யார், அவர்கள் எப்படி செயல்படுவார்கள் என்பது நமக்குத் தெரிவதால், நாம் அவர்களோடு இறுக்கமில்லாமல், இயல்பாகப் பழகுகிறோம். ஆனால், ஒருவன் உயிர்த்தன்மையின் செயல்பாட்டில், அப்போதைக்கு அப்போது செயல்புரிவனாக இருந்தால், அவனோடு ஓய்வாக அணுகுவது என்பது இயலாத காரியம். ஏனென்றால், அவன் அடுத்து என்ன செய்வான் என்பது நமக்குத் தெரியாது- அவன் ஒரு தீர்மானிக்க முடியாதவன்.

பாதுகாப்பின்மையின் மூலம் எப்பொழுதும் தீர்மானிக்க முடியாத தன்மை அதுதான். தீர்மானிக்க முடியாத ஒரு கணவனோடு, மனைவி ஓய்வாக இருக்க முடியாது. தீர்மானிக்க முடியாத அந்தக் கணத்திலேயே, அவனை நிர்வகிக்க முடியாது; அவனை நம் விருப்பப்படி செயல்படுத்த முடியாது- முன்கூட்டியே தீர்மானிக்க முடியாத யாருடனும், யாரும் இணக்கமாக இருக்க முடியாது- தீர்மானிக்க முடியாத மகனோடு, ஒரு தந்தை கூட.

ஆனால், இந்தத் தீர்மானிக்க முடியாதவன் மட்டுமே, உண்மையான சுய மகிழ்ச்சியில் இருப்பவன்; அவன் வேறு யாரைப் போலவும் இருக்க மாட்டான். வாழ்வு என்பது முன்கூட்டியே தீர்மானிக்க முடியாதது. நிர்வகிக்க முடியாதது. வாழ்வின் இயல்பே, தெரியாததை நோக்கி கணத்துக்குக் கணம் எப்பொழுதும் நகர்ந்து செல்லுவதுதான்- தெரியாததற்கு. அது ஒரு முழுத் திறப்பாகவே இருக்கிறது. தெரியாதன்த விடக் குறைவாகவோ அல்லது கூடுதலாகவோ அல்ல.

நீங்கள் உங்களுடைய வாழ்வைப்போல, திறப்பாக இருந்தால், உங்களால் உடல் ரீதியாக, அறிவுப்பூர்வமாக, உணர்வுப்பூர்வமாக மற்றும் ஆத்மிக ரீதியாக சகல பரிமாணங்களிலும் உண்மையாக வாழ முடியும். அதில் நீங்கள் முழுமையாக வாழுவீர்கள்; அப்பொழுது உங்களுடைய வாழ்வில் பிளவோ அல்லது வேற்றுமையோ இருக்காது. ஒரு அறையிலிருந்து, அடுத்த அறைக்குப் பிறகு அடுத்த அறைக்கு என்று உங்களுடைய சக்தி இயல்பாகப் பாயும். அப்பொழுது உங்களுடைய சக்தி ஓட்டத்துக்கு எந்தத் தடங்கலும் ஏற்படாது. அது, ஒரு குறிப்பிட்ட வழியில் செல்ல, எதுவும் தூண்டாது. அது ஆறு போல இயல்பாக ஓடும். அப்பொழுது, நீங்கள் எப்பொழுதும் ஓய்வாகவும், புதுமைப் பொலிவுடனும் இருப்பீர்கள். நீங்கள் ஒரு குறிப்பிட்ட வேலைக்கு மீண்டும் திரும்பும் பொழுது, ஒரு புத்துணர்ச்சியுடனும், புதுமைத் தன்மையோடும் திரும்பி, அதைப் புதிதாக அணுகுவீர்கள். இந்த புதுமைத்தன்மையும், புத்துணர்ச்சியும், நீங்கள் மாறுபட்ட நிலையில் ஓய்வாக இருத்தலிருந்துதான் வருகிறது என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

நான் அறிந்தவரையில், உங்களுடைய அதிகப்படியான அறிவுப் பூர்வமான வேலையால் இந்தப் பிரச்சினை வந்ததில்லை. ஆனால், மாறுபட்ட துருவநிலையில், முக்கியமாக உணர்வுப்பூர்வமான நிலையில், நீங்கள் சிறிது கூட வேலையே செய்யாததால் தான், இது ஏற்பட்டது. பகுத்தறிவு உணர்வால்தான் சமப்படுத்தப்படுகிறது. நீங்கள் தர்க்கத்தில் வேலை செய்யும் பொழுது, அடுத்து உங்களால் செருமி அழ முடியவில்லை என்றால், நீங்கள் சிக்கலில் தான் மாட்டிக் கொள்ளுவீர்கள். உங்களுக்குச் சிரிக்கத் தெரியாமல், வெறும் வாதம் புரிய மட்டும் தான் தெரிந்திருந்தால், நீங்கள் சிக்கலையும், தொல்லையையும் வரவழைத்துக் கொள்ளுகிறீர்கள்.

நீரோட்டம் போல வாழ்க்கையை உடைய மனிதர்களை அவர் எந்த மாதிரியானவர் என்று கண்டுபிடிப்பது மிகவும் கடினம்.

ஒரு ஜென் கதை:

புகழ்பெற்ற குருவான ஒரு துறவி இறந்துவிட்டார். அவருடைய முக்கிய சீடரைக் கொண்டு, அவரை அனைவருக்கும் தெரியும். அவர் இறந்த பிறகு, ஆயிரக்கணக்கானவர்கள், அவருக்கு இறுதி அஞ்சலி செய்ய வந்தார்கள். அப்பொழுது, அந்த முக்கிய சீடர், தேம்பி அழுவதைக் கண்டு அவர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். அவர் ஏன் இப்படி அழுகிறார் என்று அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. பற்றற்றவன், அழக்கூடாது– அதுவும், ஆத்மாவுக்கு அழிவில்லை என்று கூறிக்கொண்டிருக்கும் ஒருவன்! கூட்டத்திலிருந்து ஒருவன் வந்து அந்த சீடனிடம், "எதற்காக அழுகிறீர்கள்?" என்று கேட்டான்.

துறவி, "என்னால் எப்பொழுதும் 'ஏன்' என்ற கேள்விகளோடு வாழ முடியாது. 'ஏன்' என்ற கேள்வி இல்லாத நேரமும் உண்டு. நான் இப்பொழுது அழுகிறேன். அவ்வளவுதான்" என்று பதில் சொன்னார்.

இருந்தும் அவர்கள், "நீங்கள் எப்பொழுதும் ஆத்மாவுக்கு அழிவு கிடையாது என்று சொல்லி வந்தீர்கள். பிறகு ஏன் அழுகிறீர்கள்?" என்று மீண்டும் வற்புறுத்திக் கேட்டார்கள்.

அவர், "இப்பொழுதும் நான் அப்படித்தான் கூறுகிறேன். ஆனால், நான் அழுவதை, அதனால் தடுத்து நிறுத்த முடியாது," என்றார்.

இது தர்க்க ரீதியற்றது போலத்தான் தோன்றும். ஆத்மாவுக்கு அழிவில்லை என்றால், ஒருவன் அழக்கூடாது. ஆனால், அந்தத் துறவி, "என் ஆத்மாவே அழும்பொழுது, என்னால் என்ன செய்ய முடியும்? என்னால் எதுவும் செய்ய முடியாது. எது என்னிடம் வந்தாலும், நான் அதனுடன் ஒன்றாகி விடுகிறேன். என் கண்களில் கண்ணீர் வருகிறது. நான் அத்துடன் ஒன்றாகி விடுகிறேன்," என்று சொன்னார்.

இப்பொழுது, இந்தத் துறவியின தன்மையை நம்மால் வகைப்படுத்த முடியாது. ஆத்மா அழிவற்றது என்று நம்பும்

ஒருவன் அழுவதை, நம்மால் புரிந்து கொள்ள முடியாது. மாறாக ஆத்மா அழிவற்றது என்று சொல்லும் அவன், அழாமல் இருந்தாலும், அவனை நம்மால் புரிந்துகொள்ள முடியாது! அது சரிதான். ஆத்மாவுக்கு அழிவில்லைதான்; ஆனால், அவன் யாருக்காக அழுவது? யாருமே இறக்கவில்லை. ஆனால், அந்தப் பிரதம துறவி, "ஆத்மா அழிவதில்லைதான்; இருந்தும் நான் அழுது கொண்டிருக்கிறேன்" என்று கூறுகிறார். அங்கு எந்த 'ஏனும்' கிடையாது. ஆனால், அவர் கண்களில் இருந்து நீர் கொட்டுகிறது.

மேலும் மக்கள் அவரிடம், "உங்களுடைய குருநாதரின் உடலுக்காக அழுகிறீர்களா?" என்று கேட்டார்கள்.

அந்தத் துறவி, "ஆமாம், அது அவருடைய உடலுக்காக இருக்கலாம். அவர் உடலும் அழகானதுதான். அதை என்னால் மீண்டும் பார்க்க முடியாது. ஆமாம். நான் அந்த உடலுக்காகத்தான் அழுகிறேன்," என்றார்.

"ஆனால், நீங்கள் ஒரு ஆத்மிகவாதி."

அப்படி வாதப்பிரதிவாதங்கள் சென்று கொண்டே இருந்தன.

தங்களைக் குழப்புவதாக, மக்கள் அவர்மேல் குற்றம் சாட்டினர்.

அதற்கு அவர், "நானே குழப்பத்தில்தான் இருக்கிறேன். வாழ்வு அப்படிப்பட்டது! ஆத்மா முக்கியமானதுதான்; ஆனால் அதைப் போலத்தான் என் கண்ணீரும். வாழ்வு அந்த அளவுக்கு மாறுபட்டு இயங்குகிறது. அது எப்பொழுதும் மாறுபட்ட நிலையில்தான் வாழ்ந்து கொண்டு இருக்கிறது. ஆகவே, நானே குழப்பத்தில்தான் இருக்கிறேன். அந்தக் குழப்பத்திலேயே, நான் ஓய்வாகவும் இருக்கிறேன். நான் என் மாறுபாட்டில், ஓய்வாக இருக்கிறேன். ஆகவே, நான் ஒருபோதும் இறுக்கத்தில் இருக்கவில்லை. நீங்கள் என் கண்ணீரைப் பார்க்கிறீர்கள்; நீங்கள் என்னுடைய செருமலைப் பார்க்கிறீர்கள். ஆனால், நான்

ஓய்வில்தான் இருக்கிறேன்; இறுக்கமற்று இருக்கிறேன்; ஆனந்தமாக இருக்கிறேன்," என்றார்.

ஆகவே, மாறுபட்ட நிலையை நீங்கள் மறுக்கக் கூடாது. நீங்கள் எந்த அளவுக்கு, உங்களுடைய பகுத்தறிவை உபயோகப்படுத்துகிறீர்களோ, அந்த அளவுக்கு, அதை சமன் செய்ய நீங்கள் பகுத்தறிவுக்கு உட்படாத பகுதியையும் உபயோகிக்க வேண்டும். எப்பொழுது அது சமன் செய்யப்படுகிறதோ, அப்பொழுதே நீங்கள் எடையற்று இருப்பதை உணர்வீர்கள். உங்களுடைய சுதந்திரத்தன்மையை உணருவீர்கள். ஒரு நிலையின் எடை, அடுத்த நிலையின் எடையால் சமப்படுத்தப்படுகிறது; அப்பொழுது ஒரு சமச்சீர் நிலை ஏற்படுகிறது. நீங்கள் இப்பொழுது எடையற்று சமநிலையில் இருக்கிறீர்கள். இல்லாவிட்டால், நீங்கள் பளுவை, எடையை எப்பொழுதும் உணர்ந்தவாறே இருப்பீர்கள். இது மேலும் மேலும் கூடிக் கொண்டே சென்று, ஒரு கட்டத்தில் நீங்கள் அந்தப் பளுவைத் தவிரே, வேறு எதையும் உணரமாட்டீர்கள். நீங்கள் அங்கே ஒருபோதும் இல்லை; அந்தப் பளுவைத்தான் நீங்கள் உணருவீர்கள். அதைத்தான், நீங்கள் பிரக்ஞையாக உணருவீர்கள். அது இல்லாமல், வேறு எதுவாகவும் நீங்கள் இருக்க முடியும் என்பதை உங்களால் நினைக்க முடியாத அளவுக்கு, அந்தப் பளு தொடர்ந்து உங்களோடு இருந்துவரும்.

யாருமே பளுவற்று இருக்க முடியாது. ஆனால், ஒருபக்க பளுவை, மறுபக்கப் பளு சமப்படுத்த வேண்டும். இரண்டுநிலை எடைகள் சம்பந்தப்படுத்தப்பட்டால், பளுவே கிடையாது. சமப்படுத்தாத எடையுள்ள மனம் உண்மையிலேயே எடையற்ற மனமாகாது; எடையற்ற மனம் என்பது சமப்படுத்தப்பட்ட மனம்தான்.

நான் எப்பொழுதும் பகுத்தறிவை ஆதரிப்பவன்; அதே சமயம் அதனோடு பகுத்தறிவற்றது வாழ முடியாது என்பதும் எனக்குத் தெரியும். ஆனால், நான் இந்த இரண்டிற்கும் ஒரு

தொடர் சமச்சீர்நிலை ஏற்பட்டுக் கொண்டே இருக்க வேண்டும் என்று அறிவுரை கூறுகிறேன். நீங்கள் பளுவை உணரும்பொழுது, உங்களுடைய சமச்சீர்நிலை இழக்கப்பட்டு விட்டது என்பதையும் உணருங்கள். உடனே அதற்குத் தேவையான மாற்று எடையைப் போட்டு, அந்தச் சமச்சீர்நிலையை மீண்டும் ஏற்படுத்திக் கொள்ளுங்கள். உங்களுடைய அறிவின் வேலை அதிகமானால், அறிவற்ற செயல் சிலவற்றைச் செய்யுங்கள். இதுதான் மருந்து!

தியானம் பகுத்தறிவுக்கு உட்பட்டதல்ல; அது பகுத்தறிவுக்கு மாறானதுதான். யாராவது, தியானத்தைப் பற்றி விளக்குங்கள் என்று என்னிடம் கேட்டால், என்னால் சரியாக விளக்க முடியாது; ஏனென்றால் நீங்கள் தியனத்தை அறிந்துகொள்ள எந்த வழியும் கிடையாது. அது உங்களுடைய பகுத்தறிவுக்கோ, தர்க்கத்துக்கோ, விவாதத்திற்கோ மற்றும் புரிந்து கொள்ளு தலுக்கோ உட்படாதது. அதை அறிந்துகொள்ள ஒரே வழி, நீங்களே அதைச் செய்துதான் தெரிந்து கொள்ள வேண்டும்.

தியானத்தைப் பற்றி, தங்கள் வாழ்வு முழுவதும் படித்து, அதைப் பற்றிச் சரியாகத் தெரியாத மக்கள் பலர் உள்ளனர். அது அவர்களால் முடியாது. கிருஷ்ணமூர்த்தி, அதைப் புரிந்து கொள்ளுதலைப் பற்றி தியானத்திற்கு, புரிந்துகொள்ளுதல் சமம் என்று சொல்ல முயன்றிருக்கிறார்- அதாவது தியானத்தை வெறுமனே புரிந்து கொள்ளலாம் என்று. மாறாக, தியானத்தை, புரிந்து கொள்ளுதல் சமன் செய்ய வேண்டும். ஏனென்றால், தியானம் மறு துருவ நிலையில் இருக்கிறது. நீங்கள் தியானத்தை அறிந்து கொள்ளத் தேவையில்லை என்று நினைத்துச் செய்தால் தான், நீங்கள் அதில் வெற்றி பெற முடியும்.

தியானத்தை அறிந்து கொள்ளுவதிலேயே, ஒருவன் முயற்சி செய்து கொண்டு இருந்தால், அதைச் சரியாக பயிற்சி செய்வது அந்த அளவுக்குக் குறையும். கிருஷ்ணமூர்த்தியைத் தெளிவாகப் புரிந்துகொண்டேன் என்று சொல்பவர்கள் பலர் இருக்கிறார்கள். அறிவுப்பூர்வமாக, நீங்கள் அவரைப் புரிந்து கொண்டு இருக்கலாம். ஏனென்றால், புரிந்துகொள்ளுதல் என்பது அறிவு

ரீதியானது. ஆனால், அவரே வெறும் புரிந்து கொள்ளுதல் மட்டும் தியானத்துக்கு உதவாது என்று சொன்னாலும், அவர் புரிந்து கொள்ளுதலை, தியானத்தோடு சமன் செய்தே இருக்கிறார்.

ஆகவே, அறிவுப்பூர்வமான புரிந்துகொள்ளுதல் அதைச் செய்யாது; ஆனால் அறிவற்ற குதித்தல் மட்டும்தான் அதை செய்ய முடியும். அறிவற்றதை அறிந்து கொள்ளத் தேவையில்லை. நீங்கள் தியானத்திற்குள் செல்லும் பொழுது, உங்களுடைய புரிந்து கொள்ளுதல் குறைந்து, உங்களுடைய உணர்வுகள் அதிகமாகும்; தியானத்தை ஒருக்காலும் புரிந்துகொள்ள முடியாது என்ற உணர்வு உங்களிடம் அதிகமாகிக் கொண்டேபோகும்.

தத்துவமும், விஞ்ஞானமும் அறிவுப்பூர்வமானது; மதமும், கலையும் அறிவுப்பூர்வமானது அல்ல. தத்துவம், மனத்தைக் கொண்டும், விஞ்ஞானம் கலையைக் கொண்டும் சமப்படுத்த வேண்டும். இல்லாவிட்டால், உலகம் தலைகீழாகி, ஒவ்வொருவரும் வியாதிகள் கொண்டவர்களாக ஆவார்கள்.

உண்மையான ஓய்வு நிலையில் இருக்கும் ஒருவரையாவது, நான் இதுவரை சந்தித்தது இல்லை. ஏதோ ஒன்று அவரை அலைக்கழித்தவாறுதான் இருக்கும். அது என்ன என்பது முக்கியமல்ல; என்ன முக்கியம் என்றால், அவர் தொந்திரவுக் குள்ளாகி இருக்கிறார். எல்லோருமே தொந்திரவு செய்யப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள்! மனித குலத்தில் உள்ள ஒழுங்கு முறையே தவறாகப் போய்விட்டது. மனித குலத்தின் சமூக அமைப்பில் ஏதோ தவறுதலாகப் போய்விட்டது. இந்த முழு மனித குலத்துக்கு தவறுகள் நேர்ந்து கொண்டு இருப்பதற்கு அடையாளமாக, இங்கு பல மனநலம் பாதிக்கப்பட்டவர்கள் இருக்கிறார்கள்.

இதில் ஒரு ஆச்சரியகரமான உண்மை இருக்கிறது. 1930களில் மனநல மருத்துவர்களிடம் வந்த கிட்டத்தட்ட அனைத்து மனநோயாளிகளும், பலவந்தத்ததால் (Vilolance) மனச்சிதைவு

பெற்றவர்களாவர். பிறகு இரண்டாவது உலக மகாயுத்தம் வந்தது. 20வது நூற்றாண்டின் முற்பகுதியில், இதே நிலை ஏற்பட்டது; இதற்கு முன்பு இதே நிலை, முதல் மகாயுத்தம் ஏற்பட்டது. இதனால், நான் புரிந்துகொண்டது என்னவென்றால், நமக்கு எல்லாமே முன்னோடியாக, இந்த மனநலம் பாதிக்கப் பட்டவர்கள் இருக்கிறார்கள் என்பதுதான்; எது பிற்பாடு வருமோ, அதை இவர்கள் முன்கூட்டியே காட்டுகிறார்கள். ஒரு வகையில், அவர்கள் உணர்வு மிகுந்தவர்களாக இருந்திருக்க வேண்டும். நமக்கு முன்பே, எது நிகழும் என்பதை அவர்கள் முன்கூட்டியே உணர்ந்து கொண்டுவிட்டார்கள்!

கலைஞர்களைப் பொறுத்தவரையில், இதுதான் உண்மை. என்ன பிற்பாடு நிகழுமோ, அவை அனைத்தும் முன்கூட்டியே கவிதை, ஓவியம், சங்கீதம் போன்றவற்றில் நிகழ்ந்துவிடுகிறது. உதாரணமாக, பிக்காஸோவின் ஓவியத்தை நாம் ஆழ்ந்து பார்த்தால், அதில் ஒரு வியாதி பிடித்த நாகரிகத்தின் அடையாளத்தைக் காணலாம். அவருடைய ஓவியமான 'குயர்னிக்கா' (Guernica)வில் அல்லது வேறு எந்த ஓவியத்திலேயாவது, அவர் ஒரு மனித உருவத்தை, அப்படியே ஒருபோதும் வரைந்தது கிடையாது. அவர், மனித பாகங்கள் அனைத்தையும் சேர்த்தோ அல்லது அவற்றைச் சரியான இடத்தில் வைத்தோ எதையுமே வரைந்தது கிடையாது! தலை, ஒரு இடத்தில் இருக்கும், கழுத்து வேறு ஒரு இடத்தில் இருக்கும். அடுத்து கண், தலைக்கு கீழே விழித்துக் கொண்டு இருக்கும். இப்படித்தான் அதாவது ஓவியங்கள் பைத்தியக்காரத்தனமாக இருக்கும். வருங்காலத்தில், மனித குலத்தின் அவல நிலையையும், வரக்கூடிய ஆபத்தையும் பார்க்கக் கூடிய அளவுக்கு, அவர் உணர்வுப்பூர்வமாக இருந்திருக்கிறார்.

விஞ்ஞான அடிப்படையில் இயங்கும் ஒரு சமூகம், அழகுக்கலைகளில் ஒன்றுமற்று இருக்கும்- அதற்கு கலை அசிங்கமாகப்படும். மேற்கத்திய கலையெல்லாம் அசிங்கமானதே. அவசரத்தனமும், முட்டாள்தனமும் தான் அதனுடைய இலக்கணமாக இருந்தது. கலையின் சிறப்பு அம்சம்

என்று அசிங்கத்தையும், அருவருப்பையும் அவர்கள் போற்றினார்கள். ஒரு ஓவியம் எவ்வளவுக்கெவ்வளவு அருவருப்பாகவும், கோணல் மாணலாகவும் இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அது பாராட்டப்பட்டது. எதிலும் ஒரு ஒழுங்குபட்ட லயம், இசைவு, சங்கீதம் என்று எதுவும் கிடையாது. இப்பொழுதுள்ள மனித மனம் போல இருக்கும் ஒவ்வொன்றும் அழிக்கப்பட வேண்டும்.

இவை ஒரு குறியீடுதான், அடையாளம்தான். மனித மனத்தின் அடுத்த பகுதி, வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ளும் அடையாள வெளிப்படுத்துதல் தான்– அது உங்களுடைய கவனத்தைக் கவருகிறது. ஒரு சமூகம் அடிப்படையில் தத்துவார்க்கமாக மட்டும் இருந்தால், அது மதத்தன்மையில் ஏழ்மையாகவே இருக்கும். ஒரு சமூகத்தில் மதத்தன்மை மேலும் மேலும் குறையும் பொழுது, மதம் மெல்ல தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள முனைகிறது; அது மெல்ல அருவருப்பாகவும், சடங்காகவும் மாறிவிடுகிறது. சர்ச்சும், பாதிரித்தனமும் மேலே வளர, உண்மையான மதம் அழியத் தொடங்குகிறது. சர்ச்சு என்பது அசிங்கமாகவே மாறிய மதம்தான். கடவுள் தூதுவரின் வஞ்சத் தோற்றம் தான் பாதிரியார். உண்மையான கடவுள் தூதுவருக்கு, சர்ச்சில் இடம் இல்லை. ஆகவே, பாதிரியார்கள் அந்த இடத்துக்கு வந்து, அந்த வெற்றிடத்தை நிரப்புகிறார்கள்.

ஒரு முழுமையான நாகரிகத்தை, ஒரு முழுமையான தனித்தன்மை நிரம்பிய மனித குலத்தை மற்றும் ஒரு முழுமையான மனத்தை, என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. முழுமை என்பது முழுமையான மாறுபட்ட துருவ நிலைகளின் மொத்தத் தன்மை. ஆகவே, முழுமையான தனித் தன்மையில் ஒழுங்கற்ற தன்மையும் மற்றும் ஒரு வகையில் பைத்திய நிலையை நோக்கிச் செல்லும் பாதி ஒழுங்குத் தன்மையும் அடக்கம்தான். இது ஆபத்தானது. ஏனெனில், நெறிப்படுத்தப்பட்ட மனத்தால் மறுக்கப்பட்ட அடுத்த பகுதி, தன் வஞ்சத்தைத் தீர்த்துக்கொள்ள முனைகிறது. பகுத்தறிவற்ற பகுதி, மிகவும் மூர்க்கமற்றது. அது வஞ்சம் தீர்க்கும்

வலிமையுடன் எழும்பி, எல்லா பகுத்தறிவுப் பகுதியையும் அழித்துவிடும்.

ஆகவே, நீங்கள் புரிந்து கொள்ளுவதோடு, உணரவும் வேண்டும். அறிவுப்பூர்வமாக அறிந்து கொள்ளுதல் என்பது பெரிய சிரமம் இல்லை. உணர்வதில்தான் பிரச்சினையே தோன்றுகிறது. இதை நீங்களும் உணர வேண்டும்!

நீங்கள் ஏதாவது பகுத்தறிவற்றுச் செய்தால்தான், இது நடக்கும். ஆகவே, ஒரு மணி நேரம் குதியுங்கள், ஆடுங்கள் நீங்கள் எப்படி ஓய்வு நிலைக்கு வருகிறீர்கள், எப்படி புதுமைத்தன்மையை அடைகிறீர்கள், எப்படி நீங்கள் சுறுசுறுப்பாக கவனமாக இருக்கிறீர்கள் என்பதை அப்பொழுது உங்களால் உணர முடியும். உங்களுடைய பகுத்தறிவுப் பகுதி திருப்தி அடைந்தால், இப்பொழுது உங்களுடைய மனப் சுத்தப்படுத்தப்பட்டதாகிறது. எந்த எதிரியும் தன் வஞ்சகத்தைத் தீர்க்க காத்திருக்காத நிலையில், உங்களுடைய மனப் சுதந்திரமாக வேலை செய்யும். உங்களுடைய இரு மாறுபட்ட மனப் பகுதிகளும் சுதந்திரமாக தங்களை வெளிப்படுத்திக் கொள்ள தகுந்த சந்தர்ப்பத்தை அளியுங்கள்; எப்பொழுதும் அவை சமச்சீர்நிலையில் இருக்கட்டும். அறிவு மற்றும் உணர்வு என்று அனுசரித்துப் போகும் இரண்டு அறைகளில் மாறி மாறி வாழுங்கள். அவை ஒன்றுக்கொன்று எதிரானவை அல்ல. ஆனால் அவை அப்படித்தான் தோன்றும். ஏனென்றால், நாம் ஒரு துருவநிலையில் நிலைப்பட்டு, அங்கேயே வாழ்ந்து கொண்டு வருகிறோம்.

நீங்கள் கனவில் இருக்கும் பொழுது, அந்தக் கனவின் தொடர்பற்ற நிலையையும், மாறுபட்ட நிலையையும் உங்களால் உணர முடியாது- கனவில், உங்களுடைய நண்பன் உங்களிடம் நெருங்கி வர, திடீரென்று அவன் வேறு ஒன்றாக மாறுகிறான் ஆனால், கனவில், நீங்கள் இதை உண்மை என்றே எடுத்துக் கொள்ளுகிறீர்கள். அப்பொழுது நீங்கள் அதன் தொடர்பற்ற நிலையையோ அல்லது மாறுபட்ட தன்மையையோ

உணரவில்லை. எப்படி ஒரு மனிதன், ஒரு மிருகமாக திடீரென்று மாற முடியும் என்று நீங்கள் கேட்பது இல்லை. ஏனெனில் கனவுக்கு தர்க்கம் கிடையாது. அது இன்னும் அரிஸ்ட்டாட்டலை (Aristotle) தேடிக் கொண்டு இருக்கிறது! கனவில், 'அ' என்பது 'ஆ' ஆக மாறக்கூடாது என்றும், 'அ' என்பது 'அ' ஆக மட்டும் இருக்க வேண்டும் என்றும், உங்களால் சொல்ல முடியாது. கனவில், 'அ,' 'அ' ஆக இருக்கத் தேவையில்லை. மற்றும் 'அ' தான் 'அ' ஆக மாறவேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. அங்கே எந்தத் தர்க்கமும் வேலை செய்யாது. மற்றும் அங்கு மாறுபட்டது என்று எதுவும் கிடையாது. ஆகவே, உங்களுடைய தர்க்க அறிவுக்குப் புறம்பானது அங்கே அனேகம் உண்டு; ஆனால், அது எப்பொழுதும் உங்களுடைய ஒரு பகுதியாகவே இருந்து வருகிறது; அல்லது நீங்கள் அவற்றின் ஒரு பகுதியாக இருக்கிறீர்கள் என்று சொல்லுவதுதான் பொருத்தமாக இருக்கும். ஏனென்றால், உண்மையில், அவை உங்களைவிடப் பெரியவை.

மாறுபட்ட நிலையை, மாறுபட்டதாக நீங்கள் உணராத வரையில் அது உங்களிடம் அலுப்பை ஏற்படுத்தாது. நீங்கள் உங்களுடைய கனவில் அலுப்பை உணருகிறீர்களா? பகுத்தறிவுக்கும், பகுத்தறிவற்ற நிலைக்கும் ஒரு சமச்சீர்நிலை ஏற்பட்டால், அலுப்பு மறைந்துவிடும். அதனுடைய பேரானந்த நிலையோடு உங்களிடம் வரும்; இல்லாவிட்டால் வாழ்வே அலுப்பு நிறைந்ததாகிவிடும். ஆனால், பேரானந்தத்திற்கு வாழ்வு பொறுப்பில்லை. நாம் மாத்திரமே அதற்குப் பொறுப்பு; ஏனென்றால், தேர்ந்து எடுப்பது என்பது நம்மிடம் உள்ளது.



"ஏன், மேற்கத்திய சமூகங்கள், இந்திய மதத்தில் இப்பொழுது ஆர்வம் கொண்டு இருக்கின்றன?"

மதம்தான் கடைசி ஆடம்பரம் என்று நான் நினைக்கிறேன். ஒரு சமூகம் பணக்காரத்தனத்தில் இருக்கும் பொழுதுதான், மதம் அர்த்தமுடையதாகிறது. இப்பொழுது தான், முதன் முதலாக உலகத்தின் பெரும்பகுதிகள் ஏழ்மையற்று இருக்கின்றன. மனித வரலாற்றிலேயே, இப்பொழுது அமெரிக்கா தான் குறிப்பாக மிகுந்த பணக்காரத்தன்மையில் இருக்கிறது. மதத்தன்மை யுடையவர்களாக இருக்க, அல்லது வாழ்வின் முடிவான தன்மைகளில் ஆர்வமுடையவர்களாக இருக்க மனிதனின் கீழ்நிலையில் உள்ள தேவைகள் மற்றும் விருப்பங்கள் அனைத்தும் உண்மையாகப் பூர்த்தி யடைந்திருக்க வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில், ஒரு ஏழ்மையான சமூகம், உண்மையான மதத்தன்மையில் இருக்க முடியாது. இந்தியா, அதனுடைய பணக்காரத்தனத்தின் உச்சநிலையில் தான் அது மிக மதத்தன்மையுடையதாக இருந்தது. உதாரணமாக புத்தர் காலத்தில், இன்றைய அமெரிக்கா போல, இந்தியா இருந்தது. அந்தக் காலத்தில், இந்தியா மிகுந்த பணக்கார கண்டமாக இருந்தது! இன்றைக்கு இந்தியாவில் உள்ள நம் மதங்கள் எல்லாம், அந்தக் காலத்திலிருந்து வெளிவந்த பிறகு உள்ள மீதங்கள்தான்.

ஒரு ஏழையின் மதத்திற்கும், ஒரு பணக்காரனின் மதத்திற்கும் அடிப்படையில் ஒரு வித்தியாசம் உண்டு. ஒரு ஏழை, மதத்தில் ஆர்வமுள்ளவனாக இருந்தால், அது வெறும் மாற்றுதான் (Substitute). அவன் கடவுளைப் பிரார்த்தித்தால், அது தன் பொருளாதார மேம்பாட்டிற்காகவே இருக்கும். ஒரு மனிதனின் உண்மையான அடிப்படைத் தேவை, இன்னும் அவனிடம் ஏற்படவில்லை. ஏழைகளைப் பொறுத்தவரையில், மார்க்ஸ் மிகவும் சரியே. மதம், மக்களுக்கு போதைப்பொருள் போன்றது என்று அவர் சொன்னது ஒரு வகையில் சரியே. ஏனெனில் அவர்களால் தங்களுடைய வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளைக் கூட பூர்த்தி செய்து கொள்ள முடியவில்லை. ஆகவே, அதற்கு மாற்றாக பிரார்த்தனை, தியானம், யோகா மற்றும் மதம் முதலானவற்றைக் கையாளுகிறார்கள். ஆனால், பணக்காரனைப் பொறுத்தவரையில், அவனிடம் அடிப்படை மாற்றம் இருக்கிறது. அவன் இப்பொழுது பொருளாதார மேம்பாட்டைக் கேட்கவில்லை. அவன் இப்பொழுது வாழ்வின் அர்த்தத்தைக் கேட்கிறான்.

கிருஷ்ணர், மஹாவீரர், புத்தர் மற்றும் சமண மதத்தின் 24 தீர்த்தங்கரர்கள், இந்து மதத்தின் 24 அவதாரங்கள் அனைவரும் பணக்கார மக்களே. அவர்கள் எல்லாம் அரச குடும்பத்தில் பிறந்தவர்கள், ராஜ குமாரர்கள். இந்தியா கண்ட இந்த அவாதரங்களில், ஒருவர்கூட ஏழை இல்லை. இயேசு மாத்திரம்தான் ஏழ்மையில் இருந்தார்; ஆகவேதான் அவர் சிலுவையில் அறையப்பட்டார். ஒரு ஏழையின் மைந்தனை சுலபமாக சிலுவையில் அறைய முடியும்.

**"அவர் அவதாரமா, என்ன?"**



ந்துக்கள், அவரை அவதாரம் என்று ஒப்புக்கொள்ள மாட்டார்கள். அப்படியென்றால், நீங்கள் யாரை வேண்டுமானாலும் அவதாரம் என்று கருதிக் கொள்ளலாம். காந்தியை பின்பற்றுபவர்கள், காந்தியை அவதாரம்

என்று கருதுகிறார்கள். அதைப் போல ராமகிருஷ்ணரைப் பின்பற்றுகிறவர்கள் ராமகிருஷ்ணரை அவதாரம் என்று கருதுகிறார்கள். இப்படி பல அவதாரங்கள் இருக்கின்றன– ஆனால், அது இப்பொழுது பிரச்சினை அல்ல.

இந்து மதத்தில், 24 அவதாரங்கள் உண்டு. அதில் 23 அவதாரங்கள் நிகழ்ந்து விட்டன. இன்னும் ஒன்று பாக்கி உள்ளது. அதைப்போல, புத்த மதத்திலும், சமண மதத்திலும் முறைய 24 அவதாரங்கள் இருக்கின்றன; அவர்களை 'புத்தர்கள்' என்றும் 'தீர்த்தங்கரர்கள்' என்று அழைப்பார்கள். எல்லோருமே ராஜகுமாரர்கள்; யாருமே ஏழை கிடையாது. கிறிஸ்துவ மத்துக்கும், புத்த, சமண மற்றும் இந்து மதத்துக்கும் உள்ள வித்தியாசம் இதுதான். கிறிஸ்துவ மதம் ஏழைகளின் மதமாக இருக்கிறது.

ஆகவேதான், கிறிஸ்துவ மதம், தன் உச்ச நிலைக்குச் செல்ல முடியவில்லை. நீங்கள் இந்து மத ஏடுகளையும், உபநிஷத்துகளையும் பைபிளோடு ஒப்பிட்டுப் பார்த்தால், பைபிள் குழந்தைத் தனமாகவும், ஏழையாகவும் இருப்பதைக் காண்பீர்கள். வார்த்தைகள் எல்லாம் கிட்டத்தட்ட ஒன்றுதான், அனுபவங்கள் கூட ஒரு வகையில் ஒன்றுதான். ஆனால், கிறிஸ்துவம் ஒரு சாதாரண மதமாகத்தான் இருக்கிறது. மதத்தில் உள்ள ஒழுங்குபடுத்தப்பட்ட வெளி அமைப்பும், ஞான அனுபவங்களும் வெவ்வேறானவை.

**"உண்மையான அனுபவம், எப்பொழுதும் ஒன்று போல இருக்காதா?"**

ஆமாம். அவை அப்படித்தான் இருக்கும். ஆனால், இந்த ஒன்று போல இருக்கும். ஆத்மிக அனுபவங்கள், தனி மனித அனுபவங்களாகும். ஆனால் நம்முடைய கேள்வி, ஒரு சமூகத்தைப் பற்றியது; தனி மனித ஆத்மிக அனுபவத்தைப் பற்றியது அல்ல. நான் சொல்ல வருவது

என்னவென்றால், ஒரு ஏழை ஞானியாகலாம்; ஆனால் ஒரு ஏழையான சமூகம் மதத்தன்மையுடையதாக இருக்க முடியாது. ஒரு பணக்காரன், மதத்தன்மையுடையவனாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆனால், ஒரு பணக்கார சமூகம், மதத்தில் மிகவும் ஆர்வமுள்ளதாகவே இருக்கும். ஒரு சமூகம் பணக்காரத்தனமான பின்பு, புதிய பிரச்சினைகள் எழும்புகின்றன. அவை உடல் ரீதியானது அல்ல. உடல் தேவைக்கானது அல்ல; மாறாக அவை மனரீதியானது (Psychological).

ஒரு ஏழைக்கு உடல்நலம் சரியில்லாவிட்டால், அதன் பாதிப்பு கிட்டத்தட்ட அவனுடைய உடலை மட்டும் சார்ந்ததாகவே இருக்கும். ஆனால், ஒரு பணக்காரனுக்கு அப்படி நேர்ந்தால் அது பெரும்பாலும் அவனுடைய மனத்தைச் சார்ந்ததாகவே இருக்கும். அமெரிக்காவுக்கு இப்பொழுது மேலும் மேலும் மனநல வல்லுநர்களும், மனநல மருத்துவர்களும் தேவைப்படுகிறார்கள். ஏனென்றால், அமெரிக்காவில்தான் இப்பொழுது பைத்தியங்கள் அதிகம். அமெரிக்க மனநல மருத்துவர்கள் சொல்லுவது, "குறைந்தது நான்கில், மூன்று பேர் சரியான மனநிலையில் இல்லை," என்பதுதான்.

உங்களுடைய உடல் தேவைகள் பூர்த்தியான பின்பு, முதன் முதலாக உங்களுடைய மனத் தேவைகள் மேலே எழும்புகின்றன. மதம், மனத்தின் தேவையே தவிர, உடல் தேவையல்ல. ஆகவேதான், மிருகங்கள் மதம் இல்லாமல் வாழுகின்றன; ஆனால் மனிதனால் அது முடியாது- உள்ளே வந்துவிட்டதால்.

நீங்கள் ஒரு பணக்காரனாக இருந்தால் தொண்ணூற்று ஒன்பது சதம் உங்களுடைய நோக்கம், உங்களுடைய மனத்தைப் பற்றியதாகவே இருக்கும். ஒரு பணக்கார தனிமனிதன், மதத்தன்மை இல்லாது இருக்கலாம். அதைப் போல ஒரு ஏழையான தனி மனிதன் மதத்தன்மை மிகுந்து இருக்கலாம். ஆனால், ஒரு ஏழையான சமூகம், மதத்தை தன்னுடைய பொருளாதார வளர்ச்சிக்கு ஒரு மாற்றாக வைத்துக் கொள்ளுமே

தவிர, வேறல்ல. அதனுடைய பிரார்த்தனை உண்மையாகாது; ஏனெனில் அது, ஏதோ ஒன்றை அடைய முயற்சி செய்கிறது.

மதத்தைப் பொறுத்தவரையில், அமெரிக்கா மிகவும் அர்த்தமுள்ளதாகவும், குறிப்பிடத்தக்க முறையிலும் விளங்கப் போகிறது. அமெரிக்கா ஒவ்வொரு நாளும் பணக்காரத் தன்மையில் மேலும் மேலும் வளருவது. பல தேசங்களும் இதில் அடக்கம். வரும் நாட்களில் ஏழை நாடுகளில் கம்யூனிஸம் மிகவும் முக்கியத்துவம் பெற்று விளங்கப்போகிறது. மாறாக, பணக்கார நாடுகளில், மதம் முக்கியத்துவம் பெறப்போகிறது. ஏழை நாடுகளில், மதத்துக்கு எந்த எதிர்காலமும் கிடையாது. இன்னும் 20 வருடங்களில், எல்லா ஏழை நாடுகளும், கம்யூனிஸத்தைத் தழுவப் போகின்றன.

ஒரு காலத்தில், சீனாவும், ரஷ்யாவும் மதப்பற்று மிகுந்த நாடுகளாக இருந்தன- மற்ற பல மதப்பற்று மிகுந்த நாடுகளைப் போல. ஆனால், பத்தே வருடங்களில், அவை தங்கள் மதங்களைத் துடைத்து எறிந்துவிட்டன! சீனா ஒரு பௌத்த மத தேசமாக இருந்தது. தாவோயிசமும் (Taoism) பௌத்தமும் அங்கே மிக ஆழமாக வேர்விட்டு இருந்தது.

> "ஆனால், அங்கே அரசாங்கங்கள் மதத்துக்கு எதிராக இருந்தன. ஆனால், அதைப் போல இந்தியாவில் நேர வாய்ப்பில்லை."



ப்பொழுது அது முக்கியமல்ல. ஒரு மதத்தை அரசாங்கம் ஆதரிக்கிறதா அல்லது எதிர்க்கிறதா என்பது இப்பொழுது பிரச்சினை அல்ல. இன்றைய நிலையில், இந்தியாவில் மதம், அர்த்தமுடையதாக இருக்க முடியாது. ஒரு ஏழை நாடு எந்த ரூபத்தை எடுத்துக் கொண்டாலும்– அதை சோசலிசம் என்றோ அல்லது வேறு எதுவாகவோ, நீங்கள் அழைக்கலாம்– அடிப்படையில், கம்யூனிஸம் தான் அதன் மதமாக இருக்கப் போகிறது. ஆனால், அடுத்த 20 வருடங்களில் ரஷ்யாவில்,

மதம் மீண்டும் அர்த்தமுள்ளதாகப் போகிறது. இப்பொழுது ரஷ்யா ஒரு ஏழை நாடல்ல. ஆனால், ஒரு சமூகம் எப்பொழுது பணக்காரத் தன்மை மிக்கதாகிறதோ, அப்பொழுது உங்களால் மதத்தை விட்டுத் தப்ப முடியாது. அது ஒருபோதும் நடக்காது.

''பணக்காரனிடம் மட்டும், மதத்தை எடுத்துச் செல்வது சரியா?''

என்னைப் பொறுத்தவரையில், சரி அல்லது தவறு என்ற கேள்வி இல்லை; சரியான சூழ்நிலை என்ன என்பதுதான் இப்பொழுது கேள்வி. வியாதியுடையவன்தான், மருத்துவமனைக்கு செல்லுவான்; வியாதி இல்லாதவன், அங்கு செல்லத் தேவையில்லை. அதைப்போல, ஒரு ஏழை நாடுதான், கம்யூனிஸத்தால் கவரப்படும். சரித்திரம் நமக்கு இதைத்தான் எடுத்துச் சொல்லுகிறது. ஒருவகையில், இது தவிர்க்க முடியாதது தான். அதைப் போல, ஒரு பணக்கார நாடு, மதத்தால் கவரப்படும்.

ரஷ்யாவில், 10 அல்லது 15 வருடங்களில் எல்லாமே மாற்றப்பட்டுள்ளன. இப்பொழுது, இந்த உலகத்திலேயே அது மனநிலை ஆராய்ச்சியில் (Parapsychology), மிக அதிகமாக விஞ்ஞானிகளை ஈடுபட வைத்திருக்கிறது. அதில், அவர்கள் கண்டுபிடித்தது மிகவும் அற்புதமானது!

ஆகவே, சரி அல்லது தவறு என்பது இப்பொழுது கேள்வி அல்ல. இதுதான், சரித்திரம் சொல்லும் பாதை. நீண்ட நாட்களுக்குப் பிறகு கம்யூனிஸம் பணக்காரத்தன்மையைக் கொண்டு வரலாம்; அப்பொழுது மதம் மீண்டும் அர்த்தமுடையதாக ஆகும்.

"புதியவற்றில், மனிதனின் தேவைதான் முக்கிய காரணமாக இருக்குமா?"

புதியவைகளில், இளைஞர்கள்தான் ஆர்வம் உடையவர்களாக இருப்பார்கள். வயதானவன், பழையவற்றில் தன் சக்தியை செலவிட்டு விட்டதால், புதியவற்றில் அவனுக்கு ஆர்வம் ஏற்படாது. எப்பொழுதுமே இளம் இரத்தத்தில் தான் புதுமை உணர்வு மிக அதிகமாக ஓடும்; வயதானவர்களிடம் அல்ல. இறந்த காலம் வயதானவர்களின் மாளிகை; வருங்காலம் இளைஞர்களுக்கு உரியது. ஏனென்றால், இளைஞன் எப்பொழுதும் வருங்காலத்தில் வாழ்கிறான். அவன் எப்பொழுதும் புதியவற்றைப் படைப்பதிலும், சீரமைப்பதிலும் ஆர்வம் உள்ளவனாக இருக்கிறான்.

இளமை எப்பொழுதும் திருப்தியற்றே இருக்கும்- எப்பொழுதும் அவர்களுடைய இதயங்களில் திருப்தியற்ற தன்மையேதான் இருக்கிறது; அப்படியில்லாவிட்டால், அவர்கள் இளைஞர்கள் அல்ல. காதல், முழுமையாக திருப்திப்படுத்தப் பட்டால், அது வயதானதாக ஆகாது; மாறாக அது இறந்துவிடும். அவர்கள் எப்பொழுதும் எதிலும் ஒரு திருப்தியற்றத் தன்மை யையும் போதுமற்றத் தன்மையையும் தான் உணருவார்கள். இது நல்ல குறிதான். அவர்களுடைய உள் உந்துதலால், அவர்கள் பல புதிய பரிமாணத்திற்குள் செல்லத் தயாராக இருக்கிறார்கள்.

"இப்பொழுதெல்லாம், ஏன் இளைஞர்கள் மிகவும் எதிர்ப்பாள ராக இருக்கிறார்கள்?"

இதற்குப் பல காரணங்கள் உண்டு. ஒன்று உலகளாவிய கல்வி முறை. முதன்முதலாக, இப்பொழுது உலகத்தில் உள்ள இளைஞர்களுக்குத் தரமான கல்வி கிடைத்திருக்கிறது. இந்த படித்த இள மனதுக்கு, பழைய ஏற்பாடுகள் அனைத்தும் முட்டாள் தனமாகவும்,

காலத்திற்கு ஒவ்வாததாகவும் படுகிறது. அவை பழமையில் வேர் விடப்பட்டு, எதிர்காலமற்று விளங்குகின்றன.

இரண்டாவதாக, உலகத்தின் விஞ்ஞான வளர்ச்சி மற்றும் இளைஞர்களின் விஞ்ஞானப் பயிற்சி அனைத்தும் அடிப்படையில், சந்தேகத்தில் பயிற்சி அளிப்பதாக இருக்கின்றன. ஆனால், பழைய கலாசாரமும், நாகரிகமும் நம்பிக்கையின் அடிப்படையில் எழுந்ததால், ஒரு இடைவெளி ஏற்பட்டுவிட்டது. இளைஞர்கள் சந்தேகத்தில் பயிற்சி பெறுகிறார்கள். ஆனால் எல்லா மதங்களும் மற்றும் பண்பாடுகளும் நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டுள்ளது. ஆகவே, இரண்டும் இணைய முடியவில்லை. விஞ்ஞான ரீதியான உண்மையைத் தேடி, இளைஞர்கள் இப்பொழுது ஓடுகிறார்கள்- எல்லா சந்தேகங்களுக்கும் இடம் அளிக்கும் உயிரோட்டமுள்ள, உண்மையைத் தேடி.

வாழ்க்கை சிக்கலானது. அதனோடு இருக்கும் எல்லாமே மாறுபட்ட துருவ நிலையில் இருக்கின்றன. ஒரு விஞ்ஞானி சந்தேகத்தில் தொடங்குகிறான், உண்மையில் முடிக்கிறான்; மாறாக ஒரு மதத்தன்மை வாய்ந்தவன்- பழங்கால மதவாதி- நம்பிக்கையில் தொடங்குகிறான். இதுதான் இருவருக்கும் இடையே உள்ள வித்தியாசம். நான் பார்க்கின்ற வரையில், சந்தேகத்தோடு ஆரம்பிக்கும் நம்பிக்கை மிகவும் ஆழமாகச் செல்லுகிறது- ஏனென்றால் சந்தேகத்தின் பயமற்றத் தன்மையால்.

சந்தேகம், உண்மைக்கு எதிரானது அல்ல. அது எப்பொழுதும் உண்மையை நோக்கியே செல்லுகிறது. சந்தேகத்தை ஒரு கருவியாகப் பயன்படுத்தலாம். நீங்கள் சரியாக சந்தேகப்பட்டால், உங்களால் உண்மையை அடைய முடியும். அப்பொழுது உண்மை ஆதாரப்பூர்வமாகிறது. அது ஒரு கண்மூடித்தனமாக நம்பிக்கையாக இருப்பதில்லை.

மூன்றாவது, இந்த உலகம் ஒன்றாக மிக நெருங்கி வருகிறது. சாதாரணமாக ஆங்காங்கே உள்ள பல தொடர்பற்ற

பழக்கவழக்கங்கள் அனைத்தும் இப்பொழுது மேற்கொண்டு தொடராத வண்ணம், இந்த உலகம் அவ்வளவு நெருக்கமாக வந்து கொண்டு இருக்கிறது. இப்பொழுது நமக்குத் தேவை ஒரே பண்பாடு மற்றும் ஒரே நாகரிகம். இப்பொழுது நம்மிடம் உள்ளது அனேக பண்பாடுகள், அனேக பழக்கவழக்கங்கள் மற்றும் அனேக நாகரிகங்கள்; இது பல குழப்பங்களை ஏற்படுத்துகிறது.

ஒரு காலத்தில், ஒவ்வொருவரும் தங்களுடைய தனி சிறு சிறு அமைப்பில், அடைப்பட்டுக் கிடந்தார்கள். இந்து, இந்துவாக இருந்தான். அவனிடம் மற்றவற்றைப் பற்றி எந்த விழிப்புணர்ச்சியும் கிடையாது. வேறு ஒன்று தன்பாதைக்கு மாற்றாக இருக்க முடியும் என்பதை அவனால் நினைத்துப் பார்க்க முடியாது. ஆனால், இப்பொழுது உங்களுக்குப் பல சாத்தியக் கூறுகள் தெரியும். இந்த உலகம், மிகவும் திறந்த உலகமாகத் திகழ்கிறது. யாருமே, தங்களுடைய தனிப்பட்ட பண்பாட்டில் வேர்விட்டிருக்கவில்லை; அது ஒரு இறுக்கத்தை இப்பொழுது ஏற்படுத்துகிறது. ஒரு வகையில், நாம் வேரோடு பிடுங்கப்பட்டுதான் இருக்கிறோம். நாம் ஒரு உலக பண்பாட்டை உலக பழக்க வழக்கங்களை ஏற்படுத்த வேண்டும்.

ஆனால், உலக பொதுப் பண்பாடு வருவதற்கு முன்பு, இந்த சிறு சிறு தனிப்பட்ட பண்பாடுகள் அழியவேண்டும். ஆகவேதான், இன்றைய இளைஞர்கள் மிகவும் எதிர்ப்பாளராக இருப்பது போலத் தோன்றுகிறது. இப்படி எதிர்ப்பாக இருப்பது உண்மையில் இளைஞர்கள் அல்ல; மாறாக, புதிய உலகத்துக்கு, பழைய கலாசாரம் தான் தடுப்பாக, மறுப்பாக இருக்கிறது- இதுதான் எதிர்ப்பாகத் தோன்றுகிறது.

நான்காவது, நாம் அணு ஆயுதங்களை உற்பத்தி செய்கிறோம். இப்பொழுது இரண்டு சாத்தியக் கூறுகள் உள்ளன. அதாவது நான் ஒன்றாக சேர்ந்து வாழ வேண்டும். அல்லது சேர்ந்து சாக வேண்டும்- உலகளாவிய சமூகம் அல்லது உலகளாவிய தற்கொலை. முழு அணு ஆயுதப் போர் ஏற்பட மிகுந்த வாய்ப்பு

இருப்பதால், இன்றைய இளைஞர்கள் இறுக்க நிலையில் இருக்கிறார்கள். அவர்களுடைய எதிர்காலம் தெளிவற்றுக் காணப்படுகிறது. ஏன், எதிர்காலமே இல்லை என்பது போலத் தோன்றுகிறது. ஒரு அணு ஆயுதப் போர், எந்த நேரத்திலும் ஏற்படலாம்; வாழுவதற்கு சற்று அவகாசம் கூட இருக்காது; ஆகவே, இந்தக் கணம் மிகவும் அர்த்தமுள்ளதாகிறது.

பரபரப்புக்கும், காலப் பிரக்ஞைக்கும் ஒரு ஆழ்ந்த பிணைப்பு உண்டு. ஒரு சமூகம், எந்த அளவுக்கு காலத்தில் பிரக்ஞையாக இருக்கிறதோ, அந்த அளவுக்கு, அது பரபரப்பில் இருக்கும். ஆனால், காலப் பிரக்ஞையற்ற ஒரு சமூகம் எப்பொழுதும் திருப்தியில் இருக்கும். மறுபிறவியின் கொள்கையால் மட்டும்தான், கீழைநாட்டில் வசிக்கும் நாம் பல நூற்றாண்டுகளாக திருப்தியாக வாழ்ந்து வந்திருக்கிறோம். "காலம் முடிவற்றது. இந்த வாழ்வு போனால், எதுவும் இழக்கப்படவில்லை" -இதுதான் கீழை நாட்டின் கொள்கை. ஆனால், கிறிஸ்துவத்தைப் பொறுத்தவரையில், ஒரே ஒரு வாழ்க்கைதான் இருக்கிறது. "காலம் குறுகியது; செய்ய வேண்டியது அனேகம்" -இதுதான் கிறிஸ்துவ மதத்தின் கொள்கை. ஒருவர் எப்பொழுதும் பரபரப்பாக இருக்கும் அளவுக்கு, காலம் மிகக் குறுகியது.

அணு ஆயுதப் போர் பயத்தால், எதிர்காலத்திற்கு நேரம் எதுவும் கிடையாது. இந்த முழு உலகம் எந்த நாளிலும் அழிக்கப் பட்டுவிடலாம். முதன் முதலாக இன்றைய இளைஞர்கள், இந்த நிகழ்காலத்தைப் பற்றி மிகவும் சிந்திக்கிறார்கள்- அதில் முழுமையாக வாழ முழுமையாக ஆனந்தத்தில் இருக்க முயலுகிறார்கள்- ஏனென்றால், வருங்காலம் என்று ஒன்று இருப்பதாக அவர்களுக்குத் தெரியவில்லை.

ஆகவே, அவர்களுடைய எதிர்ப்புணர்ச்சிக்கு, இவைதான் காரணம். ஆனால், என்னைப் பொறுத்தவரையில், இது நல்ல அறிகுறிதான். ஏனென்றால், அவர்கள் மூலமாக, அவர்களைக் கொண்டு, நம்மால் ஒரு புதிய உலகத்தையும் உண்டாக்க

முடியும். புதிய மனித மனம் பிறக்க முடியும். ஹிப்பிகளின் அறைகூவல் சரிதான்– "அன்பை ஏற்படுத்துங்கள், போரை அல்ல." இது நல்லதுதான்! 1984க்குப் பிறகு, ஒன்று இந்த உலகம் இருக்காது அல்லது முழுமையான வேறு உலகம் இயங்கும். நான் பின்னதை நம்புகிறேன்.

"தியான முறைகளில் அனேகம், மக்களுக்கு உதவி செய்வதில் ஏன் அதிக பலனளிக்காது இருக்கின்றன?"

அனேக தியான முறைகள் இருக்கின்றன; ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட மனதுக்கு அர்த்தமுள்ளதாக இருக்கிறது; அதிலும், சில குறிப்பிட்ட முறைகள், ஒரு குறிப்பிட்ட வயதுடையவர்களுக்கு மட்டும் அர்த்தமுள்ளதாகிறது. நம்முடைய பழைய முறைகளெல்லாம், அடிப்படையில் அமைதித் தன்மையைக் கொண்டுள்ளதாக இருப்பவை. என்னுடைய டைனமிக் தியானம், குழப்ப வெளியேற்றுதலில் (Catharsis) ஆரம்பித்து, அமைதியில் முடிகிறது. ஏனென்றால், இந்தக் காலத்தில் நமது மனங்களுக்கு முதலில் ஆழ்ந்த வெளியேற்றுதல் மிகவும் அவசியமாகிறது; பிறகுதான் அவை அமைதி அடையும்.

இந்த நவீன மனதுக்குத்தான், இந்த முறை தேவையாக இருக்கிறது– அது இந்துவோ, கிறிஸ்துவோ, இந்து அற்றதோ அல்லது கிறிஸ்துவமற்றதோ அடக்கப்பட்ட ஆசைகள், எண்ணங்கள், உணர்வுகள்... இப்படி எல்லாவற்றின் பின் விளைவாக இருக்கிறது இந்த மனங்கள். வாழ்வைப்பற்றிய அடக்கப்பட்ட பல உணர்வோடு, பல நூற்றாண்டுகாலமாக நாம் வாழ்ந்து வந்திருக்கிறோம். இந்த அடக்குதலை, முதலில் வெளியே தூக்கி எறிய வேண்டும்; அதன் பிறகுதான், உங்களால், உங்கள் மைய நிலையை நோக்கிச் செல்ல முடியும்.

ஆகவே, என்னுடைய முறை, ஒரு வகையில் புதிதுதான்– அத்னுடைய பயனில் அல்ல, முறையில் மட்டும். முதலில்,

நீங்கள் உங்களுடைய பைத்தியத்தன்மையை வெளியே தள்ள வேண்டும். அதன் பிறகுதான், உங்களால் உங்களுடைய மையத்தை நோக்கிச் செல்ல முடியும்.

"சந்நியாசத்தைப் பற்றி, உங்களுடைய கொள்கை என்ன?"

சந்நியாசத்தைப் பற்றி என்னுடைய கொள்கை முற்றிலும் வித்தியாசமானது அல்லது பழைய கொள்கையிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாகும். என்னுடைய கொள்கை என்னவென்றால், வெளியே எதையும் துறக்காமல், உள்முகமாக உள்ளே செல்லுதலாகும். நீங்கள் இந்த உலகத்தில் இருக்கலாம். நீங்கள் வேலை செய்து கொண்டு இருப்பது போல தொடர்ந்து வேலை செய்து கொண்டு இருக்கலாம். ஆனால், நீங்கள் இப்பொழுது அதைக் கடுமையாக எடுத்துக் கொள்ள வில்லை. இப்பொழுது அது வெறும் நடிப்பாகிறது. நீங்கள் அந்த நாடகத்தின் நடுவில் இருக்கிறீர்கள். அவ்வளவுதான்.

நீங்கள் எதையும் துறக்கத் தேவையில்லை- நான் சகல துறத்தலுக்கும் எதிரிதான். ஏனென்றால், நீங்கள் இந்த உலகத்தோடு கடுமையான பற்றில் இல்லாவிட்டால், நீங்கள் அதில் இருக்கலாம். அதற்கு மேலேயே இருக்கலாம்.

ஆகவே, இந்த உலகத்தில் இருங்கள்; ஆனால் உலகம் உங்களுக்குள் இல்லாமல் பார்த்துக் கொள்ளுங்கள். அதுதான் சந்நியாசம்.



"குரு-சீடன் உறவு என்றால் என்ன?"

முதலில், குரு என்பவர் ஒரு ஆசிரியர் அல்ல. யார் ஒருவர், மதத்தன்மைக்கு ஏற்ப வாழுகிறாரோ, அவரே குரு. மதம் என்பது தகவல் அல்ல; அறிக்கை அல்ல. அதைப் பிறருக்கு போதிக்க முடியாது. ஏனென்றால் மதம் என்பது ஒரு வாழும் வழி. ஒரு குருவின் முன்னிலையே, நெருங்கிய தொடர்பாகி விடுகிறது. அவரோடு ஒருவர் நெருங்கி வாழும்போது, ஏதோ அவரோடு தொடர்பு கொள்கிறது –அது வார்த்தைகளில் இல்லாவிட்டாலும், மாணவன் / ஆசிரியர் உறவு போல் இல்லாது, காதலன் / காதலி உறவு போல் அது அவ்வளவு நெருக்கமானது.

குரு ஞான விழிப்பு அடைந்திருக்க வேண்டும். அதை அவரே பெற்றிருக்க வேண்டும். ஏனென்றால், ஒருவர் ஒன்றை உண்மையாக அறிந்துகொள்ளாமல், அதைப் பிறருக்கு வழங்க முடியாது. ஒருவர் மதத் தன்மையின் அனுபவத்தை உணர்ந்த பிறகுதான், அதைப் பிறருக்கு வழங்க முடியும். ஒரு ஆசிரியர் ஞான விழிப்படைந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை; ஆனால் ஒரு குரு அதைக் கண்டிப்பாக அடைந்திருக்க வேண்டும். ஒரு ஆசிரியர், மத ஏடுகள் அல்லது பழைய கலாசாரத்திலிருந்து, இரண்டாவது தகவலாக எடுத்து பிறருக்குச் சொல்ல முடியும்; ஆனால் ஒரு குருவால் அப்படிச் செய்ய

முடியாது. உண்மையை அனுபவப்பூர்வமாக தானே உணர்ந்தவர்தான் குருநாதர் எனப்படுபவர். இப்பொழுது அவரே ஒரு ஆத்மிக ஆதாரமாக இருக்கிறார். அவரே நேரடியாக அந்த உண்மையை எதிர்கொண்டிருக்கிறார். அவர் அதனோடு முகத்துக்கு முகம் நேராக வீற்றிருக்கிறார். இப்பொழுது சீடன், நேரடியாக உண்மையாக அறிந்தவரோடு நெருக்கமாக வருகிறான். ஏனென்றால், ஒரு குருவால் சொல்லப்படும் அனைத்தும், தொடர்பு கொள்ளும் அனைத்தும், அவருடைய சொந்த ஆதாரப்பூர்வமான அனுபவத்திலிருந்து வருகின்றன- அதற்கு அவரே பொறுப்பு.

இரண்டாவதாக, ஒரு குரு, தன்னுடைய குரு தன்மையைப் பற்றி (MasterShip) பிரக்ஞையாக இருக்க மாட்டார்; அவர் அப்படி இருக்க முடியாது; தான் ஒரு குரு நாதர் என்று அவர் தன்னையே அறிவித்துக் கொள்ளமாட்டார்- அதைப்போல எந்த வெளிப்படுத்துதலும் அவரிடம் கிடையாது. அகங்காரமற்ற தன்மைக்கு ஏற்ப, தன்னால் நடந்துகொள்ள முடிகிறதா, நிறைவேற்றப்படுகிறதா என்பதை மட்டும் அறிந்து கொள்ளுபவரே, குரு. இல்லாவிட்டால், அவரால் உண்மையை எதிர்கொள்ள முடியாது. அகங்காரம் முழுவதுமாக ஒழிந்த பின்னரே, உண்மையை எதிர்கொள்ள முடியும்.

மதம் மற்றும் ஆத்மிகத்தில், சீடர்கள்தான் இருப்பார்கள் என்று நான் எப்பொழுதும் சொல்லுவது வழக்கம். ஏனென்றால், குரு அங்கு இருப்பதில்லை; மாறாக அவர் முன்னிலையாக அமர்ந்திருக்கிறார். அவருடைய உரிமையற்ற செயல், அகங்கார மற்றத் தன்மை, போதிக்கும் தனிமையற்றத் தன்மை மற்றும் உண்மையுடன் வாழ்வது அனைத்தும் ஒரு தொடர்பாக (Communion) இருக்கிறது. ஆகவே, தான் ஒரு குரு என்று தன்னை அறிவித்துக் கொள்ளுபவர் குரு அல்ல; மாறாக அவர் ஒரு ஆசிரியர்தான்.

குரு (Master) என்ற சொல்லை, ஆங்கிலத்தில் எழுத, சரியான வார்த்தை கிடையாது. ஏனென்றால், குரு/சீடன் உறவு என்பது

அடிப்படையில் கீழை நாட்டைச் சேர்ந்தது. மேற்கத்திய கலாசாரத்தில், இதைப் போன்றதொரு உறவு எப்பொழுதுமே இருந்தது கிடையாது. ஆகவே, குரு என்றால் என்னவென்று, மேற்கில் உள்ள யாருக்குமே சரியாகத் தெரியாது. ஆசிரியர் என்றால் யார் என்று அவர்களுக்கு ஓரளவு தெரிந்திருக்கலாம்.

குரு-சீடன் உறவு, காதலர்களைப் போல, மிகவும் நெருக்கமானது. அங்கு உணரப்படும் போற்றுதற்குரிய அன்பு கலந்த மரியாதை, காதல் போல மிக நெருக்கமானது- ஆனால் ஒரு வித்தியாசத்தோடு. காதல் சமதளத்தில் இயங்கக்கூடியது. ஆனால் இந்த குரு-சீடன் உறவில் ஏற்படும் வணக்கத்துக்குரிய மரியாதை மேலான நிலையில் உள்ள ஒருவரோடு ஏற்படுவது. காதல் நட்பைத் தோற்றுவிக்கும். ஏனென்றால் காதலனும், காதலிக்கப்படுபவனும் ஒரே சமதளத்தில் இருக்கிறார்கள். போற்றுதற்குரிய அன்பு கலந்த மரியாதை என்பது ஒரு வகையில் அன்பில், காதலில் சேர்த்திதான். ஆனால், அதில் ஒரு பெரிய வித்தியாசம் உண்டு. அது ஒரே தளத்தில் இல்லை- அதில் ஒருவர் மேலான நிலையில் இருக்கிறார். மேலான நிலையில் உள்ளவரோடு, அன்பு கலந்த நெருக்கம் ஏற்பட்டால், போற்றுதற்குரிய மரியாதை, அந்தக் குருவைச் சுற்றி, தானே ஏற்படும். ஆனால், குருவான யாரும் இதைக் கேட்பதில்லை. மற்றும் எதிர்பார்ப்பதும் இல்லை.

சீடர்கள் மட்டும்தான் இருப்பார்கள்- ஏனென்றால், அவர்கள் பிரக்ஞையாக சீடர்களாக இருக்கிறார்கள். தாங்கள் சீடனாவதை அவர்கள் தேர்ந்து எடுத்திருக்கிறார்கள். ஒரு குரு, அப்படி தன்னைத் தேர்ந்து எடுத்துக் கொள்ளுவது இல்லை. அவர் வெறுமனே செயல்படுகிறார். அந்தச் செயல், அவருடைய உயிர்த்தன்மையோடு ஒருங்கிணைந்து செயல்படுகிறது; அந்த செயல், போதனையாக மாறுகிறது. அவருடைய போதனையும் மற்றும் அவருடைய வாழ்வும், ஒரே உயிர்த்தன்மையின் இருவேறு அங்கமாகிறது. அவர் அமருவது, நிற்பது, நடப்பது, பேசுவது மற்றும் அமைதியாக இருப்பது, இப்படி ஒவ்வொன்றும்

ஏதோ ஒன்றைக் குறிக்கிறது. ஒரு குருவின் வாழ்தலின் மூலமாக ஏதோ நிகழ்ந்து கொண்டு இருக்கிறது; அதை வாங்கும் தன்மையில் சீடர்கள் எப்பொழுதும் தயாராக இருக்க வேண்டும். சீடன் என்பவன், எதையும் வாங்கிக் கொள்ளக்கூடிய திறந்த மனதுடன் இருக்க வேண்டும்- அவன் கற்றுக்கொள்ளுவ தில்லை. மாறாக வாங்கிக் கொள்ளுகிறான். ஆகவேதான், ஒரு சீடனாவதற்கு அடிப்படைத் தகுதி நம்பிக்கையாகிறது.

நாம் அறியாததை நேருக்கு நேர் சந்திக்கும் பொழுது அங்கே எந்த தர்க்கமும், எந்த பகுத்தறிவு விளக்கமும் சாத்தியம் இல்லை; அப்பொழுது நம்பிக்கைதான் நம்மை அழைத்துச் செல்லும். அறிந்தவற்றைப் பற்றி, நான் ஏதும் கூறினால், நீங்கள் என்னோடு அதைப்பற்றி விவாதிக்க முடியும். ஏனென்றால், அதைப்பற்றி உங்களுக்கும் தெரியும். நம்மால் அதைப்பற்றிப் பேச முடியும். கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ள முடியும். உங்களுக்கு ஏதுமே தெரியாததைப் பற்றி, நான் ஏதாவது பேசினால், அங்கு தகுதி பரிவர்த்தனைக்கு வேலையே கிடையாது; அங்கு எந்த சர்ச்சையும் நடைபெற வழி கிடையாது. அதைப் பகுத்தறிவினால் அணுக முடியாது. ஏனென்றால், தெரிந்ததைச் சுற்றித்தான், பகுத்தறிவு வேலைசெய்யும்.

தெரியாதது உள்ளே வந்த அந்தக் கணத்திலேயே, பகுத்தறிவு உபயோகமற்றதாகி விடுகிறது. அது அர்த்தமற்றது. எண்ணுதல் என்பது அப்பொழுது முட்டாள் தனம். ஏனெனில் தெரியாததைப் பற்றி, உங்களால் எதுவும் எண்ணிப் பார்க்க முடியாது. இது எப்படி இருக்கும் என்றால், நீங்கள் குருடாக இருக்கும் பொழுது நான் வெளிச்சத்தைப் பற்றிப் பேசுவது போல இருக்கும். நான் சொல்லுவதை, நீங்கள் நம்பிக்கையின் அடிப்படையில்தான் எடுத்துக்கொள்ள வேண்டும்; வேறு வழியே கிடையாது.

ஒரு குருவுக்கும், சீடனுக்கும் உள்ள உறவு என்பது நெருக்கமான நம்பிக்கையின் உறவுதான். இது குருட்டுத்தனமான நம்பிக்கை இல்லை. ஏனென்றால், நீங்கள் என்னை

நம்பவேண்டும் என்று உண்மையான குரு ஒருபோதும் எதிர்பார்க்க மாட்டார்- அதில் எந்த எதிர்பார்ப்பும் இல்லை. நம்பிக்கை இல்லாமல், நீங்கள் மேற்கொண்டு ஒரு அடிகூட எடுத்துவைக்க முடியாத அளவுக்கு அந்த அறியாததின் இயல்பு இருக்கிறது. சீடனின் மனப்பூர்வமான நம்பிக்கை இங்கு மிகவும் தேவையாக இருக்கிறது. ஏனென்றால், குருவின் மேல் நம்பிக்கை இல்லாமல், அவனால் மேற்கொண்டு ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது. தெரியாதது ஒரே இருளாக இருக்கிறது. அந்தப் பரவெளிக்கு வரைபடம் இல்லை- அது பேரானந்தமாகவும் இல்லை, முடிவான முடிவாகவும் இல்லை. ஆகவேதான், குரு, "அதில் உடனே குதியுங்கள்! இப்பொழுதே செய்யவும்!" என்று எப்பொழுதும் கூறிக் கொண்டிருக்கிறார். ஆனால், குதிப்பதற்கு முன்பு, நம்பிக்கை தேவையாக இருக்கிறது; இல்லாவிட்டால், நீங்கள் குதிக்கவே மாட்டீர்கள். ஞானம், குதித்தலின் மூலமாகத்தான் ஏற்படும்.

விஞ்ஞானத்தில், ஒரு பரிசோதனைக்கு முன்பு, ஒரு அனுபவம் (Hypothesis) தேவையாக இருக்கிறது. அனுமானம் என்றால் ஒரு பொதுப்படையான, குத்துமதிப்பான நம்பிக்கை. நம்பிக்கையைப் பரிசோதனை நிரூபித்தால், அது பின்பு உண்மையாகிறது. நம்பிக்கையைப் பரிசோதனை நிரூபிக்கா விட்டால், அது பொய்யாகிறது. ஆனால், அனுமானம் இல்லாமல், பொதுப்படையான நம்பிக்கை இல்லாமல், பரிசோதனை செய்யமுடியாது.

அதைப் போலவே மதத்திலும்; அனுமானம் எப்படி விஞ்ஞானத்துக்குத் தேவையாக இருக்கிறதோ, அதைப் போல மதத்துக்கு நம்பிக்கை தேவையாக இருக்கிறது. ஆனால், நம்பிக்கைக்கும், விஞ்ஞான அனுமானத்தும் ஒரு பெரிய வித்தியாசம் உண்டு. ஒருவன், அனுமானத்தின் பேரில் விஞ்ஞானத்திற்குள் செல்லலாம். அப்பொழுது அவனிடம் ஒரு சந்தேகம் இருந்து கொண்டே இருக்கும். அது ஒரு முன்னிலைத் தன்மையாக (Objective) இருப்பதால், அதற்கு எந்த அன்பு

கலந்த மரியாதையும் தேவையில்லை. நீங்கள் பரிசோதனை மட்டும் செய்து, அதன் போக்கை வெறுமனே கவனிக்கலாம். ஆனால், மதத்தில் அனுமானம் மட்டும் போதாது. ஏனென்றால், உங்களுக்கு வெளியே உள்ள ஏதோ முன்னிலைப் பொருளோடு, நீங்கள் வேலை செய்யவில்லை. நீங்களே அதைச் சமாளிக்கிறீர்கள்; அது ஒரு தன்னிலை (Subjective) செயல்தான். நீங்கள் அதில் உங்களையே செலுத்திக் கொள்ள வேண்டும்; நீங்கள் அதனுடன் ஐக்கியப்பட வேண்டும். நீங்கள் அந்தப் பரிசோதனையை வெளியில் செய்யவில்லை. நீங்களே அந்தப் பரிசோதனையாக இருக்கிறீர்கள். நீங்கள் அதற்குள் குதித்து அதனுடன் இரண்டறக் கலந்து விட வேண்டும்; அதற்கு மிகுந்த நம்பிக்கை தேவைப்படுகிறது.

ஆகவே, ஒரு குருவுக்கும் ஒரு சீடனுக்கும் உள்ள உறவு மிகச் சிறந்த நம்பிக்கை, நெருங்கிய நட்பு மற்றும் மரியாதைக்குரிய அன்பு ஆகியவற்றைச் சார்ந்தது. ஆனால், இவை கேட்கப்படுவதில்லை. எப்பொழுது அது கேட்கப்படுகிறதோ, அப்பொழுதே, அது ஊழலாகிறது. அவை எப்பொழுது திணிக்கப்படுகிறதோ, அப்பொழுதே அது மூர்க்கமாகிறது. ஏனென்றால் யாரும் தன்னைப் பிறரிடம் வலுக்கட்டாயமாகத் திணிக்கக்கூடாது. இவை, ஒரு குருவின் வலுக்கட்டாயமாக இல்லாமல், குருவின் மேல், சீடன் கொண்டுள்ள ஆத்மார்த்தமான ஈடுபாடாக இருக்க வேண்டும்.

ஆனால் சாதாரணமாக, சீடன் விருப்பமில்லாமல் இருக்க, குருதான் கேட்பவராக இருப்பார்! பிறகு, எல்லாமே அருவருப்பாக மாறிவிடும். குரு, ஏதாவது ஒன்றை, யார் மேலேயாவது கட்டாயப்படுத்தினால், அது அழிக்கிறது, கொல்லுகிறது மற்றும் முடமாக்குகிறது. ஏனென்றால், பிறருடைய அகங்காரத்திற்கு எதிரான மூர்க்க செயலாக அது இருக்கிறது. ஆனால் சீடன், தன் விருப்பமாக, தன்னுடைய முழு நம்பிக்கையை, குருவின் மேல் கொண்டு இருந்தால்- அது கட்டாயப்படுத்தப்படாமல், சீடனின் விருப்பமான சரணாகதியாக இருந்தால்- பிறகு ஒரு மகத்தான மாறுதல் அங்கு

நிகழுகிறது; சீடன், தன்னுடைய முழு சரணாகதியால், மாற்றமடைகிறான்.

இது மிகவும் தீர்மானமான, தன் விருப்பமான செயல்: அதாவது வேறு ஒருவரிடம் முழுமையாக சரணாகதியடைவது என்பது. இது நீங்கள் பிறரிடம் வைக்கும் நம்பிக்கை அல்ல; இது அடிப்படையில் தன்னிடமே வைக்கும் நம்பிக்கைதான். நீங்கள் உங்களுடைய தீர்மானத்தில் முழுமையான நம்பிக்கை வைக்கவில்லை யென்றால், உங்களால் முழுமையாக சரணாகதியடைய முடியாது. ஏனென்றால் இது ஒரு மகத்தான முடிவு- முழுமையான மற்றும் நிபந்தனைய்யற்றது. ஒரு சீடன் தன்னை சரணாகதியாக்கிக் கொள்ளும்பொழுது அது அவனுடைய முழுவிருப்பங்கலந்த உறுதியைப் பொருத்த தாகிறது. அந்த உறுதியின் பேரில், ஒரு முடிவு ஏற்படுகிறது. சரணாகதியின் மூலம் ஒரு சீடன் புடம் போட்ட தனித்தன்மை யுள்ளவனாகிறான். ஏனென்றால், அவனுடைய முடிவு முழுமையானது, மகத்தானது, நிபந்தனையற்றது மற்றும் எதையும் எதிர்பார்க்காதது.

எந்த முழு சரணாகதியுமே, நிபந்தனையுள்ளதாக இருக்காது. ஒரு குருவோடு, எந்த நிபந்தனையும் இருக்காது. சீடன், அவரிடம், "நீங்கள் இதைச் செய்ய முடிந்தால், பிறகு நான் உங்களிடம் சரணாகதியடைவேன்," என்று சொல்ல முடியாது. இப்படி இருந்தால், அது சரணாகதியல்ல. அங்கே எந்த ஆனாலும் கிடையாது. நீங்கள் வெறுமனே முழுமையாக சரணாகதி யடையுங்கள். நீங்கள், "உங்களுடைய விருப்பம் போல், எதையும் செய்யுங்கள். நான் உங்கள் கைகளில் இருக்கிறேன். என்னைக் கிணற்றில் குதி என்று நீங்கள் கூறுங்கள். நான் உடனே குதிக்கிறேன்," என்று சொல்ல வேண்டும்.

இந்த முழுமையான சரணாகதிக்காக ஏற்படும் உங்களுடைய தீர்மானம், மாறுதல் கொடுக்கக் கூடியது மற்றும் படிகத் தன்மை கொண்டது. முழுமையான சரணாகதியிலேயே, சீடன் தன் இயல்பாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால் தான், குரு

எதையும் அவனிடம் செய்யமுடியும். ஏனென்றால் உங்களுடைய முழுமையான வாங்குதலில் நீங்கள் அவருடன் சமமாக இரண்டறக் கலக்கிறீர்கள். பிறகு, மெல்ல மெல்ல நீங்கள் மாற்றம் அடைகிறீர்கள்.

இந்த ஆத்மிக மாற்றம் மிகவும் நுட்பமானது. மிகவும் உணர்வுப் பூர்வமானது. ஒரு உயிர் இருத்தலை மாற்றுவது என்பது, தனித்தன்மையுடைய மனிதனை மாற்றுவது என்பது மிகவும் சிரமமான மற்றும் நுட்பமான வேலை. ஒரு மனிதனின் தனித்தன்மை என்பது, அதிகமான மாறுபட்ட மற்றும் சிக்கலான விஷயங்கள் நிரம்பியதாகும். அவை அவ்வளவு அடக்கப்பட்டதாகவும் மற்றும் விபரீதமாகவும் சிக்கல் நிறைந்தும் இருக்கின்றன; ஆகவே அதை மாற்றுவது என்பதும், அதை தெய்விக நிலையில் மலரச் செய்வது என்பதும் மற்றும் அதை தக்க தெய்விகத்துக்கு அர்ப்பணிக்கக்கூடிய அளவில் தகுதி படைத்ததாக மாற்றுவது என்பதும் மகத்தான கலை மற்றும் விஞ்ஞான நுட்பம் மிகுந்ததாகும்.

நான் இப்பொழுது பேசிக்கொண்டு இருப்பது எல்லாம், எப்பொழுதும் சீடனிடமிருந்து வந்தவை தானேயொழிய, ஒருபோதும் ஒரு குருவிடம் இருந்து வந்தவை அல்ல. அது ஒரு குருவிடமிருந்து வந்திருந்தால், கிருஷ்ணமூர்த்தி சொன்னது சரிதான். பிறகு, 'குருபீடம்' என்பது, மிகவும் ஆழமான, நுட்பமான, சுயநலமிக்க அழிவுத்தன்மை யுடையது ஆகும். ஆனால் உண்மையில் கிருஷ்ணமூர்த்தி சொன்னது அவ்வளவு சரியல்ல. ஏனென்றால், சரணாகதி என்பது ஒருபோதும் ஒரு குருவின் கட்டளை இல்லை, விருப்பம் இல்லை. இது ஒரு சீடத்தன்மையின் அடிப்படை விதியாகும். குரு என்று ஒருவர் இல்லாதபொழுது அல்லது நம்பிக்கையின் உறவு என்று எதுவும் இல்லாதபொழுது, ஆத்மிகத்தில் ஒருவன் முன்னேறுவது என்பது மிகவும் சிரமமான காரியம்.

ஆனால், ஒரு குருவின் உதவி இல்லாமல் ஒருவன் ஆத்மிகத்தில் மலரக்கூடிய சாத்தியமும் உண்டு; ஆனால்,

அவனும் முழுமையான நம்பிக்கை வைக்கவேண்டும். மற்றும் முழுமையாக சரணாகதியடைய வேண்டும் என்பதை அவன் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்- ஒரு மனிதரிடம் அல்ல, அந்த முழுமையில் சீடத்தன்மையின் அடிப்படை விதி பூர்த்தி செய்யப்பட வேண்டும். அது ஒரு குரு என்ற தனி நபரோடு சேர்ந்ததாக இருக்கலாம் அல்லது இல்லாமலும் இருக்கலாம்; அது அவ்வளவு முக்கியமல்ல.

ஆனால், ஒரு தனி நபரை நம்புவது என்பது, அந்த முழுமையை நம்புவதை விட சுலபம். உங்களால் ஒரு தனி நபரை நம்ப முடியவில்லை என்றால், உங்களால் அந்த முழுமையான உயிர்த்தன்மையை ஒருக்காலும் நம்ப முடியாது. உங்களால், ஒரு தனிநபர் உறவில் சரணாகதியடைய முடியாவிட்டால், உங்களால் அரூபமான தெய்விகத் தன்மைக்கு ஒருக்காலும் சரணாகதியடைய முடியாது. ஆகவே, அந்த அரூபத்தை அடைய, குரு என்பவர் படிக்கல்லாக இருக்கிறார்; அந்த முழுமைக்கு, அந்தப் பேரியக்க உயிர்த் தன்மைக்கு சரணாகதி அடைய அவர், ஒருவனுக்கு உதவும் வழியாக இருக்கிறார்.

மனித மனதுக்கு எல்லா உறவுகளும் தனக்கே உரியதாக இருக்க வேண்டும்; அது காதலாக இருக்கலாம், மரியாதையாக இருக்கலாம்; இப்படி எதுவாகவும் இருக்கலாம்; ஆனால் அவை, அதற்கே உரியதாக இருக்க வேண்டும். ஆகவே உண்மையை அல்லது பிரபஞ்ச உயிர்த்தன்மையை அடைவதற்கு அல்லது உணருவதற்கு முதல் முயற்சி தனக்கே உரியதாகவே இருக்க வேண்டும். இதற்கு யாராவது ஒருவரை, நீங்கள் குதிக்கும் பலகையாக உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இதையடுத்து, இன்னும் பல விஷயங்கள் உள்ளன.

ஆத்மிகத்தைப் பொறுத்தவரையில், மிகவும் அர்த்தமுள்ள வார்த்தைகளால் தொடர்பு கொள்ளமுடியாது. அதை வெளிப் படுத்த முடியாத அளவுக்கு, அதன் இயல்பே அப்படியிருக்கிறது. நீங்கள் இசைக்கருவியின் மூலமாக ஒரு இசையைக் கேட்டால்,

அதை வார்த்தைகளின் மூலமாக உங்களால் பிறருக்குச் சொல்ல முடியாது. உங்களுடைய அபிப்பிராயத்தை- இனிமையானது, மோசமானது என்று- வார்த்தைகளால் கூறலாம். இது அதைப் பற்றிய, அர்த்தமுள்ள வார்த்தைகள் இல்லை. நீங்கள் இப்படி ஒரு வகையில் உங்களுடைய உணர்வுகளை வெளிப்படுத்தலாம். ஆனால் அதுவும் போதுமானதாக இருக்காது.

நீங்கள் ஒரு மலரைப் பார்த்தால, அது அழகானது என்று உங்களால் சொல்ல முடியும். ஆனால், அது எந்த அர்தத்தையும் தெளிவு படுத்தாது. நீங்கள் அப்பொழுது உண்மையாக உணர்ந்ததை, வார்த்தைகளால் ஒரு போதும் வெளியிட முடியாது. ஏனென்றால், நீங்கள் சொல்லும் அந்த மனிதரிடம், அவை எந்த அர்த்தத்தை வேண்டுமானாலும் உண்டு பண்ணலாம். எந்த மலரிடமும், எந்த அழகையும் கண்டிராத ஒரு மனிதர் உங்களுடைய வார்த்தைக் கேட்டு, நீங்கள் அர்த்தம் பண்ணியதைப் பற்றி எதுவுமே புரிந்து கொள்ளாமல், அதைப்பற்றி ஏதோ அர்த்தம் பண்ணிப் புரிந்து கொள்ளலாம். ஏனென்றால், அழகு என்ற வார்த்தை, அவரிடம் எந்த அர்த்தத்தையும் உண்டுபண்ணவில்லை.

ஆகவே, அழகு போன்ற சாதாரண உணர்வுகளைக் கூட முழுமையாக, தெளிவாக வார்த்தைகளால் வெளியிட முடியாது- நீங்கள் அதை வெளிப்படுத்த முயலலாம். அதைப்போல ஆத்மிக அனுபவங்கள், மொழிகளால் முற்றிலும் அழிக்கப்படக் கூடிய விதத்தில், அவ்வளவு சிக்கலானது. அவ்வளவு அமைதியானது மற்றும் அவ்வளவு எல்லையற்றது. அவற்றின் உண்மையான அர்த்தத்தை வெளியிட முடியாத அளவுக்கு, வார்த்தைகள் அவற்றை ஒரு குறுகிய எல்லைக்குள் அடைத்து விடுகின்றன. ஆகவேதான், மதத்தை பிறருக்குப் போதிக்க முடியாது என்று நான் கூறுகிறேன்.

கணக்கு, எவ்வளவுதான் சிரமமாக இருந்தாலும், அதை பிறருக்குப் போதிக்க முடியும். ஏனெனில் அவை குறியீடுகளில் இருக்கின்றன. குறியீடுகளைப் பிறருக்குப் போதிக்க முடியும்.

பௌதிகத்தைப் பிறருக்குக் கற்றுக்கொடுக்க முடியும். ஏனென்றால், அதில் பிறருக்கு எடுத்துச் சொல்ல முடியாதவை என்று எதுவும் இல்லை. ஆனால், நீங்கள் உங்களுடைய இதயத்துக்கு வந்தால்- உதாரணமாக கவிதைகள், பாடல்கள் உங்களுடைய வார்த்தைகள் அர்த்தமுள்ளவைகள் இல்லை என்பதை மேலும் மேலும் உணருவீர்கள்- ஏதோ அதில் விடுபட்டு இருப்பது போலவே உணர்வீர்கள். ஜாடி அங்கே இருக்கிறது. ஆனால் அதில் இருக்க வேண்டியவை அதற்கு வெளியே இருக்கின்றன. வார்த்தைகள் அதை அடைத் திருக்கின்றன; ஆனால், அர்த்தங்கள் அதற்கு வெளியே இருக்கின்றன. மலர்கள் வாங்கப்பட்டுள்ளன; ஆனால் அதை பிறருக்குக் கொடுக்க முடியாத அளவுக்கு அதனுடைய வாசனை இழந்து விட்டது.

விஞ்ஞானத்திற்கும், மதத்திற்கும் இடையில் வார்த்தைகள் இயங்குகின்றன. விஞ்ஞானத்தில், எதையும் வார்த்தைகளால் வெளியிட முடியும். ஆனால், மதத்தில் எதையுமே அர்த்தமுள்ள தாக வார்த்தைகளால் வெளியிட முடியாது. மூன்று பாதைகள் இருக்கின்றன. விஞ்ஞானம்; இதன் அர்த்தம் பகுத்தறிவு- பிறருக்கு வெளிப்படுத்தக் கூடியது. கலை மற்றும் கவிதை; இவற்றை ஓரளவுக்குத்தான் பிறருக்கு வெளிப்படுத்த முடியும்- ஒரு எல்லைக்கு மேலே, அது வெளிப்படுத்த முடியாத அளவுக்குத்தான் இருக்கும். அடுத்தது மதம்; ஆத்மிகம்; இதை முழுமையாக வெளிப்படுத்தவே முடியாது. ஆகவேதான், குரு-சீடன் உறவு என்பது சதாராண ஆசிரியர்- மாணாக்கன் உறவு இல்லை.

மதத்தைப் போதிக்க முடியாது.

பிறகு, எப்படி அதை வெளியிடுவது? அதற்கு வேறுமுறைகள் இருக்கின்றன.

நீங்கள் வேறு ஒருவரோடு காதல் வயப்பட்டால், ஆரம்பத்தில், வெறும் சமிக்ஞையே அர்த்தமுள்ளதாகும். உங்கள் முகத்தில் ஏற்படும் சிறிது மலர்ச்சியே, உங்கள் கண்கள் வித்தியாசமாக

மேலும், கீழும் அசைவதும் அர்த்தமுள்ளதாகவும் மற்றும் அடுத்தவர் சுலபமாகப் புரிந்து கொள்ளக் கூடியதாகவும் இருக்கும். நீங்கள் அப்படி காதல் வயப்படாமல் இருந்தால், அடுத்தவரிடம் ஏற்படும் இந்த சிறிய மாறுதல்களில் உங்கள் கவனத்தை வைக்க மாட்டீர்கள். நீங்கள் வெறுமனே அடுத்தவரது முகத்தை அப்படியே முழுமையாகப் பார்ப்பீர்கள். ஆனால், அதில் ஏற்படும் சிக்கல் நிறைந்த உணர்வு வெளிப்பாட்டைக் கவனிக்கமாட்டீர்கள்; அதனுடைய தொடர்ந்த மாறுதல்களைக் கவனிக்க மாட்டீர்கள். நீங்கள் பிறருடைய முகத்தை ஒரு வெளி உறுப்பாக மட்டும்தான் பார்ப்பீர்கள். அதில் ஏற்படும் அர்த்த உணர்வுகளைக் கவனிக்க மாட்டீர்கள். ஆனால், நீங்கள் பிறரிடம் காதலோடு இருக்கும்பொழுது, அடுத்தவரது முகம், வெறும் உறுப்பாக மட்டும் இருக்கவில்லை, அது ஒரு உயிர் இயக்கமாக இருக்கிறது. மிகச் சிறிய மாறுதல்கள் மற்றும் நுட்பமான உணர்வு வெளிப்பாடுகளை அதில் கண்டுபிடித்து, அறியப்படலாம். உங்களுடைய காதலி, ஏதாவது சொல்லுவதற்கு முன்பே, நீங்கள் அதை அறிந்து கொள்வீர்கள். அதைப் போல உங்கள் காதலன், ஏதோ உணர்வை அறிந்து கொள்ளுவதற்கு முன்பே, நீங்கள் அதைக் கண்டுபிடித்து விடுவீர்கள்.

சாதாரண காதலைவிட, மரியாதைக்குரிய அன்பு மிகவும் தூய்மையானது. குருவின் இருப்பே, ஒரு தொடர்பாக, ஏதோ பல செய்திகளைச் சொல்லுவதாக இருக்கிறது. அப்படி அவர் தொடர்ந்து வெளிப்படுத்தும் செய்திகளை, அன்பு மிகுந்த சீடர்களின் மனம், நன்றாகப் பிடித்துக் கொள்ளுகிறது. அறிந்து கொள்ளுகிறது. புரிந்து கொள்ளுகிறது. இந்த சமிக்ஞைகள் மற்றும் உயிரோட்டமுள்ள பாவனைகள் எல்லாம் ஒரு மொழியாகிறது.

இந்த உறவு முற்றிலும், இந்த சம தொடர்புத்தன்மை மிகவும் ஆழமாகிறது. சீடன், தன் சீடத்தன்மையில் மலர்ந்த பிறகு, குருவின் வார்த்தைகளையும் மற்றும் பாவனைகளையும் முழுமையாக அறிந்து அவன் பழுக்கிறான். பிறகு, பாவனைகள் ஏதுமின்றி, வார்த்தைக் குறியீடுகள் இல்லாமல், அமைதியான

சமத்தொடர்பு நிகழும். அந்த உறவின் ரகசியம், பிறகு ஒலியற்ற (Telepathic) சமத் தொடர்பாகிறது. ஒரு குருவுக்கும், சீடனுக்கும் உள்ள மிகவும் ரகசிய சமத்தொடர்பின் சாவி இதுதான். இதன்பிறகுதான், சீடனை அவர் ஏற்றுக் கொண்டதாகிறது. பிறகு இடம், காலம் போன்றவற்றுக்கு இடம் இல்லை. பிறகு சீடன் எங்கே இருந்தாலும், அவனை அவரால் தொடர்பு கொள்ள முடியும்.

இவற்றுக்காக, ஒருவன் பொறுமையாகக் காத்துக் கொண்டு இருக்க வேண்டும். இது ஒரு மகத்தான காத்திருத்தல். ஆத்மிகக் கற்றுக் கொள்ளுதலைப் பொறுத்தவரையில், நீங்கள் ஒருக்காலும் அவசரப்படக்கூடாது. ஒரு அவசரமான மனம், மிகவும் ஆழமாகப் போக முடியாது. அது மிகவும் அமைதியான நிலையை அடைய முடியாது. அறிந்து கொள்ளுவதற்கு, ஒரு சீடன் மிகவும் அவசரப்படக்கூடாது; அவன் சரியான நேரத்துக்காகக் காத்துக் கொண்டு இருக்க வேண்டும்- நம்பிக்கை காத்திருத்தல், மற்றும் தன்னையே தயார்ப்படுத்திக் கொள்ளல்.

ஒரு சீடன், எதற்காக குருவுக்கு சேவை செய்ய வேண்டும் என்பதை ஒரு போதும் அறிந்து கொள்ள முடியாது- ஏன் அவன் அவருக்கு வேலைக்காரனாக இருக்க வேண்டும்? அப்படி வேலை செய்தல், சமத் தொடர்பு கொள்ள ஒரு வழியாக இருப்பது அவர்களுக்குத் தெரியாது. இப்படி ஒரு சீடன் குருவுக்கு வேலை செய்யும் பொழுது, மற்றும் காத்திருக்கும் பொழுது, அவர்களுக்குள்ள வேறுபாடு மறைந்து சீடன் குருவோடு ஒன்று கலக்கிறான். இப்பொழுது குரு உடலும், சீடன் உடலும் வெவ்வேறாக இல்லை. குருவின் உடல் வலியையும், வியாதியையும், தன்னுடையதாக சீடன் உணருகிறான். அதைப்போல குருவின் பேரின்ப நிலையையும் ஆனந்தத்தையும் அவன் உணருகிறான். கொஞ்சம் கொஞ்சமாக அவன் குருவுக்குள் ஐக்கியமாகிறான். இப்படி அவன் குருவிடம் ஐக்கியமான பிறகு, அவன் குருவோடு ஒன்றாகிறான். நீங்கள் குருவின் உடலோடு ஒன்றாகாமல், ஆத்மிகத்தில் ஒன்றாக ஆக முடியாது- ஏனென்றால், உடல்தான் அடித்தளம்.

சீடன், தன் குருவிடம் எந்தவித கேள்வியும் கேட்காமல் வேலை செய்து கொண்டு இருக்கிறான். இதுதான் ஆத்மிக அதிசயம்! அவன், "எனக்கு இதைச் சொல்லித்தாருங்கள், அதைச் சொல்லித் தாருங்கள்'' என்று அவரிடம் கேட்கமாட்டான்; இப்படிக் கேட்பதே, ஒரு குருவை அவமதிப்பது போல ஆகும். சரியான தருணத்தில், அவனுக்கு உரைக்கப்படும், நேரம் சரியாக இருக்கும் பொழுது, அவனுக்கு போதிக்கப்படும். அந்த சரியான சமயம் வருவதற்காக, அவன் காத்துக் கொண்டு இருக்க வேண்டும். சில சமயம் அவன் பல வருடங்கள் காத்திருக்க வேண்டும். அல்லது இன்றே போதும். சில சமயம், 20 வருடங்கள் ஆகியும் அவன் வெறுமனே காத்துக் கொண்டு இருப்பான். அவன் அவரிடம் சென்ற பொழுது, வாலிபனாக இருந்திருப் பான். இப்பொழுது வயோதிகனாகியும் காத்துக் கொண்டு இருப்பான்- இன்னும் காத்துக் கொண்டு இருக்கத் தயாராக இருக்கிறான்! இந்தப் பொறுமையும், காத்திருத்தலும், குருவும், சீடனும் ஒன்றாகக் கலக்கக் கூடிய ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தி விடும். அப்படி ஒன்றாகக் கலக்கும் தருணத்தில், எதை வெளியிட முடியாதோ, அது வெளியிடப்படும்.

'விட்டிங்ஸ்டெயின்' (Wittingenstein), எதை வார்த்தையால் சொல்ல முடியாதோ, அது சுட்டிக்காட்டப்படும் என்று எங்கேயோ சொல்லி இருக்கிறார். சொல்லுவதற்கு, பொறுமை தேவையில்லை. ஆனால், சுட்டிக் காட்டப்படுவதற்கு, மிகுந்த பொறுமை தேவை. நான் உங்களுக்கு ஏதாவது சொல்ல விரும்பினால், அதை என்னால் இப்பொழுதே சொல்ல முடியும். உங்களுடைய பொறுமை, உங்களுடைய காத்திருத்தல் எனக்குத் தேவையில்லை. நான் இப்பொழுதே அதைச் சொல்ல, நீங்கள் அதை இப்பொழுதே கேட்க முடியும். ஆனால், நான் உங்களுக்கு ஏதோ ஒன்றைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அதை நீங்கள் சரியாகப் பார்க்க உங்களை, நீங்களே வெகுவாக தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும். அதைப்பார்க்கக் கூடிய தகுதி உங்களிடம் ஏற்படாத வரையில், அதை என்னால் சுட்டிக்காட்ட முடியாது.

ஒரு குரு என்பவர் அடிப்படையில் 'எதையோ சுட்டிக்காட்டுபவராக இருப்பாரேயன்றி எதையும் சொல்பவராக இருக்கமாட்டார்.' சீடன் விழிப்போடு இருந்தால், எந்தவித குறுக்கீடும் இல்லாமல், கேள்வி எதுவும் இல்லாமல் விளங்க வேண்டியவை, தானே விளங்க ஆரம்பித்து விடும். விளங்க வேண்டியவை, எப்பொழுதும் விளக்கமாகவே இருக்கின்றன; ஆனால் உங்களுடைய மனம்தான் குழப்பத்தில் இருக்கிறது- குழப்பமான மனம், தெளிவானவைகளைக் குழப்பவே செய்யும். ஆனால், உலகப் பொருள்களைப் பொறுத்த விஷயத்தில், அதனுடைய குழப்புதல் அவ்வளவு மோசமாக இருக்காது ஏனென்றால், உங்களுடைய மனத்தையே சார்ந்திருக்காத வகையில், அவை யாவும் அவ்வளவு தெளிவான முன்னிலை யாக இருக்கின்றன. ஆனால், ஆத்மிகம் மிகவும் தன்னிலையாக இருப்பதால், அது உங்களுடைய மனத்தின் தன்மையைப் பொறுத்ததாகிறது. ஏனென்றால், ஒரு குழப்பமான மனம், தவறாகப் புரிந்து கொண்டு, எல்லாவற்றையும் அழித்துவிடும்.

அழிவு என்பது, நம்முடைய பழைய விஷயஞான மூட்டைகளால் வருவது. உங்களுடைய மனம், அவ்வளவு விஷயங்களைச் சேகரித்து வைத்திருக்கிறது. ஆகவே, இந்தப் பழைய விஷயஞானக் குப்பைகளெல்லாம் இடையில் புகுந்து, பெருத்த குழப்பத்தை ஏற்படுத்தி விடும்.

நீங்கள் இப்பொழுது புதிதாகத் தெரிந்துகொண்டவற்றைக் குறுக்கிடு செய்யக்கூடாது. புதியவை ஒவ்வொன்றையும், நீங்கள் புதிய மனத்துடன்தான் பார்க்க வேண்டும். நீங்கள் உங்களுடைய விஷய ஞானங்களை ஒதுக்கி வைத்துவிட்டு, நேரடியாக, உடனடியாக புதியவற்றைப் பார்த்தால், அது எப்பொழுதும் மிகவும் சுத்தமாக, தெளிவாக உங்களுக்குத் தெரியும். உயிர்த்தன்மை மிகவும் சிறப்பாக, வெகுளித்தனமாக சுத்தமாகவும், படிகம் போல மிகவும் தெளிவாகவே இருக்கிறது. ஆனால், மனிதமனம் அதைக் குழப்பிக் கொள்ளுவது என்பதே ஒரு அதிசயம் தான்! மனம் அதைப் பல வழிகளிலும் குறுக்கிடு

செய்வதால் தான். அந்தக் குழப்பம் நேரிடுகிறது. உங்களுக்கு இதுவரை தெரியாததைப் புரிந்து கொள்ளுவதற்காக, நீங்கள் உங்களுக்கு இதுவரை தெரிந்ததை வைத்து அதைக் குறிக்கீடு செய்வதால், அந்தக் குழப்பம் ஏற்படுகிறது.

உங்களுக்கு அளிக்கப்பட்ட அந்தப் புதுமையில், முழு பிரக்ஞையாக, அந்தத் தோன்றுதலில் முழு விழிப்பாக இருந்தால், அது உங்களுடைய இதயத்தை நேரடியாக அடைகிறது. நான் சொல்லிக் கொண்டு இருப்பது, பகுத்தறிவுக்கு ஒவ்வாததாக இருக்கலாம். ஆனால் அதுதான் உண்மை. மனம் ஒரு போதும் புரிந்து கொள்ள முடியாது; இதயம் தான் புரிந்து கொள்ளும். புரிந்து கொள்ளுதலின் மையம் ஒரு போதும் மனத்திடம் இல்லை; அது எப்பொழுதும் இதயத்தில் தான் இருக்கிறது; இதுதான் புரிந்து கொள்ளும். இதயம் எப்பொழுதுமே சுத்தமாகவும், புதுமைத் தன்மையிலும் மற்றும் இயல்பாகவும் இருக்கும். அது ஒரு போதும் பழையவற்றால் அழுத்தப்படுவது இல்லை. ஆனால், மனம் ஒரு போதும் புதிதாகவோ, இயல்பாகவோ இருப்பது இல்லை. அது எப்பொழுதும் பழமையிலும், இறந்த காலத்திலும் தான் இருக்கும்; அது இறந்தே எப்பொழுதும் செயல்படும்- அது ஒரு இறந்த அனுபவங்களின் கூட்டுதான். ஆகவே, மனம் வேலை செய்யும்பொழுது, நீங்கள் எப்பொழுதும் தவறாகவே புரிந்து கொள்ளுவீர்கள்- நீங்கள் அப்படித்தான் இருக்க முடியும். ஆனால் அது வேலை செய்யாத பொழுது, அது அமைதி யாகவும், செயலற்றும், உயிர்த்தன்மையற்றும் இருக்கும் பொழுதும்- அப்பொழுது வெறும் பிரக்ஞைத் தன்மை மட்டும் இருந்தால்- ஒரு இடைவெளி ஏற்பட்டு இதயத்தின் கதவு திறக்கப்படுகிறது.

இதயம் எந்தவித குறுக்கீடும் இல்லாமல், ஒன்றை நேரடியாகப் புரிந்து கொள்ளுகிறது. அதனுடைய புரிந்து கொள்ளுதல் நேரடியானது. மற்றும் உடனுக்குடன் நிகழுவது. நீங்கள் வெறுமனே புரிந்து கொள்ளுகிறீர்கள், வெறுமனே அறிந்து

கொள்ளுகிறீர்கள். 'அது அப்படியே' என்று அறிந்து கொள்ளுகிறீர்கள். நான் தியானம் என்று சொல்லுவது, இப்படி மனத்தை பக்கத்தில் அகற்றி வைத்தலைத்தான். நீங்கள் இதயத்தின் வழியாக உயிர்த்தன்மையைப் பார்க்கும் பொழுது, நீங்கள் இதயத்தின் வழியாகவே, அதனிடம் தொடர்பு கொள்ள முடியும்; அப்பொழுது நீங்கள் தியானத்தில் இருக்கிறீர்கள்; ஆனால், நீங்கள் மனத்தின் மூலமாக வாழும் பொழுது, உங்களால் ஒருக்காலும் தியானத்தில் இருக்க முடியாது.

தியானத்திற்கு இருப்பிடம் இதயம் தான் என்று கூறலாம். மனம் தியானத்திற்கு எதிராக வேலை செய்யும் தன்மை படைத்தது; இந்த இரண்டும் ஒன்றாகச் சேர்ந்து வேலை செய்ய முடியாது. மனம் வேலை செய்தால், இதயம் வேலை செய்யாது. மனம் வேலை செய்யும் பொழுது, இதயம் தேவை இல்லை; அது தூங்கச் செல்லுகிறது. மனம் வேலை செய்யாத பொழுதுதான், இதயம் மேலே வந்து மூச்சு விட ஆரம்பிக்கிறது. மனம் தேவையில்லாத பொழுதுதான், அலட்சியப்படுத்தும் பொழுதுதான் இதயம் விழித்துக் கொள்ளுகிறது. இதயம் உயிர்த்தன்மையோடு கலக்கும் பொழுதுதான், பேரானந்தம் கிட்டுகிறது. பேரழகுத்தன்மை கிட்டுகிறது. ஒவ்வொன்றும் தெய்விமாகிறது. ஒவ்வொன்றும் தெய்விகமாகத்தான் இருக்கிறது; ஆனால், இதை நீங்கள் இப்பொழுதுதான் அறிந்து கொள்ளுகிறீர்கள்.

இதயம் இந்த உலகத்தோடு உறவு கொள்ளும்பொழுது, இந்த உலகமே தெய்விகமாகிறது. மாறாக, மனம் இந்த உலகத்தோடு உறவு கொள்ளும்போது, இந்த உலகம் வெறும் பொருளாகிறது. பொருள்களுக்கு அப்பால் மனதிற்கு எதுவும் தெரியாது. ஆகவேதான், இதயம் மூலமாக இயங்கும் மனிதர்கள், இந்த உலகம் பொய்யென்றும், மாயை என்றும் சொன்னார்கள்– அது மாயை– தந்திரக் காட்சிதான். அப்படிச் சொல்வதற்குக் காரணம் இருக்கிறது. ஆத்மிகத் தன்மைக்குக் கீழே, இதயத்தால் வரமுடியாததற்கு பொருளைப் பற்றி, எதுவும் தெரியாது.

அப்பொழுது, பொருள்கள் நிறைந்த இந்த உலகம் மாயையாக, பொய்யாக, கனவாக- அது இல்லாத மாதிரி- தோற்றம் அளிக்கிறது.

மனத்தால் மட்டும் இயங்கும் மனிதர்கள், ஆத்மிகத்தை மறுத்தார்கள். எங்குமே காணப்பெறாத, அந்த ஆத்மிகம்தான் மாயை என்றும் கனவு என்றும் அவர்கள் கூறுகிறார்கள். அவர்களைப் பொறுத்தவரையில் பொருள்தான் இருக்கிறது; ஆத்மிகமானது என்று எதுவும் கிடையாது; அது முட்டாள்தனமானது, கனவு மயமானது. நீட்சே எங்கேயோ ஓரிடத்தில், 'இயேசு ஒரு புத்திசாலி பிறவி அறிஞன் என்று கூறுபவர்கள் இருக்கிறார்கள். ஆனால், நான் அவரை ஒரு முட்டாள் என்று கூறவே விரும்புகிறேன்,' என்று சொல்லியிருக்கிறார். உயிர்த்தன்மையை மனம் மூலமாகப் பார்க்கும் ஒருவருக்கு, இதய சம்பந்தமான ஒவ்வொன்றும் முட்டாள் தனமாகவேபடும்.

கீழைநாடுகள் இதயத்தால் இயங்கக் கூடியவை; மாறாக மேலை நாடுகள் மனதால் இயங்கக் கூடியவை. மிகச்சிறந்த விஞ்ஞானப் படைப்புகளை மேலை நாடுகளால் உண்டாக்க முடிகிறது; ஆனால் கீழை நாடுகளால், அது முடியாது- வெகுளித்தனத்திலிருந்து, உங்களால் எப்படி விஞ்ஞானத்தை உண்டு பண்ண முடியும்? அது ஒருக்காலும் நடக்காது. ஆகவே தான், கீழை நாடுகள் விஞ்ஞானத்திற்குப் புறம்பாக வாழ்ந்து கொண்டு இருக்கின்றன.

ஆனால் மேலைநாடு தியானத்தைப் பற்றி எதுவுமே தெரியாத நிலையில்தான் வாழ்ந்து கொண்டு இருக்கிறது. அதிகபட்சமாக, அவர்களால் பிரார்த்தனைதான் செய்ய முடியும். ஆனால், பிரார்த்தனை என்பது முக்கியமல்ல. நீங்கள் மனத்தோடு தான் பிரார்த்தனை செய்ய வேண்டும். நீங்கள் ஏதோ ஒன்றை, திரும்பத் திரும்பக் கூற முடியும். மனம் இல்லாவிட்டால், உங்களுடைய பிரார்த்தனை அமைதியாகிறது. உங்களால் அப்பொழுது பிரார்த்தனை செய்ய முடியாது-

அங்கே எந்த வார்த்தையும் கிடையாது. இதயத்தைக் கொண்டுதான், உங்களால் உண்மையான பிராத்தனையில் இருக்க முடியும்.

மேலைநாடு ஒரு விஞ்ஞானப் பூர்வமான ஆத்மிகத்தை, வழங்க முடியவில்லை. அவர்களால் தியானத்தை ஏற்படுத்த முடியவில்லை. அவர்கள், தியானத்தை ஒருமுகப் படுத்துவதிலேயோ அல்லது ஆழ்ந்து ஒன்றில் செல்லுவதிலேயோ தான் மாற்றி இருக்கிறார்கள்- ஆனால் அது இரண்டும் அல்ல. ஆகவே, அவர்கள் தியானத்தை தவற விட்டுவிட்டார்கள். ஒருமுகப்படுத்துதல் என்பது மன ரீதியானது. உங்களுடைய மனம் ஒன்றில் நிலைப்படும்பொழுது, உங்களுடைய எண்ணங்களின் தன்மை அனைத்தும் ஒன்றில் குவிக்கப்பட்டு, அது ஆழ்ந்த எண்ணுதலாகிறது. அதற்கும் இதயத்துக்கும் சம்பந்தமில்லை.

தியானம் என்பது ஒருமுகப்படுத்துதலோ, அல்லது ஒன்றில் ஆழ்ந்து செல்லுவதோ அல்ல. அது மனமற்றது, மனமற்ற நிலையில் வாழுவது, நமக்கும், இந்த உலகத்துக்கும் இடையில் மனமற்று, உலகத்தோடு உறவு கொள்ளுவது. மனம் அற்ற கணத்திலேயே, உங்களுக்கும், இந்த உயிர்த்தன்மைக்கும் இடையில், உங்களுக்கும், தெய்விகத்தன்மைக்கும் இடையில், எந்தத் தடுப்பும் இருக்காது. இதயத்தால், எல்லைகள் வகுக்க முடியாது; தடுப்புகளையோ, மதிலையோ ஏற்படுத்த முடியாது. இதயத்தோடு, இந்தப் பேரியியக்க உயிர்த்தன்மை எல்லையில்லாததாகிறது. நீங்கள் எங்கேயும் முடிவதில்லை; யாருமே எங்கிருந்தும் ஆரம்பமாவதில்லை. நீங்கள் எங்கேயும் இருக்கிறீர்கள்; நீங்கள் இந்த முழு உயிர்த்தன்மையோடு ஒன்றாக இருக்கிறீர்கள்.

இதயத்தால் இருவேறு நிலைகளை உணர முடியாது. இருவேறு நிலைகள் என்பது மனத்தின் படைப்பு. மனம் எதையும் கூறுபடுத்தும். பிரித்துப் பார்க்கும். கூறுபடுத்தாமல், அதனால் வேலை செய்ய முடியாது. ஆகவேதான் விஞ்ஞானம்

அணுக்கூட்டங்கள் (Molecules), அணுக்கள் (Atoms), எலெக்ட்ரான்கள் (Electrons) என்று அனைத்து உயிர்த்தன்மையின் கூறுகளை, மேலும் மேலும் அக்குவேறு ஆணிவேறாகப் பிரித்துக் கொண்டே செல்லுகிறது. எந்த அளவுக்கு ஒன்றை மேலும் மேலும் பிரித்துக்கொண்டே இருக்கிறதோ, அந்த அளவுக்கு மனம் சமாதானமடைகிறது. ஏனென்றால், இந்த உயிர்த்தன்மைக்கு ஒரு எல்லை வகுப்பட்டதாம்! இப்பொழுது அதனால், இந்த உயிர்த்தன்மையை தன் விருப்பப்படி இயக்க முடியுமாம்; அதைச் சுலபமாக அறிந்து கொள்ள முடியுமாம். ஆனால், அந்த உயிர்த்தன்மை மேலும் மேலும் பரந்தும், விரிந்தும், எல்லையற்றும் ஆகிறதோ, அந்த அளவுக்கு மனம் பயம் கலந்த மரியாதை உணர்வை அடைகிறது. அதனால், உயிர்த்தன்மையை அறுதியிட்டுக் கூற முடியாது. உயிர்த்தன்மை மேலும் மேலும் புரிந்து கொள்ள முடியாததாகிறது.

புரிந்து கொள்ள முடியாததை, புரிந்து கொள்ள விஞ்ஞானம் கூறுபோடும் முறையைக் (Analaysis) கையாளுகிறது. ஒன்றை மேலும், மேலும் கூறுபோட்டு, அதனுடைய புரியாத தன்மையை புரிந்து கொள்ள முனைகிறது. இந்த முழு உலகத்தையே, கூறுபோட்டுப் புரிந்து கொள்ள முடிந்தால், இந்த உலகத்தில் எந்த அற்புதமோ, ஆச்சரியமோ இருக்காது. ஆனால், அது புரிந்து கொள்ள முடியாத நிலையில்தான் இருக்கும். ஏனெனில், அதற்குத் தெளிவான தீர்வு காண, கூறுபோட்டதை ஒன்று சேர்த்து (Synthesis) முன்பு போல உண்டாக்கினால்தான் முடியும்.

ஆகவே, எல்லா எல்லைப்படுத்துதலையும், எல்லா எல்லைகளையும் விட்டு விடுங்கள். அப்பொழுது எல்லாமே அதிசயமாகவும், அற்புதமாகவும் தெரியும். பிறகு, நீங்கள் அந்த அற்புதத்தோடு ஒன்று கலந்து விடுவீர்கள். அப்பொழுது, ஒவ்வொன்றும் தெய்விகமாகத்தான் தெரியும். உயிர்த்தன்மையை அறிந்து கொள்ள, இது ஒன்றே வழி. இது ஒன்றுதான் தீர்வு. ஆகவே, இந்த விஞ்ஞான எல்லைப்படுத்துதல் முடிவுக்கு வரட்டும். எல்லைப்படுத்தப்படாத, எல்லையில்லாத உலகம்

செயல்படட்டும்- ஒரு ஒருங்கிணைந்த முழுமை, உறுப்பு ஒருமை மற்றும் படிகச் செயல்பாடு அனைத்தும் நடைமுறையாக இருக்கட்டும். இந்த முழுமை- அதனுடைய உணர்வு, அதனை அறிந்து கொள்ளுதல், அதனுடன் வாழுதல் அனைத்தையும், நான் கடவுள் என்று அர்த்தம் கொள்ளுகிறேன்.

கடவுளை அறிந்துகொள்ள, தியானம் ஒரு வழியாக இருக்கிறது. பொருள்களை அறிந்து கொள்ள மனம் ஒரு வழியாக இருக்கிறது. மனமும், தியானமும் எதிரும், புதிருமாகவே இருக்கின்றன- வெவ்வேறு கணத்தில் நீங்கள் இரண்டு வழிகளிலும், அதை அடைய முடியாது. உங்களால் அதை அடைய முடியும்; அந்தக் கணத்தில், உங்களுடைய இதயம் வேலை செய்யாது. நீங்கள் இதயத்தை அடைய முடியும்; அந்தக் கணத்தில், உங்களுடைய மனம் வேலை செய்யாது. நீங்கள் இந்த இரண்டையும் உபயோகிக்க முடியும்- ஆனால் ஒருங்கே அல்ல; அவை இரண்டும் இருவேறு நிலைகளில் இருக்கின்றன.

தியானமில்லாமல், ஒவ்வொன்றும் பகுத்தறிவு மயமாக இருக்கும்; இருந்தும் முட்டாள்தனமாகவே இருக்கும். ஏனென்றால் அது அர்த்தமற்றது. தியானத்தோடு, ஒவ்வொன்றும் பகுத்தறிவற்றதாகவே இருக்கும்; ஆனால் அவை அர்த்த முடையதாக இருக்கும். வாழ்வு அர்த்தமுள்ளதாகும்; இந்தக் கணத்திலேயே வாழ்வு நிகழுகிறது- அது அர்த்தமில்லாமல் இருக்கும்பொழுது, அர்த்தமற்று பகுத்தறிவோடு புரிந்து கொண்டு இருக்கும்பொழுது, அது நிகழுவது இல்லை. அது எந்த அளவுக்கு இறந்து காணப்படுமோ, அந்த அளவுக்கு அது இறந்ததாகிறது. இது ஒரு இயற்கை முரண்பாடு; மனதோடு, நீங்கள் ஒன்றைப் புரிந்து கொள்ளலாம்; ஆனால், அதனுடைய உண்மையான அர்த்தம் அழிக்கப்பட்டிருக்கும். இதயத்தோடு, ஒன்றைப் புரிந்துகொள்ள முடியாது. ஆனால், அதனுடைய உண்மையான அர்த்தத்தை அறிந்துகொள்ள முடியும், உணர முடியும், தெளிவு பெற முடியும்.

மனத்தோடு, ஒவ்வொன்றையும் பிரித்து வகைப்படுத்த முடியும். ஆனால், அதன்மூலம் நீங்கள் ஒரு வெறுமையை அடைகிறீர்கள். ஆகவே, முடிவில் அதில் எந்த ஆச்சரியமும் இருக்காது. எப்பொழுது மனம் எல்லாவற்றையும் பகுத்து அறிந்து கொள்ளுகிறதோ, அப்பொழுது தற்கொலையைத் தவிர, வேறு எதுவும் இந்த உலகத்தில் இருக்காது. ஏனென்றால் எதுவுமே புரிந்து கொள்ள முடியாத வகையில் இல்லாமல், உயிர்வாழ முடியாது. எவ்வளவு அதிகமாக, வாழ்க்கை புரிந்து கொள்ள முடியாதவகையில் இருக்கிறதோ, அவ்வளவு அதிகமாகவே அது வாழ்வதற்குத் தகுதிபடைத்ததாகிறது.

மதம் என்பது அந்த அறியாததை அறிந்து கொள்ளுவதுதான்; ஆனால் அதை அழித்து அல்ல. மதத்தின் வழியாக அறிந்து கொள்ளுவது என்பது மிகவும் வித்தியாசமானது- அது தர்க்க ரீதியானதோ அல்லது பகுத்தறிவுக்கு உட்பட்டதோ அல்ல. அது முழுமையான புதுமையில் இயங்குகிறது. ஆனால், நமது மனங்கள் அதனோடு ஒய்வாக இருப்பது இல்லை. ஏனென்றால் நாம் பகுத்தறிவோடு மிகவும் ஒன்று கலந்து இருக்கிறோம். நம்முடைய மனத்தின், பகுத்தறிவின் ஒவ்வொரு சிறு பாகமும் நம்முடைய முழுமையாகிவிட்டது. அவை தான் நாம்.

வாழ்க்கை பகுத்தறிவாகாது; அது அடிப்படையில் பகுத்தறிவற்றே இருக்கிறது- வாழ்க்கை மற்றும் உயிர்த் தன்மையின் பகுத்தறிவற்றத் தன்மையே அற்புதமாக இருக்கிறது. அப்படி ஒவ்வொன்றும் ஆச்சரியமாகவும், அற்புதமாகவும் இருக்கும் பொழுது நீங்கள் இப்பொழுது, இங்கே தெய்விகத்தில் இருக்கிறீர்கள். தியானத்தில், இந்த அற்புதம் நிகழுகிறது; நீங்கள் அற்புதங்களோடு ஒன்றுபடுகிறீர்கள்.

தியானம், இதயத்துக்கானது. இதயம், தனக்கே உரிய வழியில் ஒன்றைப் புரிந்து கொள்ளுகிறது; அது பகுத்தறிவுக்கும், மனதுக்கும் முற்றிலும் வேறானது. நீங்கள் அனைவரும் இதயத்தைப் பற்றி, மேலும் அதிகமாகத் தெரிந்துகொள்ள வேண்டும் என்றே நான் விரும்புகிறேன்.

குரு சீடன் உறவு என்பது இதயத்தைப் புரிந்து கொள்ளுதல் தான். கிழக்கு, இதற்குப் பல ரகசிய சாவிகளை வைத்திருக்கிறது; அதில் ஒரு சாவி கூட போதும். ஏனென்றால் ஒரே ஒரு சாவி, ஆயிரமாயிரம் பூட்டுகளைத் திறந்து விடும். குரு/சீடன் உறவு என்பது அப்படிப்பட்ட ஒரே ஒரு சாவிதான்.



# 8 கடவுள் என்பது உயிரியக்கம் தான்



"கடவுள் இருக்கிறாரா? கடவுள் இருக்கிறார் என்றால், ஏன், இந்த உலகத்தில் இவ்வளவு கேடுகளும், கொடுமைகளும் மற்றும் ஊழல்களும் இருக்கின்றன?"

கடவுள் என்பது பழங்காலந்தொட்டு வழிவழியாக வந்த ஒரு ஆதாரமற்ற வார்த்தை. அது மதகுருமார்களின் கண்டுபிடிப்பு. பார்க்கப் போனால், கடவுள் இருக்கிறாரா என்று கேட்பதே முட்டாள்தனமானது. அதை உண்மையாக அறிந்தவர்களுக்கு, கடவுள் என்பது பிரபஞ்ச பேரியக்க உயிர்த்தன்மை அல்லது 'இருத்தலியல்' (Existence); தான் கடவுள்.

இந்த உலகத்தில் பொருள்கள் இருக்கின்றன; கடவுள் இல்லை. ஒரு நாற்காலி இருக்கிறது. ஏனென்றால், அது இல்லாத நிலைக்கும் செல்லும். நாற்காலி இருக்கிறது என்று சொல்லுவது அர்த்தமுடையது. ஏனென்றால் அதற்கு இல்லாத நிலையும் ஏற்படும்.

கடவுள் என்பது உயிர்த்தன்மை. அல்லது ஒரு இருப்பு (Isness). கடவுள் இருக்கிறார் என்று நாம் கூறும்பொழுது, அந்தக் கடவுள் என்ற வார்த்தையிலிருந்து, நாம் எதையோ உண்டு பண்ணுகிறோம். பிறகு கடவுள் ஒரு பொருளாகி

விடுகிறது. ஆனால் கடவுள் ஒரு பொருள் அல்ல; அல்லது ஒரு நபரும் அல்ல. ஆகவேதான் உங்களால் அவரை எதற்கும் பொறுப்பாக்க முடிவதில்லை. தனித்தன்மையுள்ள நபர் என்று ஒருவர் இருந்தால், அல்லது பொறுப்புடைய நபர் என்று யாராவது இருந்தால் தான், பொறுப்பு என்பது ஏற்படுகிறது.

கடவுள் ஒரு நபர் அல்ல; அவர் சுத்த உயிர்த்தன்மையாக இருக்கிறார். கடவுள் என்ற வார்த்தை தவறான பாதைக்கு அழைத்துச் செல்லுவது. ஏனென்றால், அது ஒரு தனித்தன்மையுள்ள நபரைக் குறிப்பிடுகிறது. உயிர்த்தன்மை அல்லது இருப்பு, உள்ளமை என்ற வார்த்தையை உபயோகிப்பது நல்லது. உயிர்த்தன்மையின் முழுமையே கடவுளாகும்.

ஆகவே, கடவுள் இருக்கிறாரா என்று கேட்கக்கூடாது. அது, உயிர்த்தன்மை உயிர் வாழுகிறதா என்று கேட்பதற்குச் சமம்தான். ஆனால இப்படி- உயிர்த்தன்மை உயிர்வாழ்கிறதா- கேள்வி கேட்பதுவும் முட்டாள் தனமானதுதான். உயிர்த்தன்மை வாழுகிறது என்பது வெளிப்படை. அதைப் பற்றி, எந்தக் கேள்வியும் எழ வாய்ப்பில்லை. உயிர்த்தன்மை ஒன்று என்று இல்லாவிட்டால், இந்தக் கேள்வியே எழும்புவது அல்லது இப்படி கேள்வி கேட்பவரே இருந்திருக்க முடியாது!

நான் ஒன்றைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்; அதாவது நான் கடவுள் என்று சொன்னால், நான் உயிர்த்தன்மையை தான் அர்த்தம் செய்கிறேன். கடவுள், பல பொருள்களுக் கிடையே உள்ள ஒரு பொருள் அல்ல. கடவுள் ஒரு முழுமையான வஸ்துத் தன்மையாக (Thingness) இருக்கிறார். மேஜை இருக்கிறது என்று சொல்லுவதும், மேஜையே கடவுள் என்று சொல்லுவதும் ஒன்றுதான். அதைப்போல, நீங்கள் இருக்கிறீர்கள் என்று சொல்லுவதும், நீங்களே கடவுள் என்று சொல்லுவதும் ஒன்று தான். கடவுளே உயிர்த்தன்மை. கடவுளே இருத்தலியல். இருத்தலியலின் தன்மை, உயிரியக்கத்தின் தன்மை ஆகும்.

ஆகவே, முதலில் கடவுள் என்பது ஒரு பொருள் அல்ல. இரண்டாவது கடவுள் ஒரு நபர் அல்ல. ஏனென்றால் ஒரு முழுமை, ஒரு நபராக இருக்க முடியாது. ஒரு குறிப்பிட்டத் தன்மை (Personality) என்பது உறவுக்குரியது. தனிமையில், முழுமையான தனிமையில், நீங்கள் ஒருக்காலும் ஒரு நபராக இருக்க முடியாது; நீங்கள் அந்த வெறும் உயிர்த்தன்மையாகத் தான் இருப்பீர்கள். ஆகவேதான், தெய்விகத்தை தேடுபவர்கள், தனிமையை நாடிச் செல்லுவார்கள். இப்படியாக, அவர்கள் தனிநபர் என்பதை ஒரு முடிவுக்கு கொண்டு வருகிறார்கள்; பிறகு அவர்கள், அந்த உயிர்த்தன்மையோடு ஒன்றாகி விடுகிறார்கள். தனிமை, முழுமையான தனிமை, அந்த உயிர்த்தன்மை என்னும் ஆழ்ந்த பள்ளத்தில் குதிப்பதற்கு முன்வைக்கும் முதல் அடியாகும்.

கடவுள் ஒரு நபர் அல்ல. ஏனென்றால், அவரிடம் எதிர்த்தன்மை என்றும் எதுவும் கிடையாது. மற்றும் தனித்தன்மை என்றும் எதுவும் கிடையாது. கடவுளால், 'நான்' என்று சொல்ல முடியாது. ஏனென்றால், 'நீ' என்று எதுவும் இங்கு இல்லை. அவரை, யாருடனும் ஒப்பிட முடியாது. அவர் ஒரு முழுமை. ஆகவே, எல்லா உறவுகளும் அவரிடமே அடங்கி இருக்கின்றன. அவருக்கு அப்பால் எதுவும் கிடையாது.

ஆகவே, கடவுள் ஒரு நபராக இல்லை என்றால், பொறுப்பு என்பது பற்றிய கேள்வியே கிடையாது. கெடுதல் என்று இருந்தால், அது இருக்கட்டும். அதற்கும் யாரும் பொறுப்பல்ல.

பொறுப்பு என்று வரும் பொழுது, அது பொறுப்பை வகிக்கக்கூடிய ஒரு ஆளையும் குறிக்கிறது. ஒரு நான்கு வயதுப் பையனை நீதிமன்றத்துக்குக் கொண்டு செல்ல முடியாது. ஏனெனில், அவன் இன்னும் விபரம் தெரிந்த நபராக ஆகவில்லை. ஆகவே, அவன் செய்த செயலுக்கு, அவனைப் பொறுப்பாக்க முடியாது. பொறுப்புணர்ச்சியும் மற்றும் அகங்கார உணர்வும் அவனிடம் இல்லாத அளவுக்கு, அவன் அவ்வளவு வெகுளியாக இருக்கிறான். அவனை, அதற்கு

ஒருக்காலும் பொறுப்பாக்க முடியாது. ஏனென்றால், பொறுப்பு என்பது அகங்காரத்தோடு, தன்முனைப்போடு கூடியது. உயிர்த்தன்மைக்கு எந்த அகங்கார உணர்வும் கிடையாது- கடவுளிடம் எந்த அகங்காரமும் கிடையாது. ஆகவே, கடவுளை எந்தக் கெட்டதுக்கும், ஒருக்காலும் பொறுப்பாக்க முடியாது.

ஆனால், மனித மனம் மிகவும் தந்திரத்தன்மையுடையது. முதலில் நாம், ஒரு தனி நபர் கடவுளை ஏற்படுத்தி இருக்கிறோம்- நாம் கடவுளுக்கு ஒரு தனித்தன்மையைக் கொடுத்து இருக்கிறோம். பிறகு நிகழுவதற்கு, அவரே பொறுப்பு என்று நினைத்துக் கொள்ளுகிறோம். நாம், பிரச்சினை என்று எதுவுமில்லாமலேயே, பல பிரச்சினைகளை உண்டாக்கிக் கொண்டே, ஏற்படுத்திக்கொண்டே இருக்கிறோம்; அவை வெறும் வார்த்தை ஜாலங்கள் தான். 99 சதம் தத்துவம், வார்த்தை ஜாலங்களால்தான் அமைந்திருக்கிறது. நீங்கள் அந்த முழுமையை, உயிர்த்தன்மையை ஒத்துக்கொண்டால், அதை ஒருக்காலும் எதற்கும் பொறுப்பாக்க முடியாது. ஆனால், நீங்கள் அதைக் கடவுள் என்று ஒத்துக் கொண்டால், அதை உங்களால் பொறுப்பாக்க முடியும்- இங்கு வார்த்தை தான் மாறி இருக்கிறது.

உயிர்த்தன்மை என்பது ஒரு நபர் அல்ல. ஆனால், கடவுள் ஒரு நபராகி விட்டால், நீங்கள் அவரிடம், "ஏன் இவ்வளவு கெட்டவைகள்?" என்று கேட்கலாம். உங்களால்தான், இந்த முழு விளையாட்டே விளையாடப்படுகிறது. கடவுள் அதில் பங்கு வகிக்கவில்லை. நீங்கள் அந்த உயிர்த்தன்மைக்கு ஒரு தனிப்பட்ட பெயரைச் சூட்டினால், தங்கள் பிரச்சினைகளை உண்டாக்குவதாக ஆகிறது. இப் பிரச்சினைகள் உண்மை யானவை அல்ல. அவை யாவும் உங்களால் ஏற்படுத்தப்பட்ட பிரச்சினைகள். உங்களால் கண்டுபிடிக்கப் பட்ட பிரச்சினைகள்

கடவுள் என்பது உயிர்த்தன்மைதான். கடவுள் இருக்கிறார் என்று என்னால் சொல்ல முடியாது. அது தேவையற்ற பல சொற்கோர்வையாகிவிடும். அவற்றில், உயிர்த்தன்மை இருக்கிறது

அல்லது கவிதை, கவிதையாக இருக்கிறது என்று சொல்லுவதற்குச் சமம்தான். அது எந்த அர்த்தத்தையும் கொடுக்காது. அது, எதையும் அறுதியிட்டுக் கூறாது. அது எதையும் தெளிவு படுத்தாது. அது எதையும் விளக்காது. அது, அதையே திருப்பிச் சொல்லுகிறது.

ஆகவே, என்னைப் பொறுத்தவரையில், கடவுளே உயிர்த்தன்மை; உயிர்த்தனிமை ஒரு நபரல்ல. அது வேறுவிதமாக இருக்க முடியாது. ஏனென்றால் முழுமை, ஒரு நபராக இருக்க முடியாது. எப்படி ஆக முடியும்? அது யாருக்கு மாறாக, ஒரு நபராக இருக்க முடியும்? அது எதற்கு மாறாக தன்னிடத்தேயே தன் முனைப்பை, அகங்காரத்தை உண்டாக்கிக் கொள்ள வேண்டும்?

உங்களுக்கு வேறாக பல தன் முனைப்புகள் இருப்பதினால், நீங்களும் தன்முனைப்பு உடையவர்களாக இருக்கிறீர்கள். வேறு வகை உணர்வுகள் ஏற்படுவதற்கு முன்பே, தன் முனைப்பு உணர்வு ஒரு குழந்தையிடம் ஏற்பட்டு விடுகிறது என்று மனநல வல்லுநர்கள் கூறுகிறார்கள். முதலில், ஒரு குழந்தை, அடுத்தவர்களைப் பற்றி பிரக்ஞையாக உணர்ந்து கொள்ளுகிறது. பிறகு, தன்னை பிரக்ஞையாக உணர்ந்து கொள்ளுகிறது. பிறகுதான், தன் முனைப்பு வருகிறது.

வேறு யாருமே இல்லாவிட்டால், உங்களைப் பற்றிய உணர்வு உங்களிடம் இருக்காது. அடுத்தவர்கள் இல்லாமல், உங்களையே நீங்கள் வரையறுத்துக் கொள்ள முடியாது- உங்களையே நீங்கள் வரையறுத்துக் கொள்ளல் என்பது பிறரிடமிருந்து வருகிறது. மற்றவர்கள்தான் உங்களை வரையறுக்கிறார்கள். அவர்கள்தான் உங்களை வேறுபடுத்திக் காண்பிக்கிறார்கள். பிறரை நீங்கள் அறிந்து கொள்ளுவதன் மூலம், நீங்கள் உங்களுடைய சொந்த எல்லைகளை உணர ஆரம்பிக்கிறீர்கள். பிறகு, உங்களுக்கு, "நான் இங்கே இருக்கிறேன்; நான் அங்கே இல்லை" என்று தெரிய ஆரம்பிக்கிறது. பிறகு, நீங்கள், "இது என்னுடைய உடல்; அந்த உடல் என்னுடையது அல்ல" என்று தெரிந்துகொள்ள

ஆரம்பிக்கிறீர்கள். பிறகு, நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள் என்பது எல்லைப்படுத்தப்படுகிறது- ஆக பிறருடைய தன்முனைப்பால்தான் ஏற்படுகிறது. யாருமே இல்லாத நிலையில், நீங்கள் ஒருக்காலும், உங்களை ஒரு நபர் என்று உணர்ந்து கொள்ள மாட்டீர்கள்.

கடவுள், ஒரு தன்முனைப்பாக ஆக முடியாது. அவர், தன்னை 'நான்' என்று சொல்ல முடியாது. ஏனென்றால், 'நீ' என்று எதுவும் கிடையாது. அவர், தன்னையே வரையறுத்துக் கொள்ள முடியாது. கடவுள், ஒரு எல்லைக்குட்பட்டது இல்லை. ஏனென்றால், வரையறுத்தல் என்றால், எல்லைகளை நிர்ணயித்தல் என்று அர்த்தம். அந்த முழுமைக்கு எந்த எல்லையும் கிடையாது. முழுமை என்றால் எல்லையற்றது மற்றும் எல்லையில்லாதது என்று அர்த்தம்.

எல்லையில்லாததை, நம்மால் புரிந்து கொள்ள முடியாது. மனதால் புரிந்து கொள்ளக்கூடிய அனைத்தும் எல்லைக்குட்பட்டதுதான். அந்த எல்லையில்லாததைக் கூட, நாம் ஒரு மிகப்பெரிய எல்லைக்குட்பட்டது தான் என்று நினைப்போமே தவிர, ஒரு போதும் அது எல்லையற்றது என்று உங்களால் நினைக்க முடியாது. ஒரு எல்லையற்ற உயிர்த்தன்மையை நம்மால் புரிந்து கொள்ள முடியாது. நீங்கள் அதைப் புரிந்து கொள்ளுகிறீர்களோ அல்லது புரிந்து கொள்ளவில்லையோ, அதில் எந்த வித்தியாசமும் கிடையாது.

எல்லைப்படுத்த முடியாததை, மனதால் புரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால், மனதுக்கு ஒரு தெளிவான எல்லைகள், ஒரு வரையறுத்தல் தேவையாக இருக்கிறது. ஆகவேதான், மனதால் கடவுள் தன்மை, உயிர்த்தன்மை என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

கடவுளை எல்லைப்படுத்த முடியாது. ஏனென்றால் ஒரு நபரை 'அவன்' என்று பிரதி பெயர்ச்சொல்லால் அழைக்கிறோம். அதைப் போல 'அவன்' என்று கடவுளையும் அழைக்கிறோம். ஆனால், கடவுளை 'அவன்' என்று அழைப்பது சரியில்லை.

ஏனென்றால், அப்படி 'அவன்' என்று கடவுளை அழைப்பதால், கடவுள் ஒரு நபராகி விடுகிறார். ஆனால், இதைத் தவிர வேறு வழியும் இல்லை. கடவுளை நாம் 'அது' என்று அழைத்தால், சரியாகவே இருக்கும். ஆனால், நாம் பொருள்களை, அது என்றே அழைக்கிறோம்; அப்படியென்றால், கடவுளும் ஒரு பொருளாகி விடுகிறார்! எல்லையில்லாததைக் குறிப்பிட, நம் மொழிகளில் வார்த்தையே கிடையாது. ஆகவே, 'அவன்' என்று சொல்லுவதுதான் பொருத்தமாக இருக்கும். ஆனால், அவன் என்பது இங்கு ஒரு போதும் ஒரு பெயரைக் குறிப்பதாகாது. அவன் என்பது ஒரு நபரல்ல, ஒரு அகங்காரமற்றத் தன்மை. நீங்கள் எதற்கும் அவனைப் பொறுப்பாக்க முடியாது.

நீங்கள் ஏதோ ஒன்றைக் கெட்டது என்று கூறினால், நீங்கள் இதைக் குறிப்பிட்டு யாரிடமும் கூறவில்லை. இந்த பிரபஞ்சத்திலிருந்து அதற்கு எந்தப் பதிலும் உங்களுக்கு வராது. ஏனென்றால், உயிர்த்தன்மையைப் பொறுத்தவரையில், கெடுதல் என்று எதுவும் கிடையாது. கெடுதல் என்பது நம்முடைய மனநிலையையும் மற்றும் ஒழுக்க வரையறைகளையும் பொருத்ததாகிறது. உதாரணமாக, நீங்கள், அசிங்கம் என்று யாரையாவது அழைக்கலாம். ஆனால், உயிர்த்தன்மையில் எந்த அசிங்கமும் கிடையாது. ஏனென்றால், அங்கு அழகு என்று எதுவும் கிடையாது. இந்த வேறுபாடு மனிதனைப் பொறுத்ததாகிறது. அது உயிர்த்தன்மையில் இல்லை. நீங்களும் ஒரு வரையறையை ஏற்படுத்தியிருக்கிறீர்கள். நீங்கள் சிலவற்றை அசிங்கம் என்றும் மற்றும் சிலவற்றை அழகு என்றும் வரையறுத்து வைத்திருக்கிறீர்கள். நீங்களே அந்த வேறுபாட்டை ஏற்படுத்தி விட்டு, பிறகு, "ஏன் அந்த அசிங்கத்தை கடவுள் ஏற்படுத்தினார்?" என்று நீங்களே கேள்வி கேட்கிறீர்கள்.

எது நல்லது, எது கெட்டது என்று தீர்மானிக்க எந்த வழியும் கிடையாது. இந்த உலகத்தில், மனித இயல்பே இல்லாவிட்டால், நல்லது அல்லது கெட்டது என்று ஏதும் இருக்குமா? அப்படி நல்லது அல்லது கெட்டது என்று எதுவும் இருக்க முடியாது. ஏனெனில், நல்லது அல்லது கெட்டது என்பது மனிதனால்

ஏற்படுத்திய வேறுபாடு, மனத்தின் வேறுபாடு. இந்த உலகத்தில், மனித குலம் இல்லாவிட்டால், அருவருப்பான மலர் என்றும், அழகான மலர் என்றும் எதுவும் உண்டா? அங்கு, வெறும் மலர்கள் மலருதல் மட்டுமே இருக்க முடியும். இந்த வேறுபாடுகள், இருக்கவே இருக்காது.

நீங்கள் 'இது நல்லது,' 'அது கெட்டது' என்று கூறுகிறீர்கள். அடால்ப் ஹிட்லரின் தாய், அவனுடைய சிறிய வயதில், அவனைக் கொன்று விட்டிருந்தால், அது நல்ல செயலா அல்லது கெட்ட செயலா? அவள் ஒரு குற்றவாளியாகி, தண்டிக்கப்படலாம். ஆனால், இப்பொழுது அதைப் பின்னோக்கிப் பார்த்தால், அது ஒரு மிகச்சிறந்த ஒழுக்கமான செயல் என்றுதான் நம்மால் கூறமுடியும்; அவள் தன்னுடைய குழந்தையை கொன்றதன் மூலம், இந்த முழு உலகத்தையே காப்பாற்றி இருக்கிறாள்.

யாராலேயும், வருங்காலத்தைப் புரிந்து கொள்ள முடியாது. நம்மைப் பொறுத்தவரையில், ஒவ்வொரு செயலும், பூர்த்தியடையாதது தான்; ஒவ்வொரு செயலும் சிறு பகுதிதான். இந்த முழுமையைப் பற்றி நமக்கு எதுவும் தெரியாது. ஆகவே, அதன்மேல் நம்மால் எந்தத் தீர்ப்பும் வழங்க முடியாது.

அது, ஒரு நாவலின், ஒரு பக்கத்தை மட்டும் கிழிப்பது போல ஆகிறது. நீங்கள் ஒரு பக்கத்தை மட்டும் படித்துவிட்டு, அந்த நாவலைப்பற்றி, என்ன தீர்ப்பு வழங்க முடியும்? அது, அந்த நாவலின் ஒரு பகுதிதான்– அது முடிவும் அல்ல, ஆரம்பமும் அல்ல. நீங்கள், "நான் முதலில், அந்த நாவலை முழுமையாகப் படிக்க விரும்புகிறேன். இல்லாவிட்டால், அதைப்பற்றி, என்னால் எதுவும் கூற முடியாது. இந்த ஒரு பக்கம் ஒருபோதும் போதாது" என்றுதான் கூறுவீர்கள்.

நல்லது மற்றும் கெட்டது என்ற வார்த்தைகள், நம்முடைய உபயோகத்திற்காக ஏற்பட்டது. உயிர்த்தன்மையில், அப்படி எதுவும் கிடையாது. இது நல்லது, இது கெட்டது என்று

பாகுபாடு இல்லாமல், நம்மால் ஜீவிக்க முடியாது. ஏனென்றால், அவை இல்லாமல், சமூகம் என்ற அமைப்பு இருக்க முடியாது.

நீங்கள் இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். எல்லைப்படுத்துதல், முடிவான உண்மைகளாக ஆகாது. நல்ல செயல் என்று ஒரு செயல் கூட இல்லை. ஒரு நேரத்தில், ஒரு நல்ல செயல் என்பது, ஒரு கெட்ட செயலாகி விடும்; அதே செயல், இன்னொரு சந்தர்ப்பத்தில், நல்ல செயலாக மாறிவிடும்; நீங்கள் ஒரு முடிவான தீர்ப்பை ஒன்றுக்கு வழங்க வேண்டுமானால், அதைப்பற்றி ஆரம்பம் முதல் முடிவு வரை நீங்கள் முழுமையாகத் தெரிந்து கொள்ள வேண்டும்- இந்த முழு உயிர்த்தன்மையில் ஒவ்வொன்றையும். ஆனால், இது ஒருபோதும் நடக்காது.

நல்லது, கெட்டது, அழகு, அவலட்சணம் பற்றிய நம்முடைய அறிக்கையெல்லாம், சாலை விதிமுறைகளுக்கு மேல் எதுவும் இல்லை என்பதாகிறது. நாம் அவற்றை ஏற்படுத்திக்கொண்டு இருக்கிறோம்; அவை அனைத்தும் முடிவான உண்மைகள் அல்ல. 'இடது பக்கம் செல்லவும்' அல்லது 'வலது பக்கம் செல்லவும்' என்று முறைப்படுத்தலில் எந்த வித்தியாசமும் இல்லை. ஆனால், எந்த சமூகமும், இரண்டையும் ஒரே சமயத்தில் செய்யாது; நீங்கள் ஒன்று வலது பக்கம் செல்ல வேண்டும், அல்லது இடது பக்கம் செல்ல வேண்டும். இந்த விதி, உபயோகத்தன்மையுள்ளது; அவ்வளவுதான். அது இயற்கையானதும் அல்ல அல்லது முடிவான உண்மையும் அல்ல.

நீங்கள் வலதுபக்கம் அல்லது இடது பக்கம் செல்லுவது பற்றி, அந்தச் சாலைக்கு எந்த அக்கறையும் கிடையாது; ஆனால் சாலையில் செல்லுவதற்கு சில விதிமுறைகள் தேவையாக இருக்கின்றன. சாலையில் செல்லுவது மிகவும் குறைவாக இருக்கும் பொழுது, நீங்கள் எந்த விதிமுறைகளையும் உண்டாக்கிக் கொள்ளத் தேவை இல்லை. ஆனால், சாலையின் போக்குவரத்து, மிகவும் சிக்கலாகிப் போனால், அதிக அளவு

விதிமுறைகள் தேவையாக இருக்கின்றன. ஒரு கிராமத்துக்கு எந்த போக்குவரத்து விதிகளும் தேவையில்லை; ஆனால், ஒரு பெரிய நகரத்துக்கு இந்த விதிமுறைகள் மிகவும் அவசியம்.

ஒரு சமூகம், மிகவும் சிக்கலான முறையில் விரிவடையும் பொழுது, ஒரு தெளிவான ஒழுக்க விதிமுறைகள் தேவையாகத்தான் இருக்கின்றன. இல்லாவிட்டால், உங்களால், ஜீவிக்க முடியாது. ஆனால், இந்த நல்லது மற்றும் கெட்டது என்ற வேறுபாடுகள், மனித குலத்தின் எதிர்பார்ப்புகள் தான்.

கடவுள் உண்டு என்றால், ஏன் இப்படிப்பட்ட ஊழல்கள் என்று நீங்கள் கேட்கும்பொழுது, ஒன்றை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்; அதாவது கடவுள் அதில் ஒருபோதும் சம்பந்தப்படவில்லை என்பதுதான். அந்த ஊழலுக்கு, பல காரணங்கள் இருக்கலாம்; ஆனால், அதற்கு கடவுள் பொறுப்பு அல்ல. அந்த முழுமை அதற்குப் பொறுப்பு அல்ல. அந்தப் பொறுப்பை, வேறு எங்கேயாவது சுமத்த வேண்டுமென்றால், அதை நம் மீதுதான் சுமத்திக் கொள்ள வேண்டும். நாம், ஊழல் தேவைதான் என்பதற்கு, ஒரு சமூகத்தை ஏற்படுத்தி வைத்திருக்கிறோம். ஏனென்றால், அதன் அடிப்படையே, ஊழலில்தான் அமைந்திருக்கிறது!

நீங்கள் உங்களுடைய சமூகத்தின் அடித்தளத்தையே மாற்றி அமைக்காவிட்டால், அது ஊழலாகத்தான் இருக்கும். அதனுடைய அமைப்புகள் வேண்டுமானால் மாறி இருக்கலாம்; ஆனால், அதன் ஊழல் எப்பொழுதும் அப்படியே தான் இருக்கும். ஏனென்றால், இதுவரை ஊழல் நடக்க வாய்ப்பில்லாத ஒரு சமுதாயத்தை நாம் உருவாக்கவில்லை.

இந்தச் சூழ்நிலை, நம்முடைய திட்டம்தான். கடவுள் இதில் ஒருக்காலும் சம்பந்தப்படவில்லை. உங்களுடைய வீடு, சோபா, மேஜை போல, அதுவும் மனிதனின் படைப்புதான். இந்த வீட்டின் பொறுப்பை, கடவுளிடம் நீங்கள் ஒப்படைக்க முடியாது; அல்லது இந்த அறை பெரியதாக இல்லாது, சிறியதாக

இருப்பதற்கு, இந்த ஜன்னல் கிழக்கைப் பார்க்காமல், மேற்கைப் பார்த்து இருப்பதற்கு, நீங்கள் கடவுளை பொறுப்பாளியாக்க முடியாது. நீங்கள், கடவுளிடம், "ஏன் நீங்கள் இந்த ஜன்னலை கிழக்குப் பார்த்த சுவரில் வைத்துள்ளீர்கள், ஏன் அது மேற்கில் உள்ளதில் இல்லை?" என்று ஒருபோதும் கேட்க முடியாது. அது முட்டாள்தனமானது. அது கிழக்குப் பக்கத்தில் உள்ள சுவரில் யாரோ பதித்திருப்பது உங்களுக்குத் தெரியும். அதைப்பற்றி, கடவுளிடம் யாரும் ஒரு போதும் கேட்டது கிடையாது. அதில் அவருக்கு எந்தப் பங்கும் இல்லை.

அதைப்போல, நீங்கள் ஏன் இந்த ஊழல் என்று கேட்கக் கூடும். ஆனால், நீங்கள், கடவுளை இதில் இழுக்கக் கூடாது. ஏன் இந்த ஊழல் என்று நீங்கள் கேட்பது, ஒரு சரியான கேள்விதான். ஆனால், அந்த ஊழலில் கடவுளைச் சம்பந்தப் படுத்திப் பேசுவது, சரியானது அல்ல. நம்முடைய சமூகம், நம்மால் ஏற்படுத்தப்பட்டது. நீங்கள்தான் அதனுடைய சிற்பி. நம்முடைய சமூகத்தின் அடித்தளம் தவறாக இருப்பதால், அந்த அடித்தளத்தின் மேல் உள்ள நாம் கட்டிய சமூகத்தின் அமைப்பு, விஞ்ஞானரீதியாக இல்லாத காரணத்தால், அது ஊழலாகத் தான் இருக்கும். அது மனிதர்களுடைய பிரச்சினை. நாம் அதை மாற்றி அமைக்கலாம் அல்லது அதை நீடிக்கவும் செய்யலாம். -அது நம்மைப் பொறுத்த விஷயம்.

உதாரணமாக, நம்முடைய முழு கல்வித்திட்டமே, பேராசையை அடிப்படையாகக் கொண்டது. நம்முடைய சமூகமே பேராசையுடையது. ஒரு பேராசைக் கொண்ட சமூகத்தால், ஊழலில் தவிர, வேறு எதிலும் இருக்க முடியாது. நீங்கள் அந்தப் பேரரசையை, ஒவ்வொருவரிடமும் ஏற்படுத்தினால், ஒவ்வொருவரும் அதை நிறைவேற்ற முடியாது. யார் வேண்டுமானாலும், இந்த நாட்டுக்கு ஜனாதிபதியாகலாம் என்று நீங்கள் கூறலாம். ஆனால் ஒரு சமயத்தில் ஒரு ஜனாதிபதி மட்டும் தான் இருக்க முடியும். யார் வேண்டுமானாலும் ஜனாதிபதியாகலாம் என்று நீங்கள் கூறினால், அங்கு பேராசை

ஏற்படுகிறது. அப்படி யார் வேண்டுமானாலும், ஜனாதிபதி யாகலாம் என்றால், அது ஏன் நீங்களாக இருக்கக் கூடாது? ஆனால், ஒரே ஒரு ஆள்தான் ஒரு சமயத்தில் ஜனாதிபதியாக முடியும் என்று இருக்கும்பொழுது, அதற்குப் போட்டி மும்முரமாகிறது. அதற்கு ஒவ்வொரு வழியும் உபயோகப்படுத்தப் படுகிறது- அதில் கெட்டவழிகளும் அடக்கம்தான்.

பேராசை ஊழலைத் தூண்டுகிறது. பேராசைப் பிடித்த மனம் ஊழலாகத்தான் ஆக வேண்டும். பைத்தியக்காரத் தனத்துக்கு, பேராசை ஒரு விதையாகிறது; நம்முடைய கல்வி முறையே, பேராசையை அடிப்படையாகக் கொண்டுள்ளது. உங்களுடைய தகப்பனார், "அவரைப் போல ஆகவும்" என்று உங்களிடம் கூறும்பொழுது, அந்த ஜுரம் உங்களிடம் உண்டாக்கப்படுகிறது- நீங்கள் அந்த வியாதி பிடித்தவராகிறீர்கள். ஒரே ஒரு ஆள்தான் ஜனாதிபதியாக முடியும்; மற்ற வெற்றியடையாத ஆயிரக்கணக்கானவர்கள், அதே பேராசைத் தீயில் வெந்து கொண்டு இருக்கிறார்கள். அப்பொழுது, நீங்கள் அதே பழைய ஆளாக இல்லை. -நீங்கள் பைத்தியத்தன்மையில் இருக்கிறீர்கள். நிறைந்த இறுக்கத்தால், நீங்கள் ஊழல்வாதியாக மாறுகிறீர்கள். நீங்கள், உங்களுடைய குறிக்கோளை எட்ட, எந்த வழியையும் பின்பற்றலாம்.

அது ஒரு தொத்து வியாதிதான். பிறர் ஊழலான வழியை உபயோகப்படுத்துவதை நீங்கள் பார்க்கும் பொழுது, நீங்கள் அப்படி உபயோகப்படுத்தாவிட்டால், பின்தங்கி விடுவோம் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளுகிறீர்கள். ஆகவே, நீங்கள் அதே ஊழலான வழியைத்தான் பின்பற்ற வேண்டிவரும். பிறகு, நீங்கள் ஊழலோடு இருப்பதை, வேறு யாரும் பார்க்கும்பொழுது, அவரும் ஊழலோடு இருக்க முடிவு செய்கிறார். அது ஒரு வாழ்வு நிலைநிறுத்தலாகி விடுகிறது. இந்த சமூக அமைப்பில், வேறு எதுவும் சாத்தியமில்லை. நம்முடைய சமூக அமைப்பின் அடி வேர்களைப் பார்த்தால், நம்முடைய கட்டுப்பாடுகள், நம்முடைய கல்வி முறை மற்றும் நம்முடைய நாகரிகம்

அனைத்திலிருந்தும் வெளியே வளர்ந்த ஊழலைத்தான் பார்ப்பீர்கள்.

நம்முடைய சமூக அமைப்பின் சிக்கலான தன்மை, யார் ஒருவர் அந்த ஊழலில் ஜெயிக்கிறாரோ, அவர் அதை அதில் மறைக்கும் அளவுக்கு அது இருக்கிறது. யாராவது அதில் தோல்வி அடையும்பொழுது தான், அந்த ஊழல் வெளியே தெரிகிறது. நீங்கள் அதில் ஜெயித்துவிட்டால், யாருக்குமே நீங்கள் ஒரு ஊழல் பேர்வழி என்பது தெரியாது. ஜெயித்தல் ஒவ்வொன்றையும் மறைத்துக் கொள்ளுகிறது. நீங்கள் அதில் ஜெயிக்க வேண்டும்- அப்பொழுது, நீங்கள் நல்லவைகளின் ஒருங்கிணைப்பாக இருக்கிறீர்கள்- நீங்கள் அப்பொழுது நல்லவனாகவும், சுத்தமாகவும், வெகுளியாகவும் காட்சி அளிக் கிறீர்கள். நீங்கள் வாழ்க்கையில் எப்படி வேண்டுமானாலும் முன்னேறலாம் என்பதுதான் இதன் அர்த்தம். நீங்கள் வெற்றி காண வேண்டியது மிக அவசியம். நீங்கள் அதில் வெற்றி பெற்றால், நீங்கள் செய்யும் எதுவுமே, தவறாகப் படாது.

சரித்திரம் எதுவுமே இப்படித்தான் இருக்கிறது. ஒருவன் சிறு திருடனாக இருந்தால், அவன் திருடன் என்று கருதப்படுகிறான். அவன், ஒரு மிகப்பெரிய திருடனாக இருந்தால், அவன் மாவீரன் அலெக்ஸாண்டர் ஆகிவிடுகிறான்! இவர்கள் இருவருக்கும், தன்மையில் எந்த வேறுபாட்டையும் யாரும் காண்பதில்லை; அதில் அளவு வித்தியாசம் மட்டும்தான் இருக்கிறது. யாரும், மாவீரன் அலெக்சாண்டரை ஒரு திருடன் என்று அழைப்பதில்லை. ஏனென்றால், உங்களுடைய 'நல்லவன்' என்பதன் அளவுகோல், வெற்றிதான். நீங்கள் அதிகமாக ஜெயித்திருந்தால், நீங்கள் அதிக நல்லவனாகக் கருதப்படுகிறீர் கள். நீங்கள் தோல்வியடைந்தால், உங்களுடைய வழியை பிறர் கேள்வி கேட்பார்கள். பிறகு உங்களை முட்டாள் என்றும், ஊழல் பேர்வழி என்றும் அழைப்பார்கள்.

இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையில், எப்படி உங்களால் ஒரு ஊழலற்ற சமுதாயத்தை ஏற்படுத்த முடியும்? இந்த ஒழுங்கற்ற

சூழ்நிலையில், நீங்கள் ஒருவனை ஒழுக்கமாக இரு என்று கூறினால், அது எவ்வளவு முட்டாள்தனமாக இருக்கும்? ஒரு ஒழுக்கமற்ற சமுதாயத்தில், ஒரு தனி மனிதனால் ஒழுக்கத்தோடு இருக்க முடியாது. அப்படி அவன் ஒழுக்கமாக இருக்க முயன்றால், அவனுடைய ஒழுக்கத்தன்மையே, அவனிடம் ஒருவித அகங்காரத்தை உண்டுபண்ணி விடுகிறது. அந்த அகங்காரமே, மற்றவற்றைப் போல, ஊழலாகி விடுகிறது.

இந்த சூழ்நிலை, மனிதனால் உண்டாக்கப்பட்டது. நாம், பணத்தை நோக்கி, அகங்காரத்தை நோக்கி, அரசியலை நோக்கி ஓடும் பைத்தியகாரக் கும்பல் நிறைந்த ஒரு சமூகத்தை ஏற்படுத்தி வைத்திருக்கிறோம். அதை நாம் ஆதரித்தே வந்து பிறகு, ஏன் இப்படி ஊழலாக இருக்கிறது என்றும் கேள்வி எழுப்புகிறோம். எங்கே பேராசை இருக்கிறதோ, அங்கே ஊழல், தர்க்கரீதியான பின் விளைவாகிவிடுகிறது. பேராசையைத் தூண்டி விடும் இந்த முழு சமூக அமைப்பின் அடித்தளத்தை அழிக்காமல், நீங்கள் ஊழலுக்கு அணை போட முடியாது.

சந்நியாசி என்று கூறிக் கொள்ளுபவர்கள் அனைவரையும் சுற்றி இந்தப் பேராசை படர்ந்திருக்கிறது. ஊழலோடு கூடிய பேராசையை அவன் உங்களிடம் ஏற்படுத்துகிறான். அவன், "மற்றவர்களைவிட, நன்றாக இரு, நல்லவனாக இரு, அப்பொழுது நீ சொர்க்கத்தை அடைவாய். மற்றவர்களெல்லாம் நரகம் என்ற நெருப்பில் துன்பப்படும்பொழுது, நீ அந்த தெய்விகத்தால் அன்பு செலுத்தப்படுவாய்," என்று அவர்கள் உன்னிடம் கூறுவார்கள்.

ஆனால், அது உண்மையிலேயே நடக்கக் கூடியது அல்ல. ஒருவன் பேராசையோடு, கெட்டவனாக இருக்க முடியும். அது இயல்பானது, தர்க்கரீதியானது- ஆனால் பேராசையோடு, நல்லவனாக ஒருவனால் இருக்க முடியாது. அது ஒரு போதும் நடக்காது. ஒருவன் நல்லவனாக இருக்க விரும்பினால், ஊழல் தன்மையில், அவனால் எதையும் நினைக்க முடியாது. ஏனென்றால், ஊழல் இல்லாதபொழுதுதான், உண்மையான நல்லது மலர ஆரம்பிக்கிறது.

ஒப்புமைப்படுத்துதல் தான் தடங்கலாக இருக்கிறது. ஏனென்றால், ஒப்புமைப்படுத்துதல், அகங்காரத்தை உண்டாக்குகிறது. அது வன்முறை ஏற்படுத்துகிறது. "நான் உன்னைவிட அடக்கமானவன்" என்று நீங்கள் சொல்லும்பொழுது, நீங்கள் வன்முறையில் ஈடுபடுகிறீர்கள். அப்பொழுது, நீங்கள் கத்தியை பிறர் மீது பாய்ச்சி, அவரைக் கொல்லுகிறீர்கள். ஆனால், உங்களுடைய முறை மென்மையானது மற்றும் தந்திரமானது. ஒரு அரசியல் ரீதியான அல்லது பணக்காரத்தனமான ஆயுதங்களைவிட, உங்களுடைய ஆயுதம் மென்மையானது, ஆழமானது, மறைமுகமானது; ஆனால், அதிக தீங்கு விளைவிக்கக் கூடியது. நீங்கள், "நான் அடுத்தவனை விட நல்லவன்" என்றும், "நான் மற்றவர்களை விட சந்நியாசத் தன்மையுடையவன்" என்றும் கூறினால், அதனுடைய வெளிப்பாடு வித்தியாசமாக இருக்கலாம்; ஆனால், அது அதே பேராசை வழியில்தான் செல்லுகிறது. குற்றவாளிகளும், பாவிகளும் தான் ஊழல் பேர்வழிகள் அல்ல. தங்களை 'நல்லவன்' என்று அழைத்துக் கொள்ளும் சந்நியாசி என்று கூறிக்கொள்ளுபவர்களும், குற்றவாளிகள் தான்- மிகவும் மென்மையான, ஆபத்தான வகையில்.

நம்முடைய ஒரு சமூகமே ஊழல்தான். அது பேராசையுடைய பாவிகளையும், பேராசையுடைய சந்நியாசிகளையும் ஏற்படுத்துகிறது. இவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் சார்ந்தே இருக்கிறார்கள். இதைச் சரியாகப் புரிந்து கொண்ட ஒருவன், இந்த சமூகத்திலிருந்து முற்றிலும் ஒதுங்கிவிடுவான். அவன் பாவியாகவும் இருக்க மாட்டான், சந்நியாசியாகவும் இருக்க மாட்டான். அவன் எந்தப் பிரிவிலும் அடங்க மாட்டான். அவன் எப்படிப்பட்டவன், அவன் யார் என்பதை உங்களால் கணிக்க முடியாது. இப்பொழுது நமக்குத் தேவை, ஒரு பேராசையற்ற சமூகம்.

கடவுள் இதில் ஒருபோதும் சம்பந்தப்படவில்லை. ஆனால், நீங்கள் பேராசை கொண்டு இருந்தால், கடவுள் கூட,

உங்களுடைய பேராசையின் ஒரு அங்கமாகிவிடுவான். நீங்கள் அவரைப் பின்தொடர்ந்து, அவரை அடைய முயலுவீர்கள்.

ஒரு பேராசையுள்ளவனால், கடவுளை ஒருக்காலும் அடைய முடியாது. அவனால் ஒரு போதும் ஓய்வில் இருக்க முடியாது. அவனால் அன்பில் இருக்க முடியாது- ஏனென்றால், பேராசை என்பது வன்முறைதான். ஒருவன் ஓய்வில் இல்லாதபொழுது, அன்பு செலுத்த முடியாத பொழுது, அமைதியாக இருக்க முடியாத பொழுது, கடவுள் யார் என்று அவனால் ஒரு போதும் அறிந்து கொள்ள முடியாது. கடவுள் என்பது அறிவுப்பூர்வமாக அறியக்கூடிய ஒன்று அல்ல. அவர், ஏதோ உணரக்கூடிய ஒன்றாக இருக்கிறார்.

நீங்கள் எங்கேயும் செல்லாமல், முழு ஓய்வில் இப்பொழுது இங்கே இருக்கும்பொழுது- மனம் அமைதியாக, ஆடாமல் அசையாமல் இருக்கும்பொழுது- உயிர்த்தன்மை என்ன என்பது உங்களுக்குத் தெரியவரும். அப்பொழுது, உயிர்த்தன்மையின் அழகும், ஆனந்தமும் உங்களுக்குத் தெரியவரும். அது, அருவருப்புக்கு மாறான அழகு இல்லை. அங்கு மாற்று என்று எதுவும் இல்லை, எந்த ஒப்பிடுதலும் இல்லை. மாறாக, ஒவ்வொன்றும் அழகாகவே தோன்றும்- இந்த உயிர்த் தன்மையே அழகோடு விளங்கும். பிறகு கள்ளிப்பூ கூட, ரோஜா வைப் போல அழகாகத் தோன்றும். பிறகு, தனித்தன்மையும் அழகாகத் தோன்றுகிறது; அதை வேறு ஒன்றுக்கு ஒப்பிட முடியாது.

பிறகு, முதன்முதலாக, நீங்கள் நேசிக்க, அன்பு செலுத்த ஆரம்பிக்கிறீர்கள். இந்த அன்பு, வெறுப்புக்கு மாறானது அல்ல. ஏனென்றால், அந்த மாதிரியான அன்பு ஒருக்காலும் உண்மையான அன்பு ஆகாது. அது ஒரு நீர்த்த வெறுப்பாகத் தான், தீவிரமற்ற வெறுப்பாகத்தான் அது இருக்க முடியும். அது மறு துருவமாக இருக்கிறது. அன்பு ஒரு துருவ முனையிலும், வெறுப்பு மறு துருவமுனையிலும் இருக்கிறது; நீங்கள் இரண்டுக்கும் இடையில், ஊசலாடுகிறீர்கள். உங்களுடைய

அன்பு என்பது குறைவான வெறுப்புதான். உங்களுடைய வெறுப்பு என்பது குறைவான அன்புதான்.

ஒருவன் எப்படி அன்பையும், வெறுப்பையும் கடந்து இருக்க முடியும் என்று நீங்கள் கேட்கலாம். நீங்கள் ஒரு போதும் பேராசையோடு இல்லாது இருந்தால் தான் அன்பு, வெறுப்பு என்ற இரு மாறுபட்ட நிலைகளை கடந்து இருக்க முடியும்-நீங்கள் எங்கேயும் செல்லாமல், எதையும் தேடாமல், வெறும் இருத்தலாக, ஒரு போதும் இறுக்கமாக இல்லாது, முழு ஓய்வில் தான், இது சாத்தியம். அப்பொழுது கடவுள் என்பது யார் என்று உங்களுக்குப் புரியும்; கூடவே அன்பு என்றால் எப்படி என்பதும் புரியும். அந்த எல்லையில்லாததோடு ஒரு இயைந்த லயத்தில் இருக்கும் பொழுது ஏற்படும் பின் விளைவுதான் அன்பு என்பது; அது நிழல் போலத் தொடரும்; அதனுடைய பின் செயலாக.

புத்தர், அன்பை ஒருபோதும் தேடியது இல்லை; அன்புதானே அவரை வந்து அடைந்தது. இயேசு, அன்பைப் பற்றி ஒருபோதும் நினைத்தது இல்லை; அதில் அவர் வாழ்ந்தார். அன்பைத் தேடுதல் நேரடியானது அல்ல. அது நீங்கள் நேரடியாகத் தேட முடியாத அளவுக்கு. அது மிகவும் மென்மையான நறுமணமாக இருக்கிறது. எல்லாம் ஒன்றே என்று உண்மையாக உணர்ந்து கொள்ளலால் ஏற்பட்ட பின்விளைவாக அது உங்களிடம் வருகிறது; மற்றும் நண்பனிடத்தும், பகைவனிடத்தும் கடவுள் வாழ்கிறார் என்று புரிந்து கொள்ளுதலின் பின்விளைவாகவும், அது ஏற்படுகிறது.

நீங்கள், இந்த உயிர்த்தன்மையிலிருந்து வேறுபட்டு இல்லை என்பதையும், நீங்கள் அதனுடைய ஒரு பகுதிதான் என்பதையும் மற்றும் இருப்பவற்றிலிருந்து, நீங்கள் தனிப்பட்டு இல்லை என்பதையும், நீங்கள் ஒரு இயந்திரமான பகுதியாக இல்லாது, ஒரு உயிரின் பகுதியாக இருக்கிறீர்கள் என்பதையும், எல்லா நேரங்களிலும், அந்த முழுமை என்ற பெருங்கடலில், எல்லாமே உயிர்த்தன்மையாக இணைந்திருக்கிறது என்பதையும் எப்படி

என்னை, என்னோடு உயிர்த்தன்மையாக இணைந்திருப்பது போல, நீங்கள் அதை எந்தக் கணத்தில் பிரக்ஞையாக உணர்ந்து கொள்ளுகிறீர்களோ, அப்பொழுது உண்மையான அன்பு என்றால் என்ன என்பது உங்களுக்குப் புரியும்.

நீங்கள் பேராசையற்று இருந்தால்தான், உங்களுக்கு உண்மையான அன்பு என்றால் என்ன என்பது விளங்கும். பேராசையற்ற மனம்தான் மதத்தன்மை யுடையதாகிறது. உங்களுடைய பேராசையில், அது எந்த வித்தியாசத்தையும் காணுவதில்லை- அது செல்வமாகவோ, அல்லது ஆதிக்க சக்தியாகவோ, அல்லது புகழாகவோ அல்லது விடுதலை யாகவோ இருந்தால்கூட அல்லது கடவுளாக இருந்தால் கூட. நீங்கள் பேராசை கொண்டு இருந்தால், உங்களுடைய மனம் வேறு எங்கேயோதான் சென்று கொண்டு இருக்கிறது. எதையோ நோக்கி, நகர்ந்து கொண்டுதான் இருக்கிறது. எதையோ நோக்கி ஓடிக்கொண்டு இருக்கிறது. அது எதையோ அடைவதற்கு, எப்பொழுதும் சுறுசுறுப்பாகவே இருக்கிறது. அது, ஏற்கெனவே இருக்கும் தன் இருப்பில் ஒரு போதும் நிலையாக இருப்பதே இல்லை.

பேராசையே இறுக்கமாகிறது; அந்த இறுக்கமே, தெய்விகத்தை அடைவதற்கு ஒரு தடங்கலாக அமைந்துவிடுகிறது. நீங்கள் அதை ஒரு தடவை சந்தித்துவிட்டால், நீங்கள், நீங்களாகவே இருக்கமாட்டீர்கள்- அந்தச் சந்திப்பு உங்களை முழுமையாக சுத்தம் செய்துவிடுகிறது. அந்தச் சந்திப்பு உங்களை முழுமையாக மாற்றிவிடுகிறது. அதன்பிறகுதான், அன்பு உங்களிடம் மலருகிறது. உங்களுடைய அகங்காரத்தின் இறப்பு, அன்பின் பிறப்பாகிறது.

சாதாரணமாக, வெறுப்புக்கு மாறாகவே அன்பு இருப்பதாக, நாம் நினைக்கிறோம். ஆனால், உண்மையை அறிந்தவர்கள், அன்பு, அகங்காரத்துக்கு மாறாக இருப்பதாகவே எப்பொழுதும் நினைப்பார்கள். அன்புக்கு உண்மையான எதிரி, வெறுப்பு அல்ல- அன்புக்கு உண்மையான எதிரி அகங்காரம் என்பது

தான். ஆனால் நாம் தெரிந்தவரையில், அன்பும், வெறுப்பும் ஒரே நாணயத்தின் இருபக்கமாகவே இருக்கின்றன.

நீங்கள் இல்லாதபொழுது, உங்களுடைய அகங்காரம் இல்லாதபொழுது, அன்பு தானே வருகிறது. அகங்காரம் இல்லாபொழுது, நீங்கள் இல்லை; உங்களுடைய பேராசையும் இருக்காது. பேராசையற்ற கணமே, தியானகணமாகிறது. அந்த பேராசையற்ற நேரத்தில், நீங்கள் எதையுமே தேடிச் செல்லாத பொழுது, எதையும் கேட்காத பொழுது, எதற்காகவும் பிரார்த்தனை செய்யாத பொழுது, இருப்பதில் முழுமையாக திருப்தியடைந்த நிலையில், உங்களையே நீங்கள் பிறரோடு ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளாத பொழுது, அந்தக் கணத்தில் நீங்கள் அந்த தெய்விகத்தின் ஆழமான தேக்கநிலையை, நீங்கள் தொடுகிறீர்கள். நீங்கள் அதை வெறுமனே தொடவில்லை; அதில் ஆழமாகவே மூழ்கிறீர்கள்; பிறகு நீங்கள் அதனுடன் ஒன்றாகி விடுகிறீர்கள்.

பிறகு, அன்பு உங்களை நிரப்புகிறது. பின்பு, நீங்கள் அன்பாகவே இருப்பதைத் தவிர, வேறு எதுவாகவும் இருக்க முடியாது. அப்பொழுது, அன்பு வெறுப்புக்கு மாறாக இருப்பதில்லை. பின்பு, நாம் தெரிந்து கொண்டிருக்கும் அன்போ அல்லது வெறுப்போ அங்கு இருப்பதில்லை; இரண்டுமே முடிந்து விடுகிறது. இப்பொழுது, வேறு விதமான அன்பு, மிகவும் புதிய பரிணாமத்தில், உங்களிடம் வளர ஆரம்பிக்கிறது.

இந்த அன்பு என்பது வெறும் மனத்தின் தன்மைதான்; அது உறவு நிலையைக் கொண்டது அல்ல. அது யாரோடும் உறவு கொள்ளுவது அல்ல; நீங்கள் யாரிடமோ அன்பு கொள்ளுவது இல்லை இது; அல்லது நீங்கள் காதல் கொண்டிருப்பது இல்லை இது. இங்கு அடுத்தவர் என்று யாரும் இல்லை; காதலிக்கக் கூடியவர் யாரும் இல்லை. நீங்கள் தொடர்பு கொள்ளும் வெறும் அன்பாக மட்டும்தான் இருக்கிறீர்கள்; நீங்கள் அன்பில்தான் வாழுகிறீர்கள். அது உங்களுடைய நறுமணமாகிறது.

அன்பு இருக்கிறது, நறுமணம் இருக்கிறது- நீங்கள் தனிமையில் இருந்தாலும்- தனிமைப் பாதையில் மலர்ந்த மலரைப் போல. அந்தப் பாதையில் வேறு யாரும் செல்லுவதில்லை; ஆனால் அந்த மலர், மகிழ்ச்சியடைய, அங்கு யாரும் கிடையாது. ஆனால், அதன் நறுமணம் அமைதியாகப் படர்ந்து கொண்டு இருக்கிறது. ஏனென்றால் அது யாரையும் குறித்து செல்லுவதில்லை. அந்த நறுமணம் இருக்கிறது. ஏனென்றால், அது அந்த மலரின் உள்தன்மையாகவே இருக்கிறது. அந்த மலர் தெய்விகமானது. அதன் நறுமணம், அதனுடைய இயல்பான பகுதியாகவே இருக்கிறது. அது பரவுவதற்கு எந்த முயற்சியும் அங்கு இல்லை- அது முயற்சியற்றது.

அகங்காரம் இல்லாத பொழுது, அந்தத் தெய்விக மலர், நறுமணமாக வெளிப்படுகிறது- உங்களுடைய இதயம் மலருதல் போல. பிறகு, அது பரவிக் கொண்டு இருக்கிறது. ஆனால், அது யாரையும் குறித்து அல்ல- அது விலாசமற்றது. அன்பு விலாசமற்றதாகும்பொழுது, அது பிரார்த்தனையாகிறது. விலாசப்படும் பொழுது, அது ஆண்-பெண்பால் வேறுபாடாகி, தாழ்ந்த நிலையை அடைகிறது. விலாசமிடப்படாதபொழுது, அது பிரார்த்தனையாகிறது.

கடவுள் அல்லது அன்பு அல்லது இறப்பு என்பதெல்லாம் தீர்க்கப்பட வேண்டிய பிரச்சினை அல்ல- அவையெல்லாம், உங்களுடைய அனுபவமாகவே செல்லவேண்டியவை. அவையெல்லாம், பதில் கூறவேண்டிய கேள்விகள் அல்ல. அவை யாவும், ஒருவர் தானே உணர்ந்து புரிந்து கொள்ள வேண்டிய கேள்விகள். கடவுளை, ஒரு கேள்வியாக ஒருக்காலும் ஆக்க முடியாது. நீங்கள் கடவுளைப் பற்றிக் கேள்வி கேட்டால், அவை மேலோட்டமானதாகவே இருக்கும்; கருத்து, அதற்கு அளிக்கப்படும் பதில்கள், அதைவிட மிகவும் மேலோட்ட மானதாகவே இருக்கும். ஏனென்றால், ஒரு மேலோட்டமான கேள்விக்கு, அதைவிட மிக மேலோட்டமான பதில்தான், அதற்கு விடையாக அமையும்.

கடவுள் என்பது உயிர்த்தன்மையான தேடுதல், ஒரு விசாரிப்பு; அது ஒரு கேள்வி அல்ல. ஆகவே, அந்தக் கேள்விக்கு, ஏற்கெனவே தயாரித்த பதில் எதுவும் கிடையாது. கடவுள் இருக்கிறாரா? இந்த கேள்விக்கு, ஏற்கெனவே தயாராக வைத்திருந்த பதிலை அளித்தால், அவருக்கு கடவுளைப் பற்றி எதுவும் தெரியாது என்பதாகிறது. கடவுள் இருக்கிறார் என்றோ அல்லது கடவுள் இல்லை என்றோ யாராலேயும் உறுதியாகச் சொல்ல முடியாது. இரண்டு பதில்களும் பொருத்தமில்லாதது, சரியில்லாதது. ஏனென்றால், எந்தப் பதிலும், உண்மையான பிரச்சினையே ஒருக்காலும் தொடாது.

ஒவ்வொரு மதத்தின் தத்துவ போதனைகளும் மேலோட்டமானவையாக இருக்கின்றன. ஏனென்றால், அவர்கள் ஏற்கெனவே தயாரித்த கேள்விகளைப் பரப்புவதில் மிகவும் கெட்டிக்காரர்கள். ஆனால், உண்மையான மதத் தன்மை வாய்ந்த ஆத்மிகனுக்கு, இது மிக ஆழமான கெடுதலை உண்டு பண்ணுகிறது.

இவற்றுக்கு, அதைப் போல பதிலைச் சொல்லக்கூடாது. நீங்கள் "அன்பு என்றால் என்ன?" என்று பிறரிடம் கேட்கக் கூடாது. நீங்கள் கேட்கவும் முடியாது! அதற்கு, மற்றவர் பதில் அளித்தால், பிறகு நீங்கள் இருவருமே அதே படகில் சவாரி செய்பவர்களாகிறீர்கள் -உங்கள் இருவருக்குமே தெரியவில்லை.

நமக்கு பதில் தேவையாக இருக்கிறது. ஏனென்றால், நாம் அன்பு, வாழ்வு, உயிர்த்தன்மை மற்றும் கடவுள் போன்ற இயற்கைத் தன்மையின் புரியாத சிரமத்திலிருந்து, தப்பிக்க விருப்புகிறோம். நமக்கு ஒரு பாதுகாப்பான பாண்டம் தேவையாக இருக்கிறது. நாம் சிரமப்படாமலிருக்க, அதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறோம். ஆனால், சிரமம் என்பது நம் கூடவே பிறந்திருக்கிறது. சிரமத்தின் மூலமாகத் தான், பேரானந்தம் கிட்டும். விடிவை அடையவேண்டுமானால், நீங்கள் ஆத்மாவின் இருண்ட இரவைக் கடந்து செல்லத்தான் வேண்டும். நீங்கள் நேரடியாக விடிவை அடைய முடியாது.

அதை அறிந்து கொள்ள, இருண்ட இரவைக் கடந்துதான் செல்ல வேண்டும்.

கடவுள் என்பது தேடுதல், கேள்வி அல்ல; தேடுதலுக்குப் பதில் கூற முடியாது. தேடுதலில் வாழ வேண்டும். நீங்கள் அதில் ஆழமாகச் செல்ல வேண்டும். நீங்கள் அதில் உங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும்; நீங்களே உங்களை, அதில் எறிந்து கொள்ள வேண்டும். அதுதான் உண்மையான பயமும் கூட. அறியாததில், உங்களையே எறிந்து கொள்ளுதல் என்பது வரைபடம் இல்லாதது.

நீங்கள் பயப்படுகிறீர்கள். ஆகவே, நீங்கள் கரையில் உட்கார்ந்துகொண்டு, கேள்விகளைக் கேட்டவாறு இருக்கிறீர்கள். ஆனால், உங்களுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்லுவதில் ஆனந்தமடையும் பல பேர் எப்பொழுதும் இருந்து கொண்டேதான் இருக்கிறீர்கள். அப்படி பதில் அளிப்பதும் கூட, அவர்களுடைய அகங்காரத்தைத் திருப்திப்படுத்தத்தான். உங்களுக்குத் தெரிந்தது அடுத்தவர்களுக்குத் தெரியவில்லை; அடுத்தவர் ஒன்றும் தெரியாத வெகுளி, நீங்கள் எல்லாம் தெரிந்தவர். இப்படி, இரண்டு ஒருங்கிணைந்த முட்டாள் தனங்கள் நடந்து கொண்டேதான் இருக்கின்றன. யாரோ கேள்வி கேட்கிறார்கள்; யாரோ பதில் அளிக்கிறார்கள். இருவருமே அறியாமையில்தான் இருக்கிறார்கள். ஏனென்றால், இந்தப் பிரச்சினையை, ஒரு ஆற்றங்கரையில் தீர்க்க முடியாது. ஒருவர், தெரியாத அந்த ஆற்று நீரில் குதித்துச் செல்ல வேண்டும். தயார்நிலையில் உள்ள பதில்களோடு, உங்களால் தெரியாததனுள், செல்ல முடியாது.

இந்தத் தயாரிக்கப்பட்ட பதில்கள், அந்தத் தெரியாததற்கு ஒரு தடங்கலாகவே இருக்கும். எதுவுமே தெரியாது, முழுப் பாதுகாப்பற்ற நிலையில், அந்தத் தெரியாததனுள் ஒருவர் மிகத் தைரியமாகச் செல்ல வேண்டும். அதுதான் முக்கியத் தேவை- வேறு எதுவும் செய்ய முடியாது. அறியாததனுள் குதிப்பது என்பது, உண்மையில் பேரானந்தத்தில் குதிப்பதாகும்

நீங்களே. அந்த தெய்விகத்தை அடைந்த பிறகு, அது ஒரு போதும் கேள்வியாக இருப்பதில்லை; அது ஒரு ஆத்மிக மாற்றம்தான். நீங்கள் அதனுடன் ஒன்றாக ஐக்கியமாகி விடுகிறீர்கள்.

எந்த பதிலோடும், நீங்கள் ஒன்றில் ஒன்றாக ஐக்கியமாக முடியாது. பதில்கள் உங்களுடைய ஞாபகத்தில் எப்பொழுதும் தனியாகவே இருக்கும். நீங்கள் பிரச்சினைகளைச் சேகரித்துக் கொண்டே, உங்களுடைய மனதில் நிரப்பியவாறு இருக்கிறீர்கள். பிறகு, உங்களுக்கு பல பதில்கள் தெரியும்; இருந்தும், அந்த கேள்வி, அப்படியேதான் இருக்கும்- அதற்கு இன்னும் பதில் கிடைக்கவில்லை!

அதைப்போல, அந்தக் கேள்விக்குப் பதில் அளிக்கக்கூடாது. மாறுதல் அடைவதன் மூலமாகத்தான், அதற்கு பதில் அளிக்க முடியும்- நீங்கள் தெய்விகத்தை நேரடியாக எதிர்கொண்ட பொழுது, உடனேயே, தெய்விகம் உங்களுக்கு முன்பு இருக்கும்பொழுது, நீங்கள் தெய்விகத்துக்கு முன்பு எந்தத் தடங்கலும் இல்லாது இருக்கும் பொழுது, நீங்கள் தெய்விக ஜுவாலையை எதிர்கொள்ளுகிறீர்கள்; நீங்கள் மாற்றமடைகிறீர்கள். பிறகு, அந்த தெய்விக ஜுவாலையோடு, நீங்கள் ஒன்றாகி விடுகிறீர்கள். இப்பொழுது நீங்களும், அந்த ஜுவாலையும் வெவ்வேறு அல்ல. பிறகு நீங்கள், "கடவுள் என்றால் என்ன?" என்று ஒருபோதும் கேள்வி கேட்க மாட்டீர்கள். ஏனென்றால், நீங்கள் இப்பொழுது வேறாக இல்லை. தனியாக இல்லை. பிறகு, 'கடவுள் என்றால் என்ன?' என்று கேள்விக்கு, நீங்கள் ஒருபோதும் பதில் அளிக்கவும் மாட்டீர்கள். ஏனென்றால், நீங்கள் இப்பொழுது தனித்து இல்லை.

அறிந்தவர்கள் அனைவரும், கதையில் இருக்கிறார்கள். அவர்கள் பேசலாம்; ஆனால், அந்தக் கேள்விக்கு அவர்கள் ஒருபோதும் பதில் கூறமாட்டார்கள். அவர்கள் எந்த அறிக்கையையும் வெளிப்படுத்த மாட்டார்கள். அவர்கள் ஏதோ ஒரு வழியை, குறிப்பாகத்தான் காட்டுவார்கள். ஆனால், குறித்துக் காட்டுவது என்பது அறிக்கையாகாது; அது ஒரு பாவனை

தான், செய்கைதான். மொழியின், வார்த்தைகளின் குறுகிய எல்லைகளால், கேள்வி கேட்டும்- பதில் அளிக்கும் குறுகிய எல்லை கொண்ட மனதுக்கு, ஒருவர் சுட்டித்தான் காட்ட முடியும். ஏதோ ஒரு வழியைக் குறிப்பாகத்தான் காட்ட முடியும்.

ஆகவே, கடவுள் என்பது வாழும் எதிர்கொள்ளல்தான், கேள்வி அல்ல. கடவுள் மூலமாக, அன்பு தானே வரும். ஆனால், பேராசையற்ற நிலையில் ஒருவர், தானே தான் கடவுளை அறிந்து கொள்ள வேண்டும். ஆகவே, பேராசையற்று இருங்கள்; உங்களால் கடவுளை அறிந்து கொள்ள முடியும்.

உங்களுக்குப் பின்னால் உள்ளவர்களால், உங்களையே எல்லைப் படுத்திக் கொள்ளாதீர்கள். ஏனென்றால் யாருமே பின்னால் இல்லை; அதைப் போல யாருமே முன்னாலும் இல்லை. ஆகவே, உங்களை உங்களுக்கு முன்னால் உள்ளவர் களோடும் அல்லது உங்களுக்கு பின்னால் உள்ளவர்களோடும் ஒப்பிட்டுக் கொள்ளாதீர்கள்; உங்களை யாருடனும் ஒப்பிட்டுக் கொள்ளாதீர்கள். நீங்கள் தனியாகவே இருக்கிறீர்கள். நீங்கள் மட்டும்தான் நீங்களாக இருக்க முடியும். வேறு யாரும், உங்களைப் போல இருக்க முடியாது. ஆகவே, நீங்கள் இருப்பது போலவே, எப்பொழுதும் இருக்கவும்.

அதற்காக, நீங்கள் சுறுசுறுப்பாக இருக்கவேண்டாம் என்று அர்த்தமாகாது. சுறுசுறுப்பாகவே இருங்கள்; ஆனால், அது நீங்கள் நீங்களாக இருப்பதால், இருக்க வேண்டும்; அது ஒரு போதும் பிறரோடு ஒப்பிடுதலாக இருக்கக் கூடாது. நீங்களே மலருங்கள்; அது ஒரு போதும் பிறரோடு ஒப்பிடுதலாக இருக்கக் கூடாது. இந்தத் தன்மையில், உங்களுடைய மனம் வேறு எங்கும் முழுமையாக நகராமல் இருக்கும் பொழுது, தெய்விகத்தில் ஏதோ ஒன்று உங்களுக்கு இன்பமூட்டும்; நீங்கள் சில தெய்விக பேரின்பக் கதிர்களை அடைவீர்கள்.

இப்படி நீங்கள் பேரானந்தக் கதிர்களை அறிந்துகொண்டால், நீங்கள் தேவையற்ற பேராசைத் துன்பங்களையும், அதன் முட்டாள் தனங்களையும், பொய்மைகளையும் அறிந்து

கொள்ளுகிறீர்கள். பிறகு உங்களுடைய மனம், தானே நின்றுவிடும். அது முழுமையாக அமைதியாகிவிடும்- எதையும் அடையும் ஆசையற்று. இந்த அமைதியான கணத்தில், அந்த குதித்தல் நிகழும். குதித்தலுக்குப் பிறகு கடவுள் இருக்கிறார்; குதித்தலுக்குப் பிறகு அன்பு இருக்கிறது- அன்பு நிழல்போலத் தொடரும்.



"இயேசு முழுமையாக ஞானம் அடைந்தவரா?"

ஆமாம். அவர் முழுமையாக ஞானம் அடைந்தவர்தான். ஞானத்தைப் பற்றி எதுவுமே தெரியாத அப்பாவி மக்கள் கூட்டத்தோடு அவர் வசித்த காரணத்தால், தான் ஞானம் அடைந்தோம் என்பதைச் சுட்டிக் காட்ட முடியாத அளவுக்கு அவர் மிகச் சாதாரணமாகப் பேச வேண்டியதாகி விட்டது. ஏனென்றால், வேறு வகையில் வெளிப்படுத்த முடியாத அளவுக்கு, அந்தக் காலச் சூழ்நிலை அப்படி அவருக்கு அமைந்துவிட்டது- இதை நீங்கள் தீர்க்கமாக அறிந்து கொள்ள வேண்டும். வார்த்தைகள் வேறுபடலாம். புத்தர் பேசினால், அவர் முற்றிலும் வேறு ஒரு விதத்தில்தான் பேசி இருப்பார். அவரால், "நான் கடவுளின் மைந்தன்" என்று கூற முடியாது. ஏனென்றால், மகன் அல்லது தந்தை என்று பேசுவது, முட்டாள்தனம். ஆனால் இயேசுவுக்கு, வேறு மாதிரியாகப் பேசமுடியாது- இயேசு, வேறு ஒரு வித்தியாசமான மக்களிடம் பேசுகிறார்.

இருந்தாலும், இயேசு, பல வழிகளில் புத்தரோடு தொடர்பு கொள்ளுகிறார். இயேசுவின், 30 வருட கால வாழ்க்கையைப் பற்றி, கிறிஸ்துவ மதத்திற்கு எதுவும் தெரியாது. அவர் வாழ்க்கையின் முந்தைய இரண்டு நிகழ்ச்சிகளைத் தவிர்த்து- அவர் பிறந்த பொழுது அடுத்து அவருக்கு 7 வயதாக

இருக்கும்பொழுது ஒரு 3 வருட வாழ்க்கையைப் பற்றித்தான் தெரிந்திருக்கிறது; மற்றைய கால கட்டத்தைப் பற்றி எதுவுமே தெரியாமல் இருக்கிறது. ஆனால், இந்தியாவில், அவரது அந்தக் காலகட்டத்தைப் பற்றி, பல செய்திகள் உலவுகின்றன. தெரியாத அவரது அந்தக் காலக்கட்டத்தில், அவர் ஒரு புத்த மடாலயத்தில் தியானம் செய்து கொண்டிருந்ததாக பல கிராமியக் கதைகள் காஷ்மீரில் பேசப்படுகின்றன. பிறகு, தன் 30வது வயதில், அவர் திடீரென்று ஜெரூசலத்தில் தோன்றினார். பிறகு அவர் சிலுவையில் அறையப்பட்டு, மீண்டும் உயிர்தெழுந்ததாக கதை இருக்கிறது. ஆனால், அவர் உயர்த்தெழுந்த பிறகு, மீண்டும் அவர் எங்கே மறைந்தார்? கிறிஸ்துவம் அதைப் பற்றி எதுவும் சொல்லவில்லை. அவர் எங்கே சென்றார்? எப்பொழுது அவர் இயற்கையான மரணத்தை அடைந்தார்?

'மைக்கேல் செரனோ' (Miguel Serrano) தன்னுடைய 'சொர்க்கத்தின் பாம்பு' (The Serpant of Paradise) என்ற புத்தகத்தில், 30 வயது வரை, அவர் என்ன செய்தார், எங்கே இருக்கிறார், அதாவது அவர்தன் போதனையை ஆரம்பிப்பதற்கு முன்பு- என்பது யாருக்குமே தெரியாது. ஆனால், அப்பொழுது, அவர் காஷீரில் இருந்ததாக கதைகள் இருக்கின்றன என்கிறார். காஷ்மீரின் அசல் பெயர் 'காஷீர்' என்பது; இது சிரியாவின் (Syria), 'சிர்' (Shir) என்ற அசல் பெயரை கிட்டத்தட்ட ஒத்து இருக்கிறது.

'நிக்கோலஸ் நோட்டோவிச்' (Nicholas Notovich) என்ற ரஷ்ய சுற்றுலாப் பயணி, 1887ல் இந்தியாவுக்கு வந்து, திபேத்தில் உள்ள லடாக் பகுதியை பார்வையிடும் பொழுது, உடல் நலம் குன்றி, 'ஹெமிஸ் கும்பாவில்' (Hemis Gumpa) சற்று தாங்கினர். அப்பொழுது அவர் ஓய்வாக பல புத்த கிரந்தங்களையும் மற்றும் பல புத்த இலக்கியங்களையும் படிக்க நேர்ந்தது. அவர், இயேசுவைப் பற்றிய பல செய்திகளையும், அவருடைய போதனைகள், அவர் லடாக்குக்கு வந்தது போன்ற பல விஷயங்களை அவற்றில் காண நேர்ந்தது. பிறகு அவர், 'ஞானி இயேசுவின் வாழ்க்கை' (Life of saint Jesus) என்ற தனது

புத்தகத்தில். இயேசு பல கீழை நாடுகளுக்கும் மற்றும் பிற பகுதிகளுக்கும் வந்தது பற்றிய பல விஷயங்களை, தொகுத்து அளித்திருந்தார்.

பிறகு, இயேசு லடாக்கிலிருந்து புறப்பட்டு, மலைகளையும், பனிப்பாறைகளையும் கடந்து, காஷ்மீரில் உள்ள பஹல் ஹாமை (Pahalgam) அடைந்ததாக, அதில் கூறப்பட்டிருக்கிறது. அங்கே, அவர் ஆடு மேய்ப்பவராக, நீண்டகாலம் தங்கியிருக்கிறார் இயேசு. அப்பொழுது, இஸ்ரேலிய பழங்குடியினது அடையாளங்களை அங்கு காண முடிந்தது.

இயேசு அங்கு வாழ்ந்ததை வைத்து, அந்தக் கிராமத்துக்கு 'பஹல் ஹாம்' -அதாவது 'ஆடுமேய்ப்பவரது கிராமம்' -என்று பெயரிடப்பட்டுள்ளது என்று குறிப்பு இருக்கிறது. காஷ்மீரி மொழியில் 'பஹல்' (Pahal) என்றால் 'ஆடுமேய்ப்பவர்' என்றும் 'ஹாம்' (Ham) என்றால் கிராமம் என்றும் அர்த்தம். பிறகு, இயேசு ஸ்ரீநகருக்கு வரும் வழியில், இஸ்க்குமான் (Iskuman) என்ற இடத்தில் ஓய்வெடுத்து தங்கி, போதனை செய்திருக்கிறார். அவருக்குப் பிறகுதான், அந்த கிராமத்திற்கு, அந்தப் பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. பிறகு, 30 வயதாகும் பொழுது அவர் திடீரென்று ஜெருசலத்தில் தோன்றி, அதன்பிறகு சிலுவையில் அறையப்பட்டு, அடுத்து மீண்டும் உயிர்தெழுந்தார் என்ற கதை ஏற்பட்டிருக்கிறது.

இயேசு, சிலுவையில் அறையப்பட்டு இருக்கும்பொழுது, ஒரு சிப்பாய், அவரது உடலில் கத்தியால் சொருகி பார்த்த பொழுது, ரத்தமும், நீரும் அந்தப் புண்ணிலிருந்து வெளிவந்திருக்கிறது. இந்த நிகழ்ச்சியை, 'காஸ்ப்பல் ஆப் செயிண்ட் ஜான்' (Gospel of St.John) என்ற கிறிஸ்துவ வேத புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. செயிண்ட் ஜான், "இயேசுவின் பக்கவாட்டில், ஒரு படைவீரன் கத்தியால் குத்தி அசைக்கும் பொழுது இரத்தமும், நீரும் கசிந்தது" என்று கூறுகிறார்.

ஆனால், இயேசு இறக்கவேண்டும். ஒன்று அவர் சிலுவையில் சரியாக அறையப்பட்டு, இறக்கவேண்டும். அல்லது இந்த

கிறிஸ்துவமதமே இறக்க வேண்டும். ஆனால், அவரது உயிர்த்தெழுதலின் அற்புதத்தில்தான், கிறிஸ்துவமதமே அடங்கி இருக்கிறது. கிறிஸ்து என்பவர் தோன்றி, சிலுவையில் அறையப்பட்டு, மீண்டும் உயிர்தெழுவார் என்று ஏற்கெனவே சொல்லப்பட்டிருக்கிறதாம். அதைப்போல, இயேசு உயிர்தெழுந்திருக்கிறாராம். அது இப்படித்தான் இருக்க வேண்டும். அப்படி இல்லாவிட்டால், இயேசுவை ஒரு கடவுள் (Prophet) என்று யூதர்கள் நம்பமாட்டார்கள்

அவர்கள், அதற்காகக் காத்திருந்தார்களாம்; அப்படியே அது நிகழ்ந்ததாம். அவர் இறந்த மூன்று நாட்களுக்குப் பிறகு அவருடைய உடல் அந்தக் குகையிலிருந்து மறைந்து, பிறகு தோன்றியதை, குறைந்தது 8 பேர் பார்த்தார்களாம். மீண்டும் இயேசு மறைந்துவிட்டார்! உயிர்த்தெழுந்த பிறகு, இயேசு எங்கே சென்றார் என்பது குறித்து, கிறிஸ்துவ மதம் எதுவும் சொல்லவில்லை. அடுத்து, அவர் எப்பொழுது சரியாக உயிர்நீத்தார் என்பது குறித்தும், எந்தக் குறிப்பும் இல்லை.

ஆனால், அவர் மீண்டும் காஷ்மீருக்கு வந்து, தங்கி 102 வயது வரை உயிரோடு இருந்தார்; பிறகு இறந்தார். இந்த நிகழ்ச்சிகள் நடந்த இடம் அறியப்பட்டிருக்கிறது.

"காஷ்மீரில், அவர் வேறு பெயரில் வாழ்ந்தாரா?"

கிடையாது. உண்மையில் அப்படி எதுவும் கிடையாது. மேற்கில் உள்ளவர்கள், அவரை ஜீசஸ் என்று அழைக்கும்பொழுது, அரேபிய நாடுகள் அவரை 'ஏயஸ்' (Eavs) அல்லது 'எசாயு' (Esau) என்றும் அழைத்தன. காஷ்மீரில், அவரை 'யேசாவ்–அஸாப்' (Yousa-Asaf) என்றும் அவருடைய கல்லறையை, 'யேசாவ்–அஸாப்' கல்லறை என்றே அழைக்கப்படுகிறது. அதில், அவர் 1900ம் ஆண்டுகளுக்கு முன்பு வெகுதூரத்திலிருந்து வந்து, வாழ்ந்தவர் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

அந்தக் கல்லறைக்கு வருகை தந்த, சொர்க்கத்தின் வாழ்வு என்ற நூலின் ஆசிரியர் மைக்கேல் செர்னவோ, "நான் அந்தக் கல்லறைக்கு வந்தபொழுது, அது ஒரு அந்திமாலைநேரம். அந்த மாலை நேர வெயிலில், தெருவில் நடமாடும் சிறுவர்கள் மற்றும் மனிதர்களின் முகங்கள், தெய்விகக்களைப் பெற்றுக் காணப்பட்டது. அவர்கள் அந்தக்கால மக்களைப் போலத் தோன்றினார்கள்- அவர்கள், ஒரு சமயம் இஸ்ரேலிலிருந்து வெளியேறி, இந்தியாவுக்குக் குடியேறிய பழங்கால மக்களாக இருக்கக் கூடும். என் செருப்புகளைக் கழற்றிவிட்டு, உள்ளே நுழைந்த பொழுது, சிதைந்த கற்சுவர்களால் சூழப்பட்டு, காப்பாற்றப்பட்டுள்ள ஒரு பழைய கல்லறையைக் காண நேர்ந்தது; அதில் ஒரு பக்கத்தில், ஒரு பாதச்சுவடு கல்லில் செதுக்கப்பட்டு, பதிக்கப்பட்டிருந்தது. அது யூசுவா—அசாப்பின் காலடிச்சுவடு என்று சொல்லப்படுகிறது. அந்த யூசுவா- அசாப், ஜீசஸ்தான் என்று மக்கள் கூறிக்கொண்டு வந்திருக்கிறார்கள்.

அந்தக் கல்லறையின் மறுபக்கத்தில், ஏதோ எழுத்துக்கள் பொறிக்கப்பட்டு, அதற்கு அடியில் 'சார்டா' (Sharda) மொழியிலிருந்து ஆங்கிலத்தில், "யூசுவா-அசாப், கண்யா, ஸ்ரீநகர்" (Yousa-Asaf, Khanya, Srinagar) என்று மொழி பெயர்க்கப் பட்டுள்ளது" என்று எழுதுகிறார்.

இயேசு ஒரு முழுமையான விளக்கம்பெற்ற ஞானிதான். கிறிஸ்துவர்களைப் பொறுத்தவரையில், துறத்தல் என்பது நினைத்துக் கூடப் பார்க்க இயலாதது; ஆனால் யோகா அப்படி இல்லை. யோகா அதை நம்புகிறது. அதற்கு நிறையவே உதாரணங்களை- அதாவது ஒருவன், இறக்காமலேயே (உடலளவில்) இருக்க முடியும். இதயம் நிற்கும்; நாடித்துடிப்பு நிற்கும்; ஏன் மூச்சுகூட நிற்கும். ஆனால் முழுமையான இறப்பு ஏற்படாது. இதைப் போதிப்பதற்கு பல யோக முறைகள் இருக்கின்றன. இயேசு, சிலுவையில் இருக்கும்பொழுது, சில ஆழமான யோகப் பயிற்சிகளைச் செய்திருக்க வேண்டும் என்று இந்தியாவில் உள்ள நாம் அறிகிறோம். ஏனென்றால், அவரது

உடல் உண்மையிலேயே இறந்திருந்தால், மீண்டும் உயிர்த்தெழுதல் நடக்காத காரியம்.

அவரைச் சிலுவையில் அறைந்தவர்கள், அவர் உண்மையிலேயே இறந்துவிட்டார் என்று கருதி, அவரது உடலை சிலுவையில் இருந்து இறக்கி, அதை அவரைப் பின்பற்றுவர்களிடம் கொடுத்தார்கள்- பிறகு, அந்த உடலை சில மூலிகைக் களிம்பு மருந்தைத் தடவி, ஒரு மெல்லிய துணியில் சுற்றி- இந்த மூலிகைக் களிம்பை, இப்பொழுதும், "ஜீசஸ் களிம்பு" என்றே அழைக்கிறார்கள்- ஜோசப் மற்றும் நிக்கோடமஸ் (Joseph And nicodemus) என்ற சீடர்கள் அதை ஒரு குகைக்கு எடுத்துச் சென்று, வைத்து, அந்தக் குகையின் வாயை, ஒரு பெரிய கல்லைக் கொண்டு மூடிவிட்டார்கள்.

'எஸ்ஸென்னெஸ்' (Essenes) என்ற கிறிஸ்துவப் பிரிவினர் இயேசுவின் உடல் காயங்களை ஆற்ற, உதவி செய்தார்கள் என்று நம்பப்படுகிறது. அவரை மறுபடியும் உயிரோடு பார்த்தவர்களுக்கு, அவர்தான் உண்மையிலேயே சிலுவையில் அறையப் பட்ட இயேசு என்று நிரூபிக்க, அவருடைய உடலில் உள்ள ஆறிய காயங்களின் தழும்புகளே அத்தாட்சியாக இருந்தன- இது பைபிளிலேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதற்கு அந்த 'எஸ்ஸென்னெஸ்' பிரிவினர்களே காரணமாவர்; அந்தக் காயங்கள் ஆறுவதற்கு, மூன்று நாட்கள் பிடித்தன; அதற்காக, இயேசு அந்தக் குகையிலேயே தொடர்ந்து தங்க நேர்ந்தது. தன்னுடைய காயங்கள் ஆறியபிறகு, அவர் மறைந்துவிட்டார். அந்தக் குகையின் வாயிலை அடைத்திருந்த பெரிய கல்லைப் புரட்டி, உள்ளே பார்த்த பொழுது, அது வெறுமையாகவே இருந்தது. அங்கு இயேசு இல்லை! இயேசுவின் இந்த திடீர் மறைவுதான், அவர் மீண்டும் உயிர்த்தெழுந்து, சொர்க்கத்துக்குச் சென்றார் என்ற கதை உருவாகக் காரணமாயிற்று.

ஆனால், தன்னை தன்னுடைய நெருங்கிய சீடர்களிடம் காண்பித்த பிறகு, அவர் அந்த நாட்டைவிட்டுச் செல்ல வேண்டியதாகிவிட்டது. ஏனென்றால், அவர் உயிரோடு இருப்பது

தெரிந்தால், அவர் மீண்டும் சிலுவையில் அறையப்படாலம். மறைந்த ஒரு யூதப் பிரிவினர் இந்த ஒரு இந்தியப் பகுதிக்கு அவர் மீண்டும் சென்றுவிட்டார் என்று சொல்லுகிறார்கள்.

ஔரங்கசிப்பின் காலத்தில் வந்த பெர்னியர் (Bernier) என்ற பிரெஞ்சு தேசத்து வரலாற்று ஆசிரியன், 'பிர் பஞ்சல் பாசை' (Pir Panjal Pass)க் கடந்து, அவரது நாட்டிற்குள் நுழைந்து, அந்தக் கிராமங்களில் உள்ள மக்களைக் காணும் பொழுது, "அவர்கள் யூதர்களைப் போல இருந்தது என்னால் கவனிக்க முடிந்தது" என்று எழுதுகிறார்.

ஆமாம். காஷ்மீர்க்காரர்கள், யூதர்களைப் போலவே காணப்படுகிறார்கள்- அவர்களுடைய முகங்கள் மற்றும் நடையுடைபாவனைகள் அனைத்திலும். காஷ்மீரில், நீங்கள் எங்கே சென்றாலும், நீங்கள் ஒரு யூத நிலத்தில் செல்லுவதாகவே உணருவீர்கள். அது இந்தியாவில் உள்ள ஒரு யூத நிலப்பகுதிதான். யூதப் பழங்குடியினர், அங்கே வசிக்கிறார்கள். காஷ்மீரில், இயேசு பற்றி, பல கதைகள் உலவுகின்றன. ஆனால், அதைப்பற்றிப் புரிந்து கொள்ள நீங்கள் காஷ்மீருக்குச் செல்ல வேண்டும்.

இயேசுவின் மனதை, அந்தச் சிலுவையில் அறைதல் முழுமையாக மாற்றிவிட்டது. அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, அவர் முழு அமைதி நிலையில், யாருக்கும் தெரியாமல் மறைந்து, தொடர்ந்து 70 வருடங்கள் இந்தியாவில் வாழ்ந்திருக்கிறார். அவர் ஒரு கடவுள் தூதுவன் அல்ல; அவர் ஒரு போதகர் அல்ல; மற்றும் அவர் ஒரு சமயகுருவும் அல்ல; ஆகவேதான், அவரைப் பற்றி யாருக்கும் அதிகமாகத் தெரியவில்லை.

பொதுவாக கிறிஸ்துவ மதம், அதிக மதத்தன்மையுடையதாக இல்லை. இயேசுவைப் பொருத்தும், அது அதிக அர்த்த முள்ளதாக இல்லை. அவருடைய முழு வாழ்க்கையைப் பற்றி, யாருக்கும் எந்த விபரமும் தெரியாது. அவர் என்ன செய்தார், எப்படி தியானம் செய்தார் என்பது குறித்து எந்த விபரமும் இல்லை. அவர் என்ன சொன்னார் என்பது பற்றிக் குறித்து

வைத்துள்ளவர்கள் கிறிஸ்துவைப் பற்றி அதிகமாகத் தெரியாத அப்பாவி சீடர்கள். ஒருவர் செம்படவர், அடுத்தவர் தச்சு வேலை செய்பவர். அவருடைய 12 சீடர்களும், எளிமையான கள்ளம் கபடமற்றவர்கள்.

இயேசு, மலைக்குச் சென்று, 40 நாட்கள் அமைதியாக இருந்தது குறித்து, அவருடைய சீடர்களுக்கு எதுவும் புரிந்திருக்க முடியாது. அந்த நிகழ்ச்சியைப் பற்றியும், மற்றும் திரும்பி வந்தது பற்றியும் அடுத்து, போதனை செய்தது பற்றியும் வெறும் குறிப்புத்தான் எழுதி வைத்திருந்தார்களே தவிர, அவர் அங்கே என்ன செய்தார் என்பது பற்றி எந்த விபரத்தையும் தெளிவு படுத்தவில்லை. அதைப்பற்றி, யாருக்கும் எதுவுமே தெரியாது.

அவர் அங்கு அமைதியாக இருந்து வந்த பிறகு, மதத் தன்மையை விட, சமூக மற்றும் அரசியல் ரீதியாக மேலும் மேலும் தீவிரமாக அவர் ஈடுபடுவது போலத் தெரிகிறது. ஆனால், அவர் அப்படித்தான் இருந்திருக்க வேண்டும்; ஏனெனில், அவரைச் சுற்றியுள்ள மக்கள் அனைவரும் தத்துவத்தைப் பற்றி எதுவுமே தெரியாதவர்கள். ஆகவே, அவர் என்ன சொன்னாலும், அது தவறாகவே புரிந்து கொள்ளப் பட்டிருக்கும். அவர், "நான் யூதர்களின் அரசன்" என்று சொன்னால், அது இந்த பூமியில் உள்ள நிலப்பகுதியை குறிப்பதாகாது; மாறாக அதை ஒரு உருவமாகவே எடுத்துக் கொள்ள வேண்டும். அவருடைய பகைவர்கள் மாத்திரமல்ல. அவரைப் பின்பற்றுபவர்களும் மற்றும் சீடர்களும் கூட, அவரை தவறாகவே புரிந்து கொண்டார்கள். அவர்களும், அதை இந்த பூமியில் உள்ள நிலப்பகுதியைக் குறிப்பதாகவே எடுத்துக் கொண்டார்கள். அது ஒரு உருவகம் என்றோ அல்லது அடுத்த உலகத்தைப் பற்றி அவர் சொன்னதாகவோ, யாரும் புரிந்து கொள்ளவில்லை. இயேசு, விரைவில் ஒரு நிலப்பகுதிக்கு அரசனாகப் போகிறார் என்றே அவர்கள் எல்லோரும் கருதினார்கள்.

எல்லா தொல்லைகளுக்கும், இதுவே காரணமாயிற்று. யூதர்களுக்கு அவர் ஒரு தொந்திரவாக இருந்த காரணத்தினால் தான், அவர் வேற்று நாட்டில், சிலுவையில் அறையப்பட வேண்டியதாயிற்று. பொதுவாக, யூதர்கள் மிகவும் பொருள்பற்று உடையவர்கள். அவர்கள் இயேசுவின் காலத்திலும் சரி, இப்பொழுதும் சரி, அப்படியே தான் மிகுந்த பொருள்பற்று (Materialistic)யுடையவர்களாக இருக்கிறார்கள். அவர்களைப் பொறுத்தவரையில், அடுத்த உலகம் என்பது அர்த்தமற்றது. அவர்கள் எப்பொழுதும் இந்த உலகத்தைப் பற்றியே நினைத்துக் கொண்டு இருப்பவர்கள். அப்படியே, அவர்கள் அடுத்த உலகத்தைப் பற்றிப் பேசினாலும், அது வெறுமனே இந்த உலகத்தின் தொடர்ச்சியாகவே மற்றும் பின்பகுதியாகவே இருக்கும்- அது கடந்து செல்லுவதாக இல்லாமல், தொடர்ந்து செல்லுவதாகவே இருக்கும். அவர்களுடைய சிந்திக்கும் முறை, முற்றிலும் வேறானது.

ஆகவேதான், புறப்பொருள் விஞ்ஞானத்தைப் பொறுத்த வரையில், யூதர்களின் காணிக்கை மிகப் பெரியது. அது ஏதோ தற்செயலாக நடந்தது அல்ல. இந்த முழு உலகத்தின் பொருளாதார மறுமலர்ச்சியைப் பொறுத்தவரையில், கார்ல் மார்க்ஸ் (Karl Marx) என்ற யூதர் ஒருவரே காரணம்.

கார்ல் மார்க்ஸ், பிராய்டு (Freud) மற்றும் ஈன்ஸ்ட்டின் (Einstein) போன்ற மூன்று யூதர்களே, இந்த நவீன 20ம் நூற்றாண்டின் சிற்பிகள் என்று கருதப்படுகிறார்கள். இந்த முழு உலகத்தையே, இந்த மூன்று பேர்களும் நவீனமாக்குகிறார்களே, ஏன்? யூதர்களின் கொள்கையால், ஆக்ரமிக்கப்படாத, யாருமே இந்த உலகத்தில் இல்லை என்பதே காரணம்.

யூதர்கள், இந்த பூமியில் வேர்விட்டு, பூமி மயமாகவே வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள். ஆகவே, இயேசு, புத்தரைப் போல பேசிய பொழுது, அவர்களுக்கிடையே எந்த கருத்துப் பரிமாற்றமோ, சந்திப்போ மற்றும் ஒருங்கிணைப்போ எதுவும் நிகழவில்லை. அவர், தொடர்ந்து தவறாகவே கருதப்பட்டார்.

தன்னுடைய யூத இனத்தைவிட பிலாத்து (Pilate), அவரை சற்று அதிகமாகவே புரிந்து வைத்திருந்தார் எனலாம். ஒரு எளிமையான வெகுளியை, தேவையில்லாமல் சிலுவையில் அறைவதைப் பற்றி, அவர் தொடர்ந்து கவலையோடு தான் இருந்தார்; மேலும் அவர், இயேசுவை சிலுவையில் அறைவதைத் தடுக்கவே தன்னாலான முயற்சி அனைத்தையும் மேற்கொண் டார். ஆனால், அரசியல் பிரச்சினை வேறுவிதமாக இருந்தது.

இயேசுவை சிலுவையில் அறைவதற்கு, சற்று முன்பு கூட பிலாத்து அவரிடம், "உண்மை என்றால் என்ன?" என்று கேட்டார்.

இயேசு அமைதியாக இருந்தார். ஆனால், அது பௌத்த பதிலாகும்! உண்மையைப் பற்றி, புத்தா ஒருவர்தான் அமைதியாக இருந்தார்; வேறு யாரும் அப்படி இருந்தது இல்லை. அதைப்பற்றி, ஏதோ சொல்லப்பட்டுத்தான் இருந்தது- அதைப்பற்றி எதுவுமே சொல்லுவதற்கில்லை என்று சொல்லுவதும் கூட. புத்தர் ஒருவர்தான் அமைதியாக, முழு அமைதியாக இருந்தார். அதைப்போல, இப்பொழுது இயேசுவும் அமைதி காத்தார். ஆனால், இயேசுவுக்கு எதுவும் தெரியவில்லை என்றே, யூதர்கள் அவருடைய மௌனத்தைத் தவறாகப் புரிந்து கொண்டார்கள். அவருக்குப் பதில் தெரிந்திருந்தால், அவர் அதற்குப் பதில் சொல்லியிருக்கக் கூடும் என்றே அவர்கள் நினைத்தார்கள். ஆனால், அதைப் பிலாத்து மட்டும்தான் சரியாகப் புரிந்து கொண்டார் என்றே நான் நினைக்கிறேன். அவர் ஒரு ரோமானியர்; அவர் இயேசுவை சரியாகப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். ஆனால் பிறகு பிலாத்து முழுப் பொறுப்பையும் பாதிரி மக்களிடம் ஒப்படைத்துவிட்டு, அங்கிருந்து சென்றுவிட்டார். ஆமாம், அவர் வெறுமனே சென்றுவிட்டார்- அவர் மேற்கொண்டு அதில் தலையிட விரும்பவில்லை.

அங்கே, இரண்டுவித மாறுபட்ட அர்த்தங்கள் நிலவிய காரணத்தால், அந்த வேண்டத் தகாத நிகழ்ச்சி நடந்துவிட்டது.

இயேசு, மறு உலகத்தைப் பற்றியே பேசினார்- ஆனால், அதை இந்த உலகத்தோடு ஒப்பிட்டுத்தான். யூதர்கள், அவரது வார்த்தைகளுக்கு வெறும் நேரடியான வார்த்தை அர்த்தத்தை மட்டும் எடுத்துக் கொண்டு விட்டார்கள்.

இந்தியாவில், இதைப் போன்ற சம்பவம் நேர்ந்திருக்காது. ஏனெனில், இந்தியாவில் உருவக்கதைகள், குறியீடுகள் போன்றவற்றைக் கையாளுவது என்பது பழங்காலந் தொட்டே வந்திருக்கின்றன. ஆனால், இந்தியாவில் மாறுபட்டுத் தவறாகப் புரிந்து கொள்ளுதல் ஏற்படலாம்; மிக நீண்ட காலமாக அந்தப் பாரம்பரியம் தொடர்ந்து வருவதால், யாராவது இந்தப் பூமியைப் பற்றிப் பேசினால், அதை, அந்த உலகத்தைப் பற்றிப் பேசியதாக தவறாகப் புரிந்து கொள்ளுதல் ஏற்படக் கூடும். இந்த உலகத்தில், முழுமையாக இந்த உலகத்தில், நிலவுகின்ற காதல், அன்பு, இனக்கவர்சசி போன்றவற்றை மட்டும் பேசும் கவிஞர்கள் இந்தியாவில் இருக்கிறார்கள். ஆனால், அவரைப் பின்பற்றுபவர்கள், அவர் இதையெல்லாம் மறு உலகத்தைப் பற்றித் தான் உருவகப்படுத்திப் பேசியதாக எடுத்துக்கொள்ளுவார்கள். நீங்கள் மது மற்றும் மங்கையைப் பற்றிப் பேசினால், அவர்கள், மதுவை பேரானந்தத்தைக் குறிப்பதாகவும், மங்கையை தேவர்களைக் குறிப்பிடுவதாகவும் எடுத்துக் கொள்ளுவார்கள். இது இன்றும் நடக்கிறது!

யூதர்கள் எதையும் நேரடியாக வார்த்தை அர்த்தம் (Literal) செய்து கொள்ளக்கூடியவர்கள். அதில் அவர்கள் அப்பொழுதிருந்தே உறுதியாக இருக்கிறார்கள். மற்ற உலக இனத்திலிருந்து, இப்படி ஒரு வித்தியாசமான கோணத்தில் அவர்கள் மாறுபடுகிறார்கள். ஆகவேதான், அவர்களுக்கு சொந்த நாடு என்று இங்கு எதுவுமே இல்லை. ஏனெனில், அவர்களது மனம் வித்தியாசமாக இருப்பதால், அவர்களால் சொந்த நாட்டில் தங்க முடியாது. ஒரு யூதனின் மனத்தை ஆழ்ந்து பார்ப்பது என்பது எப்பொழுதுமே சிரமம்தான். அவனிடம் சில அந்தரங்கங்களும், சில பாதுகாப்புகளும் எப்பொழுதும் உண்டு.

எந்த அளவுக்கு. யூதர்கள் சொந்த நாட்டற்று இருக்கிறார்களோ, அந்த அளவுக்கு அவர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளுவதில் வல்லவர்களாக இருக்கிறார்கள்.

யூதர்களின் அடிப்படைக் குணம் என்னவென்றால், அவர்கள் எல்லாவற்றையும் உலகலாவிய பொருள்களாகவே கருதி சிந்திக்கிறார்கள். கடவுள் கூட இந்த உலகத்தில் ஒரு பகுதியாகவே அவர்கள் கருதுகிறார்கள். ஆகவேதான், இயேசுவை அவர்களால் ஒரு போதும் புரிந்து கொள்ள முடியவில்லை. உதாரணமாக, உங்களுக்கு பிறர் ஏதோ தீங்கு செய்தால், நீங்கள் திரும்பி அவருக்கு மறு தீங்கு செய்ய வேண்டும்- இரண்டு மடங்காக! -என்று யூதர்கள் சொல்லுகிறார்கள். இப்படித்தான் இந்தப் பொருள் உலகம் செயல்படுகிறது. மறுசெயல்! யாராவது உங்களுடைய ஒரு கண்ணைப் பிடுங்கினால், நீங்கள் அவருடைய இரண்டு கண்களையும் பிடுங்குங்கள்!

ஆனால், இயேசு முற்றிலும் வேறு விதமாகப் பேச ஆரம்பித்தார். யாராவது, உங்களுடைய ஒரு கன்னத்தில் அறைந்தால், நீங்களே உங்களுடைய அடுத்த கன்னத்தையும் காண்பியுங்கள் என்று இயேசு சொல்லுகிறார். இது முற்றிலும் புதுமையானது. இதைப் போல எப்படி ஒரு யூதர் திடீரென்று பேச முடியும் என்று ஒருவரால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. இதற்கு எந்த பழைய யூத மரபும் கிடையாது.

காரணமில்லாமல், யூதர்கள் எதையும் செய்ய மாட்டார்கள். ஆகவே, இயேசுவை ஒரு யூதர் என்று அவர்களால் ஒதுத்துக் கொள்ள முடியவில்லை. பழைய யூத வரலாற்றில், இயேசுவுக்கு எந்தப் பேரும் கிடையாது. அவரை, அவற்றோடு தொடர்புபடுத்த முடியாது. ஏனெனில், அவற்றோடு பொதுப்படையாக தொடர்பு கொள்ள, அவரிடம் எதுவும் கிடையாது. யூதக் கடவுளைப் பொறுத்தவரையில், இயேசுவின் அன்பு மற்றும் இரக்கம் எல்லாம் முட்டாள் தனமானவை.

ஒரு யூதக்கடவுளைவிட, அதிகமான பொறாமையும், மூர்க்கத்தனமும், கோபக் குணங்களையுமுடைய வேறு கடவுளை,

நீங்கள் பார்க்க முடியாது. யாராவது, அந்தக் கடவுளை பணியவில்லையென்றால், அது, ஒரே நொடியில் அந்த நகரத்தையே அழித்துவிடும்! ஆனால், இயேசுவோ திடீரென்று அங்கு தோன்றி, 'அன்பே கடவுள்' என்று கூறுகிறார்! ஆகவே, அந்தப் பழைய கலாசாரத்தில், ஏதோ புதுமை நுழைந்தாலொழிய, இப்படி உங்களால் நினைக்க முடியாது.

கருணையைப் பற்றி புத்தர் பேசும்பொழுது, அது நினைத்துப் பார்க்க முடியாத ஒன்று என்று யாரும் நினைக்கமாட்டார்கள். முழு இந்தியாவே, பல நூற்றாண்டு காலமாக, அதைப்பற்றியே பேசி வருகிறது. ஆனால், பழைய கலாசாரத்தில், புத்தர் ஒரு பகுதிதான். ஆனால், பழைய யூத கலாசாரத்தில், இயேசு ஒரு பகுதியாக இல்லை. ஆகவேதான், அவர் கொல்லப்பட்டார்; சிலுவையில் அறையப்பட்டார்.

இந்தியாவில், எந்த புத்தரையும் யாரும் கொடூரமாக கொன்றதில்லை. ஏனென்றால், அவர் எப்படி ஒரு எதிர்ப்பாளராக இருந்தாலும், அவர் இப்பொழுதும் பழைய கலாசாரத்தையே சார்ந்திருக்கிறார். அவர் எப்படிப்பட்ட எதிர்ப்பாளராக இருந்தாலும் சரி, அவர் இப்பொழுதும் பழைய ஆழமான கொள்கைகளை உறுதிசெய்கிறார். ஒரு இந்திய சமூகத்தை விட, பொதுவாக அவர் மிகவும் இந்தியத் தன்மையுடையவராக இருந்தார் என்றே அவரைக் கருதுவார்கள். ஏனென்றால், இந்தியநாட்டின் அடிப்படைக் கோட்பாடுகளை அவர் உறுதி செய்கிறார்.

யூதர்களுக்குப் பரிச்சியமில்லாத வார்த்தைகள் மற்றும் குறியீடுகளை உபயோகப்படுத்தி, இயேசு, ஜெருசலத்திற்கு முற்றிலும் ஒரு அந்நியனாகவே இருந்தார். அவர் சிலுவையில் அறையப்படத்தான் வேண்டும்; அது இயல்பானதும் கூட. தியானத்தில் ஆழமாக வாழ்ந்த, ஞானத்தன்மையில் ஆழமாக உள்ள ஆனால், தத்துவமற்ற, மற்றும் மதத் தன்மையற்ற, வெறும் அரசியல் ரீதியான ஒரு இனத்தில் ஈடுபட்டுள்ளவராகவே, இயேசுவை நான் காணுகிறேன்.

யூத இனம் சிறந்த தத்துவவாதிகளை, உலகத்துக்கு அளிக்கவில்லை. அது. சிறந்த விஞ்ஞானிகளை அளித்திருக்கிறது. ஆனால், சிறந்த தத்துவவாதிகளை அல்ல. அந்த இனத்தின் சிந்திக்கும் மனமே மிகவும் வித்தியாசமானது; அதனுடைய வேலையின் கோணமே, வித்தியாசமானது. ஆனால், இயேசு அங்கு ஒரு வெளி ஆளாகவே இருந்தார்; ஒரு அந்நியனாகவே இருந்தார். அவர் யூதர்களுக்குத் தொல்லையை ஏற்படுத்த ஆரம்பித்தார்; ஆகவே அவரை அமைதிப்படுத்த வேண்டியதாயிற்று.

பிறகு, அவர் தப்பித்துச் சென்றுவிட்டார். ஆனால், அவர் மீண்டும் திரும்ப முயற்சி செய்யவில்லை. ஒரு சிறிய மக்கள் குழுவோடு வேறு ஒரு இடத்தில் அவர் அமைதியாக வாழ்ந்தார்– அமைதியாக ஆத்மிகமாக வேலை செய்துகொண்டு. அந்த ஆழமான, நுண்ணிய, மறைவான ஆன்மிக உணர்வை இப்பொழுதும் தொடர்ந்து அங்கு இருப்பதாக நான் உணருகிறேன். ஒருவர், கிறிஸ்துவத்தை மறந்து, கிறிஸ்துவமதம் இல்லாமல் வெறும் இயேசுவை மட்டும் கண்டுபிடிக்கச் சென்றால், அவர் மிகுந்த ஆத்மிக உணர்வு கொண்டவராகவே இருப்பார். கிறிஸ்துவ மதம் தான், இப்பொழுது அதற்குத் தடையாக இருக்கிறது.

நீங்கள் இயேசுவை நினைக்கும் பொழுது, கிறிஸ்துவ மத விளக்கத்தைத்தான் ஒரு ஒரே விளக்கமாக எடுத்துக் கொள்ள வேண்டியுள்ளது. 'டெட் சீ'(Dead Sea)க்கு அருகில், *20* வருடங்களுக்கு முன்பு கண்டுபிடித்த 'டெட் சீ ஸ்கூரோல்ஸ்' (Dead Sea Scrolls) ஆத்மிகவாதிகளிடம் மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தியது. அந்த 'ஸ்கூரோல்ஸ்' ஆரம்பத்தில் எஸென்ஸென்ஸ்க்கு (Essenes) உரியது. இது பைபிளை விட மிக்க ஆதாரப்பூர்வமானது. ஆனால், கிறிஸ்துவத்தால் அதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அந்த டெட் சீ ஸ்கூரோல்ஸ், யூதர்களைப்பற்றி, வேறுவிதமாக சொல்லுகிறது. குரான் கூட, இப்படி வேறு விதமாக சொல்லுகிறது. முகமதுவுக்கும், வேறுபல யூத ஆன்மிக உயர் மனிதர்களுக்கும் தொடர்பு இருந்தது போலத் தோன்றுகிறது.

இது எப்பொழுதுமே நிகழுகிறது. நான் எதாவது சொல்லும்பொழுது, என்னைச் சுற்றி, இரண்டுவித மக்கள் கூட்டத்தை, நான் உண்டாக்குகிறேன். ஒரு கூட்டம், வெளித் தன்மையில் ஈடுபடக் கூடியது. இந்த வெளி சமூகத்துக்காக, அவர்கள் பல காரியங்களைச் செய்வார்கள். பல கூட்டங்கள் ஏற்பாடு செய்வார்கள், நான் சொல்லுவது அனைத்தையும் அவர்கள் கவனமாக சேகரித்து வைப்பார்கள். அடுத்த பகுதி மக்கள் கூட்டம், உள் உலக சம்பந்தமாக வேலை செய்பவர்கள். ஆனால், வெகு விரைவில், இந்த இரண்டு கூட்டத்தினர் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொள்ளுவர். ஏனென்றால், அவர்களுடைய அணுகுமுறை வெவ்வேறானது; ஆர்வம் வெவ்வேறானது. உள் உலக சம்பந்தமாக ஆர்வமுடையவர்கள் வெளி உலக சம்பந்தமாக ஆர்வமுடைய வர்களிலிருந்து முற்றிலும் மாறுபடுகிறார்கள். ஆனால், முடிவில் வெளிஉலக சம்பந்தப்பட்டவர்கள் தான் ஜெயிப்பார்கள். ஏனென்றால், அவர்கள் ஒரு அமைப்பாக ஒன்றுபட்டு ஈடுபடுவார்கள். ஆனால், உள்உலக சம்பந்தப் பட்டவர்கள், அப்படி ஒரு அமைப்பாக செயல்பட முடியாது. அவர்கள், தன்னந்தனியாகவே செயல்படுவார்கள். இதிலிருந்து ஒருவர் விலகினால், அந்த இழப்பு நிரந்தரமாகிவிடும்.

ஒவ்வொரு குருவிடமும், இது நிகழுகிறது. முடிவில், வெளி உலக சம்பந்தப்பட்டவர்கள் மேலும் மேலும் ஆதிக்கத் தன்மை யுடையவர்களாகி விடுகிறார்கள். அது ஒரு ஒழுங்குபடுத்தப்பட்ட அமைப்பாகி விடுகிறது. பிறகு அந்த அமைப்பு முதலில் செய்யக்கூடிய காரியம், தன்னுடைய மற்றதாகிய உள் உலக சம்பந்தப்பட்டதை அழிப்பதுதான். ஏனென்றால், அந்த ஆத்மிக உள்உலக சம்பந்தப்பட்டது, வெளித்தன்மைக்கு ஒரு தொந்திரவாக இருக்கும். ஆகவே, இந்த மாறுபட்ட மதக் கருத்துகளால், எவையெல்லாம் உள் ஆத்மிக சம்பந்தப்பட்டதாக இருக்கிறதோ, அவற்றையெல்லாம், கிறிஸ்துவம் அழித்துக் கொண்டே வந்திருக்கிறது.

இப்பொழுது, இயேசுவின் மாறுபட்ட வெளிச்சம்பந்தப் பட்டவர்களின் உச்சமாக போப் இருக்கிறார். இதுதான், வெளி மற்றும் உள் சம்பந்தப்பட்ட நிலைகளின் முடிவான அமைப்பாக இருக்கிறது. இந்த போப், இயேசுவை சிலுவையில் அறைந்த யூத மந்திரிமார்களைப் போல இருக்கிறாரேயொழிய, இயேசுவை ஒத்தவராக இல்லை. இயேசு இப்பொழுது மீண்டும் வந்தால், வெட்டிகன் போப்புகளால், ரோமில் அவர் மறுபடியும் சிலுவையில் அறையப்படுவார். வெட்டிகன் (Vetican) இப்பொழுது ஒரு ஒழுங்குபடுத்தப்பட்ட வெளி அமைப்பாகவே இருக்கிறது.

இது ஒரு உள்ளடங்கிய இயல்பான பிரச்சினையாகிறது. அது அப்படி நிகழத்தான் செய்யும். அதை உங்களால் தவிர்க்க முடியாது.

ஆமாம், புத்தர், மஹாவீரர், கிருஷ்ணரைப் போல, இயேசுவும் ஒரு விளக்கம் பெற்ற ஞானிதான்.

"பைபிளில், அநேக அற்புத நிகழ்ச்சிகள் குறிக்கப் பட்டிருக்கின்றன. உதாரணமாக, இறந்தபிறகு, உடல் அழுகிய நிலையில் இருந்த லாசரஸை, இயேசு உயிர்த்து எழ வைத்தது. இப்படி, ஒரு இறந்த மனிதனுக்கு மீண்டும் உயிர் கொடுக்க முடியுமா?"

அது சாத்தியம்தான்; ஆனால், வேறு வகையில் மிகவும் வித்தியாசமான தன்மையில் ஒருவன் உண்மையிலேயே இறந்து, அவனுடைய உடலும் இறந்துவிட்டால், அது சாத்தியமில்லை. ஆனால், ஒருவன் கிட்டத்தட்ட இறந்த நிலையில்...

"ஆனால், 'அவனுடைய உடல் நாற்றமெடுத்த நிலையில்' என்று பைபிளில் குறிப்பிடப்பட்டிருக்கிறதே?"

உடல், நாற்றம் எடுக்கலாம். அந்த ஆள் ஆழ்ந்த மயக்க நிலையில் இருந்திருக்கலாம்; அவனுடைய உடல் அப்பொழுதுதான் நாற்றமெடுக்க ஆரம்பித்திருக்கலாம். வேறுபல சாத்தியக் கூறுகளும் உள்ளன. ஆனால், அந்தக் கால யூதர்களுக்கு, அதைப்பற்றி எதுவும் புரிந்து கொள்ள முடியாது.

உதாரணமாக, உங்களுடைய ஆத்மா, உடலிலிருந்து சற்று வெளியே இருக்கலாம்; இருந்தும் அது இன்னும் அந்த உடலில் தொடர்பு கொண்டுதான் இருக்கிறது. பிறகு, உடல் மிக ஆழ்ந்த மயக்க நிலையில் இருக்கலாம். அந்த நிலையில் அது சாதாரண நிலையில் உள்ளது போல் தெரியலாம். அல்லது அழுகவும் ஆரம்பிக்கலாம்- இப்பொழுது இதுதான் பிரச்சினை. இப்பொழுது உடலைச் சுற்றி வந்து கொண்டிருக்கும் ஆத்மாவை, உடலுக்குள் மீண்டும் செலுத்த, மிக அதிகமாக சக்தி தேவைப்படுகிறது. ஆனால், இப்படி அந்த உடலுக்கு உயிர் கொடுக்க முடியும். அது மீண்டும் உயிர்பெற இயேசு போன்றவர்களால் உதவி செய்ய முடியும்.

இந்தியாவில், இப்படிப் பல நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன.

இந்தியாவில் உள்ள மிகச்சிறந்த அத்வைதவாதியான மந்தன் மிஸ்ராவுக்கும், சங்கரருக்கும் நடந்த புகழ் பெற்ற வாதப்பிரதி வாதங்களை, நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம்.

சங்கரர் அவருடன் வாதம் செய்ய வந்திருக்கிறார். ஏனென்றால், இந்தியாவில், அந்தக் காலத்தில் அதுதான் பழக்கம். அது வாய்ச்சண்டை அல்ல; அது ஒரு சுதந்திரமான வாக்கு வாதம் அல்லது வாதப்பிரதிவாதம் தான். ஒருவர், அடுத்தவரைத் தன் கருத்தை ஒத்துக்கொள்ள வைத்தால், ஒத்துக் கொண்டவர், முன்னவரது சீடனாகி விடுவார். இந்த நிபந்தனையோடு, அந்த வாதப் பிரதிவாதம் தொடர்ந்தது. மந்தன் மிஸ்ராவோடு வாதம் செய்ய, சங்கரர் இந்தியாவில் கிராமம், கிராமமாகச் சென்றார். ஆனால், ஒரு பிரச்சினை கிளம்பியது. அதாவது, யாரை அதற்கு நீதிபதியாக அவர்கள் நியமிப்பது? இருவருமே தூண் போன்றவர்கள். ஒருவர்

அத்வைதவாதி; அடுத்தவர் துவைதவாதி. இருவருடைய வாதப் பிரதிவாதங்களுக்கு, யாரைத் தலைவராக நியமிப்பது? யாருக்குமே அந்தத் தகுதி இல்லை. அவர்கள் பேசுவதை, யார் சரியாகப் புரிந்து கொள்ளுவது? அவர்களில், யார் ஜெயித்தார், யார் தோற்றார் என்று யார் முடிவு கட்டுவது? யாருமே, அந்தத் தலைமைப் பொறுப்புக்கு தகுதியானவர்களாக இல்லை.

அதற்கு மந்தன் மிஸ்ராவுடைய மனைவிதான் தகுதியானவராகத் தெரிந்தது. ஆனால், இதைப் போன்ற அறிவுப்பூர்வமான சர்ச்சைக்கு ஒரு பெண் தலைமை தாங்குவது என்பது மிகவும் அரிதான காரியம். ஆனால், அதைத் தவிர, வேறு வழியில்லை. ஆகவே, மந்தன் மிஸ்ராவுடைய மனைவியையே தலைமை தாங்கச் செய்தார்கள்.

கடைசியில், மந்தன் மிஸ்ரா தோற்கடிக்கப்பட்டார். ஆனால், அவரது மனைவி, மந்தன் மிஸ்ரா பாதிதான் தோற்கடிக்கப் பட்டிருக்கிறார். மற்றொரு பாதியாக தான் இன்னும் தோற்கடிக்கப்படவில்லை என்று தீர்ப்பு வழங்கினார். ஆகவே, அவர் "சங்கரர் அவர்களே, நீங்கள் இப்பொழுது என்னுடன் சர்ச்சை செய்ய வேண்டும்" என்றார்.

அது ஒரு தந்திரம்தான்! இப்பொழுது சங்கரர், மிகுந்த தொல்லையில் மாட்டிக் கொண்டுவிட்டார். ஒரு கணவன்-மனைவி என்ற தம்பதியரில், ஒரு பாதி கணவராகவும், மறு பாதி மனைவியாகவும் இந்தியாவில் கருதப்படுகிறார்கள். ஆகவே, மந்தன் மிஸ்ரா என்ற முழுமையில், பாதிதான் தோற்கடிக்கப்பட்டது என்றும், மறுபாதி இன்னும் தோற்கடிக்கப் படவில்லை என்றும் தீர்ப்பாகியது.

இப்பொழுது அவரது மனைவி, "நான் இப்பொழுது உங்களோடு வாதம் புரியத் தயாராக இருக்கிறேன்; மந்தன் மிஸ்ரா தலைவராக இருக்கட்டும்" என்று சங்கரரிடம் கூறினார். அவள் மிகுந்த தைரியசாலி! ஏனென்றால், அவள் பாலுறவைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள்!

சங்கரர், இப்பொழுது பாதகமான சூழ்நிலையில் இருந்தார். ஏனென்றால், அவர் ஒரு கட்டைப் பிரம்மசாரி. தான், தோற்கடிக்கப்படுவோம் என்பதை அவர் தீர்க்கமாக உணர்ந்தார். ஏனென்றால், அவருக்கு உடலுறவைப் பற்றி எதுவும் தெரியாது. பாலுறவு சம்பந்தமாக அவருக்கு எதுவுமே தெரியாது. அது ஒரு புத்திசாலித்தனமான தந்திரம்தான். அதில் அவர் வசமாக மாட்டிக் கொண்டு விட்டார். அவர், "முதலில், எனக்கு 6 மாதம் அவகாசம் கொடுக்கவும்; நான் பாலுறவைப் பற்றி தெரிந்து வருகிறேன். அதன்பிறகு தான், நான் உங்களோடு வாதிடமுடியும். இல்லாவிட்டால், நான் தோற்றதாக இப்பொழுதே தீர்ப்புக் கூறிவிடவும்" என்றார். அவர் கேட்ட ஆறுமாத அவகாசம் கொடுக்கப்பட்டது.

இப்பொழுது, வேறு ஒரு பிரச்சினை எழுந்தது. இந்தக் கதை அழகானது. சங்கரர், தன் வாழ்நாள் முழுவதும் பிரம்மசாரியாகவே இருப்பது என்று சத்தியம் செய்திருக்கிறார்; ஆகவே, அவர் தன் உடலை பாலுறவில் பரிசோதனை செய்ய உபயோகப்படுத்த முடியாது. அவர் தன் உடலை விட்டு வெளியேறி, வேறு ஒரு உடலுக்குள் செல்ல வேண்டும். அடுத்து, தன்னுடைய சொந்த உடலைப் பாதுகாத்து, கெடாமல் வைத்திருக்க அதைத் தன் சீடர்களிடம் ஒப்படைத்துச் செல்ல வேண்டும். ஏனென்றால், அதற்கு ஏதும் தீங்கு நேர்ந்தால், பிறகு அவரால் திரும்பி வந்து, தன் உடலுக்குள் நுழைய முடியாது. ஆக, ஆறு மாதங்களாக, அந்த உடலை அவரது 12 சீடர்கள் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்து வந்தார்கள். அவர்கள் தொடர்ந்து அந்த உடலுக்கருகிலேயே இருந்தார்கள்.

ஒரு அரசன் அப்பொழுதுதான் இறந்திருந்தான். ஆகவே, சங்கரர், அந்த அரசனின் உடலுக்குள் சென்ற பொழுது, அது ஏற்கெனவே இறந்திருந்தது. இப்பொழுது, அந்த இறந்த உடல் உயிர் பெற்று விட்டது. அதில், சங்கரர் ஆறு மாதம் தங்கியிருந்து பாலுறவுப் பரிசோதனையை மிகுந்த ஈடுபாட்டுடன் செய்தார். அந்த அரசனின் மனைவி, ஏதோ வித்தியாசத்தை உணர்ந்தாள்; ஆனால் அவளால் என்ன செய்ய முடியும்? உடல் என்னமோ

அதேதான்; ஆனால் அதில் உள்ள ஆள்தான் வேறானது. ஆறு மாதம் கழித்து, சங்கரர் தன் உடலுக்குள் மீண்டும் வந்து வாதத்தில் ஈடுபட்டு, மந்தன் மிஸ்ராவின் மனைவி, பாரதியைத் தோற்கடித்தார்.

இது ஒரு சாத்தியம். அதாவது லாசரஸ் முழுமையாக இறக்காமல், இறந்தது போல இருந்த அவனது உடலை, இயேசு உயிர் பெற உதவி செய்திருக்கக் கூடும். கிறிஸ்துவத்துக்கு அனேக விஷயங்கள் தெரியாது. லாசரஸ் ஆழ்ந்த மயக்கநிலையில் இருந்திருக்கக் கூடும்; அவனது உடல் அப்பொழுதுதான் கெட ஆரம்பித்திருக்கலாம். மயக்க நிலை, பல வருடங்களுக்குக் கூட நீடிக்கலாம். 9 மாதங்கள் ஆழ்ந்த மயக்க நிலையில் இருந்த ஒரு பெண்ணை நான் பார்த்திருக்கிறேன். அந்த உடலை, யாரும் பாதுகாக்காவிட்டால், அவள் உடனே இறந்திருக்கக் கூடும். அவளது உடலைப் பாதுகாக்க, பலவித முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அவளது உடல், இறந்தது போல அப்படியே கிடந்தது. அவள், தானே தனக்கு எதுவும் செய்துகொள்ள முடியாது. ஏழு நாட்களுக்கு, அவளது உடலைப் பாதுகாக்காவிட்டால், அது நாற்றம் அடிக்க ஆரம்பித்துவிடும்.

ஆகவே, மயக்கநிலையில் இருந்த ஒருவனை அல்லது ஏதோ காரணத்திற்காக உடலிலிருந்து பிரிந்த ஆத்மாவோடு கூடிய ஒருவனுக்கு, இயேசு உதவியிருக்கக் கூடும். ஒரு முழுமையாக இறந்த மனிதனை உயிர் பிழைக்க வைக்க முடியாது. அவன் அப்படி மீண்டும் உயிர் பிழைத்து வந்தால், அவன் உண்மையிலேயே இறக்கவில்லை என்று அர்த்தம். என்னைப் பொறுத்தவரையில், எந்த அற்புதமும் இந்த உலகத்தில் நிகழவில்லை. நமக்கு ஒன்றின் கதை முழுமையாகத் தெரியாத காரணத்தினால், ஒன்றின் காரணம், முழுமையாக விளங்காத காரணத்தினால், ஏதோ ஒன்று நமக்கு அற்புதமாகக் காட்சி அளிக்கக் கூடும். அவ்வளவுதான்.

"பைபிளில் குறிப்பிடப்பட்டுள்ள, அடுத்த பல அற்புத நிகழ்ச்சிகளைப் பற்றிய உங்களுடைய கருத்து என்ன?

உதாரணமாக, இயேசு, இரண்டு ரொட்டித் துண்டுகளையும், ஐந்து மீன் துண்டுகளையும் வைத்துக் கொண்டு சுமார் ஆயிரம் பேருக்கு உணவு அளித்திருப்பது பற்றி நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?"



தைப்போல பல நிகழ்ச்சிகள் சாத்தியம் தான். எதுவுமே அற்புதமோ, அதிசயமோ இல்லை. ஆமாம் எதுவுமே இல்லைதான். பொருளாக்குதல் (Materialization) கூட சாத்தியம் தான். அது ஒன்றும் அற்புதமில்லை; அது விஞ்ஞான ரீதியானது; பொருளாக்குதல் போல பல நிகழ்ச்சிகள் சாத்தியம்தான். நமக்குத் தெரியாத வழியில், ஏதோ ஒன்றை இங்கே கொண்டுவர முடியும். அந்த வழி உங்களுக்குத் தெரியாது. ஆனால், ஏதோ ஒன்று இங்கு திடீரென்று தோன்றக்கூடும். அது பொருளாக்குதல் அல்ல. சேமிப்பு அறையிலிருந்து, ஒரு 'சுவிஸ்' (Swiss) கைக்கடிகாரத்தை இங்கே வரவழைக்க முடியும். ஆவிகளால் அதை இங்கே கொண்டு வர முடியும். உங்களால் அந்த ஆவிகளைப் பார்க்க முடியாது; ஆனால் கைக்கடிகாரத்தைப் பார்க்க முடியும். அது பொருளாக்குதல் அல்ல. ஏதோ நமக்குத் தெரியாத வழியில், அந்த 'சுவிஸ்' கைக்கடிகாரம் எங்கிருந்தோ இங்கே வந்திருக்கிறது.

அதைப்போல, பொருளாக்குதல் கூட சாத்தியம்தான். ஒன்றுமில்லாததிலிருந்து ஏதோ ஒன்று வரலாம்...

"அது எப்படி சாத்தியம்?"



து எப்படி சாத்தியம் என்று நீங்கள் கேட்கும்பொழுது, அந்த 'எப்படி' என்பதற்கு பதில் அளிப்பது கடினம். நீங்கள் அதற்கு மிகுந்த அளவில் பயிற்சி பெற வேண்டும்.

''அதற்கு நீங்கள் ஏதாவது ஒரு உதாரணம் சொல்ல முடியுமா?''

நீங்கள் அதிக அளவில் உங்களுடைய மனதை ஒருமுகப்படுத்த முனைந்தால், பொருளாக்குதலில் நீங்கள் வெற்றியடையும் தன்மையைப் பெறுவீர்கள். நீங்கள் மனதை ஒரு முகப்படுத்துவதில் முழுமையாக வெற்றியடைந்தால், அது சாத்தியம்தான். ஆனால், இப்பொழுது இருக்கும் மனநிலையில், ஒரு கணம் கூட உங்களால் அதை ஒருமுகப்படுத்த முடியாது. நீங்கள் ஏதோ ஒன்றில், ஒரு கணத்துக்கு உங்களுடைய மனதை முழுமையாக ஒரு முகப்படுத்தினால், உங்களுடைய மனதை ஒரு வினாடி நேரத்துக்குக் கூட அதில் முழுமையாகச் செலுத்தினால், அதை உங்களால் வசப்படுத்த முடியும்; அது உங்கள் முன்பு தோன்றும்.

ஆனால், அதை மிகவும் சுலபமான வழிகளில், முதலில் முயற்சி பண்ணிப் பார்க்கவும். உதாரணமாக, ஒரு கண்ணாடிக் குவளையை எடுத்துக் கொண்டு, அதில் நீரை நிரப்பி, பிறகு அதில் ஏதாவது எண்ணெயை விடவும். இப்பொழுது, நீரின் மேல் மிதக்கும் எண்ணெயில், ஒரு மெல்லிய குண்டூசியை மிதக்கவிடச் செய்யவும். பிறகு அந்தக் குண்டூசியில் உங்களுடைய மனதை ஒருமுகப்படுத்தவும். முழுமையாக ஒருமுகப்படுத்தவும்! சுமார் 2 நிமிடங்களுக்கு, நீங்கள் உங்களுடைய கண்களைச் சிமிட்டாமல், அப்படியே அதில் நிலைக்குத்தி இருக்கச் செய்யவும். இப்படி 2 நிமிட ஒருமுகப்படுத்துதலுக்குப் பிறகு, அந்த குண்டூசியை அதன் வலது பக்கத்துக்கு போகச் சொல்லவும். இப்படி 7 நாட்கள் பயிற்சிக்குப் பிறகு, உங்களால் அந்த குண்டூசியை நகரச் செய்ய முடியும்.

உங்களுடைய மனதின் கட்டளையை, ஒரு குண்டூசியில் பின்பற்ற முடியும் பொழுது, பொருளாக்குதலுக்குத் தேவையான ஏதோ ஒன்றை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள். ஆனால், அது ஒரு நீண்ட கால பயிற்சிதான். ஆனால், இப்பொழுது பிற பொருள்களின் மேல், உங்களுடைய மனதில் ஆதிக்கம் செலுத்த

முடியும் என்பதை நீங்கள் உணர்ந்துகொள்ள முடியும். நீங்கள் அந்தச் சக்தியை உணர்ந்த பிறகு, நீங்கள் முழுமையாக ஒன்றின்மேல் உங்களுடைய மனதை ஒருமுகப்படுத்தினால் பொருளாக்குதல் சாத்தியம்; இதற்கு சங்கற்பமும், திட மனமும் தான் தேவை; வேறு எதுவும் இல்லை. ஒரு ரோஜா மலர் தோன்ற வேண்டும் என்று முழுமையாக உங்களுடைய மனதில் நீங்கள் சங்கற்பம் செய்தால், ஒருமுகப்படுத்தினால், ரோஜாமலர் உங்கள் முன்பு தோன்றும்.

ஆகவேதான், தெய்விக மனதில், இந்த முழு உலகமே வெறும் கனவாக இருக்கிறது என்று இந்தியர்கள் கூறினார்கள். கடவுள் ஏதோ ஒன்றைக் கனவு காணுகிறார்; அது பிறகு தோன்றுகிறது. அவர் கனவு காண்பதை நிறுத்தினால், இந்த உலகம் மறைகிறது.

"நீங்கள், பொருளாக்குதலை செய்ய முடியுமா?"

ஆமாம். அது என்னால் முடியும். அதே சமயம், அது என்னால் கூட முடியாது! ஏனென்றால், அதனுடைய முட்டாள்தனம் எனக்குப் புரியும். அது, என்னால் முடியாது என்பதே சரியானது. அப்படி செய்து காட்ட புத்தரை உங்களால் தூண்ட முடியாது. ஆனால், இயேசு அப்படி செய்யும்படியாகிவிட்டது. அதற்குக் காரணம் இருக்கிறது. கண்களால் பார்த்து உறுதி செய்து கொள்ளாது, யூதர்கள் எதையும் நம்பமாட்டார்கள். அற்புத நிகழ்ச்சி ஏதும் இல்லாமல், அவர்களைச் சமாதானப்படுத்த முடியாது.

அற்புதங்களைச் செய்யாமலேயே, புத்தரை இந்தியா ஏற்றுக் கொண்டு விட்டது. ஆனால், யூதர்கள், "உங்களால் அற்புதங்களைச் செய்துகாட்ட முடியுமா? நீங்கள் சொல்லுவது அர்த்தமுள்ளது என்று, நீங்கள் ஏதாவது அற்புதங்களைச் செய்து காட்டினால்தான், நாங்கள் நம்ப முடியும்," என்று கேட்க ஆரம்பித்துவிடுவார்கள். இயேசு, அற்புதங்கள் எதையும் செய்ய விரும்பவில்லை. யூதர்கள்தான், அவரை அப்படிச் செய்ய

வற்புறுத்தினார்கள். அற்புதங்கள் இல்லாமல், அவருடைய போதனைகள், சிந்தனைகள், அனைத்தும் யூதர்களைப் பொருத்தவரையில், அர்த்தமற்றதுதான்.

புத்தர், அற்புதங்களைச் செய்பவர் என்று நம்மால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. அது, மிகவும் கீழான நிலையில் உள்ள மனதுக்கு வேண்டுமானால் உகந்ததாக இருக்கலாம். ஏன் அவர், பிறரைத் திருப்திபடுத்த முயல வேண்டும்? பிறருக்கு, ஏன் அவர் அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும்? சிலசமயம், ஏதோ ஒரு அற்புதம், புத்தரைச் சுற்றி நிகழலாம்; ஆனால், வேண்டுமென்றே செய்தது கிடையாது. அது, ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில், தானே நிகழலாம்.

இருந்தும், அதில் ஏதோ அர்த்தம் இருக்கத்தான் செய்கிறது. பைபிளில் குறிப்பிடப்பட்டுள்ள அற்புதங்கள் எல்லாம்- சிலசமயம் ரொட்டி தோன்றுவது, சில சமயம் வியாதிகள் மறைவது அல்லது இறந்த மனிதன் மீண்டும் உயிர் பெறுவது- பொருளாக்குதலில் சேர்ந்தவைதான்; அவை மிகவும் சாதாரண நிகழ்ச்சிகள்தான். ரொட்டி, வியாதி, இறப்பு போன்று தினம் தினம் நிகழும் சாதாரண நிகழ்ச்சிகளிலேயே அவர்கள் கவனம் செலுத்துகிறார்கள்.

இந்த முழுவாழ்க்கையே வெறும் கனவுதான் என்று புத்தர் சொல்லுகிறார். இப்படி இருக்கும்பொழுது, ஒருவர் மீண்டும் உயிர்த்தெழுந்தால், அது என்ன பெரிய விஷயமா? இது அர்த்தமற்றது. அந்தக் கனவு மீண்டும் நடைபெற வாய்ப்பு உள்ளது என்பதையே அது சுட்டிக்காட்டுகிறது.

ஒரு கதை. புத்தர், ஒரு கிராமத்தில் இருக்கும்பொழுது, அங்கு ஒரு குழந்தை இறந்துவிட்டது. அந்தக் குழந்தையின் தாய், அதன்மேல் தன் உயிரையே வைத்திருந்தாள். துக்கம் தாளாமல், அவள் கதறி, செறுமி, அழுது, தற்கொலை செய்து கொள்ளும் அளவுக்கே சென்றுவிட்டாள். அவளிடம் ஒருவர் வந்து, "புத்தரை வந்து பார். அவரால் எதையும் செய்ய முடியும். அவர் ஒரு

விளக்கம் பெற்ற ஞானி. அவரால் எதுவும் நடக்கும். வந்து அவரைப்பார்! அவர் மிகவும் கருணையுடையவர். அவர் உன்மேல் கருணை வைத்தால், உன் குழந்தை மீண்டும் பிழைக்கக் கூடும்," என்றார்.

ஆகவே, அவள், தன்கையில் இருந்த குழந்தையை ஏந்தி புத்தரிடம் வந்து, அந்த இறந்த உடலை, புத்தரின் காலடியில் கிடத்தினாள். ஒரு யூத தேசத்தில், இயேசுவை இப்படிப்பட்ட சூழ்நிலைக்கு ஆளாக்கினால், அவருக்கு என்ன நேர்ந்திருக்கும் என்பதை சற்று கற்பனைப் பண்ணிப் பாருங்கள். அவர், அந்தக் குழந்தையை மீண்டும் உயிர்தெழ வைக்காவிட்டால், அவர் ஆயுள் அந்த இடத்திலேயே முடிந்திருக்கும்! ஏனென்றால், அவர் தான் கடவுளின் மைந்தன் அல்ல என்பதை அந்த நிகழ்ச்சி நிரூபித்துவிடும்!

ஆனால், அந்தக் குழந்தையை, புத்தரிடம் கொண்டுவந்த பொழுது, புத்தர் என்ன சொன்னார், தெரியுமா? அவர், அந்தத் தாயிடம், "நான் உன் குழந்தையை மீண்டும் உயிர்தெழ வைக்கிறேன். ஆனால், அதற்கு முன்பு, நீ ஒரு காரியம் செய்ய வேண்டும். இந்தக் கிராமத்தில் உள்ள ஒவ்வொரு வீட்டுக்கும், நீ சென்று எந்த வீட்டிலேயாவது, எந்தக் குடும்பத்திலேயாவது யாரும் இறக்காமல் இருந்திருக்கிறார்களா என்பதைத் தெரிந்து வா. அப்படி யாரும் இறக்காத வீடு என்று ஏதும் இருந்தால், நான் மாலையில் உன் குழந்தையைப் பிழைக்க வைக்கிறேன்," என்றார்.

அந்தப் பெண்ணும் ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று, அப்படியே கேட்க, ஒவ்வொரு வீட்டிலும், குறைந்தது யாராவது ஒருவர் இறந்திருக்கக் கண்டாள். அன்று மாலையில், அவள் திரும்பும்பொழுது, இறப்பு என்பது தவிர்க்க முடியாத உண்மை என்றும் மாற்றும் அது வாழ்வின் ஒரு பகுதிதான் என்பதையும் அவள் உணர்ந்தாள்.

புத்தர் அவளிடம், "இப்பொழுது நீ என்ன சொல்லுகிறாய்? யாருடைய இறப்பினாலும், எவராவது ஒருவர் துன்பப்படாம

லும், ஏதாவது ஒரு குடும்பம், ஏதாவது ஒரு வீடு இறப்பைக் காணாமலும் இருக்கிறதா?" என்று கேட்டார்.

அதற்கு அவள், "என்னுடைய குழந்தை பிழைத்துவிடும் என்ற நம்பிக்கையில் நான் இப்பொழுது திரும்பி வரவில்லை. நான் இப்பொழுது உங்களிடம் தீட்சை வாங்கவே வந்தேன். இறப்பு மிக உண்மையானது. என் குழந்தை சென்றுவிட்டது. நானும் சென்றுவிடுவேன்; ஏன், ஒவ்வொருவரும் செல்லத்தான் வேண்டும். அந்த முடிவில்லாத வாழ்க்கையை அடைய, எனக்கு தீட்சை வழங்கவும்" என்று அவரிடம் கேட்டாள்.

இதுதான் மிகப்பெரிய அற்புதம்! ஆனால், நம்மால் அப்படி ஏற்றுக் கொள்ள முடியாது. அந்தக் குழந்தை, மீண்டும் உயிர் பிழைத்தால், அதுதான் அதிசயமாக, அற்புதமாக நமக்குத் தோன்றும். ஆனால் இதுதான் மிக ஆழமான கருணையோடு கூட மிகப்பெரிய அற்புதம். ஒரு குறிப்பிட்ட இனத்தில்தான், இது நடக்கும்; வேறு இனத்தில், இது நடக்காது. அந்தப் பெண், ஒரு புத்த சந்நியாசினியாகி விட்டாள். வாழ்க்கையில் அவள் கொண்டுள்ள ஆசைக்கு, அந்தக் குழந்தையின் இறப்பு ஒரு தூண்டுகோலாக இல்லை; மாறாக அது, வாழ்க்கையைத் துறப்பதற்கு உபயோகமாகிவிட்டது.

புத்தரின் சீடர்கள், பசியோடு இருந்தால், புத்தர் ரொட்டியை வரவழைத்து, அற்புதம் செய்யமாட்டார். மாறாக, அவர், "உங்களுடைய பசியை, சாட்சியாக நின்று கவனியுங்கள். அப்படி கவனித்து, அதைத் தாண்டிச் செல்லுங்கள். இப்பொழுது, நீங்கள் அதனிடமிருந்து விலகிச் செல்லுகிறீர்கள். அந்தப் பசி நீங்களல்ல. அதனிடமிருந்து விலகிச் செல்லுகிறீர்கள். இப்பொழுது, அந்த பசி, நீங்களல்ல. அது எங்கேயோ உங்களிடம் மேலோட்டமாக இருக்கிறது. இதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். அதைக் கடந்து செல்ல, அதை உபயோகித்துக் கொள்ளவும்" என்று தான் சொல்லியிருப்பார். இயேசு, ரொட்டியை வரவழைக்க வேண்டியதாயிற்று. ஆனால், புத்தர், தன் சீடர்கள் பட்டினி இருப்பதற்கு அவர்களைச் சமாதானப்படுத்த

வேண்டியதாயிற்று. ரொட்டியை வரவழைத்துக் கொடுப்பது என்பது அதிசயம் இல்லை; ஆனால் ஒருவர் பட்டினி இருக்க அவரைத் தயார்ப்படுத்துவது என்பதுதான் அதிசயம்.

அது, நாம் ஒன்றை எப்படி எடுத்துக்கொள்கிறோம் என்பதைப் பொறுத்து அமைகிறது. நான் இப்படிப்பட்ட அதிசயங்களை ஆதரிப்பதில்லை. ஏனெனில் அதனுடைய முட்டாள்தனம் எனக்குப் புரியும். நாம் வாழும் இந்த முழு வாழ்க்கையே, அர்த்தமற்றது; இதில் நீங்கள் ஏதும் உண்டாக்கினால், அதுவும் அர்த்தமற்றதுதான். நான் ஈடுபட நினைக்கும் ஒரே அதிசயம், உங்களை அப்பாலுக்குத் தள்ளுவது தான். அந்த அப்பாலின் சிறிய தெய்விக ஒளிக்கீற்று கூட அதிசயமாகவே, அற்புதமாகவே இருக்கும்.

என்னைப் பொறுத்தவரையில், இயேசுவை, இப்படிப்பட்ட காரியங்களைச் செய்யவிடாமல் தடுத்திருந்தால், அவர் இந்த மானிட குலத்துக்கு மிக நன்றாக சேவை புரிந்திருக்க முடியும் என்றே நான் கருதுகிறேன். அப்படிச் செய்ததால், அவர் முட்டாள்களைத் தான் கவர்ந்தார். நீங்கள் கருதும் அந்த அற்புத நிகழ்ச்சிகளால், சாதாரண மக்கள் தான் அவரால் கவரப்பட்டார்கள். அந்த அதிசய நிகழ்ச்சிகளால், அவர் மக்களுக்கு உதவி செய்ய முயன்றார். ஆனால் அது முடியாத காரியம். மாறாக, அவரே துன்பத்தைத் தனக்கு வரவழைத்துக் கொண்டார்.

இப்படிச் செய்ததன் மூலம், இயேசு யாருக்கும் உதவி செய்ததாக நான் கருதவில்லை.

நான் அப்படி பொருளாக்குதலில் ஈடுபட்டிருந்தால், என்னைச் சுற்றி, மேலும் மேலும் முட்டாள்கள் தான் சேர்ந்திருப்பார்கள். விரைவில், நான் முட்டாள்களின் மத்தியில்தான் இருந்திருப்பேன். ஏனென்றால், அவர்கள்தான் இப்படிப்பட்ட காரியங்களில் ஆர்வம் உள்ளவர்களாக இருப்பார்கள்.

நீங்கள் சாயிபாபாவிடம் சென்றால், அவர் இப்படிப்பட்ட சில காரியங்களைச் செய்வதை நீங்கள் பார்க்கலாம். ஆனால், முட்டாள்கள் மட்டும்தான், அதனால் கவரப்படுவார்கள். என்னுடைய கையில் ஒரு மோதிரம் திடீரென்று தோன்றினால், அதனால் என்ன? ஆத்மிகத் தன்மையில் அதை எப்படிச் சேர்க்க முடியும்? இந்த முழு வீடும் மறைந்து, பிறகு மீண்டும் தோன்றினால், அதனால் என்ன? அது எதற்கு உதவும்? ஆகவேதான், இப்படிப்பட்ட அற்ப அற்புதங்களில் எனக்கு நாட்டமில்லை. அப்படிச் செய்பவர்கள், முட்டாள்களைத்தான் கவருகிறார்கள்.

"இயேசுவை, புத்தரோடு ஒப்பிடும் பொழுது, இயேசு மிகவும் உயிரோட்டமுள்ளவராகவும் மற்றும் புரட்சிகரமாகவும் தோன்றுகிறார். இது ஏன்?"

அதற்குக் காரணம் இருக்கிறது. ஆனால் முதலில், ஒரு சில விளக்கங்கள் உங்களுக்குத் தேவை. யோகா, மனிதனை இரண்டு பாகமாக்குகிறது. அதாவது சூரிய பாகம் மற்றும் சந்திரபாகம் என்று அது மனிதனைப் பிரிக்கிறது. சூரிய பாகம் என்பது உண்மையின் சார்பு (Positive) நிலையாகும்; சந்திர பாகம் என்பது உயிர்த்தன்மையின் மறுப்பு (Negative) நிலையாகும். சூரியன் என்பது வெளியே உள்ள சூரியனையோ, சந்திரன் என்பது வெளியே உள்ள சந்திரனையோ குறிப்பிடுவது அல்ல. உங்களுடைய உள் பிரபஞ்சத்தைக் குறிப்பதே இந்த இரண்டு மாறுபட்ட வார்த்தைகள்.

இதைப்போல, மூச்சிலும் உண்டு; அதாவது சூரிய மூச்சு என்றும் மற்றும் சந்திர மூச்சு என்றும் இரண்டு வகைப்படும். ஒவ்வொரு 40லிருந்து 60 நிமிடத்துக்குள், உங்களுடைய மூச்சு ஒரு மூச்சுத் துவாரத்திலிருந்து, மறு மூச்சு துவாரத்துக்கு மாறும். உங்களுடைய உடலுக்கு அதிக உஷ்ணம் தேவைப்பட்டால், அல்லது நீங்கள் திடீரென்று கோபப்பட்டால், உங்களுடைய சூரிய மூச்சு செயல்பட ஆரம்பிக்கும். நீங்கள் கோபத்தோடு

இருக்கும்பொழுது, உங்களால் சந்திர மூச்சை விட முடியாது; அப்படி அது செயல்பட்டால், நீங்கள் ஒருக்காலும் கோபமாக இருக்க முடியாது என்று யோகா கூறுகிறது. ஏனென்றால், சந்திர மூச்சு, ஆழ்ந்த குளிர்ச்சியை உங்கள் உள்ளே உண்டாக்குகிறது.

மறுப்பு நிலை எப்பொழுதும் குளிர்ச்சியாகவும், அமைதியாகவும், சலனமற்றும் இருக்கும். சார்புநிலை எப்பொழுதும் உஷ்ணமாகவும், துடிப்பாகவும், சத்தியமாகவும் மற்றும் செயல்தன்மை நிரம்பியதாகவும் இருக்கும். சூரியன் உன் உள்ளே செயல் சக்தி நிறைந்ததாகவும், சந்திரன் உன் உள்ளே செயலற்ற தன்மையிலும் இருக்கின்றன. ஒருவன், சூரியனோடு உறவாடும் பொழுது, அவனுள்ளே வெளிச்சம் உஷ்ணமாகவும், ஜுவாலையோடும் ஒளிர்கிறது.

நீங்கள் புத்தர் அல்லது இயேசுவின் உள்ளுணர்வை, மேற்கண்ட மாறுபட்ட மனநிலையைக் கொண்டு ஆராய்ந்து பார்த்தால், சாதாரணமாக மறைந்திருந்த அனேக விஷயங்கள் தெளிவாகும். உதாரணமாக, புத்தர் போன்ற விளக்கம் பெற்ற ஞானிகள் பிறக்கும்பொழுது, அவருடைய இளமைக்கால வாழ்வு மிகவும் புரட்சிகரமாக மாறுபட்டு இருக்கும். ஒருவர் தன் உள்ளே உள்ள உள் பரிமாணத்தோடு உறவு கொள்ளும்பொழுது, அவருடைய முதல் அனுபவம், அந்த ஜுவாலையோடுதான் இருக்கும். புத்தர் வளர வளர, அவர் தனக்குள்ளே உள்ள உள் ஆத்மிக குளிர்ச்சித்தன்மையை மேலும் மேலும் உணருவார். அந்த சந்திரநிலையை அவர் முழுமையாக அடையும் பொழுது, அவருடைய புரட்சித்தன்மை முற்றிலுமாக இழக்கப்பட்டிருக்கும். ஆகவேதான், புத்தரது வார்த்தைகள் புரட்சிகரமாக இருந்ததில்லை.

இயேசுவுக்கு, இந்தச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. கிறிஸ்துவத்தைப் பொறுத்தவரையில், அவரது 33 வயதில் அவர் புரட்சிகரமாக இருக்கும்பொழுதே, சிலுவையில் அறையப்பட்டு, கொல்லப்பட்டார். நீங்கள் புத்தரது போதனைகளை, இயேசுவுடைய போதனைகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால், ஒரு

தெளிவான வித்தியாசத்தைக் காணலாம். இயேசுவின் வார்த்தைகள் அனைத்தும், ஒரு வாலிபனின் வார்த்தைகளைப் போல சூடாக இருக்கும். அதைப்போல, புத்தருடைய வாலிப பேச்சுக்களும் இருந்தன. ஆனால், அதற்காக அவர் சிலுவையில் அறையப்படவில்லை; அவர் 80 வயது வரை வாழ்ந்தார்.

இந்தியாவில் அவர் ஏன் சிலுவையில் அறையப்படவில்லை என்றால், அந்த வயதில் அப்படித்தான் நிகழும் என்று அதற்குத் தெரியும். எப்பொழுது ஒருவர் தன்னுள்ளே செல்லும் பொழுது, எப்பொழுது ஒரு புத்தர், தன்னுள்ளே செல்லும்பொழுது அவரின் வெளிப்படுத்துதல் புரட்சிகரமாகவும், எதிர்ப்பாகவும் மற்றும் கோபமாகவும்தான் இருக்கும். அவர் கோபத்தில் நெருப்பு போல வெடித்துச் சிதறுவார். பிறகு அந்த நிலை மாறி, முடிவில், நெருப்பு ஏதும் இல்லாமல், அமைதியான குளிர்ந்த சந்திர வெளிச்சம் மட்டும்தான் இருக்கும். ஆகவேதான், இந்தியா யாரையுமே கொன்றதில்லை. ஆகவேதான், சாக்ரடீஸோடு, கிரேக்கர்கள் நடந்து கொண்டது போல அல்லது இயேசுவுடன் யூதர்கள் நடந்து கொண்டது போல், இந்தியா ஒரு போதும் நடந்து கொண்டதில்லை.

இளமையிலேயே, இயேசு சிலுவையில் அறையப்பட்டார். ஆகவே, கிறிஸ்துவம் முற்றுப் பெறாமலேயே இருக்கின்றது. ஏனென்றால், அது இயேசு துடிப்பாக இளமையில் இருக்கும் பொழுது, அவரது இளமைக்காலத்தைச் சார்ந்தே இருந்தது. பௌத்தம் முற்றுப் பெற்றது. புத்தரின் பல நிலைகளை அதற்குத் தெரியும். புத்தரின் சந்திர நிலையின் பலகட்டங்களை, அதற்குத் தெரியும்- முதல் நாளிலிருந்து முழு நிலவு நாள் வரை.

இயேசு இளமைத் துடிப்பில் இருக்கும்பொழுது, 33 வயதில் அவரை சிலுவையில் அறைந்தது என்பது மேலைநாட்டின் துர்ரதிர்ஷ்டம்தான். இது வரலாற்றின் மிகப்பெரிய துர் அதிர்ஷ்டம் மற்றும் இழப்பு. அந்த நெருப்பு ஜுவாலை, குளிர்ந்த சந்திர ஒளியாக மாறிவிடும்; ஆனால், அதற்கு சந்தர்ப்பம் கொடுக்கப்படவில்லை. அதற்குக் காரணம்,

யூதர்களுக்கு உள்பரிமாண மாற்றத்தைப் பற்றி எதுவும் தெரியாது.

இந்தியாவுக்கு, பல புத்தர்களைத் தெரியும். ஒருவர் தன் உள் பரிமாணத்தில் ஆழ்ந்து செல்லும் பொழுது, அவர், நெருப்பு ஜுவாலை மேலே வருவதை முதலில் உணரவே செய்வார் என்பது உண்மைதான் என்பது அதற்குத் தெரியும். அவர் மேலும் மேலும் அதில் ஆழ்ந்து சென்றால், அது மறைந்து, பிறகு அமைதியை, அதாவது சந்திர பேரமைதியை அடைந்து விடும்.

உஷ்ணத்தை, ஒளியாக்குவது என்பது, உள் ரசாயன வித்தையின் ரகசிய விஞ்ஞானம்- கரியை, வைரமாக்குவது போல, செம்பை, தங்கமாக மாற்றுவது போல. இப்பொழுது குறியீடுகள் தான் (Symbols) மாறி இருக்கின்றன. இந்த ரசவாத விஞ்ஞானிகள் (ஆத்மிகவாதிகள்) இப்படி மாற்றம் அடையச் செய்வதில் மாத்திரம் கவனத்தை வைக்காமல் அந்த வித்தையை ரகசியமாக வைத்திருப்பதிலும் கவனமாகவே இருந்தார்கள். ஏனென்றால், உள்பரிமாண மாற்ற விஞ்ஞான வித்தையை ஆரம்பத்தில் பேசுவது என்பது மிகவும் ஆபத்தானது; அதனால், அவர்கள் இயேசுவைப் போல கொல்லப்படக்கூடும். ஆகவே, அவர்கள் ரகசிய குறியீட்டுகளை உண்டாக்க வேண்டியதாயிற்று. இயேசுவும் ஒரு ஆன்மிக ரசவாதிதான். ஆனால், அவருக்குப் பிறகு தோன்றிய கிறிஸ்துவம், அவருக்கு எதிர்ப்பாகவே மாறிவிட்டது. உள் ரசாயன மாற்றத்தைப் பற்றி பேசுபவர்களை யெல்லாம், இயேசுவுக்குப் பிறகு தோன்றிய கிறிஸ்துவமும், கிறிஸ்துவ மடாலயங்களும் கொன்று விட்டன, கொலை செய்து விட்டன.

கிறிஸ்துவம், ஒரு நறுமணமிக்க மதமாக மாறமுடியவில்லை. அது ஒரு கணக்காளர்த் தனமாகி (Clerical) விட்டது. அது உண்மையான சந்நியாசிகளைத் தோற்றுவிக்கவில்லை. அதனால் போதனையாளர்களைத்தான் உண்டாக்க முடிந்தது- ஒழுங்கு

படுத்தப்பட்ட, பயிற்சி அளிக்கப்பட்ட, இறந்த போதனையாளர்களை.

"இயேசு, சிலுவையில் அறையப்படும் பொழுது, மிகவும் செயல் திறன்மிக்கவராகவும், எதிர்ப்பாளராகவும் இருந்தார் என்றால், அவர் புத்தர் அடைந்த ஆத்மிக முழு வளர்ச்சியையும் மற்றும் உள் பேரமைதி நிலையையும் அடையவில்லை என்றுதானே அர்த்தமாகிறது?"



யேசு, சிலுவையில் அறையப்படும் பொழுது, அப்பொழுது தான் அவர், சந்திர மையநிலையை அடைய இருக்கிறார். அதாவது அதே நாளில், அவர் சிலுவையில் அறையப்பட்டார்! இதை நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

பைபிளில் கூறப்பட்ட இயேசு, புத்தரைப் போலவோ, மஹாவீரரைப் போலவோ அல்லது லா சூ (Lao Tzu)வைப் போலவோ அல்ல. ஒரு கோயிலில் புகுந்து, அங்குள்ள வட்டி வியாபாரம் செய்பவர்களை அடித்துத் துரத்தியதாக, ஒரு புத்தர் செய்திருப்பார் என்று உங்களால் நினைத்துக் கூடப் பார்த்திருக்க முடியாது. ஆனால், இயேசு இதைச் செய்தார். ஜெரூசலத்திலுள்ள கோயிலில், இதைப் போல பல நடவடிக்கைகள் செய்யப்பட்டு வந்தது. இந்த மதத்தையே நாசம் செய்யும் விதத்தில், அங்கே வட்டி வியாபாரம் கொடிகட்டிப் பறந்தது. வருடந்தோறும் அங்கு மக்கள் குழுமி, அதிக வட்டிக்குப் பணத்தைப் பெற்றுச் செல்லுவார்கள். பிறகு, அந்தப் பணத்தைத் திருப்பிச் செலுத்த முடியாமல், மக்கள் துன்பப்படுவர். அந்தக் கோயில் நிர்வாகம் மேலும் மேலும் பணம் பெற்று விளங்கியது. அது ஒரு மத எதேச்சிகாரமிக்க கூடாரமாகிவிட்டது. இதனால், அந்தத் தேசமே வறுமையில் மூழ்கி, துன்பப்பட்டது. ஆனால், மேலும் மேலும் பணம், அந்தக் கோயிலுக்கு, தானே வந்து குவிந்தது. பிறகு ஒருநாள், இயேசு கையில் சாட்டையோடு சென்று, அந்த வட்டிக் கடைக்காரர்களின் விலாசமிட்ட

பலகையைத் தூக்கி எறிந்து, அவர்களை அடித்துத் துரத்த ஆரம்பித்தார். இப்படி அவர், அந்தக் கோயிலில் குழப்பத்தை விளைவித்தார்.

இப்படியெல்லாம், ஒரு புத்தர் செய்திருப்பார் என்று உங்களால் நம்ப முடியாதுதான். ஒருக்காலும் முடியாது! இயேசுதான் முதல் கம்யூனிஸவாதி! அவர் ஒரு கோபக் காரராகவும் மற்றும் எதிர்ப்பாளராகவும் இருந்தார். ஆகவேதான், கிறிஸ்துவம், கம்யூனிஸத்தைப் பெற்றெடுக்க முடிந்தது. இந்திஸமோ அல்லது வேறு எந்த மதமோ கம்யூனிஸத்தை உண்டாக்க முடியாது. அது ஒருக்காலும் முடியாது; அது கிறிஸ்துவத்தால் மட்டுமே முடியும்; ஏனெனில், அது இயேசுவின் இளமை செயல் வேகத்துக்கு ஒத்ததாக இருக்கிறது. அவர் உபயோகித்த வார்த்தைகள் அப்படி ஒரு புரட்சிகரமாகவும் வித்தியாசமாகவும் இருந்தது. நம்மால் நம்ப முடியாத அளவுக்கு, அவர் சில விஷயங்களில் கோபமாக இருந்தார். பழமே கொடுக்காத ஒரு அத்திமரத்தை சபித்தார்! ஏனென்றால், அப்பொழுது அவரும், அவருடைய சீடர்களும் பட்டினியாய் இருந்தார்கள். அந்த மரத்தை அவர் அழித்தே விட்டார்!

புத்தரால் சொல்ல முடியாத வார்த்தைகளை உபயோகித்து அவர் பயமுறுத்தினார். உதாரணமாக, தன்னையும் மற்றும் கடவுளின் சாம்ராஜ்யத்தையும் நம்ப முடியாதவர்கள் அனைவரும், நரகத் தீயில் தூக்கி எறியப்படுவார்கள் என்று கோபமாகக் கூறுகிறார். அது ஒரு தெய்விக சாசுவதமான நெருப்பு; அதிலிருந்து யாரும் மீண்டு வர முடியாது. கிறிஸ்துவ நரகம் தான் சாசுவதமானது. மற்ற மதத்தின் மதத்தினரது நரகமெல்லாம் தற்காலிகமானதுதான். நீங்கள் அங்கே சென்று தண்டனை பெற்று, கஷ்டப்பட்டு, பிறகு திரும்பி வந்து விடலாம். ஆனால், இயேசுவின் நரகம் நிரந்தரமானது!

இது நியாயமற்றது போலவே தோன்றும். பாபங்கள் எவ்வளவு கொடுமையாக இருந்தாலும், அதனால் நிரந்தர தண்டனையை நியாயப்படுத்த முடியாது. அது அப்படி இருக்க முடியாது!

பாபம் என்றால் என்ன? பெட்ரண்ட் ரஸ்ஸெல், "நான் ஏன் ஒரு கிறிஸ்துவன் இல்லை" (Why I am Not a Christian) என்ற ஒரு புத்தகம் எழுதினார். அதில், அவர் சொல்லிய காரணங்களில் ஒன்று, இயேசு முட்டாள்தனமாக செயல்படுகிறார் என்பதுதான். ரஸ்ஸல், "நான் செய்த எல்லா பாபங்களையும், ஒப்புக் கொண்டாலோ, நான் செய்யப் போகும் பாபங்களை ஒப்புக் கொண்டாலோ, உங்களால் எனக்கு 5 வருட தண்டனைக்கு மேல் கொடுக்க முடியாது. ஆனால் நிரந்தர நரகம் எப்படி?" என்று கேட்கிறார்.

தெய்விக சாசுவதத்தைப் பற்றி பேசும்பொழுது, இயேசு புரட்சிகரமான வார்த்தைகளையே உபயோகித்தார்- புரட்சிகரமானவர்கள், எப்பொழுதும் மறு முனையையே தேர்ந்தெடுப்பார்கள். இப்படிப் பேசுவதாக ஒரு மஹாவீரரையோ அல்லது ஒரு புத்தரையோ, உங்களால் கற்பனை பண்ணிக் கூடப் பார்க்க முடியாது. ஆனால், இயேசு, "ஊசியின் துவாரத்திற்குள் ஒட்டகம் நுழைந்தாலும் நுழையலாம். ஒரு பணக்காரன் கடவுளின் சாம்ராஜ்யத்துக்குள் ஒருக்காலும் நுழைய முடியாது" என்று கூறுகிறார். இவைதான் கம்யூனிஸத்தின் விதைகள்- அடிப்படையான வார்த்தைகள்!

ஆமாம். இயேசு ஒரு புரட்சிக்காரர் தான். அவர் ஆத்மிகத்தில் மாத்திரம் ஈடுபாடு கொண்டவர் அல்ல; அதே அளவுக்கு பொருளாதாரம், அரசியல் என்று ஒவ்வொன்றிலும் அவர் ஈடுபாடு கொண்டவர்தான். அவர் வெறும் ஆத்மிகவாதியாக மட்டும் இருந்திருந்தால், அவர் ஒருக்காலும் சிலுவையில் அறையப்பட்டிருக்க மாட்டார். ஆனால், அந்த முழு சமூக அமைப்புக்கே, அவர் ஆபத்தாக விளங்கியதால் தான், அவர் சிலுவையில் அறையப்பட்டார்.

அவர் லெனின் மற்றும் மாவோ (Mao) போல ஒரு வெளித்தன்மை நிரம்பிய புரட்சிக்காரர் அல்ல. இருந்தும், சரித்திரத்தில் லெனின், மாவோ மற்றும் மார்க்ஸ் போன்றவர்களை, இயேசு இல்லாமல் ஒப்பிட்டுப் பார்க்க

முடியாது. அவர்களெல்லாம், இயேசுவின் வழியையே சேர்ந்தவர்கள்- வாலிப இயேசு கொடுமையைச் சாகும் ஒரு மனிதனாக எதிர்பாளனாக எதையும் அழிக்கத் தயாராக இருப்பவனாகவே இருந்திருக்கிறார். இந்த இயேசுதான் சிலுவையில் அறையப்பட்டார்.

ஆனால் இயேசு, ஒரு புரட்சி மனப்பான்மையையுடையவர் மாத்திரமல்ல. அவர் ஒரு சிறந்த ஆத்மிகவாதியும் கூட. அவர் ஏதோ ஒரு வகையில் மஹாவீரரும், மாவோவும் கலந்த ஒரு கலவையாக இருக்கிறார். அவரிடம் உள்ள மாவோதான், சிலுவையில் அறையப்பட்டார். ஆனால் மஹாவீரர் தான் கடைசி வரைக்கும் அவரிடம் இருந்தார். அவர் சிலுவையில் அறையப்பட்ட அந்த நாள், வெறும் சிலுவையில் அறையப்பட்ட நாள் மாத்திரமல்ல. அது அவரிடம் உள் மாற்றம் நிகழ்ந்த நாளும் கூட.

பிலாத்து கேட்ட, "உண்மை என்றால் என்ன?" என்ற கேள்விக்கு அவர் அப்பொழுது பதிலேதும் கூறாமல், அமைதியாக அவர் ஒரு ஜென் குரு போல நடந்து கொண்டார். நீங்கள் இயேசுவின் முன் வாழ்க்கையைக் கண்ணுற்றால், அந்த அமைதி, இயேசுவுக்கு உரித்ததே இல்லை. என்ன நிகழ்ந்தது? ஏன் அவர் பேசவில்லை? ஏன் அவர் தன் மனத்தை இழந்து நின்றார்? இந்த உலகம் கண்ட மிகப் பெரிய பேச்சாளர்களில், அவரும் ஒருவர். ஏன், அவர் மிகச்சிறந்த பேச்சாளர்தான் என்று நம்மால் மிக உறுதியாகக் கூட கூற முடியும். அவருடைய வார்த்தைகள், நம் உள்ளத்தில் ஈட்டி போலப் பாயக்கூடியவை. அவர் வார்த்தைகளின் அரசன், அமைதியின் அரசன் அல்ல. ஏன் அவர் திடீரென்று அமைதியாக இருக்கவேண்டும்?

அவர் அப்பொழுது, சிலுவையை நோக்கிச் சென்று கொண்டு இருக்கிறார். பிலாத்து அவரிடம், "உண்மை என்றால் என்ன?" என்று கேட்கிறார். இயேசு, உண்மையைப் பற்றிப் பேசியே, தன் வாழநாளை செலவழித்தார்- அதை மாத்திரம் தான் பேசினார்.

அதனால்தான் பிலாத்து அந்தக் கேள்வியை அவரிடம் கேட்டார். ஆனால், இயேசு அமைதியாகி விட்டார்.

இயேசுவின் உள் பரிமாணத்தில், என்ன நிகழ்ந்தது என்று எந்தக் குறிப்பும் இல்லை; ஏனெனில், அதை வெளிப்படுத்துவது மிக மிகச் சிரமம். அதைப்பற்றி, கிறுஸ்துவத்தால் எதையும் கூற முடியாது. அது அப்படியே புதைக்கப்பட்டு விட்டது. ஏனென்றால், இயேசுவின் உலகத்தில் உண்மையாக நிகழ்ந்ததை, இந்தியாவில் மட்டுமே விளக்க முடியுமே தவிர, வேறு எதனாலும் முடியாது. அவரிடம் நிகழ்ந்த உள் மாற்றத்தைப் பற்றி, இந்தியாவுக்கு மட்டும்தான் தெரியும்.

அவரிடம் என்ன நிகழ்ந்தது என்றால், இயேசு, அப்பொழுது சிலுவையில் அறையப்படும் நிலையில் இருந்தார். இப்பொழுது அவருடைய முழுப் புரட்சித் தன்மையே அர்த்தமற்ற நிலையில் இருக்கிறது. அவர் வாழ்நாளில் கையாண்ட ஒவ்வொன்றும், அவர் வாழ்க்கையை அர்ப்பணித்த அனைத்தும் வியர்த்தமாகிக் கொண்டிருக்கிறது. எல்லாமே முடிந்துவிட்டது. இப்பொழுது இறப்பு மிக அருகாமையில் இருந்ததினால், அவர் தன் உள்ளே மிக ஆழமாகச் சென்றிருக்க வேண்டும். இனிமேல் வீணடிக்க அவருக்கு நேரம் கிடையாது. ஒரு வினாடியைக்கூட வீணடிக்க முடியாது. அவர் தன் யாத்திரையின் முடிவுக்கு இப்பொழுது வந்துவிட்டார். இப்பொழுதே, தன்னை சிலுவையில் அறைவதற்கு முன்பு, தான் தன் உள்ளே செல்லும் யாத்திரையை முடிக்க வேண்டும்.

அவர், தன் வாழ்நாள் முழுவதுமே, தன் உள் யாத்திரையில் தான் இருந்தார். ஆனால், தன் சந்திர நிலையில் இருக்க முடியாத அளவுக்கு அவர் பல வெளிப் பிரச்சினைகளிலும் ஈடுபட நேர்ந்ததால், அவர் கோபமாகவும், கடுமையாகவும் இருக்க நேர்ந்தது. ஆனால், அதை அவர் பிரக்ஞையாகவே செய்திருக்க வேண்டும்.

இயேசு, 'ஸ்நான யோவான்' என்பவரது சீடர்தான். இவர் பெரிய புரட்சி மனப்பான்மையும், ஆத்மிக மனப்பான்மையும்

கொண்டவர். யோவான், இயேசுவுக்காக பல வருடங்கள் காத்திருந்தார். பிறகு ஒருநாள் அவர், இயேசுவுக்கு ஜோர்டான் ஆற்றங்கரையில், தீட்சை வழங்கினார். அப்பொழுது அவர் இயேசுவிடம், "இப்பொழுது நீ என் வேலையை எடுத்துக் கொள். நான் சொல்லுகிறேன். போதும். அவ்வளவுதான்" என்று சொல்லிவிட்டு அவர் மறைந்துவிட்டார். அதன் பிறகு, அவரைப் பார்த்தவர்கள் மிகக் குறைவு. அவர் எங்கேயோ சென்றுவிட்டார். உள் உலக மொழிப்படி, அவர் சூரிய நிலையிலிருந்து மறைந்து, சந்திர நிலைக்கு தன் உள்ளே மிக ஆழமாகச் சென்றிருக்க வேண்டும். அவர் அமைதியில் ஆழ்ந்திருக்க வேண்டும். அவர் ஆத்மிகப் பாதையில் பணி புரிந்து, இப்பொழுது அதை முடிக்கக் கூடிய இயேசுவிடம் கொடுத்துவிட்டு அவர் மறைந்து விட்டார்.

அந்தச் சிலுவையில் அறையப்படும் நாளில், தன்னுடைய வேலை முடிந்துவிட்டதாக, இயேசு உணர்ந்திருக்க வேண்டும். அவர், "இனிமேல் செய்யக்கூடிய சாத்தியம் ஏதும் இல்லை. நான் இனிமேல் எனக்குள்ளேதான் செல்ல வேண்டும். இந்தக் கடைசிச் சந்தர்ப்பத்தை நான் விட்டு விடக்கூடாது," என்று நினைத்திருக்கக் கூடும். ஆகவேதான், பிலாத்து அவரிடம் 'உண்மை என்றால் என்ன' என்று கேட்ட பொழுது, அவர் மௌனமாக இருந்தார். இது கிறிஸ்துவத்திற்கு ஒரு அற்புதம்தான். ஆனால் இன்னும் அது அதற்குப் புதிராகவே இருக்கிறது. இந்தக் கடைசிக் கேள்வியால்தான், அந்த அற்புதம் இயேசுவிடம் நிகழ்ந்தது! இதை ஆழ்ந்து புரிந்து கொள்ளுங்கள்.

தன்னுள்ளே உள்ள சந்திர நிலையை நோக்கிச் செல்லும் போது, அவர் சிலுவையில் அறையப்பட்டார். யாராவது, சந்திர நிலையின் மையத்துக்கு முதன் முதலில் வரும்பொழுது, அவருடைய மூச்சு நின்றுவிடும். ஏனென்றால், மூச்சுவிடுதல் கூட, சூரிய நிலையின் செயல்பாடுதான். இப்பொழுது எல்லாமே இறந்தது போல அமைதி நிலையை அடைந்து விடுகிறது. அவர் இறந்துவிட்டார் என்றே எல்லோரும் கருதினார்கள்; ஆனால் அவர் இறக்கவில்லை. மூச்சு நிற்கக் கூடிய, சந்திர மைய நிலைக்கு அவர் வந்துவிட்டார். அவ்வளவு தான். மூச்சு உள்வாங்குதலும்

இல்லை மற்றும் மூச்சு வெளியிடுதலும் இல்லை. எந்த இடைவெளியும் இல்லை.

ஏதாவது ஒன்று, இடைவெளியில் தங்கினால் அந்த ஆழமான சமநிலை முழு இறப்பை உண்டு பண்ணிவிடும். ஆனால், அது இறப்பு இல்லை. ஆனால், அவரை சிலுவையில் அறைந்த சிப்பாய்கள் அவர் இறந்துவிட்டார் என்றே நினைத்தார்கள். ஆகவேதான் இயேசுவின் சீடர்கள், அவருடைய உடலை சிலுவையில் இருந்து இறக்க அனுமதித்தார்கள். ஆனால், அவர் உண்மையில் இறக்கவில்லை. அந்த உடல் கிடத்தப்பட்ட குகையை, மூன்று நாட்களுக்குப் பிறகு திறந்தபொழுது, அங்கு அந்த உடலைக் காணவில்லை. அந்த 'இறந்த' உடல் மறைந்துவிட்டது. மூன்று நாட்களுக்குப் பிறகு, அவரை மீண்டும் 4 அல்லது 5 பேர் பார்த்தார்கள். ஆனால் அவர்கள் கிராமத்துக்குச் சென்று இயேசு மீண்டும் உயிர்த்தெழுந்தார் என்று கூறியபொழுது, யாரும் அவர்களை நம்பவில்லை.

இயேசு, ஜெருசலத்திலிருந்து தப்பித்து, காஷ்மீருக்குச் சென்றார். பிறகு அவர் அங்கேயே தங்கிவிட்டார். பிறகு, அவருடைய வாழ்க்கை, இயேசுவின் வாழ்க்கையாக இல்லை; கிறிஸ்துவின் வாழ்க்கையாகி விட்டது. இயேசு என்பது சூரியநிலை; கிறிஸ்து என்பது சந்திரநிலை. பிறகு அவர் முழுமையான அமைதியில் ஆழ்ந்துவிட்டார். ஆகவேதான், அவரைப்பற்றிய குறிப்பு ஏதும் இல்லை. அவர் பேசுவது இல்லை; அவர் எந்த போதனைஎய்யயும் செய்வதில்லை. அவர் காஷ்மீரிலேயே தங்கிவிட்டார்- ஒரு புரட்சிக்காரராக அல்ல, ஒரு குருவாக, தனது அமைதியில் வாழ்பவராக. ஒரு சிலர் அவரோடு சேர்ந்து இருக்க வந்தார்கள். அவருடைய இருப்பை தானே உணர்ந்தவர்கள் தான், அவரை நோக்கி வந்து, அவரோடு இருந்தார்கள். இந்த உலக மக்கள் தொகையை ஒப்பிட்டால், அது மிகக் குறைவுதான்; ஆனால் உண்மையில் அவர்களது எண்ணிக்கை பெரியது தான்.

இயேசுவின் இளமைக்கால புரட்சித்தன்மையை மட்டும் அறிந்ததால், கிறிஸ்துவம் முற்றுப் பெறாமலேயே இருக்கிறது. இதனால் தான், கிறிஸ்துவம், கம்யூனிஸத்தை உண்டாக்கி விட்டது. ஆனால், இயேசு, ஒரு முழு விளக்கம்பெற்ற ஞானியாகவே இறந்தார். ஒரு பௌர்ணமி நிலவைப் போல.



"பால் பிரிண்டன் சொல்லியது போல, எல்லா ஆன்மாக்களும் ஒன்றாக உண்டாக்கப் பட்டதா அல்லது வெவ்வேறு நிலைகளில் உண்டாக்கப்பட்டதா? இந்த வெவ்வேறு நிலைகள், அவற்றின் விருப்பத்தால் கண்டெடுக்கப்பட்டதா; அல்லது விதிப்படி நடந்ததா? மறுபிறப்பைப் பொறுத்த வரையில், நம்முடைய விருப்பம் என்பது எந்த அளவில் உள்ளது?"

நான் இந்தக் கேள்விக்கு பதில் அளிப்பதற்கு முன்பு, நீங்கள் இரண்டு அல்லது மூன்று விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். ஒன்று, மத சம்பந்தமான விசாரிப்பு என்பது விஞ்ஞான விசாரிப்பிலிருந்து மாறுபட்டது. விஞ்ஞான ரீதியான விளிம்பில், கேள்வி முக்கியமாகக் கருதப்படுகிறது; மாறாக மத சம்பந்தமான விசாரிப்பில், கேள்வி கேட்பவர் முக்கியமாகக் கருதப்படுகிறார்— இங்கு கேள்வி எழுப்பும் மனம்தான் முக்கியம்; கேள்வி முக்கியமல்ல. விஞ்ஞான ரீதியான கேள்வியில், உங்களுடைய மனம் தொடர்ந்து கேள்வியிலேயே நிலை கொண்டு இருக்க வேண்டும். மதசம்பந்தமான கேள்வியில், கேள்வி என்பது வெறும் குதிக்கும் பலகைதான் (Jumping Board). அதன்மூலம் தெரியாத ஒன்றினுள் நீங்கள் குதிக்கிறீர்கள். ஆகவே, கேள்வியை வெறுமனே கேட்டு, பிறகு அதை மறந்துவிடுங்கள். ஏனென்றால், பொதுவாக கேள்வி

என்பதே தெரிந்திருந்தவற்றில்தான் இருக்கும். பதில் என்பது தெரியாததில் தான் இருக்கும்.

நாம் ஒரு கேள்வியை உருவாக்கும் பொழுது, அந்த உருவாக்குதலின் அடித்தளம் நம்முடைய மனத்தையும், நம்முடைய ஞாபகத்தையும் மற்றும் நம்முடைய விஷய ஞானத்தையும் பொருத்ததாகிறது. ஆனால், அதற்குரிய பதில் முற்றிலும் வேறு ஒரு பரிமாணத்தைச் சார்ந்ததாகிறது. உதாரணமாக, இந்தக் கேள்வியையே, பகுதி பகுதியாக எடுத்துப் பார்ப்போம்.

"பால் பிரிண்டன் சொல்லியது போல, எல்லா ஆத்மாக்களும் ஒன்றாக உண்டாக்கப்பட்டதா அல்லது அவை வெவ்வேறு நிலைகளில் உண்டாக்கப்பட்டதா?"

இந்தக் கேள்வி, சரியான கேள்வியாகத்தான் தெரிகிறது. உயிர்கள் தோன்றுவது குறித்து, மனிதன் மிகவும் ஆர்வமாக கேட்கப்படும் கேள்விதான் இது. அது எப்பொழுது? ஏன்? யாரால்? ஆத்மாக்களைப் பொருத்தும், அவனிடம் அநேக கேள்விகள் இருக்கின்றன. ஆத்மாக்கள் எப்பொழுது உண்டாக்கப்பட்டன. அவை அனைத்தும் சரிசமமாக உண்டாக்கப்பட்டதா? அல்லது ஏற்றத்தாழ்வாக உண்டாக்கப் பட்டதா? சரிசமமாக உண்டாக்கப்பட்டிருந்தால், ஏன் இந்த ஏற்றத்தாழ்வில் அவை இருக்கின்றன?

"இந்த வெவ்வேறு நிலைகள், அவற்றின் விருப்பத்தால் அல்லது விதிப்படி நடந்ததா?"

ஆக, இப்படித் தோன்றியதில், நாம் பல கேள்விகளைக் கேட்பது என்பது நமக்கு முக்கியமாகவே படுகிறது. இது ஒரு தொடர்ந்த, முடிவில்லாத ஆரம்பம்தான். உயிர் இயக்கத்தைப் பொறுத்த வரையில், படைத்தலின் கொள்கை அனைத்தும் குழந்தைத் தனமானது மற்றும் தவறானது. உயிர்த்தன்மை மற்றும் உயிர் இயக்கம் என்பது எப்பொழுதும் இருந்துகொண்டே இருக்கிறது. அது யாராலேயும் படைக்கப்படவில்லை;

அதைப்போல, அதை யாராலேயும் அழிக்க முடியாது. 'படைத்தல்' என்றாலே 'சூன்யத்திலிருந்து வருதல்' என்றுதான் அர்த்தம். ஒன்று மற்றதிலிருந்து, ஒன்றுமற்றதுதான் வரும். வேறுவிதமாகச் சொன்னால், சூன்யத்திலிருந்து சூன்யமதான் வரும். இந்த உலகம் மற்றும் படைப்புகள் அனைத்தும், எப்பொழுதும் மாறிக்கொண்டேதான் இருக்கும். ஆனால், எதையும் அழிக்கவும் முடியாது மற்றும் உண்டாக்கவும் முடியாது.

மாறுதல் என்பதுதான் உண்மை. மாறுதல் என்று நான் குறிப்பிடுவது உருவ மாற்றங்களைத் தானே தவிர, அதனுடைய உயிரை அல்ல; கருமை நிலையை அல்ல. அடிப்படைத்தன்மை எப்பொழுதும் அப்படியேதான் இருக்கும்; அதனுடைய வெளிப்பாட்டில்தான், உருவ அமைப்பில் தான், மாறுதல் நிகழுகிறது. இந்த மாற்றம் என்பது தொடர்ந்து நிகழுவது மற்றும் சாசுவதமானது. ஆகவே, ஆத்மாக்களோ அல்லது பொருள்களோ உண்டாக்கப்படுவது இல்லை. பொருள்கள் உண்டாக்கப் படவில்லை என்று சொல்லுகிற பொழுது, ஆத்மாக்களின் படைப்பு என்பது முட்டாள்தனமாகிறது. ஒரு படைக்கப் பட்ட ஆத்மா என்பது ஒரு ஆத்மாவாக இருக்கமுடியாது; அதுவும் மற்றவற்றைப் போலவே, ஒரு பொருளாகி விடும்.

ஆனால், மத சம்பந்தமான மனதுக்கு, படைத்தல் என்பது முக்கியமாகப் படுகிறது. ஏனென்றால், நாம் கடவுளை படைப்பவர் என்று நினைத்துக் கொண்டு இருக்கிறோம். ஆனால், படைத்தவைகளைத் தவிர்த்து, படைத்தவர் எப்படித் தனியாக இருக்க முடியும்? ஆனால், கடவுள் படைத்தவர் அல்ல. கடவுள் என்பது உயிர்த்தன்மைதான். கடவுள் என்பது தனித்து இல்லை. அது உண்மையின் கருப்பொருளே. அவர் உண்மையைப் படைத்தவர் இல்லை; ஆனால் அவர் உண்மையாகவே இருக்கிறார்.

இந்த இரு வேறு நிலைகள்- கடவுள் மற்றும் உலகம். படைத்தவர் மற்றும் படைப்பு- நம்முடைய மாறுபட்ட

எண்ணங்களினால் எற்பட்டது. நமது மனம், இருவேறு மாறுபட்ட எண்ணங்களையே உண்டாக்கிக் கொண்டு இருக்கும். ஆனால், உண்மை ஒன்றே. கடவுள் படைப்பவர் அல்ல; அவர் படைப்பாக, பெரியக்க சக்தியாக, உத்வேகமாக மற்றும் எல்லாவற்றின் அடிப்படை மைய நிலையாகவும் இருக்கிறார்.

இதை வேறு விதத்திலும் பார்க்கவும். யாருமே, "கடவுளைப் படைத்து யார்?" என்று கேட்பதில்லை. ஏனென்றால், இந்தக் கேள்வியே அபத்தமாகப்படும். நீங்கள், "கடவுளை படைத்தது யார்?" என்று கேட்டால், அது ஒரு எல்லையில்லாத தொடர் பதிலையே ஏற்படுத்தும். ஒரு பதிலுக்கு, அதே கேள்வியை மீண்டும் மீண்டும் கேட்கப்படும்படியாகி விடும். 'அ,' 'ஆ'வைப் படைத்தால் பிறகு 'அ'வை உண்டாக்கியது யார் என்ற கேள்வி எழும்பும். இப்படி கேள்விமேல் கேள்வியாகவே புறப்படும்; ஆனால், அதற்கு முடிவே இருக்காது. ஒவ்வொரு பதிலும், அந்த ஒரு கேள்வியைத்தான் உண்டு பண்ணும்; எந்தக் கேள்விக்கும் முடிவு கிடையாது.

கடவுள், உண்டாக்கப்பட்டவர் என்பதை நம்மால் நினைக்க முடியாது. ஏனென்றால், அவர் ஒரு உண்டாக்கப்பட்டவர் என்றால், அவர் ஒரு கடவுளாக இருக்க முடியாது; மாறாக அவரும் உலகப் பொருள்களில் ஒன்றாகி விடுகிறார். இதுவே தான் ஆத்மாவுக்கும் பொருந்தும். ஆத்மா என்பது உண்டாக்கப் பட்டதல்ல.. ஆத்மா மாத்திரம் அல்ல- பொருள்கள் கூட உண்டாக்கப்பட்டதல்ல.

எதையும் உண்டாக்கவும் முடியாது மற்றும் எதையும் அழிக்கவும் முடியாது என்று விஞ்ஞானமும் கூறுகிறது. பொருளை சக்தியாக மாற்றினாலோ அல்லது சக்தியை பொருளாக மாற்றினாலோ, அது அழிவும் அல்ல மற்றும் படைத்தலும் அல்ல. ஏனெனில் அவற்றின் மொத்த எடையில் எந்த மாற்றமும் இல்லை. பொருளை, சக்தியாக மாற்றினால் நாம் அது அழிக்கப்பட்டு விட்டது என்று கூறுகிறோம். ஏனென்றால், அங்கு பொருள் மறைந்து விடுகிறது. ஆனால்,

அது அழியவில்லை; ஏனென்றால், பொருளும் ஒரு வகை சக்திதான். சக்தி வேறுவிதமாக இருக்கிறது. ஆனால் அதனுடைய செயல் சக்தி (Potential Energy) அப்படியேதான் இருக்கிறது. உயிர்த்தன்மையின் மொத்த இருப்புநிலை அப்படியேதான் இருக்கிறது. நீங்கள் 'அ'வை, 'ஆ'வாக மாற்றினாலும் அல்லது 'இ'வை 'ஈ'யாக மாற்றினாலும், மொத்த இருப்பில் எந்த மாறுபாடும் கிடையாது. மொத்த இருப்பில், ஒரு சிறிய துணுக்கைச் சேர்க்கவோ அல்லது கழிக்கவோ முடியாது. இந்த மொத்த இருப்புதான் கடவுள்.

ஆகவே, முதலில், நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால், எதுவுமே படைக்கப்படவில்லை. உயிர்த்தன்மை அப்படியே இருக்கிறது. அது, ஆரம்பம் மற்றும் முடிவு எதுவும் இல்லாமல் அப்படியே இருக்கிறது; ஆனால் பல மாறுதல்களுடன்.

நம்முடைய மனம் வேறு ஒரு வேற்றுமையையும் ஏற்படுத்தியிருக்கிறது; அதாவது பொருளும் மனமும் என்றும், உடலும் ஆத்மாகவும் என்றும். இதுவும் மனதால் ஏற்படுத்திய வேற்றுமைதான். ஆனால் உண்மையில் ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது. உடலும், ஆதமாவும் அந்த ஒன்றின் மாறுபட்ட உருவம்தான்.

ஆகவேதான், எப்படி பொருள், சக்தியாக மாற்றப்படுகிறதோ அதைப் போல சக்தியும் பொருளாக மாறக்கூடியதே. உடல் தொடர்ந்து பிரக்ஞையாக மாற்றப்படுவது போல பிரக்ஞையும், உடலாக மாற்றப்படுகிறது. நீங்கள் இங்கே உடல் முடிந்து பிரக்ஞைத் தன்மை ஆரம்பமாகிறது என்றோ அல்லது இங்கே பிரக்ஞைத் தன்மை முடிந்து, உடல் ஆரம்பமாகிறதோ என்றோ உங்களால் எல்லைப்படுத்திக் கூற முடியாது. அங்கு எந்த எல்லைக்கோடும் கிடையாது. உடலும், ஆத்மாவும் இரண்டு வெவ்வேறு அல்ல; மாறாக அவை உயிர்த்தன்மையில் இரு மாறுபட்ட நிலைகள்தான். ஒரு துருவநிலையில், நீங்கள் அதை

உடலாக உணருகிறீர்கள்; அடுத்த துருவ முனையில், அது பிரக்ஞையாக இருக்கிறது.

உங்களிடம் உயிர்த்தன்மை மட்டுமே இருக்கிறது; அதனுடைய ஒரு முனை பிரக்ஞையாகவும், மறுமுனை உடலாகவும் இருக்கிறது. நீங்கள் மேலும் மேலும் பிரக்ஞை நிலையாகி, பிறகு ஆத்மாவாகி விடுகிறீர்கள். நீங்கள் மேலும் மேலும் குறைவாகப் பிரக்ஞையானால், அதாவது உங்களுடைய பிரக்ஞைநிலை அதிகமாக குறைந்து கொண்டே வந்தால், நீங்கள் உடல் மட்டுமாகி விடுகிறீர்கள். .

புத்தர் உங்கள் பக்கத்தில் உட்கார்ந்திருந்தால், உங்கள் இருவருக்குமே உடல்கள் வெவ்வேறாக இருப்பதை உணரலாம். -ஆனால் அவை வெளித்தோற்றத்தில் தான். புத்தருக்கு உடல் இல்லை; அவர் வெறும் ஆத்மாகவாத்தான் இருக்கிறார். ஆத்மா என்று நான் எதை அர்த்தம் செய்கிறேன் என்றால், அவருடைய உடலின் ஒவ்வொரு அணுவும், விழிப்பாகவே, பிரக்ஞையாகவே இருக்கிறது என்பதுதான். மாறாக, நீங்கள் ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தால், நீங்கள் வெறும் உடலாக மட்டும்தான் இருக்கிறீர்கள்; ஆத்மாவாக அல்ல. உங்களிடம் ஆத்மா இல்லை- ஆத்மா என்ற கொள்கைதான் இருக்கிறது, ஆத்மா என்ற தத்துவம்தான் இருக்கிறது. ஆத்மா என்ற எண்ணம்தான் இருக்கிறது; ஆனால் ஆத்மா இல்லை.

ஆனால், இது உங்களுக்கு ஒரு வித்தியாசமாகவே தெரியும். குருட்ஜிப் (Gurdjieff), எல்லோருக்கும் ஆத்மா இருப்பதில்லை என்றும் ஆத்மாவைக் கொண்டு இருப்பது என்பது ஒரு மாபெரும் முயற்சியின் விளைவு என்றும் மற்றும் அதை யாராவது அடைவது என்பது மிக அரிதாகத் தான் ஏற்படும் என்றும் கூறுகிறார். அவர் சொல்லுவது மிகச்சரியே. ஒவ்வொருவரிடமும் ஆத்மா இருப்பது என்பது ஒரு தவறான கொள்கை. ஏற்கெனவே ஆத்மா உங்களிடம் இருப்பது போன்ற தோற்றத்தை இது ஏற்படுத்துகிறது. ஆனால், உண்மையில் அப்படி இல்லை. அது ஒரு சாத்தியக்கூறுதான், அது ஒரு

மாறுதல்தான். நீங்கள் ஆத்மாவாக முடியும். ஆனால், அதைத் தவற விடவும் முடியும். உங்களுடைய ஆக்கசக்தி நிலை (Potential), ஒரு சரியான, முழுமையான விழிப்புத்தன்மையின் மையநிலையாக மாறினால், உடலின் பற்று இழக்கப்பட்டு விடுகிறது. அப்பொழுது நீங்கள் பிறருக்கு உடலாக காட்சி அளிப்பீர்கள்; ஆனால், உங்களைப் பொறுத்தவரையில், உங்களுக்கு உடல் என்று எதுவும் இல்லை.

இந்த இருவேறு தன்மைகள் வெளியே தூக்கி எறியப்பட வேண்டும். உடல் என்றால் பிரக்ஞையற்ற சக்தியாகும்; ஆத்மா என்றால் பிரக்ஞையோடு கூடிய சக்தியாகும். ஆனால் சக்தி, அதன் தன்மையில் ஒன்றுதான். இதை இப்படியும் பார்க்கலாம். அதாவது, பொருள் என்பது ஆக்க ஆத்மாவைக் (Potential Soul) குறிக்கிறது; ஆத்மா என்பது மலர்ந்த நிலையில் உள்ள பொருளாகும். படைத்தல் மற்றும் அந்த இருவேறு தன்மைகளை மறந்துவிடுங்கள். அப்பொழுதுதான், உயிர்த்தன்மையை உங்களால் வெறுமனே அணுகமுடியும்.

உங்களுடைய தத்துவம், மதக்கொள்கை மற்றும் கோட்பாடுகள் அனைத்தும் உங்களுக்கு உதவி செய்யாது. அவை யாவும், உங்களுடைய மனப்படைப்புகள்தான். மனம் படைக்கும் எதுவும் இருவேறு தன்மையுடையதாகவே இருக்கும். மனம் எங்கெங்கே இருக்கிறதோ, அங்கு துருவ நிலை இருந்தே தீரும். ஏனென்றால், இருவேறு மாறுபட்ட துருவநிலையை, மனம் ஒன்று அல்லது துவைத நிலையாக எடுத்துக் கொள்ளாது.

உடலையும், ஆத்மாவையும், மனம் எப்படி ஒன்று என்று எடுத்துக் கொள்ளும்? அது நடக்காது. ஆகவேதான், இந்த உலகத்தில் இரு வகையினர் இருக்கிறார்கள். ஒருவகையினர், மார்க்ஸ், ஏங்கல்ஸ் (Engels), லெனின் மற்றும் மாவோ போன்றவர்கள். இவர்களெல்லாம் ஒருநிலைக் கொள்கையர் (Monoist). அவர்கள், ஆத்மா என்று எதுவும் இல்லை, பொருள் மற்றும் உடல்தான் இருக்கிறது என்று கூறுகிறார்கள். ஆத்மாவும், உடலுமாகிய இரண்டு இருவேறு தன்மைகள் பக்கம் பக்கம்

இருப்பதை மனதால் நினைக்க முடியாது. அவை இரண்டும் எங்கே சந்திக்கும்? எப்படி? பிரக்ஞைத் தன்மையும், பொருளும் எப்படி சந்திப்பது என்பது பற்றியே மனம் கேள்வி கேட்டுக் கொண்டே இருக்கும். அந்த இரண்டுக்கும் இடையே உள்ள பாலம் என்ன, மற்றும் அதை யார் சேர்த்து வைப்பார்கள் என்று அது ஆராய்ச்சி செய்த வண்ணமாகவே இருக்கும்.

இந்தக் கேள்வி, அந்த மனத்தில் எப்பொழுதும் இருந்துகொண்டே தான் இருக்கும். ஏனெனில் அப்படி கேள்வி கேட்க, அது ஏற்கெனவே தீர்மானித்துவிட்டது. பிறகு எப்படி அவை சமமாக வேலை செய்யும் என்ற கேள்வி எழும்புகிறது. ஆனால், அவை இரண்டும் ஏற்கெனவே சேர்ந்து தான் இருக்கின்றன. உதாரணமாக, உடல் துன்பப்பட்டால், அதனுடன் சேர்ந்து மனமும் துன்பப்படுகிறது. உடலில் ஒரு முள் குத்தியிருந்தால், அது உங்களுடைய ஆத்மாவிலும் குத்தியதாக உணருகிறீர்கள். உங்கள் மனம் சோகத்தில் இருந்தால், உங்கள் உடலும் சோகமாகிறது. உங்கள் மனம் ஆனந்தத்தில் இருந்தாலும், உங்கள் உடல் இளமையாகவும், புத்துணர்ச்சி கொண்டும் இருக்கிறது. ஆகவே, அவை இரண்டும் தனித்தனியாக உணருவது இது இல்லை; இரண்டும் ஒன்றாகவே உணருகிறது.

ஆனால், மனம் அவற்றைப் பிரித்தே வைத்திருக்கிறது. அதனால்தான் இந்தப் பிரச்சினை; அதாவது எப்படி அவற்றைச் ஒன்றாக செயல்படவைப்பது, எப்படி அவற்றின் இடை வெளியை ஒன்று சேர்ப்பது என்பதுதான். பிரக்ஞைத்தன்மையும், பொருளும் இரு துருவமாகவே இருக்கின்றன. அவற்றுக்கிடையே, எப்படிப்பட்ட உறவு இருக்க முடியும்?

ஒரு நிலைக் கொள்கையர் (Monoists) இரண்டில் ஒன்றைச் செய்கிறார்கள். அவர்கள் ஆத்மாவை முழுமையாக மறுக்கிறார்கள்- மார்க்ஸ், ஏங்கல்ஸ் மாவோ மற்றும் லெனின் போன்ற பொருள் பற்று மிக்கவர்கள் செய்தது போல. பிறகு உடல் மட்டும்தான் இருக்கிறது: ஆத்மா என்று எதுவும் இல்லை-

ஆத்மா ஒரு கற்பனைதான் என்பதுதான் அவர்களுடைய கொள்கை.

சங்கரர் போன்று வேறு ஒரு கொள்கையுடையவர்கள், உடல் என்பது பொய், ஆத்மா ஒன்றுதான் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். இந்த இரண்டும் எதிரும் புதிருமாகவே இருக்கின்றன. ஆனால், அவர்களது தர்க்கம், அவர்களது வாக்குவாதம் மற்றும் சிந்தனைகள் ஒன்று போலவே இருக்கிறது. சங்கரர், பொருள்கள் அனைத்தும் மாயை மற்றும் கனவு என்று சொல்லுகிறார்- அப்படி ஒன்று இருக்க முடியாது என்கிறார். ஆனால், மார்க்ஸ் போன்றவர்கள் ஆத்மா என்பது மாயை, கற்பனை என்கிறார்கள். மார்க்ஸ் மற்றும் சங்கரருடைய பிரச்சினை என்னவென்றால், முதலில் அவர்கள் உடல் மற்றும் ஆத்மா என்று இரண்டாகப் பிரித்துவிட்டார்கள்; பிறகு அவர்களால் அவற்றை ஒன்று சேர்க்க முடியவில்லை. அதை இணைக்க முயன்றால், அதுவே ஒரு பெரிய பிரச்சினையாகி விடுகிறது. அதற்குப் பதிலாக, ஏதாவது ஒன்றைத் தவிர்த்துவிட்டால்...

என்னைப் பொறுத்தவரையில், இந்த முழு பிரச்சினையின் தீர்வு வேறு ஒரு வடிவத்தை எடுக்கிறது. முதலில் அவற்றை இரண்டாகப் பிரிக்காதீர்கள். அவை இரண்டாக இல்லை. அவை ஏற்கெனவே ஒன்றாகத்தான் இருக்கின்றன. அவை எப்பொழுதும் ஒன்றாகத்தான் இருக்கும். சக்தி, பிரக்ஞை நிலையை அடைந்தால், அது ஆத்மாவாகிறது; மாறாக சக்தி, பிரக்ஞையற்ற தன்மையை அடைந்தால், அது உடலாகிறது. சில சமயம், நீங்கள் அதிக அளவில் ஆத்மாவாகவும், குறைந்த அளவில் உடலாகவும் இருக்கிறீர்கள்; சில சமயம், நீங்கள் அதிக அளவில் உடலாகவும், குறைந்த அளவில் ஆத்மாகவும் இருக்கிறீர்கள்.

இப்படி மாறி மாறி நிலையற்ற தன்மையாகி இருப்பது தொடர்ந்து நடந்து வருகிறது. காலையில், நீங்கள் அதிக அளவில் ஆத்மாவாக இருப்பீர்கள்; மாலையில் நீங்கள் அதிக

அளவில் உடலாக இருப்பீர்கள். நீங்கள் கோபமாக இருக்கும்பொழுது, அதிக அளவில் உடலாக இருக்கிறீர்கள். நீங்கள் அன்பில் இருக்கும்பொழுது, அதிக அளவில் ஆத்மாவாக இருக்கிறீர்கள். இப்படி மாறுபடும் தன்மை தொடர்ந்து நடந்து கொண்டேதான் இருக்கிறது. நீங்கள் தியானம் செய்யும்பொழுது, உங்களுடைய பிரக்ஞைத்தன்மை விரிவடைகிறது; அந்த அளவு உங்களுடைய உடல் சுருங்குகிறது. நீங்கள் போதைப் பொருள் களை உட்கொண்டால், உங்களுடைய பிரக்ஞைத்தன்மை குறைந்து, உங்களுடைய உடல் விரிவடைகிறது. உடலும், பிரக்ஞைத்தன்மையும் ஒரே இயல்பின் இருவேறு நிலைகள்.

ஆகவே, நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். இந்த இரண்டாவது வேறுபாடு மனதால் ஏற்படுத்தப்பட்டது; அது மனதின் படைப்பு. அவ்வளவுதான். உண்மையில், அப்படி ஏதும் இல்லை.

ஆத்மா உண்டாக்கப்பட்டது, படைக்கப்பட்டது என்று நான் ஒரு போதும் சொல்லமாட்டேன். எதுவுமே படைக்க முடியாது. ஏனெனில், எல்லாமே இங்கு இருக்கிறது. ஆத்மா உண்டாக்கப்படமாட்டாது என்று நான் சொல்லும் பொழுது, ஆத்மா சரிசமமாக உண்டாக்கப்பட்டதா அல்லது ஏற்றத்தாழ்வாக உண்டாக்கப்படதா என்ற கேள்விக்கே அங்கு இடமில்லை. இந்தக் கேள்வி, வேறு ஒரு வித்தியாசமான உருவத்தை எடுத்துக் கொள்ளுகிறது.

என்னைப் பொறுத்தவரையில், எல்லா ஆத்மாக்களும் ஆக்க நிலையில் சமமாகவே இருக்கின்றன. அவை எப்பொழுதுமே அப்படித்தான் இருக்கும். ஆனால், செயல்பாட்டில் அவை சமமாக இருப்பதில்லை. அதற்குப் பொறுப்பு, அவையே; வேறுயாரும் கிடையாது. அதற்குப் பொறுப்பு ஏற்றுக்கொள்ள, அங்கு வேறு யாருமே கிடையாது.

கடவுள் என்பது மிகவும் உபயோகமான ஒரு கொள்கை. நீங்கள் உங்களுடைய சகல பொறுப்புகளையும் அவரிடமே விட்டுவிடலாம். அது ஒரு நல்ல ஏற்பாடுதான்; ஒரு தந்திர

மிக்க ஏற்பாடு. கடவுள் என்று ஒன்று இருந்து நீங்களும் சமமாக இல்லாவிட்டால், அவர் உங்களுக்காகப் பொறுப்பேற்கிறார். உங்களை அவர் ஏற்றத்தாழ்வுடன், படைத்தார், ஆகவே, நீங்கள் என்ன செய்ய முடியும்? ஆனால், அப்படி எந்தக் கடவுளும் கிடையாது! இந்த முழு பேரியிக்க உயிர்த்தன்மையே தான் கடவுள். நீங்கள் உங்களுடைய பொறுப்பில் பங்கேற்பது போல, நீங்கள் அந்த முழுமையிலும் பங்கேற்கவும்.

நீங்கள் அடிப்படையில் சமமாகவே இருக்கிறீர்கள். இதன் அர்த்தம் என்னவென்றால், நீங்கள் முழுமையாக மலர்ந்திருந்தால், அதற்குச் சமமாகுகிறீர்கள். இரண்டிற்கும் எந்த வேறுபாடும் கிடையாது. ஒரு மலர்ந்த புத்தர், ஒரு மஹாவீரர், ஒரு இயேசு, ஒரு முகமது, இப்படி எல்லோருமே சமமாகத்தான் இருக்கிறார்கள். அவர்களுக்கிடையே எந்த வேற்றுமையும் கிடையாது. ஆனால் அவர்கள் மலர்ந்து மனநிலையிலும் தெய்விக நிலையிலும் (Dynamic) இருக்கும்பொழுது, அவர்கள் சமமாக இல்லை. அந்தச் செயல் வழியில், அவர்கள் எப்போதும் சமநிலையில் இல்லை; அவர்கள் ஏற்றத்தாழ்வுடன் தான் இருக்கிறார்கள்.

உங்களுடைய செயல்களுக்கு, வேறு யாரும் பொறுப்பு இல்லை. ஏனெனில், வேறு யாரும் கிடையாது. நீங்கள் மட்டும்தான் இருக்கிறீர்கள். நீங்கள் எப்படி இருக்கவேண்டும் என்பது உங்களுடைய தீர்மானத்தில் மட்டும் தான் இருக்கிறது. நீங்கள் இருப்பது, உங்களுடைய செயல்பாட்டில்தான். நீங்கள் மாறவில்லை என்றால், அது உங்களுடைய முடிவுதான். நீங்கள் மாறவிரும்பினால், அந்த நிமிடமே மாறலாம். நேரம் அதற்குத் தேவை இல்லை. மாறவேண்டும் என்ற உங்களுடைய முடிவுதான் தேவை.

உங்களுடைய தீர்மானம் உறுதியற்று இருந்தால், உங்களுக்கு அதிக காலம் தேவையாக இருக்கும். உங்களுடைய முடிவு முழுமையாக இருந்தால், மாறுதல் என்பது இக் கணத்திலேயே நேரிடும். உங்களுடைய தீர்மானம் முழுமையாக இல்லா

விட்டால் தான். உங்களுடைய முடிவு முழுமையான உறுதியில் இல்லாவிட்டால் தான், உங்களுக்கு நேரம் தேவையாக இருக்கிறது- மாறுதல் இப்பொழுதே நேரிடலாம். அடிப்படையில், நீங்கள் மாறுதல் அடையத் தயாராக இல்லாத காரணத்தால் தான், பிரச்சினையே எழும்புகிறது. ஆனால், மாறுதல் அடைய வேண்டும் என்று உங்கள் மனம் எப்பொழுதும் விருப்பம் கொண்டே இருக்கிறது.

நாம் புத்தரைப் பார்த்திருக்கிறோம். அந்தப் பேராசை நம் மனத்தில் இருந்து கொண்டுதான் இருக்கிறது. எப்படி நாமும் ஒரு புத்தராக மாறுவது? இதுதான் பேராசை. விருப்பம் மற்றும் ஆசை அனைத்தும் அமைதியாகவும், எல்லாம் ஒன்று சேர்ந்தும், நாமே நமக்கு வெளிச்சமாக எந்தத் தொந்திரவுமற்ற ஆழ்ந்த அமைதியாக, அந்தப் பேராசை உங்களிடம் ஏற்பட்டுவிட்டது; ஆனால் அதற்கு உங்களுடைய மனம் தயாராகவில்லை. புத்தா தன்மை ஏதும் இல்லாமல், நாம் புத்தராக மாற நினைக்கிறோம். புத்தர் துறந்ததை, நாம் துறக்கத் தயாராக இல்லை. ஆனால், புத்தர் அடைந்ததை, நாம் அடையப் பேராசை கொள்ளுகிறோம். இதுதான் பிரச்சினை. உங்களுடைய மனதின் பெரும்பகுதி மாறுதலுக்குத் தயாராக இல்லை. ஆத்மாவாக ஆவதற்குத் தயாராக இல்லை. ஆனால், அந்த ஆசை உங்கள் மனதிற்குள் வந்துவிட்டது.

இதற்கு வேறு யாரும் பொறுப்பல்ல. ஏன் நீங்க்ள் புத்தராகவில்லை என்பதைக் கண்டறிய, உங்களுக்குள்ளே சென்று, உங்களையே ஆராயுங்கள். அதனுடைய சக்தியும், வீரியமும் அங்கே இருக்கிறது. பின் ஏன் நீங்கள் புத்தராக வில்லை? இந்த ஏற்றத்தாழ்வை யார் ஏற்படுத்தியது என்று நினைத்துக் கொண்டே இருக்கவேண்டாம். யார் சிலரை புத்தராகவும், மற்றும் பலரை, புத்தராக அல்லாதும் படைத்தது?

யாரும் இப்படிப் படைத்தது இல்லை; எல்லாவற்றிற்கும் நம் மனமே பொறுப்பு. நம்மையெல்லாம் கடவுள்தான் படைத்தவர் என்று நான் விடாப்பிடியாக எண்ணிக்

கொண்டிருந்தால்- அவரைப் புத்தரைப் போல, என்னை புத்தர் போல அல்லாது- பிறகு நான் என்ன செய்ய முடியும்? நான் அப்படி இருக்க, என்னுடைய தலைவிதிதான் காரணம். இப்படி நினைத்துக் கொண்டு, நான் அமைதியடைய முடியும்; அதை ஒதுக்க முடியும். இப்படி ஒதுக்குவது ஒருக்காலும் வேலை செய்யாது. இப்படி ஒரு கொள்கையை ஏற்படுத்திக் கொள்ளுவது, ஒரு தந்திரம்தான். உங்களைக் காப்பாற்றிக் கொள்ளக் கூடிய ஒரு ஏற்பாடு. ஆகவே, மாற்றம் அடைய கவலைப்படாமல், நீங்கள் இப்படியேதான் இருப்பீர்கள்.

நீங்களே உங்களுடைய முழுப் பொறுப்பை எப்பொழுது எடுத்துக் கொள்ளுகிறீர்களோ, அப்பொழுதுதான் மதத்தன்மை உங்களிடம் பிறக்கிறது. தத்துவம் தன் அர்த்தமற்ற, முட்டாள்தனமான கொள்கையைப் பிதற்றியவாறு இருக்கட்டும். ஆனால், மதம் வேறுவிதமானது. அது ஒரு ஆன்மிக முடிவு. எல்லாவற்றிற்கும் நீங்களேதான் பொறுப்பு என்று முழுமையாக நீங்களே உணருவதுதான் அது; நான் எப்படி இருந்தாலும்- கோபமாக, பேராசையோடு, மனம் முழுவதும் ஆசைகளோடு, ஆசை மூட்டையோடு- இப்படி எல்லாவற்றிற்கும் நானே பொறுப்பு.

என்னுடைய அசிங்கமான நிலைக்கு, நானே பொறுப்பு. என்னுடைய பாபம் நிறைந்த மனதுக்கு, நானே பொறுப்பு என்று நீங்கள் எப்பொழுது முடிவு எடுக்கிறீர்களோ, அப்பொழுதே, அந்த ஆத்மிகக் குதித்தல் நிகழும்.

என்னுடைய அசிங்கத்துக்கு நானே பொறுப்பு ஆகும் பொழுது, என்னுடைய அழகுக்கு வேறு யாரும் பொறுப்பாக முடியாது. என் உள்ளே உள்ள சகல இருட்டுக்கும் நானே பொறுப்பாளியாகும் பொழுது, புத்தரை வந்து அடையும் எல்லா வெளிச்சமும், என்னையும் கூட வந்து அடையும். இப்படி நாம், ஒன்றுக்குப் பொறுப்பேற்றுக் கொண்டால், மற்றவற்றின் ஆக்க சக்திகள் அனைத்தும், திறந்து கொள்ளுகின்றன.

பொறுப்பு என்றாலே சுதந்திரம் என்று அர்த்தம். ஆகவே, கடவுளிடம் பிராது கொடுப்பதை நிறுத்துங்கள். உங்களுடைய முறையீட்டைக் கேட்க, முதலில் அங்கு யாரும் கிடையாது. நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொள்ளுகிறீர்கள். நான் என்னைப் பற்றி பொறுப்பேற்கா விட்டால், நான் சுதந்திரமாக இல்லை என்று அர்த்தம். நான் நரகத்தில் வாழ்ந்து கொண்டு இருந்தால், அது என்னுடைய தீர்மானம்தான். நான் என்னுடைய சுதந்திரத்தையும், சக்தியையும், நரகத்துக்கு வர உபயோகித்து இருக்கிறேன். என்னை யாரும் அங்கே தூக்கி எறியவில்லை. மனிதனை இந்த உலகத்தில் தூக்கி எறிவதைப் பற்றி, சாத்ரே (Satre) சொல்லியிருக்கிறார். அவர், 'யாரும் உங்களை அங்கே தூக்கி எறியவில்லை. அங்கே நீங்கள் சென்றது, உங்களுடைய முடிவுதான், உங்களுடைய தீர்மானம்தான்' என்று கூறுகிறார்.

ஆனால், ஒரே ஒரு வழியில்தான், மனிதன் சுதந்திரமாக இருக்கிறான் என்று சாத்ரே மேலும் கூறுகிறார்: அதுதான் தற்கொலை! உங்களுடைய பிறப்புக்கு நீங்கள் பொறுப்பல்ல. ஆனால், உங்களுடைய இறப்பை, நீங்கள் பொறுப்பாக்கிக் கொள்ளலாம். நீங்கள் தூக்குப் போட்டுக் கொள்ளலாம். ஆனால், இது சட்டத்துக்குப் புறம்பானது! ஒரு முனை சுதந்திரமாக இருந்தால், மறுமுனை வேறுவிதமாக இருக்க முடியாது. நான் தூக்குப் போட்டுக் கொண்டால்- என்னுடைய முடிவை, நானே முடிவு செய்து கொண்டால்- பிறகு என்னுடைய ஞாபகம் சரியாக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, நான் இந்த வாழ்க்கையில் நுழைந்தது என்னுடைய தீர்மானமாகிறது. என்னுடைய துயரத்திற்கு நானே பொறுப்பாளியானால், என்னுடைய பேரானந்தத்துக்கும், நான் பொறுப்பாளியாகு கிறேன். நான் என்னுடைய இறப்புக்குப் பொறுப்பாளியானால், என்னுடைய பிறப்புக்கும் பொறுப்பாளியாகிறேன்.

இதைத்தான் மதங்கள் போதிக்கின்றன. நீங்கள் பிறப்பது, வாழுவது மற்றும் இறப்பது உங்களுடைய சுதந்திரம் தான். யாராவது இறக்கும் பொழுது, அவர் எல்லாவகையிலும்

இறப்பது போலவே நமக்குத் தோன்றுகிறது. ஆனால், அந்த இறக்கும் மனிதனின் மனதை உங்களால் ஊடுருவிப் பார்க்க முடிந்தால், அவன் வாழ்வில் ஆசை கொண்டு, அதை மேலும் மேலும் அனுபவிக்கவே விரும்புவது நமக்குத் தெரியும்; அவன் அடுத்த வாழ்வைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பது புரியும். அந்தத் தொடர் வாழ்வைப் பற்றி முதலில், அவன் இந்த வாழ்க்கையில் ஒட்டிக் கொண்டிருக்கவே விரும்புகிறான். ஆனால் கடைசிக் கட்டத்தில், அவனால் இந்த வாழ்க்கையை இனிமேல் தொடர முடியாது என்ற நிலையில், அவன் வேறு ஒரு உடலை, வேறு ஒரு உருவத்தை எடுத்து, தொடர்ந்து வாழவே ஆசைப்படுவான். ஒருவன் எந்தவித ஆசையும் இல்லாமல், எல்லா ஆசைகளும் நிறைவேறிய நிலையில், இனிமேல் வாழ விருப்பமில்லாமல், வெறுமனே இறக்க நேரிட்டால், அவனுக்கு இனிமேல் எந்தப் பிறவியும் கிடையாது. ஏதாவது ஆசை நிறைவேறாமல் இருந்தால், அந்த ஆசையைப் பூர்த்தி செய்ய மனம் முயற்சி செய்யும்; அதுவே ஒரு புதிய பிறப்பை ஏற்படுத்த வழிவகுத்து விடுகிறது.

ஒருவன் பிறந்தால், அவன் கண்டிப்பாக இறக்க வேண்டும் என்று நமக்கு நன்றாகத் தெரியும்; ஆனால், நமக்கு அடுத்த பக்கத்தைப் பற்றி எதுவும் தெரியாது. அதாவது, ஒருவன் இறந்தால், அவன் மீண்டும் மறுபிறப்பு எடுக்கவேண்டும் என்பது பற்றி அவனுக்குத் தெரியாது. பிறப்பு, இறப்பைக் கொடுத்தால், இறப்பும் பிறப்பைக் கொடுக்கும்- அவன் முழுமையாக இறந்தாலொழிய. அந்த முழுமையான இறப்பு என்பது சமாதிதான். அந்த ஒரு முழுமையான இறப்பு என்பது ஆத்மாவின் உச்ச மலருதல்தான்- ஆத்மா முழுமையான சுத்தத் தன்மையில் இருக்கும். அதற்கு எதிர்காலத்தைப் பற்றிய எந்த ஆசையும் இருக்காது. ஏனென்றால், எதிர்காலம் என்பது உங்களுடைய மறுபிறவிதான். நாளைக்கு என்று எந்த ஆசையும் இருக்கக் கூடாது. ஏனென்றால் நாளை என்பது பிறப்புதான்; அடுத்த கணத்தில் கூட, எந்த ஆசையும் இருக்கக் கூடாது. ஏனெனில், அடுத்த கணம் என்பது பிறவிதான். எந்த

எதிர்காலமும் இல்லாமல், நாளை என்று எதுவும் இல்லாமல், எந்த வருங்கால ஆசையும் இல்லாமல், நிறைவேறாத எந்த ஆசையும் இல்லாமல், நீங்கள் இந்தக் கணத்தில் முழுமையாக இருக்க நேர்ந்தால், உங்களுக்கு மறுபிறவி என்று எதுவும் கிடையாது.

நீங்கள் மீண்டும் பிறப்பது என்பது உங்களுடைய தீர்மானத்தில் தான் இருக்கிறது- அது மிகுந்த பிரக்ஞையற்ற தீர்மானம்தான். நீங்கள் மிகுந்த பிரக்ஞையோடு இருந்தால், நீங்கள் மறுபிறவியைத் தேர்ந்து எடுக்க மாட்டீர்கள். அல்லது வேறுவிதமாக அதைத் தேர்ந்து எடுப்பீர்கள்.

புத்தர் இறந்து கொண்டு இருக்கிறார். அப்பொழுது, அவரிடம் ஒருவர் வந்து, "இறந்த பிறகு, நீங்கள் எங்கே இருப்பீர்கள்?" என்று கேட்டார்.

புத்தர், "எங்குமே இல்லை. இது போதும்! நான் பல பிறவிகளாக பல உடல்களை எடுத்துவிட்டேன்- இது போதும். நான் எங்குமே இல்லாமல் செல்லும் பொழுது, நான் முழுமையாக இருக்கிறேன்," என்றார்.

கேள்வி கேட்பவருக்கு, இது மிகவும் துக்ககரமான பதில் போலவே தோன்றும்- புத்தர் முழுமையாக இறப்பது. அவரால் மீண்டும் பிறக்க முடியாது. இப்பொழுது, அதற்கு வாய்ப்பே இல்லை. அந்தக் கேள்வியைக் கேட்டவர் இப்பொழுது அழ ஆரம்பித்துவிட்டார்.

புத்தர், "செருமி அழாதே. மாறாக, சந்தோஷத்தில் இரு! இதுதான் என்னுடைய நிறைவான தருணம். நான் முழுமையாக இருக்கிறேன். இதுதான் உச்ச உயரத்தின் கடைசி நிலை. எந்தவித ஆசை, எந்தவித நம்பிக்கை மற்றும் எந்தவித எதிர்காலம் என்று எதும் இல்லாமல், நான் வெறுமனே இந்தப் பிரபஞ்சத்தோடு கலக்கிறேன். நான் இந்த பிரபஞ்சத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருக்க மாட்டேன்; ஆனால், நான் எங்கேயும் வியாபித்து இருப்பேன். என்னை ஒரு குறிப்பிட்ட இடத்தில்

மட்டும் உங்களால் பார்க்க முடியாது. நான் இந்த உலகத்தில் உப்பாக இருப்பேன். என்னை எங்கேயும், உங்களால் ரசிக்க முடியும். ஆனால், நான் வெறும் ரகசியமாக மட்டும்தான் இருப்பேன். எனக்கு உடல் கிடையாது, உருவம் கிடையாது. நான் இந்தப் பிரபஞ்ச பேரியக்க மகா சக்தியாகவே இருப்பேன்," என்றார்.

இதைத்தான் புத்தர், 'நிர்வாணா' என்று அழைக்கிறார். இந்த வார்த்தை மிகவும் அழகானது. இது 'விடுதலை' அல்ல. இது வேறுவிதமான வார்த்தை. வேறுவித அர்த்தம் உடையது. இதன் அர்த்தம் 'முடிவு' (Cessation) என்பதாகும்- மெழுகுவர்த்தி எரிவது நின்றுவிடுவது போல. "எப்படி ஒரு மெழுகு வர்த்தி எரிவது நின்றுவிடுமோ, அதைப்போல நான் முடிவுக்கு வந்துவிட்டேன்" என்று புத்தர் கூறுகிறார். ஒரு எரியும் மெழுகுவர்த்தி, முடிவுக்கு வந்துவிட்டால், அந்த வெளிச்சம் எங்கே செல்லும்? நீங்கள் அந்த ஜுவாலையை ஒரு குறிப்பிட்ட இடத்தில் பார்க்க முடியாது. ஏனென்றால், இப்பொழுது அதற்கு ஒரு குறிப்பிட்ட ஆசை என்று எதுவும் கிடையாது. ஆனால், அது இன்னும் இந்தப் பிரபஞ்சத்தின் ஒரு பகுதிதான். ஏனென்றால், எதுவுமே இந்தப் பிரபஞ்சத்திலிருந்து மறைவது இல்லை.

எல்லாமே ஒரு விருப்பம் தான். ஆனால், இதை எடுத்துக் கொள்வது நமக்கு சிரமமாகத்தான் இருக்கும். ஏனென்றால், நம்முடைய சிரமமும் நம்முடைய விருப்பமாகிவிடுகிறது. இதுதான் பிரச்சினை. நம்முடைய சிரமத்துக்கு வேறு ஒருவர் பொறுப்பேற்றுக் கொண்டால், அது நமக்கு திருப்தியைக் கொடுக்கும். பிறகு, நாம் செய்ததால், நாம் சிரமப்படவில்லை என்று நமக்கு ஆறுதலாக இருக்கும். கடவுள் என்றும், தலைவிதி என்றும் இருந்தால், பிறகு அந்தப் பொறுப்பை அவர்மேலே சுலபமாக திணித்துவிடலாம். இது ஒரு தந்திரமான தப்பித்தல்தான். ஆனால் வேறு யாரும் இல்லை. நீங்கள் மட்டும் தனியாக இருக்கிறீர்கள்.

பிறகு, துன்பத்தை எப்படி நம்மால் விளக்க முடியும்? நம் துன்பத்தைத் தேர்ந்தெடுக்க மாட்டோம் என்று நாம் நினைக்கலாம். ஆனால், இப்படி நினைப்பது முட்டாள்தனம்- நாம், எல்லாவற்றையுமே தேர்ந்தெடுக்கிறோம். ஆனால், அப்படி யாருமே ஒத்துக்கொள்ள மாட்டார்கள். ஏனென்றால், நாம் தேர்ந்து எடுத்தால், இன்பத்தைத் தேர்ந்தெடுப்போம். ஆனால், அதன் முடிவில், நாம் உண்மை நிலையை சந்தித்தே ஆகவேண்டும்.

ஒவ்வொருவரும் இன்பத்தைத்தான் தேர்ந்து எடுக்கிறார்கள்; ஆனால், முடிவில் எல்லோரும் துன்பப்படுகிறார்கள். ஏனென்றால், இன்பம் என்பது ஒரு மாயை, பொய்யான திரை. நீங்கள் இன்பத்துக்கு மிக அருகில் வந்தால், அந்த இன்பம் மறைவதைக் காண்பீர்கள். இது ஒவ்வொரு நேரமும் உங்களிடம் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. இருந்தும், இன்பம் என்பது துயரத்தின், துன்பத்தின் பொய்யான முகம் என்பதை யாரும் பிரக்ஞையாக உணருவது இல்லை.

யாருமே, துன்பத்தை நேரடியாகத் தேர்ந்தெடுக்க மாட்டார்கள். ஆனால், ஒவ்வொருவரிடமும், அது பின்பக்கமாக வந்து அவரை அடைகிறது. ஆகவே, அவர்கள் பிரக்ஞையற்று தேர்ந்தெடுக்கிறார்கள் என்றே சொல்லவேண்டும். நீங்கள் இன்பத்தைத் தேர்ந்து எடுப்பதன் மூலம், நீங்கள் துன்பத்தைத் தான் தேர்ந்தெடுக்கிறீர்கள். ஒவ்வொரு இன்பமும், முடிவில் துன்பத்தில்தான் போய் முடியும். ஒவ்வொரு இன்பமும் ஒரு இறுக்கமான மனநிலையையே ஏற்படுத்தி விடுகிறது. இன்பத்தின் தவிர்க்க முடியாத பகுதிதான் துன்பம்- இன்பத்தின் முடிவான வால்... அதிலிருந்து உங்களால் ஒருக்காலும் தப்பிக்க முடியாது. இன்பத்தின் பின்னே ஓடுவது மற்றும் அதையே தேடுவது எல்லாம் மாயைதான். நீங்கள் முடிவில் அடைவது, ஒருக்காலும் இன்பம் அல்ல.

நீங்கள் வெளியே இருந்து, இதைக் கவனிக்கவும். அதாவது, ஒருவர் இன்பத்தை நாடுகிறார். அதற்காக ஆசைமிகக் கொண்டு

பலவித முயற்சிகளைச் செய்து அடைகிறார். பிறகு துன்பம் தொடர்ந்து வருகிறது. நீங்கள் சொர்க்கத்தைத் தேர்ந்து எடுத்து, நரகத்தை அடைகிறீர்கள். ஆகவே, சொர்க்கம் நரகத்தின் கதவாகிறது. நீங்கள் அந்தக் கதவுக்குள் நுழைவது என்பது நரகத்தின் கதவுக்குள் நுழைவது போலத்தான். இன்பத்தை, சார்பு (Positvely) முயற்சியாகத் தேடுகிறீர்கள். ஆனால், மகிழ்ச்சி துன்பத்தன்மை யுடையதாகிறது. அது ஏதோ ஒன்றின் வருகை அல்ல; மாறாக அது ஏதோ ஒன்றின் மறைவாக இருக்கிறது- அதாவது துன்பத்தின் மறைவு. நீங்கள் இன்பத்தைத் தேர்ந்து எடுக்காவிட்டால், துன்பம் தானே மறைந்துவிடும். இன்பம் மற்றும் துன்பம் அற்ற நிலையில், ஆனந்தம் மற்றும் பேரானந்தம் கிட்டுகிறது. வெளியிலிருந்து பார்ப்பதற்கு, இது ஒரு மறுப்புத்தன்மையாகவே (Negative) தெரியும். உள் அமைப்பைப் பொறுத்தவரையில், இது சார்பு (Positive) தன்மையுடையது தான். ஆனந்தம் மற்றும் பேரானந்தம் என்பது உங்களுடைய இயல்பான நிலை. எல்லாவற்றையும் போல, அதுவும் உங்களுடைய விருப்பமாக இருக்கும். நீங்கள் மகிழ்ச்சியைத் தேர்ந்தெடுக்காவிட்டால், நீங்கள் இன்பத்தைத் தேர்ந்தெடுத்தவ ராகிறீர்கள்.

எந்தக் கணமும், நீங்கள் மாறலாம். நான் 'எந்த கணமும்' என்று சொல்லும்பொழுது, அதற்குப் பல மடங்கு அர்த்தங்களைக் கற்பிக்கிறேன். நீங்கள் சென்ற காலத்தில் தேர்ந்து எடுத்தவை அனைத்தும், ஒரு தடங்கலாக இல்லை என்பதை நான் அர்த்தம் செய்கிறேன். நீங்கள் பல யுகங்களாக, பல பிறவிகளாக, மகிழ்ச்சியை மட்டும்தான் தேர்ந்து எடுத்து வந்திருக்கிறீர்கள்- மகிழ்ச்சி, மகிழ்ச்சியை மட்டும் தான்; மகிழ்ச்சியைத் தவிர வேறல்ல. ஆனால், அடைந்தது என்னமோ துன்பம், துன்பம் தான்; துன்பத்தைத் தவிர வேறல்ல. ஆனால், அது ஒரு தடங்கலாக இல்லை. நீங்கள் சென்ற காலத்தில் தேர்ந்து எடுத்து, அதற்காக துன்பம் அனுபவித்தது அனைத்தும் உங்களுடைய உணர்ச்சிக்கு ஒரு தடங்கலாக இல்லை. இந்தக் கணமே, நீங்கள் மறுப்புத்தன்மையைத் தேர்ந்து எடுக்கலாம்;

நீங்கள் சென்ற காலத்தில், அதற்காகப் பட்டபாடும் மற்றும் உங்களுடைய கர்மவிதியும் எப்படி இருந்தாலும் அது ஒரு தடையாக இருக்க முடியாது.

ஆனால், உங்களுடைய மனம், பல தந்திரங்களைக் கையாளும். மாற்ற முடியாத முடிவு அல்லது விதி என்று ஒன்று இல்லாவிட்டால், கடவுள் என்று ஒன்று இல்லாவிட்டால், 'கர்மவினை' என்பது நீங்கள் பழி சுமத்துவதாக அமைகிறது. நீங்கள், "நான் என்ன செய்ய முடியும்? நான் பல பிறவிகளாக பாபம் செய்தவனாக இருந்திருப்பேன். இப்பொழுது, என் கர்மவினை என் வழியில் குறுக்கே நின்று தடுக்கிறது. நான் எப்படி ஒன்றைச் சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்க முடியும்? நான் கர்மவினையால் சூழப்பட்டிருக்கிறேன்..." என்றுதான் கூறுவீர்கள்.

ஆனால், நீங்கள் எதனாலும் சூழப்படவில்லை என்பதை மிக நன்றாக அறிந்து கொள்ளுங்கள். அப்படி நீங்கள் ஏதோ ஒன்றினால் சூழப்பட்டிருப்பதாகக் கருதினால், அதுவும் உங்களுடைய விருப்பத்தாலே நிகழுகிறது. சிறை என்றோ சிறைக்காவலர் என்றோ எதுவும் கிடையாது. இந்தக் கணத்திலேயே, நீங்கள் அதிலிருந்து வெளியே வந்துவிடலாம். நீங்கள் ஒரு சிறையில் வசிப்பதோ அல்லது அதிலிருந்து வெளியே வருவதோ, உங்களுடைய விருப்பத்தில் தான் இருக்கிறது. அதிலிருந்து நீங்கள் வெளியேறுவதை, யாரும் தடுக்கவில்லை.

நீங்கள் ஒரு சிறைக்கைதியாக இருக்க விரும்பினால், உங்களைச் சுற்றி நீங்கள் ஒரு தத்துவத்தை ஏற்படுத்திக் கொண்டு அதில் நீங்கள் ஒரு சிறைக் கைதியாக வாழலாம். ஆனால், நீங்கள் சுதந்திரத்தை விரும்பினால், நீங்கள் ஒரு சுதந்திர மனிதனாக இருக்க விரும்பினால், நீங்கள் வேறு விதமான எண்ணங்களைத் தேர்ந்து எடுத்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது, நீங்கள் சுதந்திரமடையலாம். இரண்டுமே, உங்களுடைய விருப்பத்தில்தான் இருக்கிறது. நீங்கள் எந்த

நிலையில் இருந்தாலும், அதற்கு நீங்களே பொறுப்பு. ஏனென்றால், நீங்கள் இப்பொழுது சுதந்திர மனிதன். உங்களைச் சுற்றி எந்தத் தடுப்பும் இல்லை. ஆனால் உங்களுக்குள்ளே அனேக தடுப்புகள் உள்ளன. உங்களுக்கு வெளியே எந்தத் தடுப்பும் இல்லை. உள் தடுப்புகள் அனைத்தும் உங்களால் உண்டாக்கப்பட்டவை. அவை அனைத்தும் உங்களால் தான் இருக்கின்றன.

நீங்கள் சிறைச்சாலையை விட்டு வெளியேற சிரமப்பட்டால், அது அந்தச் சிறைச்சாலையால் உண்டாக்கப்பட்டது அல்ல-சிறைச்சாலை உங்களைத் தடுக்கவில்லை. அது உங்களுடைய தீர்மானத்தில்தான் ஏற்பட்டது; உங்களுடைய தவறான விருப்பத்தால் உண்டாயிற்று. அது ஒரு பழக்கமாக ஆகும் அளவுக்கு, நீங்கள் அதைப் பல தடவை உங்களுடைய விருப்பமாகக் கொண்டிருக்கிறீர்கள். அதற்கு முக்கியக்காரணம், வெளியே இருப்பதை விட, சிறையில் இருப்பது பாதுகாப்பானது!

நீங்கள் அதை ஒரு சிறைச்சாலையைப் போல இல்லாது, உங்களுடைய சொந்த வீட்டைப் போல அலங்கரித்து வைத்து, அதனோடு மிகவும் நெருக்கமாக, பழகி வந்து இருக்கிறீர்கள். அதனுள்ளே, நீங்கள் பல பாதுகாப்புகளை உணருகிறீர்கள்; ஆனால், வெளியே நீங்கள் பலவற்றால் தாக்கப்படக் கூடிய வகையில் இருக்கிறீர்கள்- எந்தப் பாதுகாப்பும் இல்லாமல், எந்தத் துணையும் இல்லாமல், நீங்கள் ஒரு தெரியாத, முன்பே பரிச்சயமில்லாத உலகத்தில் இருப்பதை உணருவீர்கள்; உங்களை பயம் ஆக்ரமிக்கும். அது முற்றிலும் புதியது. அது உங்களுடைய சொந்த மனச்சிறை அல்ல.

நீங்கள் ஏதோ ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் பொழுது, பிரக்ஞையாக உங்களுடைய சுதந்திரத்தை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் சுதந்திரமாகவே இருக்கிறீர்கள். இந்த ஞாபகப்படுத்திக் கொள்ளல்தான், உங்ளைச் சுதந்திரமாக வைக்கும். அது ஒரு முயற்சியல்ல. அது உங்களுடைய சுதந்திரத்தை வெறுமனே ஞாபகப்படுத்திக் கொள்ளல் தான்; உங்களுடைய பொறுப்பை ஞாபகப்படுத்திக் கொள்ளல்தான்.

சுதந்திரமும், பொறுப்பும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள். ஆகவே, உங்களுடைய பொறுப்பை, பிறர் மேலே சுமத்த வேண்டாம். உங்களுடைய சுதந்திரத்தைத் தூக்கி எறிய வேண்டாம்.

பொறுப்பை உணருங்கள்; உங்களுடைய பொறுப்பை நீங்களே ஏற்றுக் கொள்ளுங்கள்; அப்பொழுதுதான், நீங்கள் சுதந்திரத்தை உணர முடியும். நீங்கள் சிறையில் இருப்பது, உங்களுடைய விருப்பத்தால் ஏற்பட்டது என்று எப்பொழுது நீங்கள் உணருகிறீர்களோ, அப்பொழுதே அடுத்தவர் அதற்கு பொறுப்பற்றவராகிறார். பிறகு, நீங்கள் சுதந்திரமடைகிறீர்கள். நீங்கள் இயல்பாக அதிலிருந்து வெளியே வந்துவிடலாம். ஆனால், வேறு யாராவது உங்களை அந்தச் சிறையில் போட்டிருந்தால், அவர்தான் உங்களை அதிலிருந்து விடுவிக்க வேண்டும். உங்களுக்கும், இதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

நீங்கள் இப்படி இருப்பதற்கு, அடுத்தவர்தான் காரணம் என்று நீங்கள் நினைத்தால், நீங்கள் உடலளவில் அதிக உறவு கொண்டும், ஆத்மா அளவில் அந்நியமாகவே இருக்கிறீர்கள். நான் சொல்லுவது என்னவென்றால், நீங்கள் உங்ளுடைய பொறுப்பை உணர்ந்தால், திடீரென்று ஒரு சுதந்திர உணர்வு உங்களை வந்து ஆக்ரமிப்பதை உணருவீர்கள். நீங்கள் பொறுப்பை முழுமையாக ஏற்றுக் கொள்ளுங்கள். அப்பொழுது நீங்கள் அதிக அளவில் ஆத்மாவாக இருப்பீர்கள்.

புத்தர் போன்ற ஆத்மிகவாதிகள், இந்த முழு உலகத்திற்கும் பொறுப்பாக உணர்கிறார்கள். புத்தர் அடுத்த முனைக்கு சென்று விடுகிறார். அவர், "நான் துன்பத்தை ஏற்றுக் கொண்டால், நான் துன்ப அலைகளை என்னைச் சுற்றிப் படரவிடுகிறேன்," என்கிறார். ஒரு துன்பம் நிறைந்த மனிதன் ஒருவித துன்ப அலைகளைத்தான் உண்டு பண்ணுகிறான். ஒரு ஹிம்சைவாதி ஹிம்சையைத்தான் உண்டாக்குகிறான். ஒரு கோபம் உள்ளவன், கோபத்தைத்தான் தன்னைச் சுற்றி உண்டுபண்ணுகிறான். ஒரு அன்பான மனிதன், அன்பைத்தான் உண்டு பண்ணுகிறான்.

சாதாரணமாக, இந்த முழுமைதான், கடவுள்தான் நமக்குப் பொறுப்பு என்று நாம் கருதிக் கொண்டு இருக்கிறோம். புத்தர் மறுமுனைக்குச் சென்று, "நான்தான் இந்த முழு உலகத்துக்கும் பொறுப்பு. இந்த உலகம் அசிங்கமாக இருந்தால், அதற்குப் பொறுப்பு நானே. ஏனென்றால், அதை நான் தான் உண்டாக்கினேன். இந்த உலகத்தில் வெறுப்பு இருந்தால், அதற்கு நான்தான் பொறுப்பு. ஏனெனில், அதை நான்தான் உண்டாக்கினேன். அன்பு இருக்கும்பொழுது, நான் வெறுப்பை பலமுறை தேர்ந்து எடுத்தேன். அதைப்போல, நான் கோபத்தை, காமத்தை மற்றும் பலவற்றை ஏற்படுத்தினேன். அந்த வலிமையான சூழ்நிலை, மற்றவர்களும் அதில் விருப்பங்கொள்ள வைத்தது," என்கிறார்.

ஆகவே, உங்களுடைய நிலைக்கு, நீங்களே பொறுப்பு என்று உணர்ந்தால், நீங்கள் ஆத்மாவாகிறீர்கள். நீங்களே இந்த உலகத்துக்கும் பொறுப்பு என்று நீங்கள் கருதினால், நீங்கள் கடவுளாகிறீர்கள். பிறகு அங்கு தடங்கல்கள் என்று ஏதும் இல்லை. அப்பொழுது, நீங்களே அந்த முழுமையாகிறீர்கள்- 'அடுத்தவர்' இப்பொழுது மறைந்துவிட்டார்.

"மறுபிறப்பைப் பொறுத்தவரையில், நம்முடைய விருப்பம் என்பது எந்த அளவில் உள்ளது," என்று நீங்கள் கேட்கிறீர்கள்.

நீங்கள் தேர்ந்து எடுப்பதில் சுதந்திரமாகவே இருக்கிறீர்கள். சுதந்திரத்தில் அளவு என்று எதுவும் கிடையாது. எப்படி அதில் அளவு இருக்க முடியும்? அளவு உள்ளதை, உங்களால் எப்படி சுதந்திரம் என்று சொல்ல முடியும்? நீங்கள் உங்கள் வீட்டுக்குள் சுதந்திரமாக இருந்து, வெளியே சுதந்திரமாக இல்லாவிட்டால், நீங்கள் சுதந்திரத்தில் இல்லை என்று அர்த்தம். ஒரு வரையறுக்கப்பட்ட சுதந்திரம், சுதந்திரம் அல்ல. அது அடிமைத்தனம்தான், அழகான பெயரில். வரையறுக்கப்படாத நிலையில்தான், சுதந்திரம் சுதந்திரமாகிறது. அதற்கு வேறு அர்த்தம் எதுவும் இருக்க முடியாது. அடிமைத்தனம் என்றால் வரையறுக்கப்பட்டது என்று அர்த்தம். இதை நீங்கள் ஆழமாகப்

புரிந்து கொள்ள வேண்டும். அடிமைத்தனம் ஒருபோதும் எல்லையற்ற நிலையில் இருக்காது. நீங்கள் எல்லையில்லாமல், ஒருவனை அடிமையாக்க முடியாது. ஏனென்றால் அடிமைத் தனம் என்றாலே குறுகியவட்டப் என்றுதான் பொருள். அடிமைத்தனத்தில், பல அளவுகள் உண்டு. நீங்கள் அடிமைத் தனத்தில் அதிகமாகவும் இருக்கலாம் அல்லது குறைவாகவும் இருக்கலாம். ஒரு அளவுவரை, உங்களை நான் அடிமையாக் கலாம். நான் உங்களிடம், "இந்த எல்லைவரை அல்லது எந்த எல்லைவரை, நீங்கள் சுதந்திரமாக இருக்கலாம்" என்று நான் கூறலாம். ஆனால், சுதந்திரத் தன்மையில், அளவு என்று எதுவும் கிடையாது. சுதந்திரம் என்றால் முழுமைதான். அதைக்கண்டு நாம் பயப்படும் அளவுக்கு, அது எல்லையில்லாதது.

'எரிச் புரோம்' (Efich Fromm) என்பவர், 'சுதந்திரத்திலிருந்து தப்பித்தல்' (Escape From Freedom) என்ற மிக அழகிய நூலை எழுதியிருக்கிறார். இந்தத் தலைப்பே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. 'சுதந்திரத்திலிருந்து தப்பித்தல்' அவர் மிகவும் சரிதான்- ஒவ்வொருவரும், சுதந்திரத்திலிருந்து தப்பித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். உதாரணமாக, காதல் சுதந்திரத்திலிருந்து தப்பித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். உதாரணமாக, காதல் சுதந்திரமானது; ஆனால் கல்யாணம் அப்படியில்லை. நீங்கள் காதல் வயப்பட்டால், இப்பொழுதோ அல்லது அப்பொழுதோ உங்கள் மனம் அந்த சுதந்தாத்திலிருந்து தப்பித்து கல்யாணத்தில் நுழையவே விருப்பம் கொள்ளும். காதல் வரைபடம் இல்லாதது, தெரியாதது. அது எங்கே அழைத்துச் செல்லும் என்று யாருக்கும் தெரியாது. மேலும், சுதந்திரம் என்பது எல்லையற்றது-அதைக்கண்டு ஒருவன் பயப்படத்தான் வேண்டும். ஆகவேதான் நீங்கள் ஒரு கூண்டை எல்லைப்படுத்தி வைத்து, அதற்குள் வாழ விரும்புகிறீர்கள். பிறகு, நீங்கள் இருப்பது எங்கே என்று தெரியும்; நீங்கள் சொல்லுவது எங்கே என்று புரியும். நீங்கள் சுதந்திரத்திலிருந்து தப்பிக்கிறீர்கள்.

ஒவ்வொரு வழியிலும், நாம் தப்பித்துக் கொண்டே இருக்கிறோம். ஏன்? ஏனென்றால், சுதந்திரம் என்பது ஒரு

முழுமை: அது மிகப் பெரியது. அதோடு ஒப்பிட்டால், அதை நேருக்கு நேர் சந்திக்க முடியாத அளவு, நாம் மிகச் சிறிதாகவே இருக்கிறோம். நாம் அதோடு வாழ முடியாது. நீங்கள் தனியாக இருந்தால், உங்களிடம் சுதந்திரம் விளங்குகிறது. ஆனால், உங்களுடன் வேறு யாராவது இருந்தாலோ அல்லது நீங்கள் ஒரு கூட்டத்தில் இருந்தாலோ, உங்களுடைய சுதந்திரம் இழக்கப்படுகிறது. ஆகவேதான், நீங்கள் உங்கள் தனிமையிலிருந்து தப்பிக்க முயற்சி செய்கிறீர்கள். யாருமே தனியாக தன் சுதந்திரத்தில் இருக்க விரும்புவது இல்லை. ஒருவருக்கு நண்பர்கள் குழுவும் தேவையாக இருக்கிறது. நீங்கள் அந்தக் குழுவில் இருக்கும்பொழுது, நீங்கள் குறைவான சுதந்திரத்தை யும், அதிகமான அடிமைத்தனத்தையும் உணருவீர்கள்.

டேவிட் ரீஸ்மான் (David Riesman), 'அன்பான கூட்டம்' (The Lovely Crowd) என்ற நூலை எழுதியிருக்கிறார். அதில் மேற்சொல்லியவற்றைப் பற்றிப் பேசியிருக்கிறார். அதில் அவர், 'ஒவ்வொருவரும் ஒரு கூட்டத்துக்குள் தப்பிச் செல்லவே விரும்புகிறார்கள். ஏனென்றால், தனிமையை உணருதல், பயத்தையே உண்டு பண்ணும்- தன்னைக் கண்டே பயப்படுவது, தனிமையில் வாழ பயப்படுவது' என்கிறார். ஒவ்வொருவரும் இதையேதான் செய்கிறார்கள். எல்லோரும் ஒரு கூட்டமாக, இருக்க அதில் ஒவ்வொருவரும் தன்னந்தனியாகவே இருக்கிறார்கள்.

ஒருவன், தன்னந்தனியாக இருக்க இலாயக்கில்லை என்றால், அவன் பிறரோடு வாழும் தகுதியை இழக்கிறான். ஒருவன் தன் தன்மையிலேயே அன்பு செலுத்த முடியவில்லையென்றால், தனிமையில் ஆனந்தம் அடைய முடியவில்லை என்றால், அவனால் பிறரிடம் ஆழமான அன்புறவில் இருக்க முடியாது. நீங்கள் உங்களோடு அலுப்புக் கொண்டவராக இருந்தால், நீங்கள் பிறரிடமும் அதே அலுப்பையே உண்டுபண்ணுவீர்கள். ஆகவே, இங்கு கூட்டம் இருக்கத்தான் செய்கிறது: ஆனால் அவை தனிமையான கூட்டங்கள்தான்.

நீங்கள் கேட்கும் சுதந்திரம், மிகப்பெரிய சுதந்திரம்: அதாவது ஒருவன் தன் வாழ்க்கையை, தன் விருப்பப்படி தேர்ந்து எடுத்துக் கொள்ளுவது மற்றும் தன்னைத்தானே தேர்ந்து எடுத்துக் கொள்ளுவது என்பது. ஆனால், அப்படிச் செய்ய ஒருவர் பயப்படுவார். அதற்கு மாறாக, வேறு ஒருவரிடம் சரணாகதியடைவது மேலானது ஆகும். உங்களுக்காக அடுத்தவர் பொறுப்பேற்பதை நீங்கள் அனுமதிப்பது சரியாகும்- அந்த அடுத்தவர் இதில் உங்களைவிட புத்திசாலி யாகவும், அனுபவசாலியாகவும் மற்றும் உங்களை வழிநடத்திச் செல்லுபவராகவும் இருந்தால். ஆக, நாம் தப்பித்துக் கொண்டேதான் இருக்கிறோம்!

நான் பல பேரைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் என்னிடம் வந்து, "என்னால் எதுவும் செய்ய முடியாது. நான் உங்களிடம் சரணாகதியடைகிறேன். எனக்காக ஏதாவது செய்யுங்கள்" என்று கூறுவார்கள். இது எனக்கு எப்பொழுதும் ஆச்சரியத்தையே கொடுக்கும். உங்களால் எதுவுமே செய்ய முடியாவிட்டால், உங்களால் எப்படி சரணாகதி மட்டும் அடைய முடியும்? சரணாகதி என்பது பெரிய விஷயம். ஆனால், மக்கள், "என்னால் எதுவுமே செய்ய முடியாது. ஆகவே, உங்களிடம் சரணாகதியடைகிறேன்" என்று சொல்லுகிறார்கள். அதாவது சரணாகதி என்பது ஒன்றுமற்றது போலவும், அது ஒரு செய்கையில் சேர்த்தி இல்லாதது போலவும். நீங்கள் உங்கள் வாழ்க்கையைத் தேர்ந்து எடுக்காவிட்டால், உங்களால் எப்படி சரணாகதி மட்டும் அடைய முடியும்? நீங்கள் எதையுமே தேர்ந்து எடுக்கவில்லை என்று நினைத்தால், நீங்கள் வாழ்க்கையோடு இயைந்து, அதன் நோக்கப்படி செல்லுவதாக இருந்தால, உங்களால், "நான் சரணாகதியடைகிறேன்" என்று எப்படிச் சொல்ல முடியும்? சரணாகதியடைவதற்கு நீங்கள் யார்?

அது முடியாது! சரணாகதி என்பது முழுமையான செயல். ஒரு மிகப் பெரிய செயல். ஒருவன் தன்னை முழுமையான சுதந்திரத்தில் உணர்ந்தால் தான், அவனால் சரணாகதியை

எதிர்கொள்ள முடியும்; ஒரு அடிமையால் அல்ல. ஒரு அடிமை எப்படி சரணாகதியடைய முடியும்? ஒரு தகுதி வாய்ந்தவனால் மட்டுமே, ஒரு மதிப்பு மிகுந்தவனால் மட்டுமே, சரணாகதி யடைய முடியும். உங்களால் சரணாகதியடைய முடிந்தால், உங்களால் எதையும் செய்ய முடியும்.

சுதந்திரத்தை நீங்கள் ஆழமாகப் புரிந்து கொள்ள வேண்டும்; அதை ஒரு கொள்கையால் அல்ல. அதை நாம் வாழும் சூழ்நிலையாக. நாம் சுதந்திரத்தில் இருக்கிறோம். இந்தக் கணமே, நீங்கள் உங்கள் பின்பக்கத்தில் திரும்பலாம். ஒரு குறிப்பிட்ட பகுதிக்குள் உங்களை செலுத்த, எந்த விதியும் இல்லை; எந்த இறந்த காலமும் உங்களை வழி நடத்தவில்லை. எந்த எதிர் காலமும் உங்களை இழுக்கவில்லை. நீங்கள் மட்டுமே, நீங்கள் மட்டும்தான். நீங்கள் இந்தக் கணமே திரும்பி, உங்களையே மாற்றிக்கொள்ளலாம். நீங்கள் மாறலாம்; நீங்கள் முழுமையாக மாறலாம். நீங்கள் ஆத்மாவாகாலம்; உடலாக அல்ல.

சுதந்திரத்தில் எந்த அளவு நிலையும் கிடையாது. சுதந்திரத்தில் அளவு என்றோ அல்லது தேர்ந்து எடுக்கக்கூடிய அளவு என்றோ எதுவும் இல்லை என்று நான் சொல்லும்பொழுது, ஞான விழிப்பு பெறுவதற்கும் அளவு என்று எதுவும் கிடையாது என்று நான் இப்பொழுதும் சொல்லிக் கொள்ளுகிறேன்.

நீங்கள் திடீரென்று ஞானமடையலாம். அடிமைத்தனத்தில், அளவு இருப்பதற்கு மாறாக, சுதந்திரத்தில் எந்த அளவும் கிடையாது. அறியாமையில் அளவு நிலை இருக்கலாம்; ஆனால் அறிதலில் அளவு நிலை என்று எதுவும் கிடையாது என்று நீங்கள் அதை அறிய வேண்டும் அல்லது அறியாது இருக்க வேண்டும்.

மக்கள் என்னிடம் வந்து, "யார் அதிக ஞானம் பெற்றவர்கள்? புத்தரா அல்லது மஹாவீரரா அல்லது கிருஷ்ணரா அல்லது கிறிஸ்துவா?" என்று கேட்கிறார்கள்; அதில் ஏதோ அளவு நிலை இருப்பது போல! ஞான விழிப்பு நிலையில், அளவு நிலை இருக்கிறது என்று பழங்கால மத ஏடுகளில் எழுதி

வைத்திருக்கிறார்கள். இவர்கள் முட்டாள்கள். ஞான விழிப்புநிலையில், கனவு நிலை என்று எதுவும் கிடையாது.

யார் முழுமையாக மாற்றம் அடைகிறார்களோ, அவர்களால் குதிக்க முடியும். ஞான விழிப்பை அடைவது என்பது ஆன்மிகக் குதித்தல்தான். புத்தர் மற்றும் மஹாவீரரின் அறியாமையில் வேண்டுமானால், பல அளவுநிலைகள் இருக்கலாம். ஆனால் எந்தக் கணத்தில் வர்த்தமான்- மஹாவீரரின் பழைய பெயர், அல்லது சித்தார்த்தர்- புத்தரின் பழைய பெயர்- மாற்றம் அடைந்தனரோ அல்லது மறைந்தனரோ அவர்களுடைய அறிதலில் அல்லது மாறுதலில் எந்த அளவு நிலையும் இல்லை. அவர்களுடைய முழு வாழ்க்கையில் பேரானந்தம் ஊடுருவுகிறது.

அதைப்போல, வெறுப்பில் அளவு நிலை இருக்கிறது; ஆனால் அன்பில் அப்படி எதுவும் இல்லை. அதைப்போல கோபத்தில் அளவுநிலை இருக்கிறது. ஆனால் மன்னித்தலில் எந்த அளவும் கிடையாது- ஒன்று நீங்கள் மன்னிக்க வேண்டும் அல்லது மன்னிக்க வேண்டாம். பாபத்தில் அளவுநிலை உண்டு. ஆனால், புண்ணியத்தில் அளவு நிலை கிடையாது- அப்படி இருக்கவும் முடியாது.

நீங்கள் உங்கள் விருப்பப்படி நடந்து கொள்ள, நீங்கள் முழுமையான சுதந்திரத்தில் இருக்கிறீர்கள்; எல்லையில்லாத சுதந்திரத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் இறப்பையும், பிறப்பையும் பல பிறவிகளாக, பல லட்சம் வருடங்களாக தேர்ந்து எடுத்துக் கொண்டே இருக்கலாம். நீங்கள் மாற வேண்டும் என்று யாரும் உங்களிடம் கூறமாட்டார்கள். நீங்களே போதும் என்று நினைத்தாலொழிய, நீங்கள் மாற மாட்டீர்கள்; உங்களால் மாற முடியாது. புத்தர், "இது போதும், நான் எல்லையோடு இருந்தது போதும். இனிமேல் அதைப்போல ஒருக்காலும் இருக்க மாட்டேன்" என்று சொன்னார்.

இதை ஏற்றுக்கொள்ளுவது கடினம்தான். ஏனெனில், ஒவ்வொன்றிலும் அளவு நிலை இருக்கும் என்றுதான் உங்கள்

தர்க்கம் நினைக்கும். உங்களுடைய பகுத்தறிவு, "எல்லாவற்றிற்கும் எல்லைகள் இருக்கும்பொழுது, நான் எப்படி முழு சுதந்திரத்தில் இருக்க முடியும்" என்று கேட்கும். ஆமாம். அப்படித்தான். ஆனால் அதை உண்டாக்கியது நீங்கள் தான்.

தர்க்கத்தில் அதைப் புரிந்து கொள்ள முடியாது. ஏனெனில், தர்க்கம் என்பது உங்களுடைய மனதின் ஒரு பகுதிதான். வளைந்து கொடுக்காத மாறுபட்ட நிலைகளை வைத்துதான், உங்களுடைய தர்க்கம் எப்பொழுதும் எண்ணும் மற்றும் வாழும். தர்க்கப்படி, ஒன்று வெண்மை இருக்க வேண்டும் அல்லது கருப்பாக இருக்க வேண்டும்; அதைப்போல ஒன்று நீங்கள் சுதந்திரத்தில் இருக்கவேண்டும். அல்லது சுதந்திரத்தில் இருக்கக்கூடாது. தர்க்கத்தில், பழுப்பு நிறம் என்று எதுவும் கிடையாது. ஆனால், வாழ்க்கையைப் பொறுத்தவரையில், பழுப்பு நிறம்தான் உண்மையான தன்மை; வெண்மை, பழுப்பின் ஒரு முனை, கருப்பு என்பது பழுப்பின் அடுத்த முனை.

நீங்கள் சுதந்திரமாக இருக்கிறீர்கள் என்று நான் சொல்லும்பொழுது, நீங்கள் சுதந்திரமாக இருக்க வேண்டாம் என்று இருப்பதற்கும் அல்லாது அடிமையாக இருப்பதற்கும் உங்களுக்கு முழு சுதந்திரம் உண்டு என்றும் நான் கூறுகிறேன். நீங்கள் சுதந்திரமற்ற நிலையில் இருப்பதற்கும் நீங்கள் தீர்மானிக்கலாம்; உங்களுடைய சுதந்திரம் அப்படிப்பட்டது. அப்படி நீங்கள் சுதந்திரமற்று இருப்பதற்கு உங்களுடைய சுதந்திரம் இடம் கொடுக்கவில்லை என்றால், அது முழு சுதந்திரமாகாது.

இதுதான் பிரச்சினை. சாதாரணமாக, தர்க்கம், "மனிதன் சுதந்திரமாக இருந்தால், எதற்காக அவன் சுதந்திரமற்றும் இருக்க வேண்டும்? மனிதன் தெய்விகமாக இருந்தால், ஏன் அவன் தெய்விகமற்று இருக்க வேண்டும்? மனிதன் பேரானந்தமாக இருந்தால், ஏன் அவன் பேரானந்தத்தில் இருக்கக்கூடாது?" என்று தான் கேட்கும். ஆனால், நான், "மனிதன் சுதந்திரமற்று இருக்கிறான்; ஏனெனில் அவன் முழு சுதந்திரத்தில்

இருக்கிறான்- அவன் அப்படி இருக்க தீர்மானித்தான்" என்று கூறுகிறேன். அதைப்போல, அவன் சுதந்திரமாக இருக்கவும் தீர்மானித்துக் கொள்ள முடியும்- அப்படியே சுதந்திரமாக இருக்கவும் முடியும். அல்லது அவன் இயற்கைக்கு மாறாகவும், தனக்கே எதிராகவும் இருக்க முடியும். இதுதான் முழு சுதந்திரம் உங்களுக்கு வழங்குகிறது. அப்பொழுது நீங்கள் இயற்கைக்கு மாறாகவும் இயங்க முடியும் அல்லது உங்களுடைய பிரக்ஞை நிலையை விரிவு படுத்தவும் முடியும். அல்லது அதை விரிவு படுத்தாமலும் இருக்க முடியும். நீங்கள் சுதந்திரத்தில், பொறுப்புத் தன்மையிலும் இருக்க முடியும் அல்லது உங்களையே அழித்துக் கொண்டும் இருக்க முடியும்.

மிருகங்கள் சுதந்திரமாக இல்லை- இது என்ன அர்த்தம் என்றால், அவை அதிகமாக பிரக்ஞையற்ற நிலையில் இருக்கின்றன என்பதுதான். அவை, இயற்கையின் நிலையான உணர்வு உந்துதலால் செயல்படுகின்றன. அவை, தன் நோக்கப்படி, எதையும் தீர்மானிக்க முடியாது. அவற்றிடம் நிலையான உணர்வு உந்துதல் தான் இருக்கின்றன. அதனை மிருகங்கள் கட்டாயமாகப் பின்பற்ற வேண்டும்.

ம்னிதனிடம் நிலையான உந்துதல் கிடையாது. கட்டுப் படுத்தப்பட்ட இயற்கை உந்துதல் என்று மனிதனிடம் கிடை யாது. மனிதன் முழு சுதந்திரத்தில் இருக்கிறான். அவனால் கீழேயும் விழ முடியும்; மேலேயும் எழ முடியும். அவனால் விலங்கைவிட கீழான நிலைக்கும் செல்ல முடியும். அவனிடம் எந்த நிலையான தன்மையும் கிடையாது.

நீங்கள் எந்த அளவுக்கு பிரக்ஞையாக இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் சுதந்திரமாக இருக்கிறீர்கள் அல்லது குறைவான எல்லைக்குள் இருக்கிறீர்கள். அல்லது குறைவான கட்டுப் பாட்டில் இருக்கிறீர்கள். அதைப்போல, நீங்கள் எந்த அளவுக்கு நீங்கள் பொறுப்பாக இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் ஆபத்திலும் இருக்கிறீர்கள். நீங்கள் முழு பிரக்ஞையாக, விழிப்புணர்வாக இருந்தாலொழிய, உங்களால் அந்த அபாய

மாறுதல்களிடமிருந்து தப்பிக்க முடியாது. ஆனால், அதிலிருந்து தப்பிக்க முயற்சி செய்வதைவிட, அதை ஏற்றுக்கொள்ளுவது மேல். ஏனெனில், இந்த அபாயங்கள் அனைத்தும் உங்களை மேலும் மேலும் விழிப்புணர்வில் ஆழ்த்தும். தப்பித்தல் பிரக்ஞையற்ற தன்மையைத்தான் உண்டு பண்ணும்; அது விழிப்புணர்வற்ற தன்மையை, சோம்பேறித்தனத்தை மற்றும் தூக்கத்தைத்தான் ஏற்படுத்தும்.

"நீங்கள் இறக்கும் பொழுது, ஆத்மா உடலிலிருந்து வெளியேறுகிறதா? அது எங்கே செல்லுகிறது?" என்று கேட்கிறீர்கள்.

ஏதோ இன்னும் மீதி இருக்கிறது என்றும், ஏதோ வெளியேறுகிறது என்றும் நினைப்பதே பொய். இந்த முழு உடலே, விதை வடிவத்தில் இருக்கிறது; அதனுடைய வெளித் தோற்றம் விதையின் ஓடாக இருக்கிறது. ஆத்மா உடலிலிருந்து வெளியேறும் பொழுது, அதை மென்மையான உடல்கள் (Subtle bodies) தொடர்ந்து சூழ்ந்து கொண்டே இருக்கின்றன. இந்த உடல்களும், உங்களுடைய வெளியே காணப்படும் உடலின் பகுதிதான்.

என்னுடைய இந்த உடல், இந்த பிரபஞ்சத்தின் ஒரு பகுதிதான். ஆனால், இது நம்முடையது என்று நாம் நினைத்துக் கொள்ளுவதால், அது ஒரு பிரச்சினையாகிறது; அதாவது இந்த உடல் எங்கே முடிகிறது என்று கேள்வி எழும்புகிறது.

நீங்கள் இதில் ஆழமாகச் சென்றால், இந்த முழு பிரபஞ்சமே, உங்களின் ஒரு அங்கமாக, உங்களுடைய உடலின் ஒரு அங்கமாக புரிந்து கொள்ளுவீர்கள். உதாரணமா, இந்த சூரியன் இந்தக் கணம் அழிந்தால் உங்களுடைய உடல் ஒருநாளும் ஜீவிக்க முடியாது; இந்தக் கடல் இந்தக் கணம் மறைந்தால், உங்களால் உடல் தரிக்க முடியாது; இந்தக் கணம், இந்தக் காற்று மண்டலம் இல்லாது போனால், உங்களால் உயிரோடு இருக்க முடியாது. இந்தப் பிரபஞ்சத்தின் தொடர் மாறுதலின் ஒரு பகுதிதான் உங்களுடைய உடல். சூரியன் மேலே எழும்பினால், உங்கள்

உடலிலும் ஏதோ மேலே கிளம்புகிறது. சூரியன் மறைந்தால், உங்கள் உடலிலும் ஏதோ மறைகிறது. பௌர்ணமி நிலாவில், நீங்கள் வேறுவிதமாக செயல்படுகிறீர்கள். அமாவாசையில், உங்களுடைய குணம் மாறுதல் அடைகிறது. உங்ளுடைய உடல், இந்தப் பிரபஞ்ச இயக்கத்தோடு எப்பொழுதும் ஒத்து மாறிக்கொண்டே இருக்கிறது.

நீங்கள் எங்கே இருந்தாலும், எந்த நிலையில் இருந்தாலும், நீங்கள் உடலில்தான் இருக்கவேண்டும். உங்களுடைய உடலை இந்தப் பிரபஞ்சம் எடுத்துக் கொண்டால், இந்தப் பிரபஞ்சமே வேறு ஒரு உடலை உங்களுக்குக் கொடுக்கும்- நீங்கள் பிரக்ஞையாக இந்த முழு பிரபஞ்சத்தோடு ஒன்று கலந்தால். அன்றி, பிறகு உங்களுக்கு உடல் தேவையில்லை. ஏனென்றால், இந்தப் பிரபஞ்சத்துக்கே உடல் ஏதும் இல்லை.

தனிப்பட்டவருக்கு, உடல் மிகவும் தேவை. ஆனால், உங்கள் உடல் எங்கே முடிவடையும் மற்றும் அது எங்கே ஆரம்பிக்கும்? இது ஒரு பிரச்சினைதான். இது பல பரிமாணம் கொண்ட பிரச்சினைதான். உங்கள் உடல் ஒரு நீண்ட தொடரின், ஒரு தெய்விகத் தொடரின் ஒரு பகுதிதான். உங்கள் உடல் இந்த மரங்களிலும், கடல் மற்றும் அனைத்திலும் வாழ்கிறது. முழுமையை ஒத்து, இது ஒரு மிகச்சிறிய பிரபஞ்சமாகவே விளங்குகிறது.

நமது மொழி வளமில்லாது, எல்லைப்படுத்தப்பட்டதாகவே இருக்கிறது. ஆகவே, நமது உடலிலிருந்து வெளியே செல்லுகிறது என்று நாம் சொல்லும்பொழுது அது தவறான அர்த்தத்தை ஏற்படுத்துகிறது. ஆத்மா உடலைவிட்டு அகன்று, பிரபஞ்சம் என்னும் உடலுக்குள் சென்று விடுகிறது. ஆனால், பிரபஞ்சம் தொடர்ந்து அதற்கு வேறு ஒரு உடலைக் கொடுத்துக் கொண்டே இருக்கிறது. நீங்கள் அகற்றிய அந்த பிரபஞ்ச உடல் இன்னும் உங்களோடு சம்பந்தப்பட்டுத்தான் இருக்கிறது. ஏனென்றால், அந்த முழுமை இன்னும் உங்களோடு உறவு கொண்டு தான் இருக்கிறது.

நீங்கள் கடலில் நீச்சலடிக்கிறீர்கள். அப்பொழுது, கடலின் ஒரு பகுதியை பின்னே தள்ளிவிட்டு, முன்னே செல்லுகிறீர்கள். ஆனால், நீங்கள் பின்னே தள்ளிய அந்தப்பகுதி, இன்னும் கடலின் ஒரு பகுதியாகவே இருக்கிறது. கடலிலே பிறந்து, கடலிலேயே நீச்சலடித்து கடலிலேயே கரைந்துவிடும் மீனைப் போல, நீங்கள் அந்த ஒருமையான கடலில் நீச்சலடிக்கிறீர்கள். மீன் என்பது கடலைத் தவிர வேறல்ல. அது ஒரு நிலையில் உருவம் எடுத்து பிறகு திரும்பவும் அந்தக் கடலிலேயே கரைந்து விடுகிறது.

வாழ்வில் வருவது மற்றும் வாழ்விலிருந்து மறைவது என்ற கொள்கை மிகப் பழமையானது. இந்தப் பிரபஞ்சத்தைத் தவிர்த்து, உங்களால் எங்கும் செல்ல முடியாது. நீங்கள் அதில் எங்கே சென்றாலும், இந்தப் பிரபஞ்சம் உங்களுக்கு உடலாகவே இருக்கிறது. உங்களுடைய உடல், உங்களுடைய உடல் மாத்திரம் அல்ல. அது பல ஆத்மாக்களின் உடலாகவும் இருக்கிறது. நீங்கள் அதில் ஒன்றாக இருக்கிறீர்கள். உங்கள் உடலில் உள்ள ஒவ்வொரு திசுவிடமும் ஆத்மா கலந்திருக்கிறது. ஒவ்வொரு உடலிலும், 70 மில்லியன் ஆத்மாவோடு கூடிய திசுக்கள் இயங்குகின்றன.

உங்கள் உடல் பல ஆத்மாக்களின் கூட்டம்; ஒரு பெரிய நகரத்தில் பல ஆத்மாக்கள் வசிப்பது போல. நீங்கள் அந்த பல ஆத்மாக்களில் ஒன்றாக இருக்கிறீர்கள். உங்கள் உடலின் ஒவ்வொரு பாகமும், அதற்கே உரிய ஆத்மாவுடன் கலந்து இருக்கிறது. நீங்கள் இல்லாமலேயே, அது வாழும், வளரும். நீங்கள் இல்லாமலேயே, அது காதல் வயப்படும் மற்றும் இன்னொன்றையும் பிறப்பிக்கும். நீங்கள் தேவையில்லை. ஆகவே, நீங்கள் உங்கள் உடலை விட்டு அகன்ற பிறகு, அந்த உடல் ஒரு வாழும் பொருளாகவே இருக்கிறது; மையமான ஆத்மா அகன்றுவிட்டது. ஆனால் உங்கள் உடலில் உள்ள பல மில்லியன் திசுக்கள் இன்னும் வாழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. அது உங்களைப் போன்று வேறு ஒரு உருவத்தை எடுக்கும்.

ஆகவே, இது மிகவும் சிக்கலான இயற்கைக் கூற்று. ஆனால், ஒன்று மட்டும் நிச்சயம். அதாவது, எதுவுமே இறக்கவில்லை. நாம் கடல் போன்ற வாழ்க்கையில், ஒரு அங்கமாக இருக்கிறோம். நாம் ஒரு வாழும் இயல்பு அல்லது தன்மை.

இதை நம்மால் புரிந்து கொள்ள முடியாது தான். ஏனெனில், நாம் ஒரு குறிப்பிட்ட கோணத்திலேயே, இந்தப் பிரபஞ்சத்தைப் பார்க்கிறோம். அந்தக் கோணம் சஞ்சலத்துக்குரியது. அந்தக் கோணம் மறைந்துவிட்டால், அதிலிருந்து பார்க்கக்கூடிய எந்த அகங்காரமும் அங்கு இருக்காது. அப்பொழுது, நான் இறந்தால், செல்லுவேன் என்று சொல்லுவதற்கு அங்கு யாரும் இருக்க மாட்டார்கள். நீங்கள் இருந்து கொண்டே தான் இருக்கிறீர்கள். தொடர்ந்தும் இருப்பீர்கள். எல்லாமே கரைந்து மறைந்தாலும், எதுவுமே உண்மையாகக் கரையவில்லை; எதுவுமே முடிவுக்கு வரவில்லை. ஆனால், அது எப்பொழுது சாத்தியம் என்றால், அங்கே, 'இது தான் நான்' என்று சொல்லக்கூடிய, அகங்காரம் அல்லது தன் முனைப்பு இல்லாவிட்டால்தான்.

நாம் இந்தப் பிரபஞ்சத்தின் மையமாக இருக்கிறோம் என்று நாம் நினைத்துக் கொண்டு இருக்கிறோம். எப்படி மனித இனம் ஆரம்பத்தில், இந்தப் பூமிதான் இந்தப் பிரபஞ்சத்தின் மையம் என்று எண்ணியது போல. ஆனால், எல்லா விஞ்ஞானமும், இது பொய் என்று நிரூபித்து விட்டது அதைப்போல, பூமியைச் சுற்றிச் சுற்றி சூரியன் வலம் வருகிறது என்பதும் பொய்யாகி விட்டது. ஆனால், இன்றும் பார்ப்பதற்கு அது உண்மை போலவே தோன்றுகிறது. நாம் வானத்தைப் பார்த்தால், பூமியை சூரியன் தான் சுற்றி வருவது போலத் தெரிகிறது. ஆனால், இது உண்மை இல்லை.

இதே இயற்கை நிகழ்வுதான், மிக ஆழமான நிலையிலும் நிகழ்ந்து கொண்டு இருக்கிறது. மதத்தில் கூட, நாம் தன்முனைப்பு உடையவர்களாகவும், பூமியைச் சார்ந்தும் இருக்கிறோம். எல்லாமே நம் தன் முனைப்பைச் சுற்றியே வலம் வருவதாக நாம் நினைத்துக் கொண்டு இருக்கிறோம். இது ஒரு பொய்யான

தோற்றம். உண்மை நிலை என்னவென்றால், நீங்கள்தான் இந்தப் பிரபஞ்சத்தை வலம் வருகிறீர்கள். நீங்கள் அதில் ஒரு அங்கமாக இருக்கிறீர்கள்; அதைத் தவிர, வேறுவிதமாக நீங்கள் இருக்க முடியாது.

உங்களுடைய தன் முனைப்பை மையமாக வைத்து, நீங்கள் எதை நினைத்தாலும், அது தவறாகவே இருக்கும். என்னைப் பொறுத்தவரையில், சரி அல்லது தவறு என்பது வேறு ஒரு பரிமாணம் கொண்டது; தன் முனைப்பை மையமாக வைத்த எதுவும், என்னைப் பொர்றுத்தவரையில், தவறுதான். தன் முனைப்பை மையமாக வைக்காத எல்லாமே, சரியே. நீங்கள் இந்தப் பிரபஞ்சத்தோடு ஒன்றினாலொழிய, உங்களுடைய தன்முனைப்பு கரைந்து மறைந்தாலொழிய, உங்களிடம் சரியான நோக்குதல் ஏற்படாது.



"இந்தப் பாதுகாப்பற்ற, புரியாத ஆத்மிக சூழ்நிலையில், ஆத்மிக உலகத்தில் (Astral World) உள்ள தெய்விக ஆத்மாக்களிடமிருந்து எப்படி நாம் உதவியை அடைவது? அந்த மேலான ஆத்மாக்களுக்கு, நாம் எப்படி ஒரு திறப்பாக இருக்க முடியும்?"

ஒரு பழைய பழமொழி: அதாவது, "சீடன் தயாராக இருக்கும் பொழுது, ஆசான் தோன்றுவார்" என்று. ஒரு சீடனால் தகுந்த ஆசிரியரைத் தேர்ந்து எடுக்க முடியாது. அது ஒருக்காலும் முடியாது. ஆசிரியரால் தான், தகுந்த சீடனைக் கண்டுபிடிக்க முடியும். தன்னையே அறிந்த ஒருவனால் தான், மற்றவனையும் அறிந்துகொள்ள முடியும். அப்பொழுதுதான் அது சுலபமாக இருக்கும்.

நீங்கள் தயாராக இருந்தால், இந்தப் பிரபஞ்சமே உங்களுக்கு உதவி செய்ய ஆரம்பிக்கும். நீங்கள் எங்குமே செல்லத் தேவையில்லை; எந்த ஒரு தெய்விகச் சக்தியின் உதவியையும் நாடத் தேவை இல்லை. உதவிகள் உங்களுக்கு எப்பொழுதும் கொடுத்துக் கொண்டே இருக்கப்படும்- தேவை எப்பொழுதும் பூர்த்தி செய்யப்படும். ஆனால், ஒருவன் அதற்கு எப்பொழுதும் தயாராக இருக்க வேண்டும். அந்தப் பிரபஞ்ச மகாசக்தி உங்களுக்கு உதவி செய்யக்கூடிய வகையில், ஒருவன் தயாராக, திறந்த மனநிலையில் இருக்கவேண்டும். ஆகவே, இது ஒரு

சார்பான (Postive) தேடுதல் அல்ல. ஏனென்றால், உங்களால் ஒரு குறிப்பிட்ட ஆத்மிகத் தன்மையின் உதவியை நாட முடியாது. உதவி என்பது உங்களுடைய வாங்கும் தன்மையை யும், உங்களுடைய தயார் நிலையையும் ஒத்ததாகிறது.

மேன்மையான சக்திகள் ஒவ்வொரு கணமும், எல்லா இடத்திலேயும் இருந்து கொண்டேதான் இருக்கின்றன. இந்தக் கணத்தில், நீங்கள் மேன்மையான மற்றும் கீழான சக்திகளால் சூழப்பட்டிருக்கிறீர்கள். ஆனால், நீங்கள் சாதாரணமாக, கீழான சக்தியையே வாங்கும் தன்மையில் இருக்கிறீர்கள்.

ஒன்று, நீங்கள் மேலான சக்திக்கோ அல்லது கீழான சக்திக்கோ திறப்பாக இருக்க முடியும்; நீங்கள் இரண்டுக்கும் திறப்பாக இருக்க முடியாது. பிரக்ஞைத்தன்மையின் அடிப்படைச் செயல்பாடு என்னவென்றால், நீங்கள் கீழான நிலைக்குத் திறப்பாக இருந்தால், மேலான நிலைக்கு மூடுதலாகவே இருப்பீர்கள். அதைப்போல, நீங்கள் மேலான சக்திக்குத் திறப்பாக இருந்தால், கீழான சக்திக்கு மூடுதலாகவே இருப்பீர்கள். நம்மிடம் ஒரே ஒரு திறப்புதான் இருக்கிறது; அதை எந்த மார்க்கத்தில் செலுத்துவது என்பது உங்களுடைய தீர்மானத்தில் தான் இருக்கிறது.

நீங்கள் முதலில் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன வென்றால், எப்படி கீழான சக்திகளுக்கு மூடிக்கொள்ளுவது என்பதையும், எப்படி மேலான சக்திக்கு திறப்பாக இருப்பது என்பதையும் தான். மேலான சக்திகளும் அங்கே இருக்கவே செய்கின்றன. ஆனால், அவற்றோடு நீங்கள் ஒருங்கிணைந்து செயல்படாவிட்டால், நீங்கள் அவற்றுக்கு உங்களை முழுமையாகக் கொடுக்காவிட்டால், அவற்றால் வேலை செய்ய முடியாது. நீங்கள் எப்பொழுது அதற்குத் திறப்பாக இருக்க ஆரம்பிக்கிறீர்களோ, அப்பொழுதே அது வேலை செய்ய ஆரம்பித்து விடுகிறது. கதவு திறக்கும் பொழுது, சூரியன் உள்ளே வர ஆரம்பிக்கிறது. ஆனால், உங்களுடைய கதவுகள் மூடப்பட்டிருக்கிறது. சூரியன் உங்கள் கதவை வந்து அடையும்

பொழுது, நீங்கள் இருட்டில் இருக்கிறீர்கள். சூரியன் இல்லாததால், நீங்கள் இருட்டில் இருக்கவில்லை; ஆனால் உங்களுடைய கதவுகள் மூடப்பட்டிருப்பதால், நீங்கள் இருட்டில் இருக்கிறீர்கள். நீங்கள் சூரியனை வரவேற்கவில்லை; நீங்கள் அதை ஏற்கும் தன்மையில் இல்லை. நீங்கள் அதற்கு விருந்து அளிப்பவனாக இல்லை- வரவேற்பிதழை அதற்கு நீங்கள் அனுப்பவில்லை.

எப்படி ஒருவன் மேலான சக்திகளுக்குத் திறப்பாகவும் மற்றும் கீழான சக்திகளுக்கு மூடுதலாகவும் இருப்பது? நாம் கீழான சக்திகளுக்குத் திறப்பாக இருப்பது குறித்து, நமக்கு எந்தப் பிரச்னையும் கிடையாது; இருந்தும், நம்மோடு வேலை செய்யக்கூடிய மேலான சக்திகளைத் தேடியவாறே இருக்கிறோம்...

உதாரணமாக, உங்களிடம் யாராவது காதல் செய்தால், நீங்கள் அதைப்பற்றி எப்பொழுதும் சந்தேகமாகவே இருக்கிறீர்கள்- அது உண்மையான காதலா அல்லது இல்லையா என்று. நீங்கள் உண்மையாகத்தான் காதலிக்கப் பட்டிருக்கிறீர்களா, இல்லையா? உங்களைக் காதலிப்பவன் உண்மையானவனா அல்லது ஏமாற்றுக்காரனா? யாராவது உங்கள் மேல் கோபம் கொண்டால், நீங்கள் அது உண்மையான கோபம்தானா அல்லது ஏமாற்று வேலையா என்று ஒரு போதும் சந்தேகப்படுவது இல்லை. அதில் எந்த சந்தேகமும் இல்லை. அந்தக் கோபம் உண்மையானதுதான் என்று நாம் இயல்பாக எடுத்துக் கொள்கிறோம். ஆனால் காதலை அப்படி நாம் ஒரு போதும் எடுத்துக் கொள்ளுவது இல்லை. நீங்கள் எப்பொழுதுமே கீழான சக்திகளைத்தான் நம்புகிறீர்கள்; நீங்கள் அதில் ஆழமான நம்பிக்கையை வைக்கிறீர்கள்.

நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். நம்பிக்கைதான் (Faith) அந்தத் திறப்பு. நம்பிக்கை என்றால் ஆழ்ந்த உறுதிப்பாட்டோடு கூடிய நம்பிக்கை(Trust) யாகும். நீங்கள் எதையெல்லாம் நம்புகிறீர்களோ, அதற்கு நீங்கள் திறப்பாக

இருக்கிறீர்கள். நம்பிக்கையற்ற மனம் மூடியவாறே இருக்கும். ஏனென்றால் அது பயத்தில் இருக்கிறது. ஆகவே, நீங்கள் நம்பிக்கையற்று இருந்தால், உறுதியான நம்பிக்கையற்று இருந்தால், நீங்கள் மூடியவாறே இருப்பீர்கள்.

நீங்கள் முதலில் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால், நீங்கள் எதை மிக அதிகமாக நம்புகிறீர்கள், கீழான நிலைகளையா அல்லது மேலான நிலைகளையா? பகுத்தறிவை உபயோகிக்காமல், எந்தவித சந்தேகமும் இல்லாமல், மேற்கொண்டு அதைப்பற்றி எண்ணாமல், நீங்கள் கீழான சக்திகளை, அல்லது நிலைகளை முழுமையாக நம்பினால், அந்தக் கீழான நிலைதான் உங்களைப் பொருத்து உண்மையாகிறது.

குருட்ஜீவின் 9வது வயதில், அவருடைய தகப்பனார் தன் மரணப்படுக்கையில் அவரிடம், "நான் மிக ஆழமாக என் வாழ்க்கையில் அடைந்த அனுபவத்தைத் தவிர, என்னால் உனக்கு வேறு எதுவும் இப்பொழுது கொடுக்க முடியாது. நான் என் வாழ்க்கையில், அதை மாத்திரம்தான் அடைந்தேன். அதை மட்டுமே இப்பொழுது என்னுடைய கடைசி செய்தியாக உனக்கு வழங்குகிறேன், ஒரு சொத்தாக வழங்குகிறேன். அதாவது, யாராவது உன்னிடம் கோபம் கொண்டால், உடனே அதற்கு மறுசெயல் (React) செய்யாது, 24 மணி நேரம் காத்திருந்து, பிறகு அதற்குப் பதில் கொடு. அவ்வளவுதான்" என்றார்.

பிறகு, குருட்ஜீவ், இந்த சிறிய அறிவுரை, என் முழு வாழ்க்கையையே மாற்றிவிட்டது என்று சொன்னார். யாராவது, அவரை இகழ்ந்தாலோ அல்லது குறை கூறினாலோ அல்லது சிறுமைப்படுத்தினாலோ, அவர் உடனே மறு செயல் செய்யாமல், அதை வெறும் சாட்சியாக நின்று பார்த்தார்– அது வெளியே மாத்திரமல்ல, உள்ளேயும் கூடத்தான். அவருக்கு எதிராக சொல்லுபவை அனைத்தையும் மற்றும் செய்பவை அனைத்தையும், அவர் பொறுமையாகக் கேட்டு பிறகு, "நான் உடனே மறுசெயல் செய்ய மாட்டேன். நான் 24 மணி நேரத்திற்குப் பிறகு, மீண்டும் வருவேன். இந்த சத்தியத்தைத்

தான் நான் என் தகப்பனாரிடம் செய்து கொடுத்தேன். ஆகவே, நான் மீண்டும் 24 மணி நேரத்திற்குப் பிறகு திரும்பி வந்து, அதற்குப் பதில் கொடுக்கிறேன்" என்பார்.

ஆனால், அவர் ஒரு போதும் மறுசெயல் செய்ததில்லை! அவர், திரும்பிவந்து, அவர்களிடம், "அந்த சமயத்தில், என் தகப்பனாருக்குக் கொடுத்த வாக்குறுதிப்படி, என்னால் பதில் கூற முடியவில்லை. ஆனால், இப்பொழுதும் கூட, என்னால் அதற்குப் பதில் செயல் செய்ய முடியவில்லை" என்பார்.

இதனால், அவருடைய முழு வாழ்க்கையுமே மாற்றப்பட்டு விட்டது. ஏனென்றால், கீழான நிலைக்குத் திறப்பாக உள்ளது அப்பொழுதே மூடப்பட்டு விட்டது. 24 மணி நேரம் காத்திருத்தல் என்பது மிக நீண்ட நேரம் தான். ஏதோ அழுத்தம் இருந்தால் தான், மனம் திறக்கும்- அதுவும் ஒரு சில விநாடிகளுக்குத்தான். நீங்கள் காத்திருந்தால், மனம் மீண்டும் மூடிக்கொள்ளும். அந்த அழுத்தம், உங்களைத் தாக்காதவாறு செய்துவிட்டால் 24 மணி நேரத்திற்குப் பிறகு, அந்தச் சூழ்நிலை குளிர்ந்து, தானே இறந்துவிடும். சூடான சூழ்நிலையில்தான், மனம் மறுசெயல் செய்யத் துடிக்கும்.

கோபம் மறுபடியும் செயல்படும் தன்மையை இழந்ததால், குருட்ஜீவ் இந்த முறையை வேறு பலவற்றிலும் கூட முயற்சி செய்ய ஆரம்பித்தார். உதாரணமாக, பாலுறவு. அந்த உணர்ச்சி எழும்பொழுது, அவர் உடனே செயல்படாது, தாமதிக்க ஆரம்பித்தார். 24 மணி நேரத்துக்குப் பிறகு, அந்த உந்துதல் மறைவதைக் கண்டார். அவருடைய மனம், கீழான அழுத்தத்தால் இழுக்கப்படவில்லை.

இதைப் பல வருடங்களாகப் பயிற்சி செய்த பிறகு, குருட்ஜீவ் மற்ற மன திறப்புகளைப் பற்றி, திடீரென்று பிரக்ஞையாக உணர ஆரம்பித்தார். ஏனென்றால், சக்தி நீரோட்டம் போல ஓட வேண்டும்; கீழான வெளியேற்றுதல் மூடப்பட்டதால், அது புதிய வெளியேற்றுதலைத் தேட வேண்டியதாகிறது.

உதாரணமாக, பிரார்த்தனைக் கூட்டம் நடக்கும் ஒரு சர்ச்சின் வழியாக ஒருவன் நடந்து செல்லும் பொழுது, அந்த மக்கள் கூட்டத்தைப் பார்த்து, தானும் அந்தப் பிரார்த்தனை செய்யும் மக்களில் ஒருவனாகப் பாவித்து, அந்த அமைதியான பிரார்த்தனையில் பங்கேற்க நினைக்கிறான். இப்பொழுது அவனுடைய மனம், மேலான நிலைக்கு ஏற்றவாறு திறக்க ஆரம்பிக்கிறது.

பிறகு குருட்ஜீவ் வேறு ஒரு ஆழமான தன்மையையும் தன்னிடம் உணர ஆரம்பித்தார். அவர் வீதியில் சாதாரணமாக நடந்து செல்லும் பொழுது, ஒரு சாதாரண மனிதனை சந்திக்க நேர்ந்தால், திடீரென்று குருட்ஜீவ், அவன் சாதாரண மனிதன் இல்லை, அவன் ஒரு ஞானி என்றும் உணர ஆரம்பித்தார். பிறகு அவர் அவனைத் தொடர்ந்து செல்ல, அவன் ஒரு ஞானிதான் என்று ஒவ்வொரு சமயமும் அவர் உணர ஆரம்பித்தார்!

சூஃபி ஞானிகள், தனிப்பட்டு மிக வித்தியாசமாக நடந்து கொள்ளுவார்கள். அவர்கள், பிறர் அறிய முடியாத வண்ணம், பல ரகசிய வழிகளைக் கண்டு பிடித்தார்கள். இந்திய ஞானிகள் தனிமையை மிகவும் விரும்பினார்கள். அவர்கள் கூட்டத்திலிருந்து விலகி இருக்கவே விரும்பினார்கள். அவர்கள் காடுகள் மற்றும் மலைகளை நோக்கி ஓடினார்கள். ஆனால், அவர்கள் மடாலயத்தை நோக்கி ஓடினாலும், அல்லது காடுகளை நோக்கி ஓடினாலும், அவர்களை மக்கள் புரிந்தே வைத்திருந்தார்கள்; அவர்கள் விரைவிலேயே அறியப்பட்டவராகிறார்கள். அமைதி, தனக்கே உரித்தான செய்தியை வெளியிடுகிறது- அது பல செய்திகளைப் பரப்புகிறது.

வேறு ஒரு முறையையும் சூஃபிக்கள் கையாண்டார்கள். அவர்கள் எந்த மடாலயத்துக்கும் செல்லுவது இல்லை. அவர்கள் காடுகளை நோக்கியோ அல்லது தனிப்பட்ட மலைகளை நோக்கியோ செல்லாமல், அவர்கள் சாதாரண வாழ்க்கையில் பங்கேற்றே வாழுகிறார்கள். உதாரணமாக, ஒரு சூஃபி ஞானி,

செருப்புத் தைய்ப்பவராக இருக்கலாம். அவருக்கு மேலான விஷயங்கள் பல தெரியும் என்று யாராலேயும், சுலபமாகக் கண்டுபிடிக்க முடியாது. ஆனால், மேலான நிலைக்குத் திறப்பாக உள்ளவர்கள், அவரைச் சுலபமாக அடையாளம் கண்டு கொள்ளுவார்கள்.

குருடஜீவிடம் உண்டான இந்தத் திறப்புத்தான், அறபுதங்களைத் தேடும் தன்மையின் அடிப்படையாகி விட்டது. அவர் அதைத் தொடர்ந்து சென்றார். எந்தவித வரைபடமும் இல்லாமல், எந்தவித முன் விஷய ஞானமும் இல்லாமல் அப்பொழுது அவர் இந்தியா, எகிப்து மற்றும் திபெத்துக்குச் சென்றார். தான் எங்கே செல்கிறோம் என்பதை அறியாமலேயே, அவர் தொடர்ந்து சென்று கொண்டே இருந்தார். அப்படி செல்லும் பொழுது, ஒரு குறிப்பிட்ட வழி சரியானது என்று தோன்றினால், அதைப் பின்பற்றிச் செல்ல முனைவார். ஆனால், அது எங்கே செல்லுகிறது என்று அவருக்கு எதுவும் தெரியாது. சிலசமயம், அந்தப் பாதை ஒரு குடிசைக்கு முன்பு முடிவடையும்; அதற்குள்ளே, யாராவது ஒரு ஞானி இருப்பார்!

நீங்கள் மேலான நிலைக்குத் திறப்பாக இருந்தால், வித்தியாசமான பல விளைவுகள் ஏற்பட ஆரம்பிக்கின்றன. ஆனால், நீங்கள் கீழான நிலைக்கு மாத்திரமே திறப்பாக இருந்தால், நீங்கள் அந்த மேலான நிலையை அடைய, இருட்டில்தான் துலாவ வேண்டிவரும். அது ஏதோ சந்தர்ப்பவசத்தால் தான் கிட்டும். சிலசமயம், சிலவற்றை நீங்கள் அறியக்கூடும்; ஆனால், இது அபூர்வம் தான். ஆனால், அப்படி யார் மேலாவது அல்லது எதன் மீதாவது தடுக்கி விழுந்தால், அது உங்களுக்குத் தெரியாமலேயே, உங்களுடைய முழு வாழ்க்கையையே மாற்றி அமைத்துவிடும்.

நீங்கள் புத்தரைச் சந்தித்தாலும், அவரைச் சந்தித்ததாக உங்களால் புரிந்து கொள்ள முடியாது. எப்படி உங்களால் அவரைப் புரிந்து கொள்ள முடியும்? நீங்கள் மேலான நிலைக்குத் திறப்பாக இல்லையே? ஆகவே, நீங்கள் புத்தரை சந்தித்தாலும்

நீங்கள் கீழான நிலைக்குத்தான் திறப்பாக இருக்கிறீர்கள். நீங்கள் புத்தரிடமும் சந்தேகப்படக்கூடிய ஏதாவது ஒன்றைக் காணவே முயலுவீர்கள். ஏன் புத்தர் இப்படி சாப்பிடவேண்டும்? ஏன் அவர் அப்படித் தூங்கவேண்டும்? ஏன் அவர் அப்படி இப்படி இருக்க வேண்டும்? அவருடைய புத்தாத் தன்மைக்குச் சம்பந்தமில்லாதவற்றைப் பற்றியே உங்களுடைய கீழான நிலையில் உள்ள திறப்பு உங்களுக்குக் கொடுத்துக் கொண்டே இருக்கும். இதனால், மேல் நிலை தவறிவிடும். நீங்கள் எதைத் திரும்பத் திரும்பச் செய்து கொண்டு இருப்பீர்கள் என்றால், கீழான நிலையை, கவனிப்பதை மட்டும்தான்; அது ஒரு நீண்டகாலப் பழக்கமாகிவிட்டது.

நாம் கீழான சக்தியை மட்டுமே நம்பிக்கொண்டு இருக்கிறோம். நம் கீழான நிலைக்கே உண்மையாக இருக்கிறோம். ஏனென்றால், நம்மிடமுள்ள கதவு திறப்பது கீழான நிலைக்கு மட்டுமே. யாராவது மற்றவரைக் குறை கூறினால், நாம் குறை கூறுபவனை முழுமையாக நம்பிவிடுகிறோம். நாம் அதற்கு எந்த அத்தாட்சியையும் கேட்பதில்லை. அதற்கு அவசியமில்லை என்றே நினைக்கிறோம். ஆகவேதான், வதந்திகள் உண்மை யாகின்றன. உங்களால் ஒரு முழுமையான பொய்யான வதந்தியை ஏற்படுத்த முடியும். பிறகு அதை பலபேர் நம்பியதைப் பார்த்து, நீங்களும் அது உண்மை என்றே நம்ப ஆரம்பித்து விடுவீர்கள்! நாம் பிறரால் நடத்தப்படுகிறோம். பல பேர் ஒன்றைய திரும்பத் திரும்பக் கூறினால், அது உண்மையாகி விடும்.

கீழான நிலைக்கு நாம் திறப்பாக இருப்பது ஒரு பழக்கமாகிவிட்டது. கீழான நிலை உள்ளே இருக்கும்பொழுது, ஜாக்கிரதையாக இருங்கள். அதை ஒரு சாட்சியாக நின்று பார்க்கவும். உங்களுடைய மனம் அதை நோக்கித் திறப்பதை அனுமதிக்காதீர்கள். உங்களுக்குத் தெரிந்தவர் திருடனாக இருந்தாலும், அதற்குத் திறப்பாக இருக்காதீர்கள். ஏனென்றால், நீங்கள் அவருடன் சேர்ந்து இருந்தால், அந்தத் திருட்டுத்தனம் உங்களுக்குள் ஆழப்பதிந்து விடும். இப்படி உங்களையே திறந்து

காட்டுவது நல்லதல்ல. ஏனென்றால், மேலான நிலைக்கு திறப்பது என்பது பிறகு முடியாத காரியமாகி விடும்.

புத்தர், "நம்பக் கூடியது என்று உங்களுடைய சாதாரண மனம் சொல்லுவதை, நம்பாதீர்கள்" என்று சொல்லுகிறார். நான், ஒருவரை உண்மையான சந்நியாசி என்று கூறினால், நான் ஒருவரை முழுமையான சுத்தமான ஞானி என்று கூறினால், உங்களுடைய சாதாரண மனம் அதை நம்பத் தயங்கும். அது எப்படி சாத்தியம்? உங்களைப் போலவே, அவரும் சாதாரண உடலில் தான் இருக்கிறார். அப்படி இருக்கும்பொழுது, அவர் மட்டும் சுத்தமானவர் என்று எப்படிக் கூற முடியும்? உங்களுடைய அகங்காரம் அதனால் துன்பம் அடைகிறது. ஆகவே, நீங்கள் எல்லா வழிகளிலும் உங்களுடைய பகுத்தறிவை உபயோகிக்கிறீர்கள். உங்களைவிட, வேறு ஒருவர் சுத்தமானவர் என்பதை உங்களால் ஏற்றுக் கொள்ள முடிய வில்லை. ஆகவே, அதை நம்ப மறுக்கவே முயற்சி செய்வீர்கள். நீங்கள் நம்ப மறுத்தால், மேலான சுத்த நிலையை நோக்கி உங்களால் ஒரு போதும் வளர முடியாது; பிறகு வளர்ச்சி என்பது அசாத்தியமாகிவிடும்.

தெர்த்துலியன் (Tertulian) என்ற கிறிஸ்துவ ஞானி, "நான் கடவுளிடம் நம்பிக்கை வைக்கிறேன். அப்பொழுதுதான் என்னால் வளர முடியும்" என்கிறார். தெர்த்துலியனைப் பொறுத்தவரையில் கடவுள் ஒரு உண்மையோ அல்லது கற்பனையோ அல்ல; ஆனால் அவர் ஒரு உள் வளர்ச்சியாக இருக்கிறார்.

உதாரணமாக, நீட்ஸே, புத்தரைப் போல வளர்ந்திருக்க முடியும். அவரிடம் அந்த அளவுக்கு ஆன்மிக சக்தி இருந்தது. அந்த அளவுக்கு பிறவி அறிவு இருந்தது. அவரிடம் அதற்கு மிகுந்த சாத்தியம் இருந்தது! ஆனால், அவர் புத்தரைப் போல வளரவில்லை. மாறாக அவர் பைத்திய நிலையை நோக்கி வளர்ந்தார். அவர், "கடவுள் இறந்துவிட்டார்" என்று சொன்ன பொழுது, அது கடவுளைக் குறித்த அறிக்கையாக இல்லை:

அது. அவர் மேலான நிலைக்கு வளருவதின் அடைப்பாகவே இருந்தது. கடவுளே இல்லை என்றால், அதற்கு மேல் வளருவதற்கு ஒன்றுமே இல்லை. பிறகு, நீங்கள் கடவுளை நோக்கியும் வளர முடியாது.

ஆகவே, யாராவது சுத்தத்தன்மையில் இருப்பதை, உங்களால் ஒரு போதும் சுலபமாக நம்பமுடியாது. உங்களால் நம்ப முடியாத அளவுக்கு, புத்தர் அவ்வளவு சுத்தமாக இருக்கிறார். ஏன், புத்தரின் தகப்பனாராலாயே, புத்தரின் சுத்தத்தன்மையை நம்பமுடியவில்லை! தன் மகன் ஞானமடைந்துவிட்டான் என்ற செய்தி அவரை அடைந்த பொழுது, அவர், "எனக்கு அவனை நன்றாகத் தெரியும். அவன் என்னுடைய மகன், என்னுடைய எலும்பு மற்றும் ரத்தம். உங்களைவிட அவனை எனக்கு மிக நன்றாகத் தெரியும். அவன், நீங்கள் கூறுவது போல இருக்க முடியாது" என்று சொன்னதாக குறிப்பு இருக்கிறது.

ஆகவே, ஒருவன் அவவளவு சுத்தமாக இருப்பதை உங்கலால் நம்ப முடியாது. புத்தர், 12 வருடங்கள் அலைந்து, திரிந்து பிறகு தன்னுடைய நகரத்துக்கு மீண்டும் திரும்புகிறார். அப்பொழுது ஆயிரக்கணக்கானோர் அவருக்கு சீடர்களானார்கள்; அவர்களுக்கு அவர் ஒரு உள் ஒளியாகத் திகழ்ந்தார். ஆனால், அவருடைய தகப்பானாருக்கு இதைப்பற்றி எதுவும் தெரியாது. அவரை வந்து புத்தர் பார்த்தபொழுது அவர் மிகுந்த கோபத்தில் இருந்தார். அவருடைய கோபத்துக்குக் காரணம், புத்தர் அவருடைய ஒரே மகனாக இருந்தது தான்- புத்தர்தான், அவருடைய ஒரே நம்பிக்கை. புத்தர், தன் தகப்பனாரின் வயோதிகத்தில் அவரை வெறுமனே விட்டுவிட்டுச் சென்று விட்டார். ஆகவே, புத்தர், அவர் முன்பு நின்றபொழுது, அவர் புத்தரிடம், "நீ செய்து கொண்டிருப்பதை, நான் இப்பொழுதும் தடுக்க முடியும். ஏனென்றால், நான் உன்னுடைய தகப்பனார். ஆனால், நீ செய்தவை அனைத்தையும் நான் மறந்துவிடுகிறேன். ஏனெனில், நான் உன்மேல் அவ்வளவு பிரியம் வைத்திருக்கிறேன்- என்னுடைய கதவுகள் உனக்காகத் திறந்தே இருக்கின்றன. ஆனால் இந்த முட்டாள்தனமான வேலைகளையெல்லாம்

விட்டு விடு! என்னுடைய மகன் தெருக்களில் பிச்சை எடுப்பதை என்னால் இனிமேல் தாங்கிக் கொள்ள முடியாது" என்றார்.

அவரைப் பொறுத்தவரையில், புத்தர் ஒரு வெறும் பிச்சைக்காரர்தான். நவீன காலத்து மொழியில், அவர் ஒரு ஹிப்பி மற்றும் ஒரு எதிர்ப்பாளன்! புத்தர் அவருக்கு முன்பு அமைதியாக நின்றிருந்தார். கடைசியில் தான் கேட்டதற்கு, தன் மகன் எந்த பதிலும் சொல்லாமல் இருப்பதை உணர்ந்த அவர், "நீ ஏன் பதில் சொல்லவில்லை என்பது எனக்குத் தெரியும். அதற்கு உனக்குத் தைரியம் போதாது" என்றார்.

புத்தர் சிரித்தவாறு, "நீங்கள் பேசிக் கொண்டிருப்பது யாரிடம்? உங்கள் வீட்டை விட்டு வெளியேறிய மகன் இப்பொழுது இல்லை. நான் முற்றிலும் வேறு மாதிரியான மனிதன்" என்றார்.

அவருடைய தகப்பனார் மேலும் கோபம் அடைந்து, "உன்னை யார் என்று எனக்குத் தெரியாது என்று நீ சொல்ல முயலுகிறாயா? நான்தான் உன்னைப் பெற்றவன்!" என்றார்.

புத்தர், அதற்கு, "நீங்கள் என்னைப் பெற்றிருக்கலாம். ஆனால் நான் உங்களைச் சேர்ந்தவன் அல்ல. நான் உங்களுடைய சொத்து அல்ல. நீங்கள், என் பிறப்புக்கு வெறும் வழியாக இருந்திருக்கலாம். அதற்காக, நான் நன்றி சொல்லுகிறேன். ஆனால், என்னைத் தெரியும் என்று நீங்கள் சொல்ல முயலாதீர்கள். உங்களையே உங்களுக்குத் தெரியாது. பிறகு எப்படி உங்களால் என்னைத் தெரிந்து கொள்ள முடியும்?" என்றார்.

ஆனால், புத்தரின் தகப்பனார், தன் போக்கிலேயேதான் பேசிக்கொண்டு இருந்தார். அவரால், புத்தரின் மேலான நிலைக்குத் திறப்பாக இருக்க முடியவில்லை. அவர் தன் முன்னே உள்ள உண்மையைச் சந்திக்கத் தயாராக இல்லை. அவர் தன் மகன் சித்தார்த்தனையே ஞாபகப்படுத்திக் கொண்டு இருந்தார். அவருக்கு, மேலான நிலை திறந்து தயாராக இருக்கிறது; ஆனால்,

அவர் கீழான நிலையை நோக்கியே செல்லுகிறார். அதற்குத்தான் அவர் திறப்பாக இருக்கிறார். அவர், ஒரு பழைய ஞாபகத்தோடு கூடிய ஒரு சாதாரண தகப்பனாராகவே இருந்தார். அவர் தன் முன்னே நிற்கும், உண்மையைப் பார்க்கக் கூட விரும்பவில்லை.

ஆகவே, எல்லாமே உங்களைப் பொறுத்தே இருக்கிறது. புத்தர் எந்த ஒரு குறிப்பிட்ட காலத்திற்கோ அல்லது ஒரு குறிப்பிட்ட வயதுக்கோ உரியவர் இல்லை. புத்தரின் ஆன்மிக சக்தி எப்பொழுதும் இருக்கிறது மற்றும் எங்கும் இருக்கிறது." அதற்கு நீங்கள் திறப்பாக மட்டும் இருந்தால் போதும்.

நீங்கள் முதலில் செய்யவேண்டியது, கீழான நிலைக்குத் திறப்பாக இருப்பதை நிறுத்தவும். உங்களுடைய நீண்ட காலப் பழக்கத்தால், நீங்கள் கீழான நிலைக்கு தானே இயல்பாக திறப்பாக இருக்க ஆரம்பிக்கும்பொழுது, தொடர்ந்து ஒரு சாட்சியாக ஞாபகப்படுத்திக் கொண்டு, பிரக்ஞையாக செயல்பட்டால், அந்த இயல்பான ப்ழக்கத்தன்மை நின்றுவிடும்; அது மூடப்பட்டுவிடும். உங்களுடைய சக்தியை, வீணாக கீழான நிலையில் செலவழிக்க வேண்டாம். அப்பொழுது, நீங்கள் உங்கள் சக்தியை சிதறடிக்க மாட்டீர்கள்; மாறாக அதைச் சேமித்து வைப்பீர்கள். அந்த சக்தி, மேலான நிலைக்குத் திறப்பாக இருக்க உதவி செய்யும். மேலான நிலை இருப்பதை நீங்கள் உணர்ந்து கொண்ட அதே சமயம், கீழான நிலையில் எதையும் எண்ண வேண்டிய அவசியமே இல்லாமல் போய்விடும். அந்த கீழான நிலை தானே சிதறுண்டு போகும். நீங்கள் இப்பொழுது வேறு ஒரு வித்தியாசமான பரிமாணத்திற்கு, வேறு ஒரு வித்தியாசமான உலகத்துக்கு, வேறு ஒரு புதிய சூழ்நிலைக்குச் செல்லுகிறீர்கள். பிறகு நீங்கள் மேன்மையான சக்தியின் உதவியைப் பெறுவீர்கள்.

நீங்கள், "இந்தப் பாதுகாப்பற்ற, புரியாத ஆத்மிக சூழ்நிலையில், ஆத்மிக உலகத்தில் உள்ள தெய்விக ஆத்மாக் களிடமிருந்து எப்படி நாம் உதவியை அடைவது?" என்று கேட்கிறீர்கள்.

இந்தக் கணத்திலேயே, நீங்கள் உதவியை அடையலாம். உதவி எப்பொழுதும் இருக்கிறது; ஆனால், உங்களுடைய கண்கள் தான் மூடியவாறு இருக்கின்றன. உங்கள் கண்கள் மட்டும் மூடியவாறு இல்லை, நீங்களும் அது எப்பொழுதும் மூடியவாறே இருக்க வேண்டும் என்று உறுதியாகவும் இருக்கிறீர்கள். யாராவது உங்கள் கண்களைத் திறக்க முயன்றால், நீங்கள் அதற்கு எதிர்ப்பாக சர்ச்சையிலும் ஈடுபட தயாராக இருக்கிறீர்கள். நீங்கள், "இந்த இருட்டு, பாபம், கெடுதல் போன்றவை இயல்பானது தான்" என்று கூறுகிறீர்கள்.

உதாரணமாக, பிராய்டு ஒரு பெரிய புரட்சியையே கொண்டு வந்தார். அவர் மனித குலத்துக்கு மாபெரும் சேவை செய்திருக் கிறார். அதாவது, ஒரு மனிதனின் ஆக்க சக்தி எப்படி இருந்தாலும், அவனுடைய 90 சதம் செயல்பாடு, பழகும் தன்மை, எண்ணுதல் அனைத்தும் பாலுணர்வைப் பற்றியதாகவே இருக்கிறது என்ற விழிப்புணர்வை ஏற்படுத்தினார். இது ஒரு சிறந்த முயற்சி. ஆனால், நமது மனம் கீழான நிலைக்கே திறப்பாக இருப்பதால், அந்த முழுப் புரட்சியே தவறானதாகி விட்டது. ஆகவே, இந்த மனித குல வாழ்வே, பாலுறவில் மையப்பட்டு விட்டதால், ஒவ்வொரு மதமும் அதற்கு எதிராகவே போரிட்டன.

ஆனால், அது தோல்வியைத்தான் கண்டது. ஏனென்றால், அவர் ஒரு உண்மையை எடுத்துரைத்தார். ஆனால், நாம் அதே உண்மையை தவறான வழியில் கையாளுகிறோம். இப்பொழுதும் நாம், "ஆமாம். மனிதன் பாலுறவை, மையமாக வைத்தே இயங்குகிறான்; ஆனால் அதுதான் இயற்கை- அது அப்படித் தான் இருக்கும்" என்று சொல்லிக் கொண்டு இருக்கிறோம். இதனால், நாம் 90 சதம் வாழ்க்கை, பாலுறவை மையமாக வைத்து இயங்குகிறது என்பதை ஏற்றுக் கொண்டு, அடுத்து மீதமுள்ள 10 சதமும் அதனுடன் சேர்த்திருக்கிறோம்!

கீழான நிலையில், இரண்டு சாத்தியம் இருக்கின்றன; ஒன்று: ஒருவர் பாலுறவை எதிர்த்துப் போரிட வேண்டும். இந்தப்

போரிடுதலில், இயல்பான சக்தி ஓட்டம் தடைப்பட்டு, அது எங்கேயோ செல்லும்படியாகிறது. இரண்டாவது, அவர் தன் பாலுறவுக்கு அடிமையாகி, அதன் வழியே செல்லுவது- இதனால் பாலுறவில் எந்த மாற்றத்தையும் அவர் அடைவது இல்லை.

புத்தர், மஹாவீரர் மற்றும் இயேசு போன்றவர்கள் பாலுறவு சக்தியை மாறுதல் செய்யவே முனைந்தார்கள். நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். மாறுதல் செய்வது என்பது அடக்குதல் அல்ல. ஆனால், கீழான சக்திக்குத் திறப்பாக உள்ளவர்கள், அதை அடக்குதல் என்றுதான் கேட்டிருக்கிறார்களே தவிர, மாறுதல் செய்வது என்பதைக் கேட்கவில்லை. அதனால், கீழான நிலையில் உள்ள மனம் அதை அடக்க ஆரம்பிக்கிறது- அதனுடைய பலன் விபரீதமான விளைவுகள் தான். அதிலிருந்து மனிதனை மீட்க, மீண்டும் பிராய்டு வரவேண்டும்! பாலுறவு என்பது இயல்பானது என்று அவர் ஆணித்தரமாகக் கூறவேண்டும்; அதை அடக்கக் கூடாது; மாறாக அதை இயல்பாக ஏற்றுக் கொள்ள வேண்டும். ஆனால், மக்கள் மறுபடியும் அடுத்த முனைக்கே செல்ல ஆரம்பிப்பார்கள்.

கீழான மனம், மறுமுனைக்கு மிகச் சுலமாபகச் செல்ல முடியும். ஏனென்றால், கீழான திறப்பு இரண்டு வழிகளில் மாத்திரம்தான் வேலை செய்யும்- ஒன்று, கூடுதல்; அடுத்தது ஈடுபடுதல். அவை இரண்டும் மாறுபட்ட முனையில் இருப்பதாகவே தெரியும். ஆனால் அவை அப்படி இல்லை. இரண்டு நண்பர்கள் ஒரு ஆழமான சதித்திட்டத்தில் ஈடுபட்டு இருப்பது போல, இந்த இரண்டும் புரியாத வகையில் ஒன்றுக்கு ஒன்று உதவி செய்து கொள்ளுகின்றன. நீங்கள் அதில், மிகவும் தீவிரமாக ஈடுபட்டுக் கொண்டிருந்தால், அடக்குதல் என்ற மறுமுனைக்கு நீங்கள் தானாகவே இழக்கப்படுவீர்கள்- அதைப்போல பின்னது செயல்பட்ட பிறகு, முன்னது அடுத்து தானே வேலை செய்ய ஆரம்பிக்கும். அடுத்த மூன்றாவது சாத்தியக் கூறு, உங்களைப் பொறுத்தவரையில், அது எப்பொழு தும் மூடியவாறேதான் இருக்கும்- அதுதான் சக்தி மாற்றம்.

முதல் இரண்டு இருவேறு முனைகளும் சமக்கோட்டில் இருக்கின்றன. ஆனால் மூன்றாவது சாத்தியக்கூறான சக்தி மாற்றம் செங்குத்தாக செயல்படுகிறது. நீங்கள் பாலுறவை அடக்கினாலோ அல்லது அதில் மிகவும் ஈடுபட்டாலோ, சக்தி சமக்கோட்டில் செல்லாது, செங்குத்தாகச் செல்ல ஆரம்பிக்கும். செங்குத்தாகச் செல்லுதலில்தான், சக்தி மாற்றம் நிகழும். இந்த செங்குத்தான நகருதல், மேலான சக்திகளுக்கு திறப்பாக அமையும்.

கீழான சக்திகளுக்கு, மூடியவாறு இருங்கள் என்று நான் கூறும்பொழுது, அதனுடன் சண்டை போடுங்கள் என்ற அர்த்தத்தில் நான் கூறவில்லை; அதை விழிப்பாக, சாட்சியாக இருந்து கவனியுங்கள் என்றே கூறுகிறேன். நீங்கள் சண்டை செய்ய முயற்சி செய்தால், நீங்கள் அந்த கீழான நிலையிலேயே, விபரீதத் தன்மையிலே இயங்கிக் கொண்டு இருப்பீர்கள்- இது மிக மோசமான பின் விளைவுகளை ஏற்படுத்திவிடும். பிறகு, நீங்கள் இயல்பாக இல்லாது, அடக்கப்பட்டவராக இருப்பீர்கள்.

யாராவது உங்கள் மேல் கோபம் கொண்டால், மூடியவாறே இருங்கள்; பதில் செயல் செய்ய வேண்டாம். இதனால் உங்கள் உணர்வுகளுக்கு எதிராக சண்டை போடவும் என்ற அர்த்தத்தில் நான் சொல்லவில்லை. உங்கள் உணர்வுகளை பிரக்ஞையாக கவனித்து, பொறுமையாகக் காத்திருங்கள் என்ற அர்த்தத்தில் தான் சொல்லுகிறேன். அப்பொழுது அந்த முழு சூழ்நிலையை எண்ணியவாறு, அதை காய்தல், உவத்தல் இன்றி ஒவ்வொன்றை யும் ஆராய்ந்து பார்க்கவும். யாராவது உங்கள் மேல் கோபம் கொண்டால், அவர் சரியா அல்லது தவறா என்பதை முதலில் ஆராய்ந்து பார்க்கவும். அவர் சரியாக இருந்தால், நீங்கள் அவருக்கு நன்றி சொல்லுங்கள். அப்படி சார்பற்ற நிலையில் அதை பாகுபடுத்திப் பார்க்கும் பொழுது, அவர் தவறு என்று நீங்கள் உணர்ந்தால், நீங்கள் அவருக்கு பதில் செயல் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. ஏனென்றால், அது அவருடைய பிரச்சினை. அதற்கும் உங்களுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

இது மிக நுண்ணிய மனநல ரீதியானது. யாராவது உங்களை அவமானப்படுத்தினால், நீங்கள் பிரக்ஞையற்றத் தன்மையில், அவன் சரி என்று உணர்ந்தால் தான், நீங்கள் அவனுக்கு மறு செயல் செய்ய ஆரம்பிக்கிறீர்கள். அவன் சரியில்லை என்று நீங்கள் உணர்நதால், நீங்கள் வெறுமனே சிரித்து அதை ஒதுக்கிவிடுவீர்கள். யாராவது உங்களிடம் வந்து, 'நீ ஒரு ஆண்மையற்றவன்' என்று சொல்லி உங்களை அவமானப் படுத்தினால், உங்களுடைய ஏதோ ஒரு உடல்பாகம் உண்மையிலேயே ஆண்மையற்று இருந்தால் மட்டுமே நீங்கள் அவரிடம் கோபப்படுவீர்கள்; இல்லாவிட்டால் கோபப் படமாட்டீர்கள். அவன் சொன்னது உங்களிடம் ஏதோ மறைந்திருந்த ஒன்றைத் தாக்கும்பொழுதுதான், மறுசெயல் ஆரம்பமாகிறது. ஆகவே, முதலில் அதை ஆராயுங்கள். அவன் சரியாக இருந்தால், அவனுக்கு நன்றி கூறவும்.

நவீன மனநலம், மனத்தை இரண்டு பாகமாகப் பிரிக்கலாம் என்று சொல்லுகிறது. சிறிய பகுதி பிரக்ஞை நிலையிலும், பெரும்பகுதி பிரக்ஞையற்ற நிலையிலும் இருக்கிறது. என்னுடைய பிரக்ஞையற்ற நிலையைப் பற்றி, எனக்கு பிரக்ஞையாக எதுவும் தெரியாது. ஆனால் என்னிடம் நெருங்கிப் பழகும் பலருக்கு அது என்னவென்று உணர ஆரம்பிப்பார்கள். ஏனெனில், அது என்னுடைய நடத்தையில், என்னுடைய மொழியில், மற்றும் என்னுடைய பாவனையில் வெளிப்பட ஆரம்பிக்கும். நான் செய்யும் அனைத்திலும், அது தன்னை வெளிப்படுத்திக் கொண்டே இருக்கும்.

இதுவே பெரும் பிரச்சினையாகிறது. உங்களுடைய பிரக்ஞையற்ற ஆழமான நடத்தைகள், விருப்பங்கள், அடக்குதல் கள் மற்றும் பிற அனைத்தையும் உங்களால் புரிந்து கொள்ள முடியாது. ஆனால், அடுத்தவர்கள் எளிதாகப் புரிந்து கொள்ளுவார்கள். ஆகவே, என்ன நடக்கிறது என்பதை பகுத்துப் பார்க்கக் கற்றுக் கொள்ளுவார்கள். யாராவது உங்கள் மேல் கோபம் கொண்டால், நீங்கள் அந்த சூழ்நிலையை ஆராய்ந்து பாருங்கள். ஒருவேளை, அவன் சரியாகக் கூட இருக்கலாம்.

பிறகு அதற்கு முன்பு பிரக்ஞையற்ற தன்மையில் புரியாது இருந்த பகுதி இப்பொழுது புரிய ஆரம்பிப்பது உங்களுக்குத் தெரிய வரும்; அல்லது அவன் பாதி சரியாகவும் மற்றும் பாதி அவனாகவும் இருக்கலாம். இது மூன்றாவது சாத்தியக்கூறு. அவன் பாதி சரியாக இருந்தால், அவனிடம் பாதி அளவு நன்றியுடையவனாக இருங்கள்; அவனுடைய சரியற்ற பகுதியைப் பற்றிக் கவலை கொள்ள வேண்டாம். அவன் முழுமையாக தவறாகவே இருந்தால், பிறகு அவனுடைய அறிக்கைக்கும், உங்களுக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை. அது, அவனுடைய பிரச்சினை.

நீங்கள் கீழான நிலைக்குத் திறப்பாக இருக்காதீர்கள் என்று நான் கூறும்பொழுது, நான் அடக்குதலை அர்த்தம் செய்ய வில்லை. நான் அர்த்தம் செய்வது என்னவென்றால், பாகு படுத்திப் பார்த்தல், கவனித்தல், பிரக்ஞை நிலையாக இருத்தல், விழிப்புணர்வு இப்படிப் பலவற்றை அர்த்தம் செய்கிறேன். நீங்கள் அடக்கினால், உங்களால் ஒருக்காலும் மேலான சக்திகளுக்குத் திறப்பாக இருக்க முடியாது. ஒரு அடக்கப்பட்ட மனம், கீழான நிலையில் மிக ஆழமாக வேர் விட்டிருக்கிறது. ஏனென்றால், நீங்கள் எதை அடக்கினாலும், நீங்கள் அதைத் தொடர்ந்து அடக்கியவாறுதான் இருக்க வேண்டும். யாராவது பாலுறவை அடக்கி இருந்தால், அவர்கள் அதைத் தொடர்ந்து அடக்கியவாறேத்தான் இருக்க வேண்டும்; மாறாக அதற்கு ஒருநாள் விடுமுறை விட முடியாது. ஒருநாள் விடுமுறை போதும்; அந்தப் பாம்பு மீண்டும் உயிர்பெற்றுவிடும்- மிகுந்த கோபத்தோடும், சக்தியோடும். அடக்குதலில், எதுவும் இருக்காது. மாறாக, அடக்கப்பட்ட உணர்வுகள் மீண்டும் உயிர் பெற்றுவிடும்.

ஆகவே, கீழான நிலைக்கு திறப்பாக இல்லாததற்கும், அடக்குதலுக்கும் உள்ள வித்தியாசத்தைப் பற்றி, தெளிவாக அறிந்து கொள்ளுங்கள். கீழான நிலைக்கு எப்பொழுதும் மூடுதலாகவே இருங்கள். நீங்கள் அதிலிருந்து மேற்கொண்டு ஆரம்பிக்க வேண்டும். ஏனெனில், இப்பொழுது இருக்கும்

நிலையில், உங்களுடைய மனம் கீழான சக்திகளில் தான் இருக்கிறது. கீழான சக்திகளின் கதவை மூடாமல், மேலான நிலைக்கு, தங்கள் மனங்களைத் திறப்பாக வைக்க சிலர் முயற்சி செய்வார்கள். இதனால் அவர்கள் தங்களுக்குள்ளேயே தேவையில்லாத சண்டைகளையும், முரண்பாடுகளையும் ஏற்படுத்திக் கொள்ளுகிறார்கள். ஏனென்றால், கீழான நிலைகளின் கதவை மூடாமல், மேலான நிலைகளின் கதவைத் திறக்க ஒருக்காலும் முடியாது. அது நடக்காது.

ஆகவே, கீழான சக்திகளுக்கான கதவுகளை பிரக்ஞையாக சகல முயற்சியும் செய்து மூடிவிடவும். பிறகு உங்களுடைய முயற்சி ஏதும் இன்றி, வேறு ஒரு வித்தியாசமான பரிமாணத்தை அறிய ஆரம்பிக்கிறீர்கள். ஒரு மரத்தின் கீழே வெறுமனே நீங்கள் உட்கார்ந்து கொண்டு இருக்கும்பொழுது, நீங்கள் வேறு உலகத்துக்கு எடுத்துச் செல்லப்படுவதை உணருவீர்கள்.

ஒரு மரத்தின் கீழே உட்கார்ந்திருக்கும் புத்தர் படங்களை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அவர் என்ன செய்து கொண்டு இருக்கிறார் என்பதைப் பற்றி யாராவது சிந்தித்துப் பார்த்திருக்கிறீர்களா? அவர் எதுவும் செய்யவில்லை; அவர் வெறுமனே காத்திருக்கிறார். கீழான நிலைகள் மூடப் பட்டுள்ளது; அதனால் திரண்ட சக்தி அவரிடம் தேக்கமாக இருக்கிறது. இப்பொழுது, அந்தத் திரண்ட சக்தி, மேலான நிலைகளைத் திறக்கக்கூடிய சரியான தருணத்துக்காக, காத்துக் கொண்டு இருக்கிறது. அநேக பழைய தியான முறைகள் அனைத் தும், இதைத்தான் அடிப்படையாக வைத்து இருக்கின்றன.

கீழான நிலைகளுக்குத் திறப்பாக இருப்பதை மூடுவதற்கு, புத்தர் பலவழிகளை எடுத்துச் சொல்லுகிறார். அதன் அடிப்படைத் தன்மையை, 'சரியான மனநிறைவு' (Right Mindfulness) என்று அவர் அழைக்கிறார். இதுவே, 'சமயக் ஸ்மிருதி' (Samyak Smirti) ஆகும். நான் சொல்லிக்கொண்டு இருக்கும் விழிப்புணர்வு, ஜாக்கிரதை உணர்வு, கவனித்தல், பாகுபடுத்தல் போன்றவைதான் அது. புத்தரின் சொந்த

வார்த்தைதான் 'சரியான மனநிறைவு' என்பது. நீங்கள் கோபமாக இருந்தால், நீங்கள் முழுமையாக கோபமாக இருக்கிறீர்கள் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளவும். அதனால் உங்கள் மனத்தை நிரப்புங்கள். உங்களால் பிரக்ஞையாக கோபத்துடன் இருக்க முடியாது. ஏனென்றால் பிரக்ஞையற்றத் தன்மைதான் கோபம் அடைவதற்கு அடிப்படையாக இருக்கிறது. நீங்கள் பிரக்ஞையற்று இருந்தால் தான், கோபம் சாத்தியம்.

நீங்கள் கீழான நிலைக்கு உள்ளதை மூடினால் தான், நீங்கள் மேலான நிலைக்குத் திறப்பாக முடியும். மேலான நிலைகளுக்கு திறப்பாக இருப்பதன் மூலம், நீங்கள் பல இயற்கைத் தன்மைகளுடன் நெருங்கி உறவாடுகிறீர்கள். ஒன்று, நீங்கள் எதை கேட்கிறீர்களோ, அதைப்பற்றி நீங்கள் மேலான ஆத்மாக்களுடன் நெருங்கிய சம்பந்தம் பெறுகிறீர்கள். இந்தப் பேரியக்க உயிர்த்தன்மையில் எதுவுமே இழக்கப்படுவது இல்லை. புத்தர் எப்பொழுதும் அங்கே இருக்கிறார்; இயேசு எப்பொழுதும் அங்கே இருக்கிறார். -யாருமே இழக்கப்படவில்லை. ஆகவே, மேலான நிலைக்குத் திறப்பாக இருப்பவர்களுக்கு, இயேசு ஒரு சரித்திரநாயகன் அல்ல. அவர் இப்பொழுதும் இங்கே இருக்கிறார். அவர் இறந்து 20 நூற்றாண்டுகளாகிவிட்டன. ஆனால், நீங்கள் இப்பொழுதும் அவரோடு உறவாடிக் கொண்டுதான் இருக்கிறீர்கள்.

புத்தர் இப்பொழுதும் இருக்கிறார்- எதுவுமே இழக்கப்படவில்லை. புத்தர், மஹாவீரர் மற்றும் கிருஷ்ணர் போன்றவர்கள் வெறும் பெயர் மாத்திரம் அல்ல; உருவங்கள் மாத்திரம் அல்ல. அவர்கள் உருவமற்ற நிலையை உணர்ந்து கொண்டதால் தான், அவர்கள் புத்தர், மஹாவீரர், மற்றும் கிருஷ்ணராக உருவம் எடுத்தார்கள். இப்பொழுது, அவர்கள் உருவம் அற்று இருக்கிறார்கள்; சாசுவதமாக எங்கும் வியாபித்து இருக்கிறார்கள். ஆகவே, நீங்கள் எந்தக் கணமும் அவர்களோடு உங்களை ஐக்கியப் படுத்திக் கொள்ளலாம். அதற்கு நீங்கள் செய்ய வேண்டிய ஒரே காரியம், அந்த மேலான நிலைக்குத் திறப்பாக இருப்பதுதான். ஏனென்றால், பிறகு காலம் மறைந்துவிடும்.

காலம், நேரம் என்ற இரண்டும், கீழான திறப்பின் இயல்பான தன்மைகள்.

இந்த உலகம், காலம் மற்றும் இடத்தில் ஆனது என்று விஞ்ஞானிகள் சொல்லுகிறார்கள். ஐன்ஸ்டீன் அதை ஒன்றாக்கி விட்டார். அவர், "காலம் என்பது இடத்தின் நான்காவது பரிமாணம்" என்று கூறுகிறார். அதை அவர், 'இடத்தோடு கூடிய காலம்' (Spatio-Time) என்று அழைக்கிறார். இந்த உலகம், இடத்தோடு கூடிய காலத்தைத் தவிர வேறல்ல. ஆனால், நீங்கள் மேலான நிலைக்குத் திறப்பாக இருந்தால், நீங்கள் ஒரு காலமற்ற, இடமற்ற உலகத்துக்குச் செல்லுகிறீர்கள்; அங்கு காலமும் இல்லை; இடமும் இல்லை.

நீங்கள் அந்த மேலான நிலைக்குத் திறப்பாக இருந்தால், ஒரு முழு வித்தியாசமான உலகம் உங்களுக்குக் காண்பிக்கப் படும். நீங்கள் மேலான நிலைகளோடு, உறவு மாத்திரம் கொள்ளுவது இல்லை; அவற்றுடன் ஒன்று கலந்து பரிமாற்றம் செய்து கொள்ளுகிறீர்கள். அப்பொழுது நீங்கள், நீங்களாக இல்லை. உங்களுடைய தனித்தன்மை அழிக்கப்படுகிறது. அந்த மேலான நிலையோடு, நீங்கள் கலந்து விடுகிறீர்கள். நீங்கள் கீழான நிலையோடு மட்டும்தான், தனித்து, நீங்களாக இருப்பீர்கள்.

ஆகவேதான், கீழான நிலையோடு இருப்பதை நீங்கள் மிகவும் ஆதரிக்கிறீர்கள். ஏனென்றால் கீழான நிலையில், நீங்கள் இருக்க மாட்டீர்கள். உங்களுடைய 'அகங்காரம்,' 'தான்,' 'நான்' என்பவை அனைத்தும் கீழான நிலைக்கு உரியவை. அவை அதில்தான் உயிர்வாழும். நீங்கள் மேலான நிலைக்குத் திறப்பாக இருந்தால், நீங்கள் இல்லை. அப்படி நீங்கள், நீங்களாக இல்லாத பொழுது, நீங்கள் மேலான நிலைகளினால் வழி நடத்தப் படுகிறீர்கள். அப்பொழுது நீங்கள் வெறும் கருவியாக மட்டுமே இருக்கிறீர்கள்.

ஹீரா மலையில், முகமது ஆழ்ந்த தியானத்தில் இருக்கும் பொழுது, அவர் ஒரு தெளிவான குரலைக் கேட்டார். அது 'படி' என்று அவருக்குக் கட்டளையிட்டது.

படிப்பு இல்லா முகமது, 'என்னால் எப்படிப் படிக்க முடியும்? எனக்குப் படிக்கத் தெரியாது. நான் படிக்காதவன்' என்று சொன்னார்.

மறுபடியும் அந்தக் குரல், 'படி' என்றது –மிகவும் அழுத்தமாக. முகமது தயங்கினார், பயத்தில் நடுங்கினார். எப்படி அவரால் படிக்க முடியும்? மூன்றாவது தடவையாக அந்தக் குரல் மீண்டும் 'படி' என்றது. முகமது அப்பொழுது கீழான நிலைக்கும், மேலான நிலைக்கும் இடையில் பிரிக்கும் கோட்டில் நின்று கொண்டு இருந்தார். கீழான நிலையைப் பொறுத்தவரையில், அவரால் படிக்க முடியாது என்பது அவருக்குத் தெரியும். ஆனால், அந்தக்குரல் வேறு ஒரு பரிமாணத்தில் இருந்து வருகிறது. அது 'படி' என்று அழுத்தமாகக் கூறுகிறது. அவர் கண்களைத் திறந்து பார்க்கும் பொழுது, தான் வேறு ஒரு உலகத்தில் இருப்பதை உணர்ந்தார். இப்பொழுது அவரால் படிக்க முடியும், பார்க்க முடியும்.

இது பல வருடங்களுக்குத் தொடர்ந்தது. முகமதுவுக்கு, குரான் ஒரு நாளில் அளிக்கப்பட்டது அல்ல. அவரது வாழ்நாள் முழுவதும், அது, அவருக்கு அளிக்கப்பட்டே வந்திருக்கிறது. அதற்கு முன்பு, முகமது ஒரு சாதாரண மனிதர்தான்; திடீரென்று அவர் வேறு விதமாகி விட்டார்.

ஆகவேதான், முகமது ஒருபோதும், "நான் ஒரு விளக்கம் பெற்ற ஞானி. நான் ஒரு புத்தர்" என்று கூறியது இல்லை. அவர் ஒரு போதும், 'நான் கடவுளின் ஒரே மைந்தன்' என்று இயேசு போல கூறியது இல்லை. அவர் எப்பொழுதும், 'நான் ஒரு சாதாரண மனிதன்– வெறும் வேலைக்காரன் தான். இரண்டு உலகத்துக்கும் நான் ஒரு தூதுவனாக இருக்கிறேன்' என்று கூறுவார். அவர் எளிமையான, வெகுளியான மனிதன். அதனால்தான், கீழான நிலை மூடி, மேலான நிலை திறந்து

இருந்தது. அவர் மேலான நிலையைத் திறப்பதற்கு எந்த முயற்சியும் செய்யவில்லை- அது தானாகவே திறந்து கொண்டது.

முதன் முதலில், அது நிகழும் பொழுது, பிறருக்கு அதைப் பற்றிச் சொல்ல முடியாத அளவுக்கு, முகமது பயப்பட்டார். அவர் வீட்டுக்குத் திரும்பும் பொழுது, மிகுந்த ஜுரத்தில் இருந்தார். அது, அவருக்கு முற்றிலும் புதிது. எப்படி அவரால் படிக்க முடியும்? ஆனால், அவர் படித்தது முற்றிலும் வேறானது; அடுத்த உலகத்தைப் பற்றியது. அதை, அவராலேயே நம்ப முடியவில்லை- எல்லாமே தலைகீழாக நடக்கிறது. அவர் மூன்று நாட்களுக்கு ஜுரத்தில் இருந்தார்; பிரார்த்தனையும் பண்ணினார். பிறகு மிகவும் தயங்கியவாறு, தன் மனைவியிடம் அந்த இரகசியத்தை மெல்ல உரைத்தார். அவர், "நான் வேறு ஒரு உலகத்தில் இருந்தேன். ஆனால், இதைப்பற்றி, நீங்கள் வேறு யாரிடமும் சொல்ல வேண்டாம். அவர்கள் என்னை பைத்தியம் என்று நினைத்துக் கொள்ளுவார்கள்," என்றார்.

அந்த நாள் முதற்கொண்டு, முகமது, தன் அகங்கார மனத்தால் வழி நடத்தப்படவில்லை; ஆனால் அப்பாலில் உள்ள ஏதோ சக்தியால் அவர் ஆக்ரமிக்கப்பட்டார். அதற்கு அவர் வெறும் ஒரு கருவியாகவே இருந்தார். அதுதான் அவரிடம் இயங்கியது.

மேலான சக்திகள் வேலை செய்யும்பொழுது, எல்லாமே தலைகீழாகி விடும். உங்களுடைய தர்க்கம் அப்பொழுது பதில் கூறாது; உங்களுடைய பகுத்தறிவு ஒத்துவராது. நீங்கள் அதுவரை அறிந்தது அனைத்தும், பயனற்றவையே. நீங்கள் இனிமேல் நடந்து கொள்ளுவது தான் முக்கியமாகப் படும்.

நீங்கள், "அந்த மேலான ஆத்மாக்களுக்கு, நாம் எப்படி ஒரு திறப்பாக இருக்க முடியும்?" என்று கேட்கிறீர்கள்.

நீங்கள் உங்களுடைய கீழான நிலைக்கு, திறப்பாக இருப்பதை மூடினாலே, அது சாத்தியம்தான். மனிதகுலம் நிலைத்து நிற்க இத்தகைய நிகழ்வுகள் அவசியமாகிறது.

இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள், ஏற்கெனவே பல நிகழ்ந்திருக்கின்றன. இப்படி மேலான சக்திகளோடு ஏற்பட்ட ஒருங்கிணைப்பால் தான், இந்த மனித குலம் நிலைப்பெற்று இருக்கிறது. மனித குல வரலாற்றிலிருந்து நீங்கள் 20 பேரைத் தேர்ந்தெடுக்கலாம். புத்தர், இயேசு, மஹாவீரர், லா சூ... இப்படி 20 பேர். இவர்களைப் போல உள்ளவர்கள் பலர் இல்லாமல், எப்படி மனித குலம் இன்றுவரை ஜீவித்திருக்க முடியும் என்று உங்களால் நினைத்துப் பார்க்கவே முடியாது. விலங்கு உலகத்தின் போராட்டத்தால், நாம் நிலைத்து நிற்கிறோம் என்று டார்வின் சொல்லலாம். விலங்கு உலகத்தைப் பொறுத்தவரையில், அவர் சொல்லியது சரிதான். ஆனால், எப்பொழுதும், அந்த மேலான சக்திகள் நம்மை ஆட்கொண்டதால் தான், மனித குலம் இன்றைக்கு இந்த நிலையில் இருக்கிறது.

ஒரு புத்தர் விளங்கும் பொழுது, அவர் மூலமாக அந்த மேலான நிலை, கீழான நிலைகளை ஊடுருவுகிறது; அப்பொழுது அந்த முழு மனித இனமே, ஏதோ ஒரு வகையில், அந்த மேலான நிலையோடு தொடர்பு கொள்ளுகிறது. புத்தர் ஒரு பாலமாக, ஒரு பாதையாக மற்றும் ஒரு ஊர்தியாக இருக்கிறார். இப்படிப் பல பாலங்கள் இருக்கின்றன. இந்தப் பாலங்களில் தான், மனிதன் விலங்காக இல்லாமல், பல வகையில் அவன் அதற்கு மேலாக இருக்கிறான்.

மனிதன், மிருகமாகவே இருந்தால், அவன் வாழுவது அர்த்தமற்றது. இதுதான் மற்ற இடங்களில் நடக்கிறது. இந்த உலகம் முழுவதும், இந்த வாழ்க்கைச் சூழ்நிலையை ஆழ்ந்து பார்ப்பவர்கள், நம்முடைய வாழ்வு வெறும் அர்த்தமற்றது என்றும், முட்டாள்தனமாக மீண்டும் மீண்டும் நிகழும் ஒரு செயலாகவும் மற்றும் முடிவற்று சென்று கொண்டே... சென்று கொண்டே... இருப்பதாகவே உள்ளது என்ற முடிவுக்கு

வருகிறார்கள். நாம் இதில் வாழவில்லை; மாறாக, நம்மை நாமே இதில் திணித்துக் கொண்டு இருக்கிறோம்.

இதைப்பற்றி பிரக்ஞையாக இல்லாதவர்கள் தான், இதுதான் வாழ்க்கை என்று நினைத்துக் கொள்ளுவார்கள். பைத்தியக்கார மனம்தான், இதுதான் உண்மையான வாழ்க்கை என்று நினைத்துக் கொள்ளும். இது தான் எல்லாம் என்று நினைப்பவர்களுக்கு, வாழ்க்கை அர்த்தமில்லாதது தான். அது அர்த்தமில்லாதது என்பது எந்த முறையில் என்றால், மனிதன் விலங்குகள் போல வாழுவதால், அதனால் எந்த முக்கியத் துவமும் இல்லை என்ற வகையில் தான். மனிதன் என்றால் வளருதல் என்றே அர்த்தம்; அதாவது மிருகத்தனத்திலிருந்து அப்பால்.

வாழ்க்கை என்றால் ஒரு கருணை மிகுந்த ஆசிர்வாதம் மற்றும் அதிசயம் என்று புத்தர் சொல்லியிருக்கிறார். கிருஷ்ணன் வாழ்க்கையை ஆடிப்பாடி கொண்டாடலாம். நாம் வெறுமனே துக்கமாக உட்கார்ந்து, வாழ்க்கை அர்த்தமற்று எங்கேயோ செல்லுவதாக வெறுமனே பார்த்துக்கொண்டு இருக்கிறோம். வாழ்க்கை நமக்கு ஒரு அலுப்புதான். மதிப்பு மிகுந்த அலுப்புதான்... ஆனால் கிருஷ்ணனுக்கு வாழ்க்கை ஒரு கொண்டாட்டம், ஒரு ஆடல், ஒரு மலருதல் எல்லாம். ஏன்? ஏனென்றால், அவன் மேலானவற்றுடன் தொடர்பு கொண்டிருக்கிறான். நீங்கள் கீழானவற்றுடன் தொடர்பு கொண்டு இருக்கும்பொழுது தான், வாழ்க்கை அர்த்தமற்றதாக அலுப்புத் தரக்கூடியதாக மற்றும் மீண்டும் மீண்டும் திரும்பி வரக் கூடியதாகவும் இருக்கிறது.

இந்த உலகம் அணுகுண்டு வெடித்து, அழியப் போவது இல்லை. ஆனால் இந்த அர்த்தமற்ற தனத்தால், இது அழியக்கூடும். இந்த உலகம் முடிவுக்கு வரும் என்று நான் நினைக்கும் பொழுது, அது ஒருக்காலும் கொலையாக இருக்காது; அது தற்கொலையாகத்தான் இருக்கும். இந்த அர்த்தமற்ற தனம் மேலே மேலே குவிக்கப்படும் பொழுது, மனித குலம்

தற்கொலை செய்து கொள்ளலாம். அணுகுண்டு வெடித்தலின் மூலம். அது தற்கொலை செய்து கொள்ளலாம்; ஆனால் அதுவும் தற்கொலையில் சேர்ந்ததுதான்.

ஆகவே மேலான சக்திகள், நமக்கு எப்பொழுதும் தேவைதான். அதுதான் நமக்கு உபயோகமான சக்தி. ஆனால், நாம் அதற்கு மேலும் மேலும் மூடுதலாகவே இருக்கிறோம். அதை நாம் முழுவதும் மறுத்துக்கொண்டு இருக்கிறோம். இதுதான் விநோதம்; அதாவது மேலானதை மறுப்பவர்கள் இப்பொழுது வாழ்க்கை என்பது அர்த்தமற்றது என்று சொல்லுவதுதான். நீங்கள் அது அர்த்தமுள்ளது என்று எப்படி எடுத்துக் கூறினாலும், அதை அவர்கள் மறுக்கவே செய்வார்கள். தியானம், வாழ்க்கையின் அர்த்தத்தைக் கண்டுபிடிக்க மிகவும் உதவியாக இருக்கும் என்று அவர்களிடம் சொன்னால், அவர்கள், "எப்படி? அதனால் முடியாது- தியானம் என்பதே வெறும் கற்பனைதான். இந்தத் தியானம் எங்கே இருக்கிறது? எங்கே, அது என்னவென்று காட்டுங்கள் பார்ப்போம்?" என்றுதான் கூறுவார்கள். அவர்களுக்குத் தேவை விஞ்ஞானப் பூர்வமான ஆதாரம். அவர்கள், "நாங்கள் அதைப் பரிசோதனைப் பண்ணிப் பார்க்க விரும்புகிறோம்" என்றுதான் கூறுவார்கள். இப்பொழுது அவர்கள் விஞ்ஞான ரீதியாக முயற்சி செய்து பார்க்க விரும்புகிறார்கள். அந்தத் தியானத்தின் முடிவுதான் என்ன? அவர்கள் முடிவாக அடைந்த கருத்துக்கள் கீழ்க் காண்பவற்றை அடிப்படையாகக் கொண்டது. அதாவது, ஒருவர் ஆழமான தியானத்தில் இருக்கும்பொழுது, அவர் எங்குமே இருப்பதில்லை; ஆனால் அவர் ஆழமான கனவுகளற்ற தூக்கத்தில் இருக்கிறார்- மனம் ஆல்பா அலைகளை உண்டுபண்ணுகிறது. அதனை இப்பொழுது கருவிகளில் பதிவு செய்து பார்க்கிறார்கள். யாராவது மிக ஆழ்ந்த தியானத்தில் இருக்கும்பொழுது, அதே ஆல்பா அலைகள் ஏற்படுகின்றன. ஆகவே, தியானம் என்பது ஆழ்ந்த தூக்கத்தைத் தவிர வேறல்ல- இதுதான் அந்தக் கருத்துகள்.

ஆனால் வெளித்தோற்றத்தில், அது சரியென்றே தோன்றும். இதற்கு விஞ்ஞான ரீதியாக நிரூபணம் இருப்பதால், அதை உங்களால் மறுக்க முடியாது. நீங்கள் ஆழ்ந்தத் தியானத்தில் இருக்கும்பொழுது, கனவுகளற்ற ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும்பொழுது அதே ஆல்பா அலைதான் உண்டாகும். ஆகவே, தியானம் என்றால் ஆழ்ந்த கனவுகளற்ற தூக்கம்தான்– அவ்வளவுதான். விஷயம் முடிந்துவிட்டது!

ஆனால் அது அப்படி இல்லை! தியானம் என்பது கனவுகளற்ற தூக்கத்திற்கு அப்பால் உள்ள முதல் நிலையாகும். அது அலைகளற்ற நிலை; அங்கே அலைகள் முழுமையாக மறைந்து விடுகின்றன. ஒருவன் மிக ஆழமான தியானத்தில் இருக்கும்பொழுது, அவன் ஆழ்ந்த தூக்கத்தைக் கடந்து அப்பால் செல்லுகிறான். அலைகளின் ஓட்டம் எதுவரை ஓடி நிற்கிறதோ, அதுவரைதான் அலைகளைப் பதிவு செய்யும் கருவி அதைப் பதிவு செய்யும். அலைகளற்ற நிலையில், மனதில் என்ன நடக்கிறது என்பதை அதனால் பதிவு செய்ய முடியாது.

புத்தரின் நிலை, வெறும் கனவுகளற்ற ஆழ்ந்த தூக்க நிலைதான் என்றால், பின் எதற்காக தியானத்தை வருடக் கணக்கில் செய்ய வேண்டும்? தூக்க மயக்க மருந்தை ஏன் உட்கொள்ளக் கூடாது? அதே ஆல்பா அலைகள் உண்டானால், ஏன் நாம் ரசாயன உதவியை நாடக்கூடாது? இது மிகவும் சுலபம், மற்றும் குறுகிய வழியாகும். ஆனால் ஒரே ஒரு வித்தியாசம் உண்டு. ஒருவன் பல வருடங்களாக தூக்க மருந்துகளை உட்கொண்டு ஆழ்ந்த தூக்கம் பெற்று ஆல்பா அலைகளை உண்டு பண்ணிக் கொள்ளலாம். ஆனால், அவனால் வாழ்க்கை அர்த்தமுள்ளது என்ற முடிவுக்கு ஒருநாளும் வரமுடியாது. அவன் பழையபடியேதான் இருப்பான். அதே போல தினசரி கடமைகளை செய்து கொண்டுதான் இருப்பான். அவனால் ஒரு புத்திசாலியாக முடியாது; ஒரு புத்தராக முடியாது. அவனால் வாழ்க்கையைக் கொண்டாட முடியாது. அவனால், “நான் இந்த உலகத்தில் பிறந்தது குறித்து, மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன். நான் வாழுவதில் மகிழ்ச்சி

அடைகிறேன்." என்று சொல்ல முடியாது. அவனால், இந்த உயிரியக்கத்து நன்றி கூற முடியாது.

புத்தர் வித்தியாசமாகவே விளங்குகிறார்- ஆனால் விஞ்ஞானிகள் அதற்கு ஆதாரத்தைத் தேடுகிறார்கள். உங்களால் புத்தரது மனதை கவனிக்க முடிந்தால், அங்கே என்ன நிகழுகிறது என்பதை உங்களால் பதிவு செய்ய முடியாது. புத்தர் ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும் பொழுது, அவர் வெறும் பிரக்ஞையாக இருக்கிறார். ஆனால், அந்தப் பிரக்ஞைத் தன்மையை, உங்களால் பதிவு செய்ய முடியாது. ஏனெனில் அது அலைகளற்றது. புத்தரின் வாழ்க்கை, ஆழ்ந்த தூக்கத்தைப் போல உள்ளது என்று நான் கூறினால், பிறகு வாழ்க்கையின் அர்த்தம் தான் என்ன என்று நீங்கள் கேட்கலாம். ஆனால் வாழ்வு அர்த்தமற்றதாகவே இருக்கும்.

உயிர்த்தன்மை மற்றும் வாழ்வு என்பது தெய்விகமானது மற்றும் கடவுள் என்று நீங்கள் உணர்ந்தால் தான், வாழ்வு அர்த்தமுள்ளதாகும். அந்த மேலான நிலை இயங்கினால் தான், அந்த அர்த்தம் கிடைக்கும். அந்த அர்த்தம், அப்பாலிலிருந்து தான் வரவேண்டும், உங்களிடமிருந்து அல்ல. நீங்கள் அப்பாலுக்கு அப்பால் சென்றாலொழிய, வாழ்வு அர்த்தமுடையதாகாது.

ஆனால், விஞ்ஞான ரீதியாக எண்ணுபவர்கள், "கடவுள் என்று எதுவும் இல்லை. பிரக்ஞைத் தன்மைக்கு ஆல்பா மனநிலையைத் தவிர, வேறு எந்த நிலையும் கிடையாது" என்று சொல்லி அதை மறுத்துக் கொண்டே இருக்கிறார்கள். அதற்கு ஆதாரம் கேட்கிறார்கள். அவர்கள், வாழ்வின் அர்த்தம் என்றால் என்ன என்று கேட்கிறார்கள்.

நீங்கள் கீழான சக்திகளுக்கு திறப்பாக இருந்தால், வாழ்வு அர்த்தபற்றதாகவே இருக்கும். கீழான தன்மையுடன் திரும்பத் திரும்ப, மீண்டும் மீண்டும் செயல்படுவதுதான், தினசரி வாழக்கையாக இருக்கும். ஆனால், மேலான தன்மையுடன் உங்களுடைய செயல் ஒன்றுபோல மீண்டும் மீண்டும்

இருக்காது. அங்கே தெய்விக புத்துணர்ச்சியும், சாசுவத புதுமையும் இருந்து கொண்டே இருக்கும். ஒவ்வொரு கணத்திலும், தெய்விகம் நிரம்பி இருக்கும். அப்பொழுது வாழ்வு அர்த்தமுடையதாகிறது, முக்கியத்துவம் கொண்டதாகிறது.

மனிதகுலம், தொடர்ந்து நிலைபெற உங்களுக்கு இந்த மேலான சக்திகளுடன் உள்ள தொடர்பு மிக அவசியமாகிறது. இல்லாவிட்டால், மனித குலம், மிருக இனங்களைப் போலத் தான் வாழ்ந்து கொண்டு இருக்கும்- அதில் எந்தத் தனித் தன்மையும் இருக்காது.

இதுதான் பிரச்சினையே. நாம் மிருகங்களைப் போல போராடிக் கொண்டு இருக்கிறோம்; நம்முடைய அரசியல்கள், நாடுகள், இனங்கள், மதங்கள்... போன்ற எல்லாமே ஒருவித மிருகத் தனம்தான்.

நாம் நாடு என்று அழைக்கிறோம்; அது எல்லைகளின் பேராசையைத் தவிர, வேறல்ல. நாம் இனம் என்று கூறுகிறோம்; இது ஒரு மந்தைக் கூட்டத்தைத் தவிர வேறல்ல. நாம் பல அழகிய பெயர்களைக் கொடுக்கிறோம்; பல அழகிய விலாசங்களைக் கொடுக்கிறோம்; ஆனால், அதனுள் மிகவும் அருவருப்பான தன்மையை மறைத்து வைத்திருக்கிறோம்.

இந்த அரசியலெல்லாம் என்ன, எதற்காக? அது, ஏதோ மிருகங்கள் செய்வதை ஒத்தே இருக்கிறது. நீங்கள் இந்த அரசியல் தோற்றத்தைச் சற்று உற்று நோக்கினால், இந்த உலகத்தில் நிலவும் சகல அரசியல் தனங்களுக்கும் கொரில்லா இனக்கூட்டத்தின் செய்கைகளுக்கும் எந்தவித வேறுபாடும் இல்லை என்பதை உணருவீர்கள். அங்கே, ஜனாதிபதி, பிரதமமந்திரி, அடுத்து கீழே உள்ள மந்திரிகள், வேலைக்காரர்கள்- கீழான ஜாதிகள், மேலான ஜாதிகள் இப்படிப் பல கூறுகள், இரண்டு இனங்களிலும் இருக்கின்றன.

அங்கு ஒரு வித அடிமைத்தனம் நிலவுகிறது. மேலான நிலையில் உள்ள பபூன் (Baboon), கீழான நிலையில் உள்ள

பபூனை அடக்குகிறது. அந்தக் கீழான நிலையில் உள்ள பபூன், சிறிது எதிர்ப்பைக் கூட காட்ட முடியாது. இது ஒரு உள் அரசியல்தனம். அது ஒவ்வொரு கணமும் தொடர்கிறது. எப்பொழுது ஒரு புதிய பபூன் தலைமையைப் பிடிக்க முனைகிறதோ, அப்பொழுதே சண்டையும், சச்சரவும் அங்கே மூழுகின்றன. பிறகு மீண்டும் ஒழுங்குமுறைகள் மாற்றப் படுகின்றன !

மேலும், இதைப்போல பல ஒழுங்குபடுத்தப்பட்ட பபூன் கூட்டங்கள், தனித்தனித் தலைமையில் இயங்குகின்றன. ஒவ்வொரு கூட்டத்துக்கும் ஒரு எல்லை உண்டு. அந்த எல்லைக்குள், வேறு கூட்டம் நுழையக் கூடாது! அப்படி நுழைந்தால், பெரிய சண்டைதான், போர்தான் ! இதுவே தான் மனித இனத்திலும் நிலவுகிறது ! நம்மிடம் எவ்வளவு எல்லைக்கோடுகள் ! சீனா இங்கே ஆரம்பிக்கிறது; இந்தியா அங்கே முடிகிறது. இந்த எல்லையைப் பற்றிய அரசியல் தனம் மிகப்பெரிய பிரச்சினையாக இருக்கிறது. கடைசியில், வலிமைதான் அந்த எல்லையை நிர்ணயிக்கிறது. நீங்கள் அரசியலில் ஆழமாகச் சென்று பார்த்தால், மற்றும் நம்முடைய அரசியலை பபூன் கூட்டத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் அல்லது வேறு எந்த மிருகக் கூட்டத்தோடும் ஒப்பிட்டுப் பார்த்தால், இரண்டுக்கும் உள்ள ஒற்றுமையைக் கண்டு அதிர்ச்சியடைவீர்கள். அரசியலில், மனிதன் ஒரு மிருகம் போலவே நடந்து கொள்ளுகிறான்.

மதத் தன்மையோடு, அதாவது மதத் தன்மையோடு கூடிய பிரக்ஞைத் தன்மையில் தான், நீங்கள் முதன் முதலாக ஒரு மனிதனாக இருக்கிறீர்கள். இல்லாவிட்டால், எல்லாமே மிருகம் போலத்தான் இயங்குகிறது.

மதத்தோடு, நீங்கள் மேலான நிலைக்குத் திறப்பாக இருக்க வேண்டும். இதுதான் மதத்தன்மையோடு கூடிய பிரக்ஞைத் தன்மை என்பது- அதாவது மேலான நிலைக்குத் திறப்பாகவும், கீழான நிலைக்கு மூடுதலாகவும் நீங்கள் இருக்க வேண்டும்.

ஆகவேதான், ஒரு மதத்தன்மை வாய்ந்தவன், ஒரு நாட்டிற்கோ, ஒரு மதத்திற்கோ உரியனாக இருக்க முடியாது. அவன் அந்த உயிர்த்தன்மையில் மட்டும்தான் சார்ந்து இருக்கிறான். ஏனென்றால், அது ஒன்று தான் மேலான சாத்தியக் கூறு- அங்கே எந்த எல்லையும் இல்லை. எந்த அரசியலும் இல்லை. இவற்றுக்குத்தான் மதம் அவசியமாகும்.

மேலான நிலை நிகழாவிட்டால், அரசியல் தற்கொலைக்கு ஒப்பாகி விடும். அரசியல் ஒரு பக்கம் இருந்தாலும், நாம் இதுவரை வாழ்ந்து வந்து இருக்கிறோம் என்றால், அதற்குக் காரணம் முழுமையாக நம்மை அழித்துக் கொள்ள தகுந்த சாதனம் இதுவரை நம்மிடம் இல்லாதது தான்! தொடர்ந்து போரிடுதலும் மற்றும், பயூன் தலைமைகள் இருந்தாலும்- நாம் அந்தத் தலைமையை அலெக்ஸாண்டர் என்றோ ஹிட்லர் என்றோ அழைத்தாலும், அதில் எந்த வித்தியாசமும் கிடையாது; நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

ஒருவருக்கொருவர் எல்லைக்காக சண்டை போட்டுக் கொண்டும், அகங்கார அரசியல் அதிகாரத்திற்காகப் போரிட்டுக் கொண்டு இருந்தாலும், நாம் வாழ்ந்து கொண்டு இருக்கிறோம் என்றால், நம்மை முழுமையாக, புல், பூண்டோடு அழித்துக் கொள்ள, நம்மிடம் மிக சக்திவாய்ந்த போர்க் கருவிகள் இல்லை. ஆனால், இப்பொழுது நம்மிடம் அப்படிப் பட்ட கருவிகள் நிறையவே இருக்கின்றன; இதனால் நாம் இந்த முழு உலகத்தையே அழிக்க முடியும். இந்த மாதிரியான மிருகத் தனத்தால் நமக்கு எதிர் காலமே இல்லை என்றாகிறது. முதன் முதலாக, மதம்தான், நாம் வாழுவதற்கு வகை செய்யும் கருவியாக இருக்கிறது. அனேக பிரக்ஞைத் தன்மைகள் அந்தத் தெய்விக சக்திக்குத் திறப்பாக இருந்தாலொழிய, நமக்கு எந்த எதிர்காலமும் இல்லை. முன்பு எப்போதைக்காட்டிலும், இப்பொழுது நமக்கு புத்தர்களும், இயேசுகளும் மிக அதிகமாகத் தேவையாக இருக்கிறது.

இதற்கு நீங்கள் என்ன செய்ய வேண்டும்? நீங்கள் ஒரு காரியம் செய்யலாம். அதாவது கீழான நிலைக்கு திறப்பாக இருப்பதை, மூடவும். இதுதான் உங்களுடைய முக்கியமான நிலை. இதற்காக, நீங்கள் என்னென்ன சிரமங்களை எதிர்நோக்க வேண்டி வரும்? ஒரே ஒரு சிரமத்தைத்தான். உங்களுடைய பழைய பழக்கவழக்கங்கள்!

பழக்க வழக்கம் மாத்திரமே, உங்களிடம் தானாக இயங்கக் கூடியது. யாராவது உங்கள் மேல் கோபப்பட்டால், உங்களுடைய கோபம் உடனே தூண்டப்படுகிறது. அது உங்களுடைய முயற்சி இல்லாமலே, பிரக்ஞை இல்லாமலே, தானாகவே எழும்புகிறது- எப்படி ஒரு பொத்தானை அமுக்கினால், மின்விளக்கு எரிவதைப் போல. இப்பொழுது உங்களுடைய கோபத்துக்கு, அடுத்தவன்தான் பொத்தானக இருக்கிறான். அதற்காக நீங்கள் எதுவும் செய்ய வேண்டியது இல்லை. அது தானே எழும்பும்.

நம்முடைய மனம், தானே செயல்படும் இயந்திரம் போல, ஒரு ரோபாட் (Robot) போல, செயல்படுகிறது என்று மனநல வல்லுநர்கள் சொல்லுகிறார்கள். அதைப்பற்றி, பிரக்ஞையாக இருக்கவேண்டியது இல்லை. நீங்கள் கற்றவை அனைத்தையும், ரோபாட்டிற்குள் செலுத்தவும்; அது தானே வேலை செய்யும். உங்களுடைய மனம் ஒரு கம்ப்யூட்டரைப் போல, நீங்கள் அதில் எதையாவது செலுத்திவிட்டால், அது தானே செயல்பட ஆரம்பித்துவிடும். நீங்கள் ஓய்வாக இருக்கலாம்; நீங்கள் தேவையே இல்லை.

சாதாரண வாழ்வைப் பொறுத்தவரையில், இந்த மன ரோபாட் தேவைதான். ஏனென்றால், அது இல்லாமல், நீங்கள் பல காரியங்களைச் செய்ய முடியாது. அது ஒரு அவசியமான தேவைதான். ஆனால் மேலான நிலையைப் பொறுத்தவரையில், அது ஒரு பிரச்சினைதான்.

நீங்கள் எப்பொழுது கோபம் கொள்ள வேண்டும் என்பது உங்கள் ரோபாட்டுக்குத் தெரியும். நீங்கள் அதற்குப்

பிரக்ஞையாக இருக்கவேண்டாம். யாராவது உங்கள் மேல் கோபப்பட்டால், என் ஒரு கோபப்பார்வை போதும். உங்களுடைய ரோபாட் அதைப் பார்த்துக் கொள்ளும்! அது உங்களுடைய இரத்த ஓட்டத்தில், விஷத்தை கலந்துவிடும். நீங்கள் குதித்து சண்டை இட அது உங்களைத் தூண்டிவிடும். இது இயந்திரத்தனமாக நிகழும். நீங்கள் அந்த ரோபாட்டை மட்டும் காப்பாற்றினால் போதும்- குறைந்தது கீழான நிலைக்குத் திறப்பாக இருப்பதைப் பொருத்தாவது. அந்த ரோபாட்டை வேலை செய்ய அனுமதிப்பது கூட நல்லதுதான்; ஆனால் அதை அன்பு செலுத்த, கோபப்பட அனுமதிக் காதீர்கள்.

உங்களுடைய ரோபாட், உங்களுக்கு சகல வேலைகளையும் செய்யும். அது, அதே வேலைகளை பல ஆயிரம் தடவை செய்து அதில் சிறந்த நிபுணனாக ஆக முடியும். நீங்கள் அதற்குத் தேவை இல்லை. ஆனால், ஒரு கணவனும், மனைவியும் ஒருவருக் கொருவர் அன்பு செலுத்துவது கூட ரோபாட் தனமாகி விடுகிறது. அதற்கு எந்தப் பிரக்ஞைத்தன்மையும் தேவை இல்லாமல் போய்விடுகிறது. ரோபாட் ஒரு செயலை, திரும்பத் திரும்ப மிக சுலபமாகவும் ஒழுங்கோடும் செய்யும். ஆனால், அன்பு போன்ற உணர்ச்சிகரமான செயல்களை, அதனிடம் ஒப்படைக்க வேண்டாம்.

ஆத்மிக முன்னேற்றத்தைப் பொறுத்தவரையில், இந்த ரோபாட் மாத்திரம், ஒரே ஒரு தொந்திரவாக இருக்கிறது. நீங்களே அதன் வேலைகளை எடுத்துக் கொள்ளுங்கள். இயந்திரத் தனங்களை, உங்களுடைய பிரக்ஞை நிலைக்குக் கொண்டு வாருங்கள். பிறகு, மெல்ல மெல்ல, கொஞ்சம் கொஞ்சமாக நீங்கள் பிரக்ஞைத் தன்மையில் மேலும் கூடினால், கீழான நிலைக்குத் திறப்பாக இருப்பது, மெல்ல மெல்ல மூட ஆரம்பிக்கும். பிறகு மேலான நிலை திறந்து கொண்ட பிறகு, நீங்கள் மேற்கொண்டு எதுவும் செய்ய வேண்டியது இல்லை. பிறகு உங்கள் மூலமாக, மேலான நிலை தானே வேலை செய்ய ஆரம்பித்துவிடும்.

நீங்கள் கீழான நிலையோடுதான், ஏதாவது செய்ய வேண்டும். நீங்கள் மேலான நிலைக்கு, வெறுமனே நீங்கள் உங்களையே சரணாகதியாக்கிக் கொள்ள வேண்டும். அவ்வளவுதான். நீங்கள் இனிமேல் தேவையில்லை. நாம் புத்தரை, பகவான் புத்தர் என்று அழைக்கும் பொழுது, அதன் அர்த்தம் என்னவென்றால், புத்தர், வெறும் சித்தார்த்தராக இனிமேல் இல்லை என்பதுதான்- அந்த சித்தார்த்தர் கரைந்து மறைந்துவிட்டார்- அவரை மேலான நிலை தன் பொறுப்பாக ஏற்றுக் கொண்டு விட்டது.

கடவுளை நம்பாதவர்கள் கூட, பகவான் என்றோ, கடவுள் என்றோ எதுவும் இல்லை என்றும், படைக்கும் கடவுள் என்று ஏதும் இல்லை என்றும் கூறுபவர்களைக் கூட, அந்த சரணாகதிக்காக பகவான் மஹாவீரர் என்று அழைக்கிறார்கள். ஏனென்றால், அவரை, பழைய பெயரால் அழைக்க அவர்களால் முடியவில்லை. அந்த பழைய வர்த்தமானன் உயிரோடு இல்லை. அவருடைய அகங்காரம் அல்லது தன் முனைப்பு என்று எதுவும் இல்லை. அந்த அப்பால்தான் வேலை செய்கிறது. இப்பொழுது, அந்த அப்பால்தான் அவரை ஆக்ரமித்திருக்கிறது. அந்த எல்லையில்லாதது தான் அவரை ஊடுருவி இருக்கிறது. எல்லாமே அந்த எல்லையற்றதுக்கு ஏதுவாக செயல்படுகிறது. நீங்கள் அந்த மேலான நிலைக்குத் திறப்பாக ஆன பின்பு, நீங்கள் மறைந்து விடுகிறீர்கள். நீங்கள் இப்பொழுது இல்லை; அந்த மேலானதுதான் இருக்கிறது; அப்புறம் நிகழுவது அனைத்துமே அதிசயம்தான்.

ஆனால், முகமது சண்டையிட்டு மதத்தைப் பரப்பியது இப்பொழுது நமக்கு ஒரு பிரச்சினையாக இருக்கிறது. மேலான நிலையை அடைந்த அவரால் எப்படி சண்டை போட முடிந்தது? ஆனால் அது முகமதுவுடைய தீர்மானம் இல்லை. முகமது அங்கே ஒருக்காலும் இல்லை. அந்தத் தெய்விகம் தான் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ளது; அதுதான் காரியமாற்று கிறது. அது எங்கே அழைத்துச் சென்றாலும், அதன் பின்னே, முகமது ஒரு நிழல் போலவே செல்ல வேண்டும். அந்த மேலான

நிலை அவரைப் போருக்கு அழைத்துச் சென்றால், முகமது சந்தோஷமாகத்தான் செல்ல வேண்டும்.

ஆகவேதான் கிருஷ்ணர், அர்ஜுனனை தன்னிடம் சரணாகதியடையும்படி வற்புறுத்தினார். கிருஷ்ணர், "என்னிடம் சரணாகதியடை. பிறகு உனக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை. நான் உன் பொறுப்பை எடுத்துக் கொள்ளுகிறேன். நான் உன் மூலமாக போரிடுகிறேன்," என்று சொன்னார்.

ஆகவே, அதன்பிறகு, நீங்கள் இல்லை. கீதையில் உள்ள கிருஷ்ண-அர்ஜுன ஆரம்பப் போராட்டம் எல்லாம், அர்ஜுனன், தான் தானாக இருந்ததால் வந்தது தான். அவன், சண்டை போடுவதா, வேண்டாமா என்று தானே முடிவு செய்ய விரும்பினான். மேலான நிலைக்கு மூடியவாறு இருந்து, கீழான நிலைக்கு ஏற்றவாறு அவன் முடிவு செய்ய நினைத்தான். அவன் மேலான நிலைக்குத் திறப்பாக இருப்பதை எதிர்த்தான். ஆனால் கிருஷ்ணன் அதற்கு ஊக்குவித்தார். அவர், "கீழான நிலைக்கு மூடியவாறு இரு; மேலான நிலைக்குத் திறப்பாக இரு; அதனிடம் சரணாகதியடை. பிறகு உன்னைப் பொறுத்தவரையில், எந்த முடிவும், எந்தத் தீர்மானமும் தேவையில்லை. பிறகு மேலான நிலை முடிவு செய்து கொள்ளும். ஆகவே, அதனிடம் சரணாகதியடை" என்று கட்டளையிட்டார்.

ஆகவே, முதலில் கீழான நிலைக்கு மூடியவாறு இருக்கவும். பிறகு மேலான நிலையை உணரும் பொழுது, நீங்கள் அதனிடம் சரணாகதியடைந்து விடுங்கள். நீங்கள் மேலான நிலையை உணரும்பொழுதெல்லாம், அதன் மீது ஆழ்ந்த நம்பிக்கை வைக்கவும். மாறாக, கீழான நிலையை உணரும் பொழுதெல்லாம், அதை நம்ப மறுக்கவும், அதன்மீது நம்பிக்கை வைக்காதீர்கள். அதற்கு மூடுதலாக இருங்கள். பிறகு அந்த மேலான தன்மைக்கு, நீங்கள் ஒரு பாலமாக அமைவீர்கள்.



"கடவுள் இருக்கிறாரா?"



து ஏதோ பற்றிய சரியான கேள்விதான்... அந்த ஏதோ பற்றி, நீங்கள் கேள்வி கேட்பதற்கு முன்பு, சரியான கேள்வியைக் கேட்பது பற்றி, நீங்கள் சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டும். ஒவ்வொரு கேள்வியும், சரியான விசாரிப்பாக ஆகாது. ஏனென்றால், உள் பரிமாணத்தைப் பொறுத்தவரையில், அர்த்தமுடையது போல உள்ள பலப்பல கேள்விகளை நீங்கள் கேட்கலாம். ஆனால் அவை எதுவும் அர்த்தமுள்ளதாகாது. அவை அனைத்தும் முட்டாள்தனம் தான்.

உள் உலகத்தைப் பொறுத்தவரையில் அறிவு தாண்டிய நிலை (Meta physical) சம்பந்தப்பட்ட கேள்விகள் அனைத்துமே அர்த்தமற்றதுதான். அறிவுப் பூர்வமான கேள்விகள், உங்களை உங்களுக்குள் செலுத்தாது. ஏனென்றால், சரியான விடைகள் அவற்றுக்குக் கிடைத்தாலும், அதனால் உங்களுக்கு எந்த பிரயோஜனமும் கிடையாது. அறிவு என்பது ஒரு கருவிதான். வெளியே நிலை பெற்று இருக்கும் அனைத்துப் பொருள்களுக்கும் அது பாலமாக இருக்கிறது. உள்பரிமாணத்துக்கு, அதற்கு எந்தக் கதவும் கிடையாது. நீங்கள் அறிவுப் பூர்வமாக கேள்வி கேட்க ஆரம்பித்துவிட்டால், அப்படி, நீங்கள் பல பிறவிகளாக கேட்டுக்கொண்டே தான் இருப்பீர்கள்; அவற்றுக்கும் பல பதில்களை சேகரித்தும் வைத்திருப்பீர்கள். இருந்தும், நீங்கள் உள் உலகத்தோடு, ஒருங்கிணைய மாட்டீர்கள்.

உங்களைப் பற்றி, நீங்கள் பலவற்றைத் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால், உங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளுவது என்பது, உங்களையே தெரிந்து கொள்வதாகாது. இந்தப் 'பற்றி' (About) என்பது உங்களுக்கு மேலேயே உங்களைச் சுற்றிச் சுற்றியேதான் வந்து கொண்டிருக்கும். ஆனால் உங்களுடைய மையம் கன்னித்தனமாகவே இருக்கும்-உங்களால் தொடப்பட்டிருக்காது. நீங்கள், இந்த விபத்தை கேள்வி-பதில் என்ற வட்டத்திலே தான் சுற்றிச் சுற்றி வருவீர்கள். ஆனால் ஒவ்வொரு பதிலும், பல கேள்விகளை உண்டு பண்ணும்... பிறகு பல கேள்விகள் பலவித பதில்கள். ஆனால் நீங்கள் மேலோட்டமாகவே இருப்பீர்கள்; கேள்விகளைக் கேட்டுக் கொண்டும், பதில்களை அடைந்து கொண்டும். விஷய ஞானம் தான் உங்களுடைய 'நான்' என்ற தனித்தன்மையைப் பற்றிப் பெருக்கிக் கொண்டே போகும். இதனால் நீங்கள் உங்களுடைய 'நான்' என்பதை அறிந்தாகாது.

அர்த்தமுள்ள ஏதோ ஒன்றைப் பற்றி, எப்படி கேள்வி கேட்பது -வெறும் அறிவுப்பூர்வமாக இல்லாது, உயிர்த்தன்மை யாக, வெறும் வார்த்தையாக அறிந்து கொள்ளாது, உண்மையில் வாழுவதாக. இதற்கு நீங்கள் ஞாபகப்படுத்திப் பார்க்க வேண்டியது அனேகம் உள்ளன.

ஒன்று: நீங்கள் என்ன கேட்டாலும், அது ஏற்கெனவே தயாரிக்கப்பட்ட கேள்வியாக இருக்கக்கூடாது. இப்பொழுது உங்கள் சம்பந்தமான ஏதோ தோன்றும் கேள்வியை அப் பொழுதே உடனே கேளுங்கள்; அது உங்களுக்கு மிக சம்பந்த மாக இருக்க வேண்டும்; அர்த்தமுள்ளதாக இருக்க வேண்டும். உங்களைப் பற்றியதாக இருக்க வேண்டும்; அது உங்களை மாற்றமடையச் செய்யக் கூடியதாக இருக்க வேண்டும். உங்களுடைய வாழ்க்கையை மிகவும் சார்ந்ததாக உள்ள கேள்விகளையே கேட்கவும்.

புதிதாகக் கேள்விகளைக் கேட்காதீர்கள்; கடன் வாங்கப்பட்ட கேள்விகளைக் கேட்காதீர்கள். இறந்த காலத்திலிருந்து வந்த

கேள்விகளைக் கேட்காதீர்கள். ஏனென்றால் அவை உங்களுடைய நாடகத்திலிருந்து வந்தவை, உங்களிடமிருந்து அல்ல. நீங்கள் கடன் வாங்கப்பட்ட கேள்விகளைக் கேட்டால், உங்களுக்கு உண்மையான பதில் கிடைக்காது. நீங்கள் அதனால் கவரப்படமாட்டீர்கள். கடன் வாங்கப்பட்ட கேள்விகள் அனைத்துமே அர்த்தமற்றது தான். நீங்களாக விரும்பும் கேள்விகளை மட்டும் கேளுங்கள். நான் ஏதும் உங்களுக்குச் சொல்லும்பொழுது, நீங்கள் இந்தக் கணத்தில், இப்பொழுது, இங்கே, மிக அருகில் இருப்பதாகவே நான் எண்ணிக் கொள்ளுகிறேன். அதைப்போல, நீங்கள் என்னிடம் ஏதாவது கேள்வி கேட்டால், அது இப்பொழுது, இங்கே, இந்தக் கணத்தில் இருந்தால், அது உயிர்த்தன்மையுடையதாகிறது. அது உங்களுடைய ஞாபகத்தின் அடிப்படையில் வரவில்லை; மாறாக அது உங்களுடைய உயிர்த்ன்மையின் வெளிப்பாடாக இருக்கிறது.

இரண்டாவது: ஏற்கெனவே பதில் அளிக்கப்பட்ட கேள்விகளை மீண்டும் கேட்காதீர்கள். அது உங்களை எந்தவழியிலும் மாற்றாது. உதாரணமாக, "கடவுள் இருக்கிறாரா?" என்று யாராவது கேட்கலாம். பதில்கள் உங்களை மாற்றக்கூடியதாக இருந்தால், அப்படிப்பட்ட கேள்விகளைக் கேளுங்கள். உதாரணமாக, கடவுள் இருந்தார் என்றால், நீங்கள் ஒருவகை மனிதனாகவும், கடவுள் இல்லை என்றால், நீங்கள் வேறு ஒருவித மனிதனாகவும் இருந்தால், உங்களுடைய கேள்வி பயன் உள்ளதுதான். ஆனால், கடவுள் இருக்கிறார் அல்லது இல்லை என்று தெரிந்த பிறகு, உங்களிடம் எந்த மாற்றமும் இல்லை என்றால், உங்களுடைய கேள்வி அர்த்தமற்றது. அது ஒரு ஆர்வத்தில் எழுந்த கேள்வியே தவிர, விசாரிப்பாக அல்ல. ஆகவே, நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். அதாவது உங்களுடைய கேள்வி உங்களுக்கு மிகவும் நெருங்கிய சம்பந்தம் உடையதா என்று தெரிந்து கேளுங்கள். அப்பொழுதுதான் பதிலும் அர்த்தமுடையதாக இருக்கும்; அர்த்தமுடையதாக இருக்கும் என்று நான் எந்த அர்த்தத்தில் சொல்லுகிறேன் என்றால், அந்த வித்தியாசமான பதிலால், நீங்கள் வித்தியாச

மானவராக மாறினார் என்பதுதான் அது. கடவுள் வாழுவது குறித்து, நீங்கள் உண்மையிலேயே தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறீர்களா? அப்படித் தெரிந்து கொண்டால், நீங்கள் வேறு ஒரு வித்தியாசமான நபராக மாறிவிடுவீர்களா? அப்படி கடவுள் இல்லை என்றால், உங்களுடைய முழு வாழ்வே வேறுவிதமாக அமைந்துவிடுமா?

நான் பார்த்தவரையில், கடவுள் இருக்கிறார் அல்லது இல்லை என்பதால், மக்கள் ஏதும் மாற்றம் அடைந்ததாகத் தெரியவில்லை; அவர்கள் அப்படியேதான் இருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய மேலோட்டமான விஷய ஞானத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். அவர்களைப் பொறுத்த வரையில் உண்மையிலேயே, அந்தக் கேள்வி முக்கியத்துவம் வாய்ந்தது அல்ல. அந்தக் கேள்வியில் எந்த முக்கியத்துவமும் இல்லை.

உடனே, இங்கே, இப்பொழுது, தன் இயல்பாக உந்துதலாக, உங்களுடைய கேள்வி எழும்பட்டும். இறந்த காலத்திலிருந்து மற்றும் பழைய மத ஏடுகளிலிருந்து எதையும் எடுத்து வர வேண்டாம். அது தானே உங்களிடம் தோன்றட்டும். அப்படி எதுவுமே வராவிட்டாலும், நல்லதுதான். கேள்வி எதுவும் உங்களிடம் தோன்றாமல், நீங்கள் ஒருவித சூன்யத்தை உணர்ந்தால், அது மிகவும் நல்லது. அந்த சூன்ய நிலை உங்களுடையது. உண்மையானது. அது உங்களுக்கே சொந்தம். அந்த சூன்யத்தில் கூட, அதிகமாக நிகழ முடியும்.

இப்படி நீங்கள், உங்களுடைய ஆழமான உயிர்த்தன்மையாக அந்தக் கேள்வியைக் கேட்டிருந்தால், அந்தக் கேள்வி கேட்டலே, ஒரு தியானமாகிறது. சிலசமயம், உங்களுடைய கேள்வியே, பதிலாக அமைந்துவிடும். அது எந்த அளவுக்கு உங்களுடைய ஆழமான நிலையிலிருந்து வருகிறதோ, அந்த அளவுக்கு அது சரியான பதிலுக்கு மிக அருகில் இருக்கிறது. அந்தக் கேள்வி உங்களுடைய உயிர் மைய நிலையிலிருந்து வந்திருந்தால், அதற்கு எந்த விடையும் தேவை இல்லை. அந்தக் கேள்வியே

பதிலாகிவிடுகிறது. ஆகவேதான், நான் அது ஒரு தியானமாகிறது என்றேன். நீங்கள் ஒரு கேள்வியை, முழுமையான உயிர்த் தன்மையோடு கேட்டால்- அந்தக் கேள்விக்கு வெளியே எதுவும் இல்லாது- நீங்களே கேள்வியாகி விடுகிறீர்கள். பிறகு உங்களுக்கு எந்தப் பதிலும் தேவை இல்லை. நீங்கள் முழுமையாக உயிர்த் தன்மையோடு அந்தக் கேள்வியில் இருப்பதுவே, பதிலாகி விடுகிறது.

உங்களுக்கு விடை வெளியிலிருந்து தேவையாக இருக்கிறது. ஏனென்றால், உங்களுடைய கேள்வியில் ஆழம் இல்லை. உள் உலகத்தைப் பொறுத்தவரையில், நான் சொல்லுவது அனைத்தும் உண்மை. விஞ்ஞானம் அல்லது வெளி விசாரிப்பாக வரும் கேள்விகள் அப்படி இருக்காது. அங்கே, கேள்வி கேள்வியாகத்தான் இருக்கும்; அதற்குப் பதில் வேறு எங்கேயோ தான் நீங்கள் தேடவேண்டும். ஆனால், உள் உலகத்தைப் பொறுத்த வரையில், கேள்வியே பதிலாகி விடுகிறது. உங்களுடைய தேடுதலே முடிவாகி விடுகிறது.

உள் உலகத் தேடுதலில் வழியும், முடிவும் வெவ்வேறாக இல்லை. வழியே முடிவாக இருக்கிறது. சரியாகத் தேடினால், ஆரம்பமே முடிவாகிறது. தேடுதலே புரிந்து கொள்ளுவதாகிறது. ஆனால் கேள்வி உண்மையாகவும், முழுமையாகவும் இருக்க வேண்டும். நீங்கள் உங்களுடைய கேள்வியில், நிறைந்து இருக்க வேண்டும். அது வெறும் மேலோட்டமான விசாரிப்பாக இருக்கக் கூடாது.

ஆகவே, இப்பொழுது ஓய்வாக இருங்கள். நான் ஓய்வாக இருங்கள் என்று சொல்லும்பொழுது, உங்களுடைய இறந்த காலத்திலிருந்து ஓய்வாக இருங்கள், உங்களுடைய உயிர்த்தன்மை வெளியேறும்படி உங்களால் மனதை ஓய்வாக வைத்திருங்கள் என்ற அர்த்தத்தில் தான் நான் சொல்லுகிறேன். பிறகு கேள்வியே, தியானத்தன்மை உடையதாகிறது. பிறகு உங்களிடம் தானே வரும் கேள்விகளை, கேட்கத் தயங்காதீர்கள்.

"இந்த உலகத்தில் ஏன் இவ்வளவு விரக்திகள்?"

ஏனென்றால், அந்த அளவுக்கு, எதிர்பார்ப்பு இருக்கிறது. எதிர்பாருங்கள்; ஏமாற்றங்கள் தானே வரும்! எதிர் பார்க்காதீர்கள்; ஏமாற்றங்கள் எதுவும் இல்லை. ஏமாற்றம் என்பது எதிர்பார்ப்பின் பின் விளைவு. நீங்கள் அதிகமாக எதிர்பார்த்தால், அதிகமான ஏமாற்றத்தை உங்களிடம் உண்டு பண்ணிக் கொள்ளுகிறீர்கள். ஆகவே, ஏமாற்றம் என்பது இப்பொழுது பிரச்சினை இல்லை. அது எதிர்பார்ப்பின் விளைவுதான். எதிர் பார்த்ததுதான் பிரச்சினையே.

எதிர்பார்ப்பின் நிழலாகவே வருவதே ஏமாற்றம். நீங்கள் ஒரு கணமேனும் எதிர்பார்க்காவிட்டால், நீங்கள் எதிர்பார்க்காத மனதோடு ஒரு கணமேனும் இருக்க முடிந்தால், பிறகு எல்லாமே எளிதாகி விடும். நீங்கள் உங்கள் கேள்வியை வெறுமனே எந்தவித பதிலையும் எதிர்பார்க்காமல் கேட்டால், வரும் பதில் உங்களை நிறைவு செய்கிறது. ஆனால் எதிர்பார்த்து கேள்வி கேட்டால், வரும் பதிலால் நீங்கள் ஏமாற்றமடைவீர்கள்.

நாம் செய்யும் ஒவ்வொன்றிலும், எதையாவது எதிர்பார்க் கிறோம். நாம் யாரிடமாவது அன்பு செலுத்தினால், நமக்குத் தெரியாமலேயே ஒருவித எதிர்பார்ப்பு நம் முன்னே ஏற்பட்டு விடுகிறது. அதற்குப் பதில், நாம் அவரிடமிருந்து பதில் அன்பை எதிர்பார்க்கிறோம். நான் இன்னும் அன்பு செலுத்தவில்லை. நான் இன்னும் அன்பில் வளரவில்லை; ஆனால், அதற்குள் என்னுள் எதிர்பார்ப்பு வந்து விடுகிறது. இதனால் எல்லாமே அழிக்கப்படுகிறது. இந்த உலகத்தில், மற்றவற்றைக் காட்டிலும், அன்பு அதிக அளவு ஏமாற்றத்தைக் கொடுப்பது. ஏனென்றால் அன்போடு நீங்கள் மலை அளவு எதிர்பார்ப்புடன் இருக்கிறீர்கள். நீங்கள் அந்த அன்பு யாத்திரையைக் கூடத் தொடங்கவில்லை. அதற்குள் நீங்கள் வீட்டுக்குத் திரும்பி வருவதைப் பற்றி நினைக்க ஆரம்பித்து விட்டீர்கள்.

நீங்கள் அன்பை அதிகமாக எதிர்பார்த்தால், அது உங்களிடம் காட்டப்பட, அதிக சிரமத்தை எதிர்நோக்க வேண்டியதாகிறது. நீங்கள் பிறரிடமிருந்து அன்பை எதிர்பார்த்தால், அடுத்தவர் அதை ஒரு கட்டுப்படுதலாக எடுத்துக் கொள்ளுவார்; அது அவருக்கு ஒரு கடமையாகிறது; ஏதோ ஒன்று, அவர் பதிலுக்குச் செய்ய வேண்டும். அன்பு கடமையாகும் பொழுது, அது யாரையும் நிறைவு படுத்தாது. ஏனென்றால், அன்பு கடமையாகும் பொழுது, அது இறந்து விடுகிறது.

அன்பு மற்றும் காதல் என்பது விளையாட்டாக இருக்க வேண்டுமேயொழிய, கடமையாக இருக்கக் கூடாது. அன்பு என்பது சுதந்திரம்; கடமை என்பது அடிமைத்தனம் மற்றும் உடன்படிக்கை- ஒருவர் சுமக்க வேண்டிய பளு. நீங்கள் ஒன்றை சுமந்து செல்லும் பொழுது, அதனுடைய அழகு இழக்கப்பட்டு விடுகிறது; அதனுடைய புதுமை, கவிதைத் தனம் போன்று அனைத்தும் இழக்கப்பட்டு விடுகிறது. அடுத்தவர் உடனே ஏதோ இறந்ததைத் தான், தனக்கு கொடுக்கப்பட்டிருப்பதாக உணருகிறார். எதிர்பார்ப்போடு கூடிய அன்பு, கொலை செய்யப்பட்ட அன்பாகிறது- உங்களுடைய அன்பு இறந்த குழந்தைதான், பிறகு விரக்திதான்.

அன்பு ஒரு விளையாட்டுத்தான். காதல் ஒரு விளையாட்டுத் தான்; அது பேரம் அல்ல. நீங்கள் அதிலிருந்து எதையும் அடையப் போவது இல்லை. அன்பின் முடிவு அது. அதனுள்ளே அன்பு செலுத்தியதற்காக, கடவுளிடம் நன்றி கூறுங்கள்- எதையும் எதிர்பார்க்காமல். நீங்கள் பேரம் பேசாமல் அன்பு செலுத்துங்கள். நீங்கள் ஒருக்காலும் விரக்தியடைய மாட்டீர்கள். உங்கள் வாழ்க்கையே, அன்பினால் நிரப்பப்படும். அன்பு முழுமையாக நம்மிடம் சொரிந்தால், பிறகு பேரானந்தம் தான், பெருங் களிப்புதான்.

நான் அன்பை, ஒரு உதாரணத்திற்குத்தான் எடுத்துக் கொண்டுள்ளேன். இதே சட்டம் தான் எல்லாவற்றிற்கும். இந்த உலகத்தில், விரக்தி இல்லாதவர்கள் ஒருவரைக் கூட உங்களால்

காண முடியாத அளவுக்கு, விரக்தி அவ்வளவு அதிகமாக இருக்கிறது. ஏன், சந்நியாசி என்று கூறிக் கொள்ளுபவர் கூட, விரக்தியில் தான் இருக்கிறார்கள்- முக்கியமாக அவர்களுடைய சீடர்களால். தன்னுடைய சீடர்கள் அப்படி இருக்க வேண்டும்; இப்படி இருக்க வேண்டும்; அதைச் செய்ய வேண்டும்; இதைச் செய்ய வேண்டும்; அதைச் செய்யக் கூடாது; இதைச் செய்யக்கூடாது என்று பலவற்றை அவர்களிடமிருந்து, அந்த சந்நியாசி எதிர்பார்க்கிறார். இது வருவது இயல்புதான்; அது வரத்தான் வேண்டும்.

வேலை செய்பவர்கள் அனைவரும் விரக்தியில்தான் இருக்கிறார்கள். ஏனென்றால் அவர்கள் எதையோ எதிர்பார்த்துத் தான் வேலை செய்கிறார்கள். அவர்களுடைய கொள்கை மற்றும் குறிக்கோள் எதுவாக இருந்தாலும், அவற்றை இந்த சமூகம் அங்கீகரிக்க வேண்டும், ஒவ்வொருவரும் அதைப் பின்பற்ற வேண்டும் என்றே ஒவ்வொருவரும் நினைக்கிறார்கள். அவர்கள் எதிர்பார்ப்பது மிக அதிகம். இந்த முழு உலகமே அவர்களது கொள்கைப் படி உடனே மாற்றம் அடைய வேண்டும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் உலகம் அதன் போக்கிலேயே மெதுவாகத்தான் செல்லும். இது அவர்களுக்கு ஏமாற்றத்தைக் கொடுக்கிறது.

விரக்தியடையாத ஒருவனைக் கூட, காண்பது அரிது. அப்படி யாரையாவது நீங்கள் பார்க்க நேரிட்டால், அவன் ஒரு மதத்தன்மை வாய்ந்தவன் என்று நீங்கள் உறுதியாக நம்பலாம். அவனைப் பொறுத்தவரையில், குறிக்கோள் என்றோ, காரணம் என்றோ, விரக்தியின் அடிப்படை என்றோ எதுவும் இல்லை. அவனிடம் எந்த வித்தியாசமும் இல்லை. ஒருவன் பணத்தாலோ, அதிகாரத்தாலோ மற்றும் அந்தஸ்தாலோ விரக்தியடையலாம்; அன்பினாலும், காதலினாலும் விரக்தியடையலாம்; ஏன், கடவுளினால் கூட, ஒருவன் விரக்தியடைவான்.

கடவுள் உங்களிடம் வரவேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள். நீங்கள் தியானம் செய்ய ஆரம்பிக்கிறீர்கள்; தானாகவே எதிர்பார்ப்பும் வந்து விடுகிறது. ஒரு நாளைக்கு 15 நிமிடம் என்று ஒரு வாரம் தியானம் செய்த பிறகு, பலர் என்னிடம் வந்து, "நான் ஒரு வாரமாக தியானம் செய்கிறேன்; இருந்தும் என்னால் தெய்விகத் தன்மையை உணர முடிய வில்லை. இந்த முழு முயற்சியே, வீண்தான் போல் இருக்கிறது என்று கூறுகிறார்கள். அவர்கள், ஒரு நாளைக்கு 15 நிமிடம் என்று ஒரு வாரம் தியானம் செய்துவிட்டு, தெய்விக நிலையை எதிர்பார்க்கிறார்கள்! அவர்கள், "நான் இன்னும் கடவுளுக்கு அருகிலே கூட வரவில்லை. இப்பொழுது நான் என்ன செய்வது," என்று விரக்தியோடு கேட்கிறார்கள். கடவுளைத் தேடுவதில் கூட, நாம் எதிர்பார்ப்போடு இருக்கிறோம்.

எதிர்பார்ப்புதான் விஷம். ஆகவேதான், இவ்வளவு விரக்திநிலை. அது அப்படித்தான் இருக்கும். எதிர்பார்க்கும் மனதின் பொய்யான தன்மையையும், விஷத் தன்மையையும் புரிந்து கொள்ளுங்கள். இப்படி, நீங்கள் அதை மெல்ல மெல்ல புரிந்து கொண்டால், பிரக்ஞையாக இருந்தால், எதிர்பார்ப்பு குறைந்து, பிறகு முற்றிலும் மறைந்து விடும்.

ஆகவே, "ஏன் இந்த உலகத்தில் இவ்வளவு விரக்தி நிலை" என்று கேட்காதீர்கள். மாறாக, "நான் ஏன் இவ்வளவு விரக்தியில் இருக்கிறேன்" என்று கேட்கவும். பிறகு, உங்களுடைய முழு பரிமாணமே மாறிவிடும். உலகம் ஏன் இவ்வளவு விரக்தியில் இருக்கிறது என்று யாராவது கேட்டால், அது சற்று குறைவான விரக்தி நிலையில் இருக்க வேண்டும் என்று அவர்கள் எதிர் பார்க்கிறார்கள் என்று அர்த்தம். ஆனால், உலகம் விரக்தியில் இருக்கிறதோ, இல்லையோ, நீங்கள் நிச்சயமாக விரக்தியில் இருக்கிறீர்கள்!

இந்த உலகம் விரக்தியில் தான் இருக்கிறது- இது உண்மைதான். இப்பொழுது, அதை விட்டு விட்டு, நீங்கள் ஏன் விரக்தியில் இருக்கிறீர்கள் என்று உங்களையே தெரிந்து கொள்ள

முயலுங்கள். அப்பொழுது, உங்களுடைய எதிர்பார்ப்புதான், அதற்குக் காரணம் என்பதைப் புரிந்து கொள்ளுவீர்கள். அது தான் ஆதாரமான காரணம், விதை எல்லாம். அதை முதலில் தூக்கி எறியவும். இந்த உலகத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்; உங்களைப் பற்றிக் கவலைப்படவும். நீங்கள் தான் உலகம். நீங்கள் மாறினால், இந்த உலகமும் மாறும். அதனுடைய முக்கியப் பகுதி, வேறுவிதமாக மாற ஆரம்பிக்கும்.

நாம் இந்த உலக மாறுதலைப் பற்றியே சிந்தித்துக் கொண்டு இருக்கிறோம். இது ஒரு தப்பித்தல் தான். அடுத்தவர்கள் மாற வேண்டும் என்று எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருப்பவர்கள், தங்களுடைய விரக்தியிலிருந்து, தங்களுடைய போராட்டத்திலிருந்து அல்லது தங்கள் மனதில் அடைத்து வைத்திருக்கும் ஏதோ ஒன்றிலிருந்து தப்பிக்கவே முயலுகிறார்கள் என்றே நான் நினைக்கிறேன். அவர்கள் தங்களுடைய இறுக்க நிலை, ஏமாற்றம் போன்றவற்றிலிருந்து தப்பிக்க நினைக்கிறார்கள். அவர்கள், தங்கள் மனத்தை வேறு ஒன்றில் படரவிட முயலுகிறார்கள். ஏனென்றால், அவர்களால் மாற முடியாது. இந்த உலகத்தை மாற்றுவது என்பது, தன்னையே மாற்றிக் கொள்ளுவதை விட எளிதுதான்.

ஆகவே, உங்களுடைய விரக்தியின் காரணத்தை முதலில் அறிந்துகொள்ள வேண்டும் என்று ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். அதை எவ்வளவு விரைவாக செய்கிறீர்களோ, அவ்வளவுக்கு நல்லது. சூழ்நிலை மாறலாம்; ஆனால் விரக்தியின் அடிப்படை விதையாகிய எதிர்பார்ப்பு அப்படியேதான் இருக்கும்.

"என் உள்ளே, வெகுவாக வெறுப்பு இருப்பதை நான் உணருகிறேன். அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?"

செய்தல் எந்த நன்மையையும் தராது. அதற்கு உங்களால் எதுவும் செய்ய முடியாது. ஏனென்றால், பிரச்சினை மிகவும் உண்மையானது மற்றும்

சிக்கலானது. நீங்கள் உங்களுடைய வெறுப்பு நிலைக்கு மாறாக ஏதும் செய்ய விரும்பினால், நீங்கள் உங்களுடைய வெறுப்பு நிலையை வெறுக்க ஆரம்பிக்கிறீர்கள் என்று அர்த்தம். அதனுடைய செயல்பாடு மிகவும் நுட்பமானது. ஒருவர் தன் கோபத்தின் மீது கோபம் கொள்ளலாம்; ஒருவர் தன் வெறுப்பு மீது வெறுப்புக் கொள்ளலாம்; அத்துடன் சண்டை போடலாம். ஆனால் உங்களால் ஒருக்காலும் அதை ஜெயிக்க முடியாது. ஏனென்றால் அந்த வியாதி ஒரு படி ஆழத்திற்கு உங்களுக்குள்ளே சென்று விட்டது.

ஆகவே, எதையும் செய்ய வேண்டாம். வெறுமனே சாட்சியாக இருந்து, பார்க்கவும். நீங்கள் வெறுப்பை உணரும் பொழுதெல்லாம், அதில் பிரக்ஞையாக இருக்கவும். அந்த வெறுப்பு என்ன, அதன் உண்மைத் தன்மை என்ன என்பதை உணருங்கள்; அதிலிருந்து தப்பிக்க நினைக்காதீர்கள்.

நீங்கள் செய்வது கூட, ஒரு தப்பித்தல் தான். நான் கோபமாக இருந்து, அதற்கு நான் ஏதாவது செய்ய முனைந்தால், இப்பொழுது நான் கோபத்தைப் பற்றிக் கவலைப்படாமல், நான் என்னுடைய செய்தலைப் பற்றித்தான் கவலைப்படுவேன். என்னுடைய நோக்கம் இப்பொழுது மாறிவிட்டது. என்னுடைய கோபத்தைப் பற்றிய விழிப்புணர்வு இப்பொழுது என்னிடம் இல்லை; மாறாக கோபத்தைப் பற்றிய விழிப்புணர்வு இப்பொழுது என்னிடம் இல்லை; மாறாக ஏதாவது செய்ய வேண்டும் என்ற முயற்சியில் அது திரும்பிவிட்டது. இது சரியான வழியல்ல. சற்றும் முறையல்ல. ஏனெனில், இதனால் கோபம் அடக்கப்படுகிறது.

ஆகவே, நீங்கள் வெறுப்பு, கோபம், பேராசை இப்படி ஏதும் உணர்ந்தால், உடனே அதற்கு ஏதாவது பரிகாரம் செய்ய வேண்டும் என்று நினைக்காதீர்கள்; அதை வெறுமனே பிரக்ஞை பாகப் பாருங்கள்; அதில் பிரக்ஞையாக இருங்கள். முதலில், அதனுடைய அருவருப்புத் தன்மையை உற்று நோக்குங்கள். அதனுடைய விஷத் தன்மையை புரிந்து கொள்ளுங்கள், அது

என்னவென்று சற்று ஆழ்ந்து பாருங்கள். நீங்கள் அதன் முழுத்தன்மையை ஆழ்ந்து புரிந்து கொண்டால், அது தானே நின்றுவிடும். நீங்கள் அதனுடைய முழுத்தன்மையைப் புரிந்து கொள்ளாவிட்டால் தான், வெறுப்பு தொடர்ந்து செயல்படும்.

இது, உங்களுடைய வழியில், ஒரு பாம்பு குறுக்கிடுவது போல. பாம்பு அங்கே இருப்பதை நீங்கள் உணரும்பொழுது, உடனே குதித்து அகலுகிறீர்கள். இந்தக் குதித்தலை, நீங்கள் ஏற்கெனவே தீர்மானிக்கவில்லை, நினைக்கவில்லை, தேர்ந்தெடுக்கவில்லை. அது தானே உடனே நிகழுகிறது. பாம்பு அங்கு இருக்கிறது என்று நீங்கள் பிரக்ஞையாக உணர்ந்த பிறகு, குதித்தல் உடனே நிகழுகிறது. அதைப்போல, உங்களுடைய பொறுமையை, நீங்கள் உணர்ந்த பிறகு, குதித்தல் நிகழுகிறது- எந்த முன்னேற்பாடும் தேவையில்லை.

ஆகவே, முதலில் நீங்கள் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டியது என்னவென்றால், எதையும் கண்டிக்காதீர்கள்; மாறாக அதைப் பற்றிய உண்மையை ஆராய்ந்து பாருங்கள்; அதைப் புரிந்து கொள்ள முயலுங்கள். அதைப் பிரக்ஞையாகப் பாருங்கள். அதன் மீது தியானம் செய்யுங்கள்.

இரண்டாவது: உங்களுடைய எண்ணுதல்- இது அதைவிட மிகவும் நுண்மையானது மற்றும் ஆழமானது. நீங்கள், "எனக்குள்ளே வெறுப்பை இப்பொழுது உணருகிறேன். நான் பேசுவதை, பேராசையை மற்றும் அகங்காரத்தை உணருகிறேன்." இப்படி நீங்கள் எண்ணுவது தான் அது. இது மனம் செய்யும் ஏமாற்று வேலை, தந்திரமான வேலை, கபடான வேலை. இப்படி எண்ணுவது மிகவும் நுட்பமாக இருப்பதால், நீங்கள் வெறுப்பிலிருந்து சற்று தனிமைப்படுத்தப்படுகிறீர்கள். நீங்கள், "நான் வெறுப்பைக் காணுகிறேன். நான் பேராசையைப் பார்க்கிறேன். அந்தப் பேராசை என்னுள்ளே இருக்கிறது. அது நான் இல்லை. நான் பேராசை இல்லை. நான் வெறுப்பு இல்லை. நான் கோபம் இல்லை. அது ஏதோ எதிர்பாராது நிகழ்ந்து விட்டது. அதற்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. அது

ஏதோ எனக்கு சம்பந்தமில்லாத ஒரு பொருள்.." இப்படி நீங்கள் கூறிக்கொண்டிருக்கலாம்.

இப்படித்தான் மனம் நினைக்கும்; இப்படித்தான் மொழி நம்மை வஞ்சிக்கும். மொழி, "என்னிடம் கோபம் இருக்கிறது" என்று சொல்லும். ஆனால், உண்மையில் அப்படி இல்லை. நீங்கள் கோபமாக இருந்தால், கோபம் உங்களுக்குள்ளே இருக்கவில்லை... நீங்கள் வெறுப்பாக இருக்கிறீர்கள். ஆனால், இரண்டு நிலைகள் ஒருசேர உங்களிடம் இருக்க முடியாது; ஒன்றுதான் இருக்கும். ஒன்று வெறுப்பு உங்களிடம் இருக்க வேண்டும் அல்லது நீங்கள் இருக்க வேண்டும். இரண்டும் ஒன்றாக இருக்க முடியாது. நீங்கள் அங்கே இருந்தால், வெறுப்பு மறைந்துவிடும்; மாறாக வெறுப்பு அங்கே இருந்தால், நீங்கள் இருக்கமாட்டீர்கள்.

உயிர்த்தன்மையாக செல்லுங்கள்; மொழியின் மூலமாக அல்ல. மொழி பல பிரச்சினைகளை உண்டு பண்ணுகிறது. மொழி அமைப்பால், நாம் பொருள்களைத் தவறாக அணுகுகிறோம். உதாரணமாக, நீங்கள் கோபமாக இருந்தால், அங்கே கோபம் நிகழக்கூடிய 'நான்' என்று யாரும் உங்களுக் குள்ளே இல்லை. கோபம் மாத்திரம்தான் உள்ளது. நீங்கள் அதில் கரைந்து விடுகிறீர்கள்- ஆகவே அங்கு நீங்கள் இல்லை.

பிரச்சினையில், உயிர்த்தன்மையாகச் செல்லுங்கள். வெறுப்பு இருக்கும் பொழுது, நீங்கள் அங்கே இருக்கிறீர்களா அல்லது வெறுப்பு அங்கே இருக்கிறதா என்று பிரக்ஞையாகப் பாருங்கள். அப்பொழுது, உங்களுடைய பிரக்ஞைத் தன்மையில், ஒரு நுட்பமான மாற்றம் ஏற்படுவதை உணருவீர்கள். 'நான்' அல்லது 'வெறுப்பு' என்பதை எப்பொழுது பிரக்ஞையாக உணர ஆரம்பிக்கிறீர்களோ, அப்பொழுது உங்களுடைய பிரக்ஞைத் தன்மை மாற்றமடைய ஆரம்பிக்கும். எந்த அளவுக்கு, நீங்கள் பிரக்ஞையாக இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு உங்களுடைய வெறுப்பு கரையும். இரண்டும் ஒரே சமயத்தில் இருக்க முடியாது. ஒருவன் பிரக்ஞையற்று இருக்கும்பொழுது தான், வெறுப்பு

ஏற்படும்- பிரக்ஞையோடு அல்ல, மனிதனோடு அல்ல, விழிப்போடு அல்ல.

வெறுப்பு மறையும்பொழுது, கோபமும் மறைகிறது, வன்முறையும் மறைகிறது. அதை நீங்கள் ஆரம்பத்திலிருந்து நினைத்தால், அது உங்களுடைய ஞாபகத்தின் ஒரு பகுதியாகி விடுகிறது. இப்பொழுது நீங்கள் அதிலிருந்து உங்களைப் பார்த்துக் கொள்ளலாம். இப்பொழுது நீங்கள் கோபத்திலிருந்து பிரிந்து நிற்கிறீர்கள்; கோபம் உங்களிடமிருந்து பிரிந்து நிற்கிறது. இப்பொழுது அது, உங்களுடைய ஞாபகத்தின் ஒரு பகுதியாகி விட்டது. இதுதான் நான் சொல்லிக் கொண்டு இருக்கும் மொழியின் பொய்யான தன்மைக்கும்- இது உங்களுடைய அனுபவத்தால் நிரூபிக்கப்படுகிறது.

ஒரு கணத்துக்கு முன்பு, நீங்கள் கோபமாக இருந்தீர்கள். இப்பொழுது அப்படி இல்லை- அந்தக் கோபம் மறைந்து விட்டது. நீங்கள் கோபத்திலிருந்து விலகி விட்டீர்கள்- நீங்கள் ஒரு பொருளாக இருக்கிறீர்கள்; உங்களுடைய கோபம் வேறு ஒன்றாக இருக்கிறது- இப்பொழுது உங்களுடைய கோபம், உங்களுடைய ஞாபகத்தின் ஒரு பகுதியாகி விட்டது. இப்பொழுது உங்களிடம் இரண்டு நிலைகள் இருக்கின்றன. உங்களுடைய கோபத்தின் பழைய அனுபவத்தின் ஞாபகங்கள் ஒன்று; அடுத்தது நீங்கள். ஆனால், கோபம் செயலாக உரு வெடுக்கும் பொழுது, ஒரு நிலைதான் இருக்கிறது. அப்பொழுது நீங்களே கோபமாக இருக்கிறீர்கள். ஆகவே, வெறுப்பு இருக்கும் பொழுது, அதை ஆழமாக உணருங்கள். அதில் பிரக்ஞையாக இருங்கள். நீங்கள் வெறுப்பாக மாறுகிறீர்கள். நீங்களே இப்பொழுது வெறுப்பு. பிரக்ஞைத் தன்மை எல்லாவற்றையுமே மாற்றி விடுகிறது. எப்பொழுது இந்தப் பிரக்ஞைத் தன்மை உங்களிடம் ஏற்படுகிறதோ, அப்பொழுதே வெறுப்பு கரைந்து செல்லுகிறது. இப்பொழுது நீங்கள் வெறுப்போடு அல்லது கோபத்தோடு அல்லது பேராசையோடு இருப்பது என்பது இயலாத காரியம். விழிப்புணர்வு என்றால் பிரக்ஞையான மனம் என்று அர்த்தம். மிகுந்த பிரக்ஞையற்ற தூக்கநிலையில் உள்ள

மனதில் தான், கோபம், பேராசை மற்றும் வெறுப்பு எல்லாம் வாழும்.

ஆகவே, மேலும் விழிப்பாக இருங்கள்- இறந்த காலம் பற்றி இல்லாமல். அது சக்தி விரையம் தான். உங்களிடம் கோபம் இருக்கும் பொழுது, வெறுப்பு இருக்கும் பொழுது, நீங்கள் அப்பொழுதே உங்களுடைய கண்களை மூடிக்கொண்டு, நீங்கள் அங்கு இருக்கிறீர்களா அல்லது உங்களுடைய கோபம் அல்லது வெறுப்பு அங்கே இருக்கிறதா என்று கவனிக்கவும். நீங்கள் முதலில் புரிந்து கொள்ளுவது என்னவென்றால், உங்களிடம் கோபம் தான் இருக்கிறது என்பதுதான். அப்படி என்றால், நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்? நீங்கள் அங்கு இல்லை. உங்களுடைய முழு சக்தியே, கோபமாக மாறிவிட்டது. உங்களுடைய முழுமை நிலையே வெறுப்பாக மாறிவிட்டது.

சில சமயம் காதலர்கள், தங்களுடைய ஆழ்ந்த காதலில், தங்கள் காதல் மட்டுமே இருக்க, தாங்கள் இல்லை என்பதை உணருவார்கள். இதைப் போல உணருவது, ஆழ்ந்த காதலில் சுலபம் தான். ஏனென்றால், காதல் என்பது களிப்பு நிறைந்தது. ஆனால் அதைப் போல, வெறுப்பில் உணர முடியாது. ஏனெனில், வெறுப்பு களிப்பாகாது. காதலர்கள், ஆழ்ந்த காதலர்கள், தாங்கள் காதலிப்பதால் அப்படி உணருவது இல்லை- காதல் என்பது ஒரு செயல் அல்ல- மாறாக, அவர்கள் காதலாக மாறிவிடுகிறார்கள்.

நீங்கள் பிறரோடு காதல் வயப்பட்டால், நீங்களே காதல் மயமாகிவிடுகிறீர்கள். அதைப்போல, நீங்கள் பிறரிடம் வெறுப்பு கொண்டால் நீங்களே வெறுப்பாகி விடுகிறீர்கள். ஆனால், நீங்கள் வெறுமனே இருந்தால், நீங்கள் காதலாகவும் மாறுவது இல்லை. மற்றும் வெறுப்பாகவும் மாறுவது இல்லை. ஆகவே தான், நாம், அவர்கள் 'விழுந்து' விட்டார்கள் என்று கூறுகிறோம். காதலின் இயல்பான தன்மையே, விழுவது தான். காதலில் விழுவது என்பது நீங்கள் உங்கள் பிரக்ஞையை இழந்து, காதலாகி விடுகிறீர்கள் என்பது தான். காதலில் விழாதவர்களுக்கு,

காதலில் விழுந்தவர்கள் பைத்தியமாகவே தெரிவார்கள். அப்படித்தான் அவர்கள் தோன்றுவார்கள். நீங்கள் அவர்களோடு தொடர்பு கொள்ள முடியாது. ஏனென்றால் அவர்கள் தங்கள் வசத்தில் இல்லை. ஆமாம். உண்மையில் அப்படித்தான். அவர்களுடைய முழு சக்தியே காதலில் தான் இருக்கிறது. அவர்கள், அத்துடன் முழுமையாக ஐக்கியமாகி விட்டார்கள். காதலின் இயல்பே, அதற்கு, சாட்சி இல்லாததுதான்.

அதைப்போல, வெறுப்புக்கும் ஏற்படுகிறது. காதலும், வெறுப்பும் ஒன்று போலவே இருக்கும். ஏனென்றால், வெறுப்பு என்பது காதலின் தலைகீழான சக்தி பிரவாகம். நீங்கள் காதலில் இருக்கும்பொழுது, நீங்கள் பிறரால் பைத்தியம் போல் காணப்படுகிறீர்கள். அதைப்போல, நீங்கள் வெறுப்பில் இருக்கும் பொழுது, நீங்கள் பிறரால் முழுமையாக வெறுக்கப்படுகிறீர்கள். இப்படி நீங்கள் காதலில் இருக்கும்பொழுது, நீங்கள் உங்களுடைய மையத்தை இழக்கிறீர்கள்; அதைப் போல, நீங்கள் வெறுப்பில் இருக்கும்பொழுது நிகழுகிறது. வேறு ஒருவரால், நீங்கள் வெறுக்கப்படுகிறீர்கள். அப்பொழுது நீங்கள் உங்களுடைய மையத்தை இழக்கிறீர்கள். நீங்கள் உங்கள் மையத்தில் இல்லை. நீங்கள் உங்களுடைய பிரக்ஞையை இழக்கிறீர்கள். வேறு ஒருவர்தான் இப்பொழுது உங்களுடைய மையமாக இருப்பார்கள்.

நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்- அது இறந்த காலத்தில் இருக்கக் கூடாது: அது இந்தக் கணத்தில், இப்பொழுது இருக்க வேண்டும். நீங்கள், உங்களிடம் வெறுப்பு இருப்பதாக உணரும் பொழுது, வெளி உலகத்தை மறந்து விட்டு, கண்களை மூடிக் கொண்டு, உங்கள் உள்ளே என்ன நிகழ்ந்து கொண்டு இருக்கிறது என்பதைப் பிரக்ஞையாகப் பார்க்கவும். உங்களுடைய முழு சக்தியே வெறுப்பாக மாறி இருப்பதை உணருவீர்கள். நீங்கள் அதைக் கவனித்துப் பார்க்கும் பொழுது, திடீரென்று உங்களுடைய சக்தியின் ஒரு பகுதி பிரக்ஞையாக மாறுவதை உணருவீர்கள். உங்களுடைய குழப்பமான வெறுப்பு மற்றும் அன்பு உணர்விலிருந்து, ஒரு பெரும் பிரக்ஞை நிலை

உருவாவதை உணருவீர்கள். அந்த பிரக்ஞைத் தன்மை எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அந்த குழப்ப நிலை குறைந்து கடைசியில் முற்றிலுமாக மறைநதுவிடும். பிறகு நீங்கள் உங்களையே உணரும் பொழுது, உங்களிடம் வெறுப்பு இல்லாததை உணருவீர்கள. நீங்கள் இப்பொழுது தான் உங்கள் மையமாக இருக்கிறீர்கள்; அடுத்தவர் இப்பொழுது உங்களுடைய மையமாக இல்லை.

ஆகவே, வெறுப்போ அல்லது காதலோ ஏற்படும்பொழுது, அந்தக் கணத்திலேயே தியானம் செய்யப்படவேண்டும். பிறகு நீங்கள் முற்றிலும் வேறு மாதிரி இருப்பீர்கள். இதனால், நீங்கள் உங்களுடைய மனதை வெற்றி கொண்டதாக அர்த்தம் இல்லை. அல்லது உங்களுடைய வெறுப்பை ஜெயித்து விட்டதாக அர்த்தம் இல்லை. இப்பொழுது, நீங்களே பிரக்ஞையாக இருக்கிறீர்கள்; நீங்களே உங்களுக்கு ஒளியாக இருக்கிறீர்கள். இந்த ஒளியால், உங்களிடம் இருட்டு ஒருக்காலும் நிலை பெறாது. இப்பொழுது நீங்கள் ஒரு பிரக்ஞைத் தன்மையாக இருக்கிறீர்கள்; அதாவது நீங்களே பிரக்ஞையாக இருக்கிறீர்கள். உங்களால் பிறரை வெறுக்க முடியாது. ஏனென்றால், வெறுப்புக்கு உங்களுடைய பிரக்ஞையற்றத் தன்மை அடிப்படையில் மிகவும் தேவையாக இருக்கிறது.

இதை நீங்கள் நேரடியாகவும், தெளிவாகவும் புரிந்து கொள்ள வேண்டும். வெறுப்புக்குத் தேவை பிரக்ஞையற்றத் தன்மை. வெறுப்புக்கு இதுதான் ஆதாரம். அங்குதான் வெறுப்பு வலிமை பெறுகிறது. ஆகவே, வெறுப்புக்கு நீங்கள் எதையும் செய்ய வேண்டாம். மாறாக, உங்களுடைய பிரக்ஞைத்தன்மை மேலிட ஏதாவது செய்யுங்கள். உங்களுடைய செயலில் அதிகமாக பிரக்ஞையாக இருங்கள்- உங்களுடைய எண்ணங்களில். உங்களுடைய மனநிலையில் அதிகமாக பிரக்ஞையாக இருங்கள்- என்ன நிகழ்கிறது என்பதில்.

ஒரு பிரக்ஞை நிறைந்தவன், வெறுப்பு கண்டோ அல்லது காதல் வயப்பட்டோ இருக்க மாட்டான். ஆகவேதான், நாம்

புத்தரைப் பற்றிப் பேசும்பொழுது, நாம் பல மாதிரியான வார்த்தைகளை உபயோகிக்கிறோம். நாம், புத்தர் எல்லோரிடமும் அன்பு செலுத்தினார் என்று கூறுகிறோம். அப்பொழுது, நாம் சாதாரணமாகப் புரிந்து கொண்ட அர்த்தத்தோடு தான் அந்த அன்பு என்ற வார்த்தை தாங்கி நிற்கிறது. ஆனால், புத்தரால் அன்பு செலுத்த முடியாது. ஏனென்றால் அவரால் வெறுக்கவும் முடியாது. உங்களால் அவரை வெறுக்க முடியாது. அதைப் போல உங்களால், அவர் கவரப்படவும் மாட்டார். இந்த இரண்டிலும், மற்றவர்தான் மையமாக இருக்கிறார். புத்தர் அன்பாக இல்லை, மாறாக கருணையாக இருக்கிறார். அன்பு மற்றும் கருணை என்பதன் வித்தியாசம் மிகவும் ஆழமானது.

நீங்கள் கருணையை உணரும்பொழுது, நீங்கள் உங்கள் மையத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் பிறரால் உணரப்படவும் மாட்டீர்கள்; அன்பு செலுத்தப்படவும் மாட்டீர்கள்; அது ஒரு இயல்பான நிலையாகிவிடுகிறது. அடுத்தவர், நீங்கள் அவரை மிகவும் ஆழமாக நேசிப்பதாக உணருவார்கள். ஆனால்....

நீங்கள் புத்தரிடம் வந்தால், அவர் உங்கள் மேல் மிகவும் அன்பு செலுத்துவதாக உணர்வீர்கள். அது உங்களுடைய சுதந்திரம். எந்தக் கணத்திலும், புத்தர் உங்களை வெறுப்பது போலவும், நீங்கள் உணரலாம். அவர் அன்பு செலுத்துவது மற்றும் வெறுப்பது என்பது உங்களுடைய மன வெளிப்பாடு. உண்மையில், அவர் யார்மேலும் அன்பு செலுத்தவும் இல்லை; வெறுக்கவும் இல்லை. அவர் தன் இயல்பில் அப்படியே இருக்கிறார்; அவரிடமிருந்து கருணை வழிந்தோடுகிறது.

என்ன வித்தியாசம்? நீங்கள் இந்த அறையில் இல்லாவிட்டால், நான் உங்கள் மேல் அன்பு செலுத்தவோ அல்லது வெறுக்கவோ முடியாது. நீங்கள் ஒன்றை வெறுக்க விரும்பினால், நீங்கள் வெறுக்க ஒரு முன்நிலைப் பொருள் தேவையாக இருக்கிறது. நீங்கள் என் முன்பு இல்லாவிட்டால், நான் உங்களை வெறுக்க, நீங்கள் என் முன்பு இருப்பதாக நான் கற்பனை பண்ணிக் கொள்ள வேண்டும். காதலிக்கும் ஆள் இல்லாத

பொழுது, காதல் மறைகிறது; பகைவன் இல்லாதபொழுது, வெறுப்பு மறைகிறது. அவர்கள் இல்லாத நிலையில், நீங்கள் கற்பனையில், அவர்கள் இருப்பதாக நினைக்க வேண்டும்.

கருணை என்றால், வேறு யாரும் முன்னே இல்லாத நிலையில், புத்தர் கருணை வடிவாகவே இருக்கிறார் என்று அர்த்தம். யாரும் அவருடைய கற்பனையில் இல்லை. அது அவருடைய இயல்பான தன்மை. எப்படி ஒரு ஆறு இயல்பாக ஓடுகிறதோ, அதைப்போல புத்தர் கருணை மயமாக இருக்கிறார்; அவரிடமிருந்து கருணை வழிந்தோடுகிறது. அடுத்தவர் அதன் பகுதியாக இல்லை; அடுத்தவர் மையமாக இல்லை. அவரே மையமாக இருக்கிறார்.

ஒருவர், தன் மையத்தை அடைந்தால், மற்றும் சுத்த படிகமானால், அவரிடம் யாருக்கும் மறுப்பும் தோன்றாது, கவர்ச்சியும் ஏற்படாது. ஆனால், இந்த மையமே மிக்க ஆழமான பிரச்சினையை உண்டு பண்ணிவிடுகிறது. ஏனென்றால், அந்த நிலையில், நீங்கள் அன்புக்கு அப்பால் செல்லாமல், உங்களால் வெறுப்புக்கு அப்பால் செல்ல முடியாது. ஒவ்வொருவரும் வெறுப்புக்கு அப்பால் செல்லவே விரும்புகிறார்கள். ஆனால் யாருமே அன்புக்கு அப்பால் செல்ல விரும்புவது இல்லை. இது ஒரு தீர்க்க முடியாத பிரச்சினையை ஏற்படுத்திவிடுகிறது. ஏனென்றால், மறுப்புக்கும், கவர்ச்சிக்கும் வெறுப்பு ஒரு அங்கமாக இருக்கிறது.

எப்படி நீங்கள் அன்பாக இருப்பது? எல்லோரையும் எப்படி உங்களால் கவர முடியும்? நாம் பல வழிகளில் அன்பு செலுத்த முயன்று கொண்டே இருக்கிறோம். ஆனால், ஒரே சுலபமான வழி என்னவென்றால், ஒருவனை வெறுப்பது மூலம், மற்றொருவரிடம் அன்பு செலுத்த முடியும். இதுதான் சுலபமான வழி. நீங்கள் ஒருவனை பகைவனாக்கிக் கொள்ளுங்கள்; மற்றொருவனை நண்பனாக்கிக் கொள்ளுங்கள். பிறகு உங்களால் சுலபமாக பிறரிடம் அன்பு செலுத்த முடியும். 'அ'வால் நீங்கள்

கவரப்படுவீர்கள்; 'ஆ'வால் நீங்கள் வெறுக்கப்படுவீர்கள். இதுதான் ஒரே வழி.

இன்னொரு மிகவும் சிக்கலான வழி என்னவென்றால், நீங்கள் அன்பு செலுத்திய ஒருவன் மீதே, வெறுக்கவும் செய்ய வேண்டும். இதையும் நாம் செய்கிறோம். காலையில் ஒருவனிடம் அன்பு செலுத்துகிறோம். அதே ஆளிடம், மாலையில் வெறுப்புக் கொள்ளுகிறோம்; அடுத்து இரவில் அவனிடம் அன்பு செலுத்து கிறோம். ஏன், காதலர்கள் கூட அன்புக்கும், வெறுப்புக்கும் இடையே நகர்ந்தவாறே இருக்கிறார்கள்; கவர்ச்சிக்கும், வெறுப்புக்கும் இடையே ஊசலாடியவாறே இருக்கிறார்கள். பிராய்டு மிகவும் சரியாகவே சொன்னார்- 'அதாவது, நீங்கள் அன்பு செலுத்தியவர் மீதுதான், வெறுப்பையும் காட்ட வேண்டும்- அது வேறு விதமாக இருக்க முடியாது' என்று.

வெறுப்புக்கு நாம் ஏற்படுத்திக் கொண்ட பல காரணங்களை மெல்ல வெளியேற்றிவிட்டால், அது மேலும், மேலும் உண்மை யென்று உறுதியாகிவிடும். நீங்கள் உங்களுடைய தேகத்தை நேசிக்க முடியும்; மாறாக அடுத்த தேகத்தை வெறுக்க முடியும். நீங்கள் உங்கள் மதத்தை நேசிக்க முடியும்; மாறாக அடுத்த மதத்தை வெறுக்க முடியும். ஏனெனில், நீங்கள் யாரையாவது அல்லது எதையாவதை நேசித்தால், அந்த நேசிப்பை சமன்படுத்த நீங்கள் யாரையாவதோ அல்லது எதையாவதையோ வெறுக்க வேண்டும். அதாவது, அன்பை வெறுப்பால் சமன் செய்ய வேண்டும். பழைய காலத்தில், இது சுலபமாக இருந்தது; சமச்சீர்நிலை இயல்பாக அப்பொழுது நிலவி வந்தது. ஆனால், இப்பொழுது உள்ள பகுத்தறிவு மிக்க மனித குலம், எல்லா சாத்தியக்கூறுகளையும் அழித்து விட்டது. விரைவில், இந்த பூமி ஒன்று சேர்ந்து ஒரே நாடாகவும், ஒரே இனமாகவும் மாற வாய்ப்பு உள்ளது. பிறகு அந்த இரண்டுக்கும், அன்பும், வெறுப்பும் தான் குறிக்கோளாகிவிடும்.

ஆனால், இந்த இரு மாறுபட்ட தன்மைகள் தான் இயல்பானது. நீங்கள் ஒருவரை நேசித்தால், இன்னொருவரிடம்

வெறுப்பு செலுத்த வேண்டும். சிலபேர், "இந்த உலகத்தையே நேசியுங்கள்" என்று போதனை செய்து கொண்டு இருக்கிறார்கள். ஆனால், உங்களுடைய வெறுப்பைக் காண்பிக்க வேறு ஒரு உலகத்தைக் காணாவிட்டால், உங்களால் இந்த உலகத்தை முழுமையாக நேசிக்க முடியாது. நீங்கள் வேறு ஒரு கோளத்தை, வெறுப்பை செலுத்தக் கண்டுபிடிக்காவிட்டால், இந்த உலகம் ஒன்றாக இருக்க முடியாது -அதாவது அன்பில் - நாம் வேறு பகைவனை வேறு எங்கேயோ கண்டுபிடித்தால் தான்- அதைப்போல ஒன்றைக் கண்டுபிடிக்க, நாம் முயன்று கொண்டே இருக்கிறோம். -இந்த முழு உலகம் அன்பு மயமாக இருக்கும்.

இந்தியா, பாகிஸ்தானோடு சண்டை போடும்பொழுது, இந்தியாவுக்குள் எந்த சண்டையும் கிடையாது. இந்தியா மிகுந்த ஒருமைப்பாட்டுடன் இருந்தது. இந்தியாவில் மிகுந்த ஆழமான தேசியப்பற்று நிலவியது. ஏனென்றால், பாகிஸ்தானோடு கொண்ட வெறுப்பு, இப்பொழுது இந்தியாவில் ஏற்பட்ட அன்பால், பற்றால் சமப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனால், போர் என்று எதுவும் இல்லாத நிலையில், இந்துக்கள், முகமதியர்களோடு, பிராமணர்கள் சூத்திரர்களோடு சண்டை இட்டவாறே இருக்கிறார்கள். ஒரு மாநிலம், இன்னொரு மாநிலத்தோடு சண்டை போட்டவாறு இருக்கிறது; ஒரு கட்சி, வேறு ஒரு கட்சியோடு சண்டை போட்டுக் கொண்டேதான் இருக்கும்- இப்படியேதான் எல்லாம் இருக்கும். ஆனால், எங்கேயாவது பகைவன் என்று இருந்தால் தான், இந்த முழு தேசமே ஒன்றாக இருக்கும்.

போரிடுவதற்கு, வேறு ஒரு உலகம் அல்லது கோள் இல்லாவிட்டால், இந்த முழு உலகம் ஒற்றுமையாக, ஒன்றாக இருக்காது. ஏன், ஒரு சிறு வதந்தி கூடப் போதும். 'லீனஸ் பாலிங்' (Linus Pauling) என்ற மிகச் சிறந்த விஞ்ஞானி மற்றும் நோபல் பரிசு பெற்றவர் ஒரு சமயம், "செவ்வாய் கிரகத்தில் உள்ளவர்கள், இந்த பூமியைக் காக்கத் தயாராக இருக்கிறார்கள் என்று ஒரு வதந்தியை, ஐ.நா.சபை மூலமாக இதை உலகம்

முழுவதும் பரப்பி, அதை பலநாட்டு விஞ்ஞானிகளும் ஆமோதித்தால், இந்த உலகத்தில் சண்டை என்பதே இருக்காது." என்றார். அவர் மிகச் சரியாக சொன்னார். இப்பொழுது இருக்கும் மனித குலத்திற்கு, இது ஒரு தேவையான செயல்தான்! பொய் உதவி செய்யும். இதுவரை உண்மை உதவி செய்யவில்லை.

ஆகவே, அன்புடன், வெறுப்பும் இணைந்தே இருக்கும். அப்பொழுது வெறுப்பைக் காண்பிக்க, நீங்கள் வேறு ஒரு பொருளை நாட வேண்டும். நீங்கள் எந்த அளவுக்கு அன்புடன் இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் வெறுப்பிலும் இருப்பீர்கள். அன்புக்கு விலையாக, ஒருவர் அதைக் கொடுத்தே ஆகவேண்டும். நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். ஒன்று அன்பும், வெறுப்பும் ஒருங்கே இருக்க வேண்டும்; அல்லது இரண்டுமே இருக்கக்கூடாது.

நீங்கள் ஏதாவது செய்வதால், வெறுப்பு மறையாது; ஆனால் நீங்கள் எந்த அளவுக்கு பிரக்ஞையாக, விழிப்பாக, ஜாக்கிரதை யாக இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு அது மறையும். ஆகவே, நீங்கள் பிரக்ஞைத் தன்மையில் இருங்கள்; அப்பொழுது நீங்கள் உங்கள் மையத்தில் இருப்பீர்கள். யாரும் உங்களை அந்த மையத்திலிருந்து அப்புறப்படுத்த முடியாது. இப்பொழுது, யார் வேண்டுமானாலும், உங்களை சுலபமாக அப்புறப்படுத்தி விடலாம். சிலர் அதை அன்பு மூலமாக, நட்பு மூலமாக செய்கிறார்கள்; மற்றும் சிலர் வெறுப்பு மூலமாகச் செய்கிறார்கள். இப்படி யார் வேண்டுமானாலும், உங்களை உங்கள் மைய நிலையிலிருந்து அப்புறப்படுத்தி விடலாம். பார்க்கப் போனால், இப்பொழுது நீங்கள் ஒரு நிலையான மையத்தில் இல்லவே இல்லை. யார் வேண்டுமானாலும் ஆதிக்கம் செலுத்தக் கூடிய ஒரு பொய்யான மையத்தில்தான் நீங்கள் இருக்கிறீர்கள்.

பிரக்ஞைத்தன்மை என்றால் மையத்தன்மை என்று அர்த்தம்; பிரக்ஞையோடு மையத்தில் நிலை கொள்ளல் என்று அர்த்தம். அப்பொழுது அன்பும் மறைகிறது. அப்படி இரண்டும் மறைந்த

நிலையில் தான் உங்களிடம் உண்மையான அமைதி ஏற்படுகிறது.

உண்மையில், அவை இரண்டினுடைய அறிகுறிகள் அனைத்தும் ஒன்றாகவே இருக்கும். நீங்கள் ஆழமான வெறுப்பில் இருந்தால், உங்களால் தூங்க முடியாது; அதைப்போல, நீங்கள் ஆழமான காதலில் இருந்தாலும், உங்களால் தூங்க முடியாது. நீங்கள் ஆழ்ந்த காதலில் இருக்கும்போதும், ஆழ்ந்த வெறுப்பில் இருக்கும்போதும், உங்களுடைய இரத்த அழுத்தம் கூடுகிறது. எல்லா அறிகுறிகளும் ஒன்று போலவே இருக்கின்றன. அதாவது, இரண்டு நிலைகளிலும், நீங்கள் ஒருவித இறுக்க நிலையில் இருக்கிறீர்கள். யாராவது காதலில் இருந்தால், அவர்களுக்கு சாதாரண விஷயங்கள் எல்லாம் மிகவும் அலுப்புத் தரக் கூடியதாகவும், வெறுப்புத் தரக்கூடியதாகவும் இருக்கும்- வெறுப்பைப் போலவே இரண்டுமே இறுக்கம் தான். இரண்டுமே வியாதிதான்.

நான் 'வியாதி' என்று சொல்லும்பொழுது, நான் அந்த வார்த்தையின் நேரடி அர்த்தத்தையே கூறுகிறேன். அதாவது Dis-Ease. 'ஓய்வற்றத் தன்மை'யாகும். அன்பிலேயோ அல்லது வெறுப்பிலேயோ நீங்கள் ஓய்வாக இருக்க முடியாது. உங்கள் உள்ளே எதுவும் இல்லாத பொழுதுதான், உங்களால் ஓய்வாக இருக்க முடியும்- அன்போ, வெறுப்போ இல்லாமல், நீங்கள் அப்பொழுது வெறும் நீங்களாக உங்கள் சொந்தத் தன்மையில், பிரக்ஞைத்தன்மையில் தனிமையாக இருந்தால் தான் உங்களால் ஓய்வாக இருக்க முடியும். நீங்கள் யாரும் இல்லாமல், யாரையும் சாராமல் வாழுங்கள்; அடுத்தவர் தேவையில்லை, அப்பொழுது நீங்கள் அதற்கு முன் செல்லுகிறீர்கள்.

பிறகு கருணை தானே உங்களிடம் நிகழுகிறது. உங்களிடத்தில் மையம் என்று ஒன்று ஏற்பட்டால், அது தானே நிகழுகிறது. கருணை என்பது அன்போ அல்லது வெறுப்போ அல்ல. அது கவர்ச்சியோ அல்லது மறுப்போ அல்ல. அது வேறு ஒரு பரிமாணத்தில் இயங்குகிறது. அது நீங்கள், நீங்களாக

உங்களுக்குள்ளே இருப்பதுதான்- உங்கள் உள் விருப்பப்படி வாழுதல் மற்றும் செயல் ஆகும். பலர் உங்களால் கவரப்பட்டு வரலாம். மற்றும் பலர் உங்களால் வெறுக்கப்பட்டு, செல்லலாம். ஆனால், இவை அவர்களது மன விருப்பங்கள் மற்றும் மன வெளிப்படுதலைப் பொறுத்தது- அது அவர்களுடைய பிரச்சினை. நீங்கள் அதைப் பார்த்து சிரித்து ஒதுக்கி விட்டு, அதைப்பற்றி எந்தச் சிந்தனையும் இல்லாமல் இருக்கலாம்.

> "சென்ற பத்து ஆண்டுகளாக, எனக்கு ஏகப்பட்ட பிரச்சினைகள், மற்றும் ஏகப்பட்ட இறுக்க நிலைகள். என் மனம் தொடர்ந்து அலைபாய்ந்து கொண்டே இருக்கிறது. அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?"

ஏன் நீங்கள் பத்து வருடங்களாக மட்டும் நினைக்க வேண்டும்? ஏன்? அதுதான் உங்களுடைய பிரச்சினையின் ஆணி வேராக இருக்கக் காரணம்.

அந்த இறந்த காலத்திலிருந்து, நீங்கள் அடைந்தது என்ன? வெறும் ஞாபகங்கள் மற்றும் எண்ணங்கள் தான். நீங்கள் மேலும் மேலும் ஞாபகங்களையும், எண்ணங்களையும் சேர்த்துத் தான் வைத்திருக்கிறீர்களே தவிர வேறல்ல. ஒவ்வொரு நாளும் உங்களுடைய இறந்த காலம் மேலும் மேலும் பெரிதாகிக் கொண்டே போகிறது; அது ஒவ்வொரு நாளும் வளர்ந்து கொண்டே போகிறது. ஏனென்றால் ஒவ்வொரு நாளும் உங்களுடைய அனுபவங்கள், எண்ணங்கள் மற்றும் ஞாபகங்கள் அனைத்தும் கூடிக்கொண்டே போகின்றன. ஒவ்வொரு நாளும், உங்களுக்குப் பெரிதாக மனம் விரிந்து கொண்டே போகிறது; உங்களுடைய அனுபவம் பெருகிக் கொண்டே போகிறது. அதற்கு ஏற்ப, உங்களுடைய பிரக்ஞைத் தன்மை குறுகிக் கொண்டே போகிறது.

மனம் என்றாலே இறந்தகால குவியல்கள் தான்; அது சேர்த்துக் கொண்டே இருக்கிறது. இப்படி எண்ணங்கள் திரும்பத் திரும்ப வராது, வேறு என்னதான் அதனால் செய்ய முடியும்?

அதனுடைய அடிப்படைத் தன்மையே சேர்த்ததை, திரும்பத் திரும்ப மேலே கொண்டு வருதல் தான். அதிலிருந்து எந்தப் புதுமையும் ஏற்படாது. எண்ணுதல் என்பது ஒருக்காலும் சொந்தமாக இருக்காது. அது முடியாத காரியம். ஏனெனில், நீங்கள் அறிந்தவற்றை வைத்துத்தான், எண்ண வேண்டும். தெரியாததைப் பற்றி, உங்களால் எதுவும் எண்ண முடியாது. நீங்கள் எண்ணங்கள் ஏதும் இல்லாத நிலையில் தான். அந்தத் தெரியாததைப் பற்றி உங்களுக்குத் தெரியவரும். சூன்ய நிலையில் தான், சூன்யத்தைப் பற்றித் தெரியவரும்.

ஒவ்வொரு நாளும் உங்கள் மனம் நினைப்பதற்கு, நீங்கள் அதிகமாகவே கொடுத்துக் கொண்டு வருகிறீர்கள். மனம் எப்பொழுதும் சிந்தித்தவாறே இருக்கிறது. அது ஒரு மிகச் சிறந்த சிந்தனைக் கருவி. நீங்கள் இரண்டு எண்ணங்களை ஒன்றுபடுத்த முடியாதவாறு, மிக விரைவாக சிந்தித்தால், உங்களை அது பைத்திய நிலைக்கே அழைத்துச் செல்லும். யார் ஒருவனுடைய மனம், எண்ணுதலில் உச்சத்துக்கே செல்லுகிறதோ, அதை உடையவனே பைத்தியக்காரன். அவனுடைய எண்ணங்கள் ஒன்றின் மீது ஒன்றாக, தழுவிச் செல்லுகிறது. நீங்கள் சமக்கோட்டில் எண்ணுகிறீர்கள்; ஆனால் ஒரு பைத்தியக்காரன் ஒரே நேரத்தில் பல விதங்களில் எண்ணுகிறான். அவனுடைய எண்ணுதல் மிகவும் சிக்கலானது.

நீங்கள் பழையவற்றை ஞாபகப்படுத்திக் கொண்டால், உங்களுடைய எண்ணங்கள் அதிகமாகிக் கொண்டே செல்லும். நீங்கள் உங்களுடைய பிரக்ஞை நிலையை முழுவதுமாக இழக்க ஆரம்பித்து விடுவீர்கள். பிறகு நீங்கள் ஒரு கணிப்பொறிதான். தானியங்கும் கருவிதான், சிந்தனைக் கருவி மற்றும் ஒரு இயந்திர மனிதன் தான்.

ஆகவே, இதற்கு என்ன செய்ய வேண்டும்? இறந்தகாலம், இறந்த காலமாகவே இருக்கட்டும். அதைத் தூக்கிக் கொண்டு அலைய வேண்டாம். அதை மறந்து விடுங்கள். இந்தக் கணத்தை மட்டுமே ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். ஒரு வித்தியாசமான

அனுபவம் என்னவென்றால், நீங்கள் இந்தக் கணத்தில் மட்டும் சிந்திக்க முயன்றால், உங்களால் சிந்திக்க முடியாது! அது நடக்காது. சிந்திப்பது என்பது இறந்த காலத்தையோ அல்லது எதிர்காலத்தையோ ஒட்டித்தான் இருக்கும்; அது ஒருக்காலும், நிகழ்காலத்தை ஒட்டி இருக்காது. ஆகவே, இந்தக் கணத்தில் இருங்கள். இந்தக் கணத்தில் வாழுங்கள். இறந்த காலத்தில் மீண்டும் விழ வேண்டாம். எதிர்காலத்தில் குதிக்க வேண்டாம். இந்தக் கணத்தில், இப்பொழுது நிகழும் கணத்தில் வாழுங்கள்.

உதாரணமாக: நான் இதைப் பற்றி பேசியே வருகிறேன். ஒருக்கால், நீங்கள் என் பேச்சைக் கேட்டிருக்க மாட்டீர்கள் என்றே நான் நினைக்கிறேன். ஏனென்றால் இந்தக் கேள்வி, நீண்ட நாளாக உங்களுடைய அடி மனத்தில் வேலை செய்து கொண்டே தான் இருக்கும். நீங்கள் என்னைத் தவற விட்டு விட்டீர்கள். இப்பொழுதும், நீங்கள் என்னைத் தவற விடலாம். நீங்கள் உண்மையிலே என்னைக் காது கொடுத்துக் கேட்டால், உங்களுடைய எண்ண அலைகள் ஓய்ந்திருக்கும். உங்களுடைய எண்ண அலைகள் தொடர்ந்து சென்றால், நீங்கள் என்னைக் கேட்கவில்லையென்று அர்த்தம். நான் சொல்லிக் கொண்டிருப்பதைப் பற்றி நீங்கள் சிந்தித்தவாறு இருந்தால்- எப்படி அதைச் செயல்படுத்துவது என்று நீங்கள் மீண்டும் இந்தக் கணத்தைத் தவற விடுகிறீர்கள்.

நீங்கள் சாப்பிடும்பொழுது, வெறுமனே சாப்பிடுங்கள்- வேறு எதையும் செய்யாதீர்கள். அதைப் போல கேட்கும் பொழுது, வெறுமனே கேளுங்கள்- வேறு எதையும் செய்யாதீர்கள். நீங்கள் நடக்கும் பொழுது, வேறுமனே நடங்கள்- வேறு எதையும் செய்ய வேண்டாம். நிகழ்காலத்தில் மட்டும் வாழுங்கள், இருங்கள். நிகழ்கால செயலோடு மட்டும் ஒன்றி இருங்கள். விரைவில், இறந்தகாலம் உங்களைவிட்டு அகலுவதை உணருவீர்கள்; ஒரு புதிய பரிமாணம் அல்லது வெளி உங்களிடம் ஏற்படுவதை உணருவீர்கள். இந்த வெளியில், எந்த எண்ணமும் இருக்காது.

ஆகவே, கணத்துக்குக் கணம் வாழுங்கள். இறந்தகாலத்துக்கும், எதிர்காலத்துக்கும் இறப்பாக இருங்கள். 'இப்பொழுது, இங்கே' வாழுங்கள். அப்பொழுது, நீங்கள் செய்வது அனைத்துமே, தியானமாகிறது.

தியானம் என்பது நிகழ்காலத் தன்மை, அது ஒரு செயல் அல்ல. ஆகவே, நீங்கள் நிகழ்காலத்தில் செய்வது அனைத்தும், தியானமாகிறது. மக்கள் செய்து கொண்டுவரும் தியானம், தியானமாகாது. அது, நிகழ்காலத்தில் நீங்கள் இருக்கும் சுயதன்மை; அதுவே மைய நிலை. அதுவே ஒரு நிலை மற்றும் மிக முக்கியமான நிலை.

ஆகவே, நீங்கள் செய்வதை முழுமையாகச் செய்யுங்கள்- தெருவில் நடப்பது, ஓடுவது, குளிப்பது, சாப்பிடுவது, தூங்கச் செல்லுவது, படுக்கையில் படுத்திருப்பது, ஓய்வில் இருப்பது- இப்படி சகல செயல்களிலும் முழுமையாக இருங்கள்; எந்த இறந்த காலமோ அல்லது எதிர்காலமோ இல்லாமல், நிகழ் காலத்தில் மட்டும் இருங்கள். இது ஆரம்பத்தில் சிரமமாகத் தான் இருக்கும்- ஏன் மிகவும் சங்கடமாகவும், மிகவும் அலுப்பாகவும் கூட இருக்கலாம். ஆனால், கொஞ்சங் கொஞ்சமாக, நீங்கள் அதை மெல்ல உணர ஆரம்பிப்பீர்கள்; ஒரு புதிய கதவு, ஒரு புதிய பரிமாணம் உங்களுக்குள் ஏற்படும். பிறகு எண்ண இயக்கங்கள் என்று எதுவும் அங்கு இருக்காது.

இதனால், நீங்கள் எண்ணும் சக்தியை இழந்துவிட்டீர்கள் என்று நான் அர்த்தம் பண்ணவில்லை. மாறாக, அதன் பிறகு தான், நீங்கள் உண்மையிலேயே எண்ணும் சக்தியைப் பெறு கிறீர்கள். பைத்தியம் போல் எண்ணுவது நின்று, இப்பொழுது வேறு மாதிரியாக எண்ண ஆரம்பித்துவிடுவீர்கள். நீங்கள் சேமித்துக் கொண்டு வரும் எண்ணக் குவியல்கள் ஒருக்காலும் உண்மையான சிந்தனையாகாது, எண்ணமாகாது. உங்களுடைய எண்ணங்கள் சென்று கொண்டேதான் இருக்கும். அதை நிறுத்த, அல்லது மெல்ல செல்ல உங்களால் எதுவும் செய்ய முடியாது. நீங்கள் வெறும் எண்ணுபவராக மட்டும் இருப்பீர்கள்- ஒரு

எண்ணும் இயந்திரம்- இதனால் நீங்கள் சிரமத்துக்குதான் உள்ளாவீர்கள். நீங்கள் எண்ணாமல் இருக்க முயலுவீர்கள். ஆனால், உங்களால் அது முடியாது.

அப்படி, எண்ணங்களை நிறுத்த முயலவும். அப்பொழுது தெரியும், யார் உங்கள் எஜமானன் என்று! முயன்று பாருங்கள். அது நடக்காது. உங்களுடைய அடக்குமுறைக்கு எதிராக, உங்களுடைய எண்ணங்கள் எதிர்ப் போர்க்கொடி பிடித்து, பிறகு அது மூர்க்கமாக உங்களை வந்து தாக்கும்- மிகவும் வலிமையாக, மிகவும் திறமையாக. நீங்கள் சிந்திப்பது எல்லாம், உண்மையான சிந்தனை அல்ல. எண்ணமல்ல. அது ஒரு எண்ண ஓட்டம். ஒரு எண்ணக் கூட்டம், எண்ண ஓட்ட நெரிசல் பைத்தியமாக ஓடுதல்.. இப்படி சொல்லிக் கொண்டே போகலாம்- ஒழுங்கில்லாத, பிரயோஜனமற்ற, தேவையற்ற இறந்தகாலப் பற்றுதல் கான் இது.

ஆகவே, ஜாக்கிரதையாக இருங்கள். உங்களுடைய நிகழ்காலத்தை மேலும் வீணடிக்க வேண்டாம். நிகழ்காலத்தில் வாழுங்கள். இந்த நிகழ்கால தியானத் தன்மையில், இப்பொழுது இங்கே வாழுங்கள்.

நிகழ்காலம் என்பது காலத்தின் பகுதியாக ஒருக்காலும் இல்லை. இறந்தகாலம், மற்றும் எதிர்காலம், காலத்தில் சேர்ந்தது; ஆனால் நிகழ்காலம், காலத்தில் எதிர்காலம், காலத்தில் சேர்ந்தது; ஆனால் நிகழ்காலம், காலத்தில் சேர்த்தியல்ல. சாதாரணமாக, நாம் காலத்தை மூன்று பகுதியாகப் பிரிக்கிறோம்- இறந்தகாலம், நிகழ் காலம், எதிர்காலம் என்று. ஆனால், உண்மையில் அப்படி இல்லை. நிகழ்காலம் என்பது தெய்விகமானது. நிகழ்காலம் மட்டுமே. அது எப்பொழுதும் இப்பொழுது, இங்கேயே இருக்கிறது. அது சாசுவதமானது. உண்மையில், இறந்த காலம் மற்றும் எதிர்காலம் என்று எதுவும் இல்லை. இறந்தகாலம் என்பது உங்களுடைய ஞாபகத்தில் தான் இருக்கிறது; எதிர்காலம் என்பது உங்களுடைய கற்பனையில் இருக்கிறது. அதாவது இறந்தகாலம் மற்றும் எதிர்காலம்

உங்களுடைய மனதைச் சேர்ந்ததாகிறது. உண்மையில் அதில் உயிர் இல்லை. உயிர்த்தன்மை இல்லை. இதை நீங்கள் சரியாகப் புரிந்து கொண்டால், காலமே மனமாக இருப்பதையும், மனமே காலமாக இருப்பதையும் உணருவீர்கள். மனதை அப்புறப் படுத்துங்கள். காலம் என்று எதுவும் இருக்காது. அல்லது பின்னதை செய்யுங்கள், முன்னது மறையும்.

ஆகவேதான், ஒவ்வொரு மதமும், நீங்கள் உங்களுக்குள்ளே ஆழமாகச் சென்றால், காலம் மறைகிறது என்று வலியுறுத்திச் சொல்லுகின்றன. அது ஒரு காலமற்ற வெளி. அந்தக் காலமற்ற கணம், இதோ இப்பொழுது இங்கே இருக்கிறது. உங்களுடைய தவறான இறந்தகால எண்ணக் குவியல்களால், நீங்கள் அதைத் தவற விடுகிறீர்கள். ஆனால், அது இங்கே இருக்கிறது. நீங்கள் அதில் பிரக்ஞையாக இருந்தால், அது உங்களைத் தொடர்ந்து வரும்.

இந்தக் கணத்தில், இறந்த காலம் அகன்று சென்று விடுகிறது. மற்றும் எதிர்காலமும் கரைந்து மறைகிறது. இந்தக் கணம்தான் உண்மையான வாழும் தன்மையாக, உயிர்த்தன்மையாக இருக்கிறது. இதைப் பிரக்ஞையாக உணருங்கள். அதில் வாழுங்கள். அதில் உயிர்த்தன்மையாக இருங்கள். அப்பொழுது இந்தப் பைத்திய எண்ண ஓட்டங்கள் நடைபெறாது. முதன் முதலில், நீங்கள் இப்பொழுதுதான் உண்மையாக சிந்திக்க ஆரம்பிக்கிறீர்கள். இப்படி புதிதாக சிந்தித்தல் என்பது, அதிக அளவில் பிரக்ஞையாக இருத்தல். அதிக அளவில் மிகவும் பிரக்ஞையுடன், மற்றும் அதிக அளவில் உங்களுடைய இருப்புத் தன்மையில் சக்தி பிரயோகம் செய்தல் என்று அர்த்தம். உங்களிடம் ஏதும் பிரச்சினை வந்தால், உங்களுடைய பிரக்ஞைத் தன்மை, மற்றும் உங்கள் இருப்புத் தன்மையில் சக்தி பிரயோக வெளிச்சத்தில், உங்களால் சுலபமாக அதைச் சமாளிக்கக் கூடிய ஜாக்கிரதை உணர்வு மிகவும் இயல்பாக உங்களிடம் ஏற்படும். அந்தப் பிரச்சினை அகலும் பொழுது, உங்களுக்கு விடை கிடைக்கும்.

நீங்கள் சாதாரணமாக நினைப்பது என்பது அதிக அளவில் உங்களுடைய இறுக்கத்தையும், எதிர்ப்பையும் சார்ந்து இருக்கிறது; அது உண்மையான சிந்தனையைச் சார்ந்து இருக்கவில்லை. நீங்கள் இப்பொழுது சாதாரணமாக நினைக்கும் பொழுது, நீங்கள் கேள்விக்காக அங்கும் இங்கும் அலைய வேண்டும், இருட்டில் தடவித்தான் முயலவேண்டும். இன்று, நீங்கள் ஒரு பிரச்சினையை சமாளித்து விட்டதாக நினைப்பீர்கள். ஆனால், நாளை அதே பிரச்சினை மீண்டும் வரலாம்; எல்லாமே இழப்பாகத் தெரியலாம். அப்பொழுது இருட்டில், விடைக்காகத் தேடிக்கொண்டு இருப்பீர்கள். ஆகவே தான், சிந்தனையாளர்கள் ஒவ்வொரு நாளும் தங்கள் கருத்துக் களை மாற்றிக்கொண்டே இருக்கிறார்கள். நேற்று உண்மையாக இருந்தது இன்று உண்மையாக இருப்பதில்லை; அன்றைய உண்மை, நாளையும் அப்படியே இருக்கும் என்று சொல்ல முடியாது. ஆகவேதான் ஒவ்வொருவரும் உண்மையில் தோராயமாகவே (Approximately) இருக்கிறார்கள். எதுவுமே முழுமையான உண்மையும் இல்லை, எதுவுமே முழுமையான பொய்யும் இல்லை. உண்மை எந்த நேரமும் பொய்யாக மாறிவிடும்.

புத்தர், வேறு ஒரு பரிமாணத்தில் உண்மையாக இருக்கிறார்– அது காலத்தைச் சேர்ந்தது அல்ல. இயேசு நிலையான தன்மை யில் உண்மையாக இருக்கிறார். அவர்களுடைய உண்மை, ஒருக்காலும் பொய்யாகாது. ஏனெனில், அது சிந்தனையின் மூலமாக வந்தது அல்ல; மாறாக தியானத்தின் மூலமாக வந்தது. எண்ணங்களின் மூலமாக வந்தது அல்ல; மாறாக எண்ணங் களற்ற நிலையிலிருந்து வந்தவை. இதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். இந்த எண்ணமற்ற நிலை என்பது, நீங்கள் நிகழ்காலத்தில் இருப்பதால் நிகழுவது.

"நான் யாரையாவது விரும்பினால், அது என்னிடம் ஒரு இறுக்கத்தை உண்டு பண்ணி விடுகிறது. ஆனால், உங்கள் மேல் வைக்கும் அன்புதான், என்னிடம் ஒரு நிறைவைக்

கொடுக்கிறது. ஒரு புதுமை யுணர்வை ஏற்படுத்துகிறது. இது எதனால்?''


துகூட, எந்தக் கணத்திலும் விரக்தியை உண்டு பண்ணும். ஏனெனில், அடுத்தவர்தான் உங்களுடைய மையமாக இருக்கிறார். அது யாராக இருந்தாலும்...! அடுத்தவர் மையாக இருக்கக் கூடாது.

நீங்கள் என்னோடு உண்மையிலேயே நெருக்கமாக இருப்பதாக உணர்ந்தால், அதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். அடுத்தவர் ஒருக்காலும் உங்கள் மையமாக இருக்கக் கூடாது. எப்பொழுது அந்த மையம் என்மேல் இல்லாமல் அகலுகிறதோ, அப்பொழுதுதான் நீங்கள் உண்மை யிலேயே மகிழ்ச்சியாக இருப்பீர்கள். உங்களுடைய அன்பு என்மேல் மையம் கொண்டால், அது பிரச்சினையைத் தான் உண்டு பண்ணும். நீங்கள் என் மேல் அன்பு செலுத்துவீர்கள்; அதே சமயம் அடுத்தவர் சிலர் என்னை வெறுப்பதையும் காணுவீர்கள்.

இதுதான் இப்பொழுது நடக்கிறது. நீங்கள் உங்களுடைய குருவை நேசித்தால், நீங்கள் மற்ற குருக்களை வெறுக்க வேண்டி வரும். நீங்கள் ராமனை நேசித்தால், பிறகு கிருஷ்ணனைக் கூட வெறுக்க வேண்டி வரும். அவர் கூட உங்களுடைய பகைவனாகிறார். நீங்கள் இயேசுவை நேசித்தால், எப்படி உங்களால் முகமதுவை நேசிக்க முடியும்? நீங்கள் ஒரு பகவானை உண்டாக்கிக் கொள்ளத்தான் வேண்டும்.

நீங்கள் யாரையாவது நேசித்தால்- என்னையே நேசித்தால்- நீங்கள் ஒருவித நிறைவையும், புத்துணர்ச்சியையும் பெறுவீர்கள், அப்பொழுதும் கூட, அடுத்த பக்கத்தில் மிக ஆழமாக வெறுப் பாக இன்னொருவரிடம் இருக்கும். அது எந்த நேரத்திலும் வெடித்து, அழிவை உண்டு பண்ணும். நீங்கள் உங்களுக் குள்ளேயே நிறைவாக இருக்க வேண்டும். ஏனென்றால், அப்பொழுதுதான். உங்களிடம் எந்த விரக்தியும் ஏற்படாது.

நீங்கள் பலவற்றை உணரலாம். ஆனால் அவை அனைத்துமே உங்களிடம் இருந்து ஏதோ ஒரு வகையில் பிரிந்தே இருக்கும். ஆனால் அந்த மையம் உங்களிடமே இருக்கும்.

உங்களால், முழுமையாக உங்களுக்குள்ளே இருக்கமுடிந்தால், நான் இல்லாவிட்டால் கூட, நீங்கள் என்னைப் பார்க்கா விட்டாலும் கூட, என்னை நீங்கள் முழுமையாக மறந்துவிட்டா லும் கூட அந்த நினைவு அப்படியே உங்களிடம் இருக்கும்; அந்தப் புத்துணர்ச்சி அப்படியே உங்களிடம் இருக்கும். பிறகு, நீங்கள் உங்களுக்குள்ளே உள்ள மையத்தை அடைந்தால், நீங்கள் ஒருவித நன்றியுணர்வை ஏதோ ஒன்றில் அல்லது ஏதோ ஒருவரி டம் அடைவீர்கள். ஆனால், அது முற்றிலும் வித்தியாசமாகவே இருக்கும்.

ஆகவே, எதிலும், எவரோடும் பற்றுவைக்க வேண்டாம். அதை அன்பு என்ற பெயரில் அழைக்க வேண்டாம். ஏனென்றால், அந்த வார்த்தையிலேயே, அதனுடைய மறுப்பு நிலையும் அடங்கி இருக்கிறது. இதைப் புரிந்து கொள்ளுவது சங்கடம் தான். ஏனெனில், நீங்கள் என்னை நேசித்தால், பிறகு என்னை நீங்கள் வெறுக்கக் கூடும் என்பதை உங்களால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. ஆனால், அதுதான் சாதாரணமாக இயல்பானது. மற்றும் நடக்கக்கூடியது! யாராவது கனவு காணும் பொழுது, அவர் கனவில் காண்பது, வெறும் கனவு என்று அவர்களால் நினைக்க முடியாது. அவரைப் பொறுத்தவரையில், அது உண்மையாகவே தோன்றும். அது எப்படி பொய்யாக இருக்க முடியும் என்று அப்பொழுது அவர்களால் ஒருக்காலும் நினைக்க முடியாது. இதேதான் பிறரை நேசிப்பவரிடமும் ஏற்படுகிறது. அவரால், தான் விரும்பும் ஒருவரை எப்படி வெறுக்க முடியும் என்பதை நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. அதைப் போல, அவர் ஒருவரை வெறுக்கும் பொழுது, பிறகு எப்படி அவரை நேசிக்க முடியும் என்று வெறுப்பவரால் நினைக்கவே முடியாது.

யாரெல்லாம் முதலில் அன்பு செலுத்தி, பிறகு வெறுப்பவர்கள், உண்மையிலேயே அன்பு செலுத்துபவர்கள் அல்ல, காதலர்கள் அல்ல. ஆனால், மனம், அதற்குப் பலவித காரணங்களைக் கொடுத்துக் கொண்டே இருக்கும். நீங்கள் யார் மேலாவது அன்பு செலுத்தி, பிறகு அவரை அல்லது அவனை எப்படி வெறுக்க முடியும் என்பதை உங்களால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது என்ற நிலையில், மனம் இதுதான் உண்மையான அன்பு என்று உங்களிடம் அடித்துக் கூறும். ஆனால், பிறகு அதே நபரை, நீங்கள் வெறுக்கும் பொழுது, உங்கள் மனம், நீங்கள் உண்மையிலேயே அவர் மேல் அன்பு செலுத்துவது உண்மைதான், ஆனால் அவருக்குத் தான் அதை அடைய தகுதி இல்லை என்று சமாதானம் கூறும். நீங்கள் முதலில் அன்புக்கு பல காரணங்களை, பல பகுத்தறிவுக் கொள்கைகளைக் கொண்டு உங்களையே சமாதானப்படுத்திக் கொண்டாலும், பிறகு உங்களுடைய வெறுப்புக்கும் அதைப் போல பல காரணங்களை உண்டு பண்ணிக் கொள்ளுவீர்கள்.

இதைப்போல, நான் ஒருவரிடம் மாத்திரமல்ல, பல பேரிடம் கண்டிருக்கிறேன். சில சமயம், சிலபேர் என்னை மிகவும் ஆழமாக நேசிப்பார்கள்; பிறகு அவர்கள் என்னை மிகவும் ஆழமாக வெறுப்பார்கள். எவரால் ஆழமான அன்பு செலுத்த முடிகிறதோ, அவரால் தான் ஆழமாக வெறுக்கவும் முடியும்; அதைத்தவிர வேறு வழி இல்லை. அவர் என்னை ஆழமாக நேசிக்கும்பொழுது, அவரால் என்னை மிக ஆழமாகவும் வெறுக்கவும் முடியும் என்ற நினைக்கவே முடியாது. அதைப்போல அவர் என்னை ஆழமாக வெறுக்கும் பொழுது, அவரால் எப்படி என்மேல் ஆழமாக அன்பு செலுத்த முடியும் என்பதையும் நினைக்கவே முடியாது.

அடுத்து, அன்பிலிருந்து, வெறுப்புக்கு மாறுவது சுலபம்; ஆனால் வெறுப்பிலிருந்து அன்புக்கு மாறுவது சிரமம். இதற்கு பல காரணங்கள் உண்டு. உங்களால் ஆரம்பத்தில் வெறுக்க முடியாது. முதலில் ஒருவர் அன்புதான் செலுத்தவேண்டும். வெறுப்புக்கு, அன்பு மிகவும் அத்தியாவசியம். அன்பு கொஞ்சம்

கூட இல்லாமல், உங்களால் நேரடியாக வெறுப்பைக் காட்ட முடியாது. ஆனால், பிறகு உடைந்த கண்ணாடியை ஒன்று சேர்ப்பது என்பது மிகவும் கடினம். நீங்கள் மீண்டும் அன்பு செலுத்தலாம். ஆனால் புதிய அன்புக்கு, முன்பு உள்ள வெறுப்பு, நிழல் போலவே தொடர்ந்து வரும். வெறுப்பில் ஒரு பகுதி இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கும். ஆரம்பத்தில் ஏற்பட்ட முழு அன்பை மீண்டும் புதுப்பிக்க முடியாது.

நீங்கள் என்மேல் அன்பு செலுத்தினால், இப்படி நான் கூறுவதைக் கேட்டு, உங்கள் மனம் புண்படலாம். நீங்கள் உங்களையே அறிந்து கொள்ள வேண்டுமானால், மற்றும் அந்த முடிவான உண்மையை அறிந்து கொள்ளத் தகுந்த பாதையை தேர்ந்து எடுக்க முயன்றால், நீங்கள் வருத்தப்பட வேண்டாம். ஏனெனில், உங்களுக்கு மீண்டும் மீண்டும் மனம் புண்படக் கூடிய சந்தர்ப்பங்கள் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும்; மற்றும் உங்களுடைய கற்பனையோடு சண்டைபோடக் கூடிய சந்தர்ப்பங்கள் அதிகமாகவே ஏற்படும். உங்களுடைய அன்பு, வெறுப்பாக மாறும் என்று எனக்குத் தெரியும். ஆனால், எப்படி அன்பு புத்துணர்ச்சியோடு இருக்கிறதோ, அதைப்போல வெறுப்பும் புத்துணர்ச்சியோடும் மற்றும் உயிர்த்தன்மையோடும் இருக்கும்.

ஆனால், வேறு ஒருவிதமான அன்பு இருக்கிறது. அதைத்தான் கருணை என்று அழைக்கிறேன். அது உங்களிடம் தானே நிகழும். நீங்கள் உங்கள் மையத்தில் இருந்தால் தான், அது உங்களிடம் ஏற்படும்; வேறு யாரும் மையமாக இருக்கக்கூடாது. ஆகவே, நீங்கள் மேலும் மேலும் உங்கள் மையமாக இருக்க முயலுங்கள். இதற்கு நான் உதவி செய்தால் தான், நான் கருணையுடயவனாக இருப்பேன். என்னுடைய கருணை சில சமயம் உங்களைத் துன்புறுத்தலாம்; ஆனால் அது தேவைதான்.

ஆகவே, நான் உங்களுக்குக் கூறுகிறேன்: யாராவது வேறு ஒருவரிடம் மையம் கொண்டு இருந்தால்- அப்படி சார்ந்திருப் பவர், யாராக இருந்தாலும் சரி- முடிவில் அவர்கள் விரக்தியைத்

தான் அடைவார்கள்; மேலும் மேலும் அடுத்தவரிடமிருந்து விடுதலை அடையுங்கள். ஆகவேதான், உங்களை என் அருகில் வரும்படி நான் அனுமதிக்கிறேன். அப்பொழுதுதான் நீங்கள் என்னுடன் நெருக்கமாக ஆவீர்கள். அதன் மூலம் நீங்கள், நீங்களாக ஆவீர்கள். நீங்கள் உங்களுக்கு மிக அருகில் வருவீர்கள். நீங்கள் உங்களுக்குள்ளே உள்ள மையத்திற்கு வர நான் உதவி செய்தால்- அங்கே அன்பும் இருக்காது; வெறுப்பும் இருக்காது- அப்பொழுதுதான், நீங்கள் என்னுடன் வேறு ஒரு பரிமாணத்தில் உறவு வைத்துக்கொள்ள முடியும். அப்பொழுது உறவு லோகாயதமாக இருக்காது- அன்பாகவோ அல்லது வெறுப்பாகவோ இல்லாமல் அப்பொழுது, நீங்கள் என்னை ஒரு அந்நியனாக நினைக்க மாட்டீர்கள். அப்பொழுது, நீங்கள் என்னை உங்களில் ஒருவனாகவே நினைப்பீர்கள்.

என்னோடு மாத்திரம் அல்ல... இந்த முழு உலகத்தையே அப்படித்தான் எண்ணுவீர்கள்; இந்த முழு பிரபஞ்சத்தையே அப்படித்தான் சிந்திப்பீர்கள். ஒருவர் தன் மையத்தில் நிலைகொண்டால், அவர் இந்தப் பிரபஞ்ச மையத்திலேயே நிலை கொண்டவராவார்.

ஆனால், நீங்கள் பிறர் மையத்தில் நிலை கொண்டால், நீங்கள் துன்பத்தைத்தான் அடைவீர்கள்- அது ஒரு இயல்பான பின் விளைவாகிறது. எந்த இயற்கை நியதியும், விதிவிலக்கை ஒருபோதும் அனுமதிக்காது. அது ஒரு முழுமை; இரக்க மில்லாத முழுமை!



"நீங்கள், உங்களுடைய 700 வருட முந்தைய வாழ்க்கையைப் பற்றி ஞாபகம் கொள்ள முடிகிறது என்று சொல்லுகிறீர்கள். இப்பொழுது உள்ள காலத்தையும், மற்றும் உங்களுடைய பெயரையும் ஞாபகப்படுத்த உங்களால் முடிகிறதா? உங்களுடைய இறப்பைப் பற்றி நினைக்க முடிகிறதா? நான் எதில் ஆர்வமாக இருக்கிறேன் என்றால், உங்களுடைய பழைய வாழ்க்கைக்கும் இன்றைய வாழ்க்கைக்கும் இடைப்பட்ட காலத்தில் என்ன நிகழ்ந்தது என்பது பற்றி அறிய ஆசைப்படுகிறேன்?"



ந்தக் கேள்வி அர்த்தமுள்ளது போலவே இருக்கிறது. ஆனால் அப்படி இல்லை. வாழ்க்கை என்பது இப்பொழுது ஏதோ நிகழ்ந்துகொண்டு இருப்பதுதான். இரண்டு வாழ்க்கைகளுக்கு இடையே, எதுவும் நிகழாது. இரண்டு வாழ்க்கைக்கு இடையே, ஒரு இடைவெளிதான் இருக்கும். நீங்கள் அதை ஒரு இடைவெளி என்று தான் ஞாபகப்படுத்திக் கொள்ள முடியும்; அப்படி ஏதாவது அப்பொழுது நிகழ்ந்தால், அதுவும் ஒரு வாழ்வாகிறது. ஆனால், அந்த இடைவெளியில் எதுவும் நிகழாது. நீங்கள் அதை ஒரு இடைவெளி என்றுதான் நினைக்கத் தோன்றும்— அது எதனாலும் நிரப்பப்படாது.

நாம், யாரையாவது உயிரோடு இருக்கிறான் என்று கூறினால், அவனிடம் ஏதோ நிகழ்ந்து கொண்டு இருக்கிறது என்று அதற்கு

அர்த்தம். வாழ்வு, நிகழுதலின் கோட்டை. உடல் இல்லாமல் எதுவும் நிகழாது. நிகழுதலுக்கு, உடல்தான் ஆதாரமாக இருக்கிறது. நீங்கள் இந்த உடலைத் தாண்டிய கணத்திலேயே, அல்லது இந்த உடலில் இல்லாவிட்டால், எதுவுமே நிகழாது.

பிறகு, நீங்கள் விழிப்பாகவோ, பிரக்ஞையற்றோ இருக்கலாம். இந்த இரண்டும் தான் சாத்தியம். நீங்கள் பிரக்ஞையற்று இருந்தால், உங்களால் எதையும் ஞாபகப்படுத்திக் கொள்ள முடியாது. நீங்கள் பிரக்ஞையாக இருந்தால் தான், ஞாபகப்படுத்திக் கொள்ளல் முடியும். அப்படி ஞாபகப்படுத்திக் கொள்ளல், வெறும் இடைவெளியாகவே இருக்கும். அங்கு எந்த நிகழ்ச்சியும் இருக்காது.

"உங்களுடைய கடைசி இறப்பு மற்றும் இந்தப் பிறவிக்கு இடைப்பட்ட வெளியில் நீங்கள் பிரக்ஞையாக இருந்தீர்களா?"

ஆமாம். அந்த 700 வருட இடைவெளியில், நான் பிரக்ஞையாகவே இருந்தேன். நான் முழுப் பிரக்ஞையில் இருந்தேன். அது, அந்த ஒன்றுமற்ற, சூன்யமான, எதுவுமற்ற இடைவெளியின் பிரக்ஞைதான். அங்கு எதுவுமே நிகழாது. நிகழுவதற்கு, நீங்கள் ஒரு உடலில் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் எதுவுமே நிகழும்.

"உடலோடு இருப்பதைவிட, அது அலுப்பு தராதா?"

இல்லை. அலுப்பின் கோட்பாடு நிகழுதலின் கோட்பாட்டில் இருக்கிறது. ஏதாவது ஒன்று தொடர்ந்து நிகழ்ந்து கொண்டே இருந்தால் தான், அலுப்பு என்பது ஏற்படுகிறது. திரும்பத் திரும்ப நிகழுதல்தான் எப்பொழுதும் அலுப்புத் தரக்கூடியதாக இருக்கிறது. நீங்கள் ஒரே வித உணவை தினமும் சாப்பிடும் போதுதான் அலுப்பு ஏற்படுகிறது.

எதுவுமே நிகழாத நிலையில், அலுப்பு ஒருக்காலும் ஏற்படாது. ஒரு சூன்யமான நிலையில், உங்களுக்கு அலுப்பு ஏற்படாது.

"அந்த 700 வருட இடைவெளியில், மறுபிறவி எடுக்க, உங்களிடம் ஏதும் ஆசை இருந்ததா?"

அந்த இடைப்பட்ட இடைவெளியில், எந்த ஆசையும் ஏற்படவில்லை. ஆனால், இறக்கும்பொழுது, ஆசை ஏற்படும். அந்தக் கடைசி நேர ஆசைகளில் கூட, நீங்கள் உங்கள் உடலில் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறீர்கள். உயிரற்ற உடலில் ஆசை நிகழாது. ஆமாம். இறக்கும் பொழுது, ஆசை ஏற்படும். ஒரு வாழ்க்கையின் கடைசி ஆசை, புதிய வாழ்வின் முதல் ஆசையாகி விடுகிறது. ஆனால், அந்த இடைவெளியில், எந்த ஆசையும் ஏற்படாது.

உதாரணமாக, நீங்கள் தூங்கச் செல்லும்பொழுது, உங்களுடைய கடைசி ஆசையில், விழிப்பாக இருந்தால், அது, காலையில் நீங்கள் எழும்பொழுது, முதல் ஆசையாக இருக்கும். ஆனால், நீங்கள் தூங்கும் பொழுது, அந்த இடைவெளியில், உங்களுடைய இரவு கடைசி எண்ணத்தின், தொடர்ச்சியாக அது இருக்காது. அந்த எல்லையில், உங்களுடைய கடைசி எண்ணம் நின்று விடுகிறது- அது அங்கேயே இருக்கிறது. நீங்கள் மீண்டும் விழித்து எழும்பொழுது, நீங்கள் அந்த எல்லையில் இருந்துதான் ஆரம்பிக்க வேண்டியதாகிறது; அதைத் தாண்டி விழிப்பு நிலைக்கு வரும் பொழுது, உங்கள் இரவின் கடைசி எண்ணம், காலையில் முதல் எண்ணமாகி விடுகிறது.

இதைப் போலத்தான், நீங்கள் இறக்கும் பொழுதும் ஏற்படுகிறது. அப்பொழுது உள்ள உங்கள் கடைசி எண்ணம், உங்களுடைய மறு பிறவியின் முதல் எண்ணமாகிறது.

இந்த இரண்டு வாழ்க்கைக்கு இடையில் உள்ள ஒன்றுமற்ற நிலையில், வாழ்வில் உள்ள அனைத்தும் மற்றும் காலமும் முடிவுக்கு வந்து விடுகிறது. ஆகவே, நான் "700 வருடம்" என்று

சொல்லும்பொழுது, அது இடைவெளியின் ஞாபகமாக இருப்பது இல்லை. ஏனெனில், அந்த இடைவெளியில், காலமும் கிடையாது.

ஆகவே, இதில் அனேக விஷயங்கள் அடங்கி இருக்கின்றன. நிகழ்ச்சிகள் நடந்தால் தான், காலம் உண்டாகிறது. இல்லா விட்டால், உங்களால் காலத்தை உண்டாக்க முடியாது. ஆகவே தான், அனேக நிகழ்ச்சிகள் நிகழ்ந்து கொண்டு இருக்கும் பொழுது, நீங்கள் பின்னோக்கிச் செல்லும்பொழுது, நீங்கள் ஒரு நீண்டகால வாழ்வைத் தாண்டி வந்திருப்பதாக உணருகிறீர்கள். எதுவுமே நிகழா விட்டால் நாள் முழுவதும் எதுவும் நிகழாவிட்டால்- அந்த நாள் மிக நீண்டதாகத் தெரிகிறது; அது எதனால் என்றால், அந்த நாள் எந்த நிகழ்ச்சியிலும் நிரப்பப்படவில்லை- காலம் இழுத்துக் கொண்டு மெல்ல நகருவது போல இருக்கிறது. அந்த நாளை, நீங்கள் மீ ண்டும் நினைவுபடுத்திக் கொண்டால், அந்த நாள் மிகக் குறுகியதாகத் தெரிகிறது- ஏன் ஒன்றும் அற்றது போல் இருக்கிறது.

மாறாக, ஒரு குறிப்பிட்ட நாளில், அனேக நிகழ்ச்சிகள் நேர்ந்தால், அந்த நாளும் மிகக் குறுகியதாகவே இருக்கும். ஆனால், அந்த நாளை மீண்டும் ஞாபகப்படுத்திக் கொண்டால், அது மிக நீண்டதாகத் தெரிகிறது. ஏனெனில் அந்த நாளில், அனேக நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன.

காலம் அடிப்படையில் அனேக நிகழ்ச்சிகளைக் கொண்டதே. எதுவுமே நிகழாவிட்டால், நீங்கள் காலத்தில் பிரக்ஞையாக இருக்க முடியாது -உங்களால் அது முடியாது. இட பிரக்ஞையும் கூட மறைந்து விடும்.

ஒரு வாழ்கைக்கும், அடுத்த வாழ்க்கைக்கும் இடையில், எந்தக் கனவும் கிடையாது. அது ஏன் சாத்தியம் இல்லையென்றால், கனவு காண்பதற்குக் கூட, உடல் தேவையாக இருக்கிறது. உடல் இல்லாமல், உங்களிடம் எந்த அனுபவமும் ஏற்படாது- இந்த

உடலில் தான் அனுபவம் ஏற்படுத்த வேண்டிய சகல கருவிகளும் இருக்கின்றன.

ஆகவே, நீங்கள் ஒரு பிறவிக்கும், அடுத்த பிறவிக்கும் இடைப்பட்ட வெளியில் பிரக்ஞையாக இருந்தால், நீங்கள் உங்களுடைய பிரக்ஞைத் தன்மையில், பிரக்ஞையாக இருக்கிறீர்கள் என்று அர்த்தம்- வேறு எதுவும் இல்லை, எந்த எண்ணமும் இல்லை, எந்த ஆசையும் இல்லை, கடைசி ஆசையைத் தவிர. இந்தக் கடைசி ஆசையைத் தவிர, வேறு எதுவும் உங்களைப் பாதிக்காது. அந்தக் கடைசி ஆசையின் பாதிப்பு, தானே செயல்படக் கூடியது. ஏனென்றால், உங்களுடைய மனதின் கடைசி விருப்பம் கூட, மறு உடலை எடுக்க வேண்டியதாகவே இருக்கும். அதற்காக, நீங்கள் எதுவும் செய்ய வேண்டியது இல்லை. அந்த ஆசையே உடலை எடுக்கத் தூண்டிவிடும். ஏனெனில் உடல் இல்லாமல், எந்த ஆசையும் நிறைவேறாது. ஆகவே, ஒருவர் இறக்கும்பொழுது, அவர் முழு பிரக்ஞையாக இருந்தால்- ஆசையற்று, எண்ணமற்று இருந்தால்- பிறகு மறுபிறவி ஏற்பட வாய்ப்பே இல்லை.

நீங்கள் எந்தவித ஆசையும் மற்றும் எண்ணமும் இல்லாமல், இரவு தூங்கச் சென்றால், காலையில் விழித்தெழும்பொழுது, உங்களிடம் எந்த ஆசையோ அல்லது எண்ணமோ இருக்காது. அதைப்போல, நீங்கள் இறக்கும்பொழுது கொண்ட கடைசி எண்ணமே, மறு பிறவியின் விதையாக, ஆக்க சக்தியாக வேலை செய்ய ஆரம்பித்துவிடுகிறது. இந்த வேலை, தானே செயல்படுகிறது. தகுந்த சூழ்நிலை ஏற்படும் பொழுது, தகுந்த சந்தர்ப்பம் ஏற்படும்பொழுது, நீங்கள் மீண்டும் பிறக்கிறீர்கள்- நீங்கள் கண்டிப்பாக பிறக்கத்தான் வேண்டும். நீங்கள் உங்களுடைய சென்ற வாழ்க்கையில், பிரக்ஞையாக இருந்தால், இந்த வாழ்க்கையிலும் பிரக்ஞையாகவே இருப்பீர்கள். உங்களுடைய பிறப்பு ஒரு பிரக்ஞையான பிறப்பாகவே இருக்கும். என்ன நிகழ்ந்து கொண்டு இருக்கிறது என்பதை உங்களால் பிரக்ஞையாக உணர முடியும்.

பிறகு, அதுவேதான் உங்களுடைய கடைசி வாழ்க்கை யாகிறது. உங்களுடைய இந்தப் பிறப்பு, பிரக்ஞையாக இருந்தால், உங்களுடைய இந்தப் பிறவியின் இறப்பும் பிரக்ஞையாகவே இருக்கும். பிறகு மீண்டும் பிறப்பதற்கு வாய்ப்பு இல்லை. ஆகவே, ஒருவன் இப்பிறவியை, பிரக்ஞையோடு எடுத்திருந்தால், பிறந்திருந்தால், இதுவே தான் கடைசி இறப்பாகவும் இருக்கும். இன்னும் ஒரு இறப்பு ஏற்படக் கூடும். அதற்குப் பிறகு நிச்சயமாக பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை.

ஆகவே, நான் இந்தப் பிறவியை எடுப்பதற்கு 700 வருடம் சென்றது என்று சொல்லும்பொழுது, அது ஒரு பிரதிபலிப்பே தவிர (Reflection) வேறல்ல.

